# இப்புத்தகத்தில் அடங்கியவை.

பக்கம்.

# இப்புத்தகத்தில் அடங்கியவை.

பக்கம்.

திணைபதி துணை.

# முகவுரை

—✦—

"காளத்தி காணப் பெற்றகண்களே கண்க ளென்றுங்
காளத்தி நகருக் கேகுங் கால்களே கால்க ளென்றுங்
காளத்தி புகுந்திக ருத்தே கருத்தென் றுங் கைலை நாமக்
காளத்தி புகழு நாவே நாவென்றுங கற்றோர் சொல்வர்"

* திருக்காளத்தியென்பது தொண்டைநாட்டில் தேவாரம்பெற்ற சிவஸ்தலங்களுள் ஒன்று. இந்தஸ்தலத்துக்குத் தக்ஷிணகைலாஸம் அல்லது தென்கயிலாயம், தென்கயிலை, திருக்காளத்தி, ஸ்ரீகாளஹஸ்தி அல்லது சீகாளத்தி, காளத்தி, சிவாநந்தகிரி, சிவாநந்தைகநிலயம், விஞ்ஞானக்ஷேத்திரம், கண்ணப்பபுரம், மும்முடிச்சோழபுரம் முதலிய வேறு காரணப்பெயர்களுமுண்டு.

தக்ஷிணகைலாஸமென்னும் பெயரின்காரணம், இப்புராணம், ௬௨-ம் பக்கம்,௨௭-ம் செய்யுள் முதலியவற்றாலும், திருக்காளத்தியென்னும் பெயரின்காரணம், ௪௮-ம் பக்கம், ௬௧-ம் செய்யுள் முதலியவற்றாலும் விளங்கும். இப்படியே பிறபெயர்களின் காரணமும் இந்நூலாலும் பிறநூலாலும் நன்கு உணரலாகும். இஃது ஐந்துயோசனை அகலமும், பத்துயோசனைநீளமுமுள்ளது. †(ப. ௧௫0 ; பா. ௨௭.) "மண்டுயோசனையைந் தகலமுமிரட்டி நீளமும் வயங்குதென் கயிலை" (க. எ. ௪௧.) என்னும் சூதசங்கிதையாலும் இது விளங்கும்.

மஹாபுராணங்களுள்ளும், உபபுராணங்களுள்ளும், மற்றஸ்தலபுராணங்களுள்ளும் இத்தலமகிமையைச் சொல்லாதவை பெரும்பாலும் இல.

மெய்யன்பையே திருவுருவமாகக்கொண்ட ஸ்ரீ கண்ணப்பநாயனார் இடையீடின்றி வழிபட்டு ஆறுநாட்களில் முத்திபெற்ற பெரும்புகழ் வாய்ந்தது இது. இன்னும் விராட்புருஷனுடைய [illegible]த்தி[illegible]தானமென்றும், பிரமதேவருடைய அநாகதஸ்தானமென்றும், பஞ்சபூதஸ்தலங்களுள் வாயுஸ்தலமென்றும், பஞ்சாக்ஷரசூபஸித்தியை

---

* தொண்டைநாட்டில், ௨௪-கோட்டங்களுள் ஒன்றாகிய வேங்கடக்கோட்டத்துத் தொண்டைமான்பேராற்றூர்நாட்டு மும்முடிச்சோழபுரமென்றும், ஆற்றூர்வளநாட்டு மும்முடிச் சோழபுரமென்றும் சிலாசாசனங்களில் இதன்பெயர் காணப்பெறுகின்றது. † ப. பக்கம். பா. பாட்டு.

விரைவில் தந்தருளுவதென்றும், சிவஞானத்தை அளிக்கவல்லஸ்தலங்கள் * நான்கனுள் ஒன்றென்றும் ஒருநாளேனும் நியமத்துடன் வசிப்பவர்களுக்குக் கலியின்பீடையை மாற்றிப் பிறவித்துயரை நீக்க வல்ல ஸ்தலங்கள் † இரண்டனுள் ஒன்றென்றும் நூல்களிற் பாராட்டப்பெற்றது இத்தலமே. இத்தலமகிமையும், தீர்த்தவிசேடமும், வழிபட்டுப் பேறுபெற்றோருடைய மேம்பாடுகளும் இந்நூலாலன்றி இதன்பின் காட்டப்பெற்றுள்ள தேவாரமுதலிய திருமுறைகளாலும் வேறுநூல்களிலிருந்து எடுத்துக்காட்டிய செய்யுட்களாலும் புலப்படும். இத்தலம் சிவஸாரூப்பியம் தருமென்பதை,

" புலிபுலி யதளு டுக்கும் பொருகரி கரித்தோல் போர்க்கும்
வலியவா ளுனே றேறும் வாளரா வாவம் பூணு
மெலியியன் மான்மா னேந்தும் வெந்திறற் சீயஞ் சீயத்
தலைபுனை தருந்தென் வெள்ளிச் சயிலத்தி விறக்கின் மன்னோ."
(சீகாளத்திப்புராணம், தென்கயி. ௬௮.)

என்னுஞ் செய்யுளால் ஒரு புலவர்பெருமான் தெரிவித்திருக்கும் அழகு பாராட்டற்பாலது.

ஸ்தலவிநாயகர் இருவர்: (க) பஞ்சசந்திவிநாயகர் [ஐஞ்சந்திவிநாயகரெனவும், அஞ்சந்திவிநாயகரெனவும் இவர் கூறப்பெறுவர்], (உ) பாதாளகணபதி.

ஸ்வாமியின் திருநாமங்கள்: தென்கைலைநாதர், திருக்காளத்திநாதர், ஐங்குடுமித்தேவர், ஐந்துகொழுந்து, குடுமித்தேவர், ஆராவமுது, கணநாதர், கல்லாலடியார், கல்லாலடியிற்கரும்பு, மருந்து, மலைமேல்மருந்து, காபாலி (காவாலி), காளத்தி, காளத்திக்கற்பகம், சோதிவிடங்கர், பொன்முகரித்துறைவர் என்பவை முதலியன.

அம்பிகையின் திருநாமங்கள்: ஞானப்பிரஸூநாம்பிகை, ஞானப்பூங்கோதை, ஞானக்கொழுந்து, ஞானசுந்தரி, ஞானப்பேரொளி, சிற்புட்பகேசி, வண்டார்குழலாள் என்பவை முதலியன.

ஸ்தலவிருக்ஷங்கள் இரண்டு:—(க) அகண்டவில்வம், (உ) கல்லால்.

இத்தலத்திற்குரியநதி, பொன்முகரி. இது சந்நிதியில் உத்தரவாஹினியாய்ச் செல்லுதலின் மிகச்சிறந்ததாகக் கூறப்பெறுகின்றது. இதன்மகிமை, இந்நூலுள் அங்கங்கே பரக்கக்காணப்படுவதன்றி, வேறுநூல்களிலும் காணப்படும்;

* காசி, சிதம்பரம், விருத்தாசலம், காளத்தியென்பன.
† காசி, காளத்தி.

முகவுரை.

" தத்து வங்கடந் தொளிர்கின்ற முக்கணன் றன்னே
டொத்த செந்தமிழ் முனிவனும் பல்பக லுழந்த
மெய்ந்த வந்தர வந்தவிவ் வாற்றெனேர் வேந்த
னுற்றமெனான் பிவட் டந்ததோர் கங்கையோ வொக்கும்."

" குடதி சைக்கட லுடைந்தொரு வழிக்கொடு குணந்து
கடல்வயிற்புக வெழுந்தென வெழுந்தவிக் கடிநீ
ருடனெ ருத்தனுண் டஞ்செவி யொழுக்கிய நீருங்
கொடிக்கி விழ்த்தசெந் நீருமோ நிகர்ப்பன கூறின்."

" இடன கன்றவிவ் வாறுதன் கட்படா விறந்த
முடிவில் வெஞ்சினக் குஞ்சர முதலிய வற்றி
னுடலே வெண்டிரைக் கருங்கட லுய்த்துமன் னுயிரைக்
கடவுள் வெள்ளியங் குறைின்மே லேற்றிடுங் கடிது."

" உலகி லெங்கணு மில்லதோ ரதிசய மொன்றித்
தலைமை கொண்டபொன் முகரியுட் டாழ்ந்தவர் யாருந்
தொலைவி லுன்பங்கள் பலதருஞ் சூழ்வினைப் பிறப்பா
மலைநெ டுங்கடற் கரைமிசை யேறுவ ரன்றே."

(சீகாளத்திப்புராணம், பொன்முகரி. அஅ - கக.)

என்பவற்றாலும் விளங்கும்.

மற்றத்தீர்த்தங்கள்: பிரமதீர்த்தம், சாஸ்வதிதீர்த்தம், இந்திர தீர்த்தம் அல்லது வச்சிரதாரை, மாயூரதீர்த்தம், உருத்திரதீர்த்தம், மார்க்கண்ட தீர்த்தம், அரகரதீர்த்தம், மகாமோகினிதீர்த்தம், மணி கன்னி அல்லது மணிகர்ணிகை, பகவதிதீர்த்தம், பைரவதீர்த்தம், மாகாளதீர்த்தம், மகாகாளிதீர்த்தம், மூகதீர்த்தமுதலியன. இவற்றுள் இந்திரதீர்த்தம் முதலியவற்றின் பெருமைகள்,

" இருவினை மலைதொ லைக்கு மிந்திர தீர்த்தம் பாவ
வரவடர் மயூர தீர்த்த மாரணர்ப் பிறவி யென்னு
முருகெழு புரந்தீ யூட்டு முருத்திர தீர்த்தம் பேழ்வாய்
வெருவரு தழற்கட் கூற்றம் வெல்லுமார்க் கண்ட தீர்த்தம்."

" அரகர தீர்த்தம் யாரு மவாவுமோ கினிதீர்த் தம்வெண்
டிரையெறி தருமா காள தீர்த்தமென் றிவைமுன் னுய
பரமபுண் ணியதீர்த் தங்கள் பலபடிந் தவரை விண்ணோர்
நிரைதொழ விருத்தல் செய்து நிலவுமாற் புலவு வேலோய்."

(சீகாளத்திப்புராணம், பொன்முகரி. கடு, கச.)

என்னுஞ் செய்யுட்களாலும் விளங்கும்.

இதனைச்சூழ்ந்துள்ள மலைகள், கனகதுர்க்கைமலை, குமாரகிரி, இந்திரகிரி, நீலகிரி, ஸித்தகிரியென்பன.

# முகவுரை.

பீடங்கள் இரண்டு —(௧) ஆகமபீடம் (௨) வைதிகபீடம். இவற்றுள் முதலாவது திருக்காளத்திநாதருக்குரியது; இரண்டாவது தக்ஷிணாமூர்த்திக்குரியது. வைதிகபீடம் ஞானபீடமெனவும் வழங்கும்.

இத்தலத்திலுள்ள வேறுகோயில்கள்.—பகவதிகோயில், இந்திரநாதர்கோயில், மணிகர்ணிகேசர்கோயில், காலபைரவர்கோயில், ஆயிரலிங்கப் (ஸஹஸ்ரலிங்க) பெருமான்கோயில், மூலகேசர்கோயில், மகிஷாசுரமர்த்தனிகோயில், மார்க்கண்டேசர்கோயில், யக்ஷேசுவரர்கோயில் முதலியன.

வழிபட்டுப் பேறுபெற்றோர்.—திருமால், திருமகள், பிரமதேவர், ஸரஸ்வதி, சிலந்தி, காளனென்னும் பாம்பு, யானை, பிரமரிஷிகளாகிய ஸனகாதிகள், சுவேதாசுவதரர் இறுதியாகவுள்ள நூற்றுப்பன்னிரண்டு தேவரிஷிகள், உரோமசர், அகஸ்தியர், வஸிஷ்டர் முதலிய மகரிஷிகள், அஷ்டதிக்பாலகர், யோகினியாகிய நீலை முதலியோர், அக்னிபிரபன் முதலிய அசுரர்கள், மணிமான் முதலிய யக்ஷர்கள், ஆதிசேஷன் முதலிய நாகர்கள், முசுகுந்தன் முதலிய அரசர்கள், சங்கப்புலவராகிய நக்கீரர், பத்திரைக்கன்னியரிருவர், யாதவ வேந்தன் முதலியோர்.

இதன் பழையவரலாறுகளைத் தெரிவிக்கும் நூல்கள், வடமொழியில் ஷட்ஷஷ்டித்தியாயி, ஸ்ரீகாளஹஸ்திமாஹாத்மியம் [இது ௬௬ - அத்தியாயம் உள்ளது], தக்ஷிணகைலாஸமாஹாத்மியம், ஸ்வர்ணமுகரீமாஹாத்மியம், ஸூதஸம்ஹிதையிலுள்ள ௩ அத்தியாயங்கள் அடங்கிய புஸ்தகமொன்று, வாஸிஷ்டலைங்கத்திலுள்ள ௧௨ - அத்தியாயங்களடங்கிய புஸ்தகமொன்று ஆகிய இவைகளும், தெலுங்கில் வழங்குகிற தூர்ச்சடிகவிசெய்த புராணமொன்றும் ஆகிய இவைகளாம். இவை இப்போது கிடைக்கின்றன.

இவற்றையன்றி வடமொழியிற் பாத்மமாஹாத்மியமென ஒன்றுண்டென்று சொல்லுகின்றனர். அது கிடைக்கவில்லை.

ஸ்வர்ணமுகரீ மாஹாத்மியத்தில் ௧௮ - அத்தியாயங்கள், ஸூதஸம்ஹிதையில் ௩ - அத்தியாயங்கள், வாஸிஷ்டலைங்கத்தில் பன்னிரண்டு அத்தியாயங்கள் ஆகிய இவற்றின் மொழிபெயர்ப்பே இத்திருக்காளத்திப்புராணம். இஃது இப்புராணத்துள்ள நூல்வரலாற்றால் அறியலாகும்.

“தலத்துமான்மியம் வேறினிக்காணினும்” என்னும் நூல்வரலாற்றுச் செய்யுளால், இவருக்கு மேற்கூறிய மூன்று நூல்களே கிடை

த்திருந்தனவென்றும், இக்காலத்திற் காணப்படும் இத்தல சம்பந்தமான வேறு வடமொழிநூல்கள் கிடைக்கவில்லையென்றும் தெரிகிறது.

இப்புராணத்தால், பொன்முகரிநதியின் மகிமையும், இத்தலத்துள்ள பூற்றத்தீர்த்தங்களின் பெருமைகளும், இதனைச் சூழ்ந்துள்ள மலைகளின் வரலாறுகளும், இதனையடைந்து பேறுபெற்ற தேவர்களாலும முனிவர்கள்முதலியோர்களாலும பிரதிஷ்டித்துப் பூசிக்கப்பெற்ற தைவிகம், ஆர்ஷம்முதலிய மஹாலிங்கங்களின் பெருமைகளும், வழிபட்டுய்ந்தோர்களுடைய அரும்பெறற் சரிதங்களும், உத்தரகைலாசம் முதலிய ஸ்தலங்களுள்ளும புஷ்கரமுதலிய தீர்த்தங்களுள்ளும் முக்கியமானவற்றின் அரிய வரலாறுகளும், சிவோத்கர்ஷமும், குணமூர்த்திகளின் அருளிச்செயல்களும், ஸ்ரீ பஞ்சாக்ஷரம், விபூதி, ருத்திராக்ஷம் இவற்றின்மகிமைகளும, ஸ்ரீ பஞ்சாக்ஷரஜபத்தாலும், ருத்திராக்ஷதாரணத்தாலும மேம்பாடுற்றவர் இன்னாரின்னாரென்பதும், தர்மாதர்மங்களின் வகைகளும, அவற்றின் பயன்களும், வர்ணாச்ரமதர்மங்களும, பொதுவொழுக்கங்களும, தானங்களும், அவற்றின்பயன்களும, பலசமயக்கோட்பாடுகளும, தாருகாவனத்து முனிவர் நாற்பத்தெண்ணாயிரவரை இறைவன் ஆட்கொண்டருளிய அருமையும, கர்மகாரணங்களும, ஞானயோகமும, புத்திசாதனமும், திருக்காளத்திநாதருடைய கருணையைப்பெற விரும்புவோர் மாதங்கள், திதிகள், வாரங்கள், நக்ஷத்திரங்கள் இவற்றில் அனுஷ்டிக்க வேண்டிய விரதங்களின் வகையும, யுகதர்மங்களும, ஸ்ரீகாளஹஸ்தி வாஸத்தால் கலிபீடை நீங்குமென்பதும, சிவஞானமும முத்தியும் வாய்க்குமென்பதும, இவைபோல்வன பிறவும அறியலாகும.

இவற்றை இப்புராணத்தினின்றும் அறிந்துகொள்ளுவதற்கு இந்நூல் அரும்பதமுதலியவற்றின் அகராதி சிறந்தகருவியாக இருக்கும்.

## நூலாசிரியர்.

இந்நூலாசிரியராகிய ஆனந்தக்கூத்தரென்பவர் பாண்டிநாட்டில் (திருநெல்வேலிஜில்லா) தாம்பிரபர்ணி நதிக்கரையிலுள்ள வீரவநல்லூரிற்பிறந்தவர் (ப. உ௩௯.); நல்லாசிரியரிடத்தே சிறந்த இலக்கியங்களையும் தொல்காப்பியமுதலிய இலக்கணங்களையும முறையேகற்றுச் சிந்தித்துத்தெளிந்தவராகி அவராலும மற்றையோராலும் பயிற்சிசெய்விக்கப்பெற்றுச் செய்யுள்செய்தலிலும வல்லுநராயவர் (ப. ரு.); சைவநூல்களிலும நல்ல பாண்டித்தியமுடையவர். இவருடைய ஞானாசிரி

யாது பெயர் 'சத்தியஞானி அல்லது சத்தியஞானதேசிகரென்பது. பாபநாசக்ஷேத்திரத்தின் தமிழ்ப்புராண நூலாசிரியருடைய ஞானாசிரியர்பெயரும் சத்தியஞானியென்று காணப்படுகின்றது; இவரும் இவரும் ஒருவரோ வேறோ விளங்கவில்லை.

இவர் ஸ்தலயாத்திரைசெய்துகொண்டு திருக்காளத்தியையடைந்து பொன்முகரியில் நீராடிக் காலந்தோறும் ஸ்வாமிதரிசனஞ்செய்பவராய்ச் சிலநாள் தங்கி, அங்கே செந்தமிழ்ப்பயிற்சியும் சிவநேசச் செல்வமும்வாய்ந்த பெரியோர்களோடு அளவளாவிவருங்காலத்தில், இவருடையகல்வித்திறத்தையும் இனியசெய்யுள்இயற்றும் வன்மையையும் அறிந்தஅவர்கள் "இத்தலபுராணத்தைத் தமிழில் செய்யுள் நடையாக இயற்றுக" என்றுகூற, அவர்கள்சொல்லைச் சிரமேற்கொண்டு இவர் அங்ஙனமேஇயற்றி அவர்களை மகிழ்வித்தனர் (ப. ௬.).

இவருக்கு வடநூலை மொழிபெயர்த்தளித்தவர், மேற்கூறிய வீரவநல்லூரிலிருந்த பௌராணிகராகிய சங்கரநாராயணரென்னும் ஒரு வேதியர் (ப. ௫.).

இவருடையசெய்யுளினினிமையையறிந்த அக்காலத்துப்பெரியோர்களால் இவரடைந்தசிறப்புப்பெயர் பரிமளகவிராயர் என்பது (ப. உ௩௬.).

இப்புராணத்துள்ளகதைகளை அங்கங்கேஎடுத்தாண்டிருப்பதும், பழையநூல்களின் சிறந்தகருத்துக்களை உரியஇடங்களில் அழகாக அமைத்திருப்பதும், வேறுஸ்தலபுராணகதைகளை அங்கங்கேஎடுத்தாளுவதும் திருக்காளத்திநாதருடைய மகிமையையும், ஸ்தலமகிமையையும், பேறுபெற்றோருடைய அருஞ்செயல்களையும், மனமுருகிப் பாடிக்கொண்டு செல்லுதலும், பிறவும்ஆகியஇவற்றை உற்றுநோக்குகையில் இவருடையஇயற்பெயரும், சிறப்புப்பெயரும் இவருக்குத் தகுமென்றே தோற்றுகிறது.

ஸ்ரீகாசியிலேனும் திருக்காளத்தியிலேனும் ஒருநாள் நியமத்துடன் வசித்து ஸ்வாமிதரிசனஞ்செய்பவர்களுக்குக் கலியின்பீடை நீங்குமென்றும் அவர்களுக்குப் பிறவிப்பிணிதீருமென்றும் இப்புராணம்தெரிவித்தலை அறிந்தஇவர் இதில்வசித்ததுபோலவே ஸ்ரீகாசியிலும் வசிக்கவேண்டுமென்றுஎண்ணி அங்கேசென்று சிலநாள் நியமத்தோடிருந்து சிவபதமடைந்தார். (ப. உ0௪, உ௩௬.)

இவரைப்பற்றிய மற்றவரலாறு யாதும் புலப்படவில்லை.

இப்புராணம், பாயிரமும், கடவுள்வாழ்த்தும், நூலியற்றுதற்குக் காரணமும், அவையடக்கமும், நால்வரலாறும, பதிகமும், முறையே அமைக்கப்பெற்று, அருச்சுனன்தீர்த்தயாத்திரை உரைத்த அத்தி

பாயிரம்முதலிய ௩௩ - அத்தியாயங்களாகப் பகுக்கப்பெற்றுள்ளது. இதன்செய்யுட்டொகை, ௧௭௨௯.

"ஆதரித்தகாளத்திமான் மியமென வறைந்தேன்" (ப. ௭, பா. ௨) என்று நூலாசிரியர் கூறியதைக்கொண்டு இந்நூற்பெயர் காளத்திமான்மியமென வழங்குதற்குரியதாயினும் ஏட்டுப்பிரதிகளில் திருக்காளத்திப் புராணமென்றே வரையப்பட்டிருந்தமையின், அப்பெயரையே இதற்கு வைக்கும்படி நேர்ந்தது. *

## கிடைத்ததமிழ்ப்புராணக்கையெழுத்துப்பிரதிகள்.

௧. திருக்கைலாயபரம்பரைத் திருவாவடுதுறை யாதீனத்துப் பிரதி ... ... ... ௧.

௨. செப்பறையைச்சார்ந்த இராஜவல்லிபுரம் ஸ்ரீ பொன்னம்பலதேசிகர்மடாலயத்துள்ள ஸ்ரீ கனகசபாபதிதேசிகரவர்கள் பிரதி ... ... ... ௧.

௩. தொழூர், ஸ்ரீ வேலாயுதமுதலியாரவர்கள் பிரதி ... ௧.

௪. ம-ள-ள-ஸ்ரீ, காஞ்சி - நாகலிங்கமுதலியாரவர்கள் பிரதி... ௧

இவற்றுள், "கண்ணப்பர் சிவகோசரியார் முத்தியடைந்தஅத்தியாயம்" என ஓர் அத்தியாயம் அதிகமாகஇருந்த பிரதியில் (ப. ௨௩௭.) பதிகத்தின் ௩ - ஆம் செய்யுளின் நான்காம் அடி, "கண்ணிய சிலம்பியு மிபமுங் காளனும்" எனவும், ௪ - ஆம் செய்யுள் "நற்றிவ கோசரநாம வேதனும், பொற்சிலைத் திண்ணனும் பூசை செய்ததுஞ், சிற்பரனுண்மையுஞ் சிவனுக் குத்தமப், பற்பல தலங்களா வுள்ள பான்மையும்" எனவும், முதல் இரண்டு அத்தியாயங்களும் ஒன்றுபடுத்தப்பட்டு, அதன்பெயர், "அர்ச்சுனன் தீர்த்தயாத்திரை பரத்துவாச தரிசனம் உரைத்தஅத்தியாயம்" எனவும், நான்காம் அத்தியாயத்தின் இறுதிச்செய்யுள், "என்று கூறு முனிவனை யேந்தலு, நன்றி சேர் சிவ கோசரநம்பியும, வென்றி வெஞ்சிலை வீரனும் பூசைசெய், தொன்று மின்பமுணர்த்தென வோதினன" எனவும் காணப்பட்டன.

---

* இப்புராணத்தையன்றி இத்தலத்திற்குரிய தமிழ்நூல்கள் ௧௧ - ஆம் திருமுறையில் உள்ளனவாகிய நக்கீரதேவருளிச்செய்த கைலைபாதி காளத்திபாதித்திருவந்தாதியும், போற்றிக்கலிவெண்பாவும், கண்ணப்பதேவர் திருமறமும், கல்லாடதேவருளிச்செய்த கண்ணப்பதேவர் திருமறமும், கருணைப்பிரகாசர்முதலிய மூவரியற்றிய சீகாளத்திப்புராணமும், திருக்காளத்திநாதருலாவும், திருக்காளத்திநாதர் இட்டகாமியமாலையொன்றும், திருக்காளத்திநாதர் கட்டளைக்கலிப்பாவும், திருக்காளத்திநாதர் பதிகமும், திருக்காளத்திக்கோவையும் ஆகிய இவைகளாம். கோவையிற் காப்புச்செய்யுள்மட்டுமே இப்போது காணப்படுகின்றது. தனிப்பாடல்கள் பல.

## இந்நூலாராய்ச்சிக்குக் கிடைத்த வடமொழிப் புராணக் கையெழுத்துப்பிரதிகள்.

க. ஸ்ரீகாளஹஸ்தி, ஸ்ரீமத் குமாரகாளஹஸ்தி சிவாசாரிய ரவர்கள் அளித்த ஸ்வர்ணமுகரீ மாஹாத்மியமும் வாசிஷ்டலிங்கமும் அடங்கிய பிரதி ... ... ... க.

உ. ஷை யூர் ஸ்ரீமத் முத்துகுமார காளஹஸ்தி சிவாசாரிய ரவர்கள் அளித்த தக்ஷிணகைலாஸமாஹாத்மியப்பிரதி க.

ங. ஷை யூர் பிரஹ்மஸ்ரீ. சாமியாத்தியாரவர்கள் அளித்த ஷட்த்தியாயீ பிரதி.. ... ... ... ... க.

இவற்றுள் முதலாவது பிரதியே இந்நூலாராய்ச்சிக்கு மிகவும் இன்றியமையாததாக இருந்தது.

தேவிகோட்டை ஸ்ரீமான். மெ. அரு. நா. இராமநாதன் செட்டியாரவர்களும், ஸ்ரீமான். மெ. அரு. அரு. அருணசலஞ்செட்டியாரவர்களும் இந்நூலைப் பதிப்பித்தலில் எனக்குப் பொருட்கவலையுண்டாகாவண்ணம் செய்வித்த பெருந்தகைமை மிகப் பாராட்டத்தக்கது. சிவஸ்தல சம்பந்தமான கற்பணி முதலியவற்றிற்போலவே சொற்பணியிலும் இவர்கள் அன்புவைத்திருத்தல் இதனால் நன்கு புலப்படுகின்றது.

இதனை ஆராய்ச்சிசெய்து பதிப்பிக்குங்காலத்தில், திருமயிலை, பி. எஸ். ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதராகிய ம-ா-ா-ஸ்ரீ, இ. வை. அநந்தராமையரவர்கள் வழக்கம்போலவே உடனிருந்து உதவிபுரிந்துவந்தார்கள்.

இப்பதிப்பிற் காணப்படும் வழுக்களை விவேகிகள் பொறுத்திடுவார்களென்று நம்புகிறேன்.

---

### விருத்தம்.

"மருப்படிக்கொண் டெழுமுலைபா ரெண்ணிறந்தார் வயிற்புக்கு
வருந்துநெஞ்சே, கருப்படிக்கா லருந்தியெனக் களித்தெழுபே ரன்பினொடுங் கவின்காளத் திப், பொருப்படிக்கீழ்க் கண்ணப்ப ரருள்வேட்டம் புரிகாற்பொன் னடியிற் பூண்ட, செருப்படிக்கீழ்ச் சிறுமணலாய்க் கிடவாத தீவினைக்கென் செய்கு வோமே" (ரு)

### வெண்பா.

சிலந்தியொடு காளனத்தி திண்ணர்தமை யாண்ட
நலந்திகழுங் காளத்தி நாதா - அலந்துஞ்
சகமயக்கந் தீரேனுன் றண்பலரை யுன்னி
அகமயக்கந் தீர அருள்.

சென்னை
17—4—1912.

இங்ஙனம்
வே. சாமிநாதையன்.

சிவமயம்

திருச்சிற்றம்பலம்.

# திருக்காளத்தித்தேவாரம்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்

### பண் - கொல்லி.

திருச்சிற்றம்பலம்.

சந்தமாரகிலொடுசாதிதேக்கம்மர
முந்துமாமுகலியின்கரையினிலுமையொடு
மந்தமார்பொழில்வளர்மல்குவண்காளத்தி
யெந்தையாரிணையடியென்மனத்துள்ளவே. (க)

ஆலமாமரவமோடமைந்தசீர்ச்சந்தனஞ்
சாலமாபீலியுஞ்சண்பகமுந்தியே
காலமார்முகலிவந்தணைதருகாளத்தி
நீலமார்கண்டனைநினையுமாநினைவதே. (உ)

கோங்கமேகுரவமேகொன்றையம்பாதிரி
[illegible]
லாங்கமர்காளத்தியடிகளையடிதொழ
வீங்குவெந்துயர்கெடும்வீடெளிதாகுமே. (ங)

கரும்புதேன்கட்டியுங்கதலியின்கனிகளு
மரும்புநீர்முகலியின்கரையினிலணிமதி
யொருங்குவார்சடையினன்காளத்தியொருவனை
விரும்புவாரவர்கடாம்விண்ணுலகாள்வரே. (ச)

வரைதருமகிலொடுமாமுத்தமுந்தியே
திரைதருமுகலியின்கரையினிற்றேமலர்
விரைதருசடைமுடிக்காளத்திவிண்ணவ
னிரைதருகழலிணைநித்தலுநினைமினே. (ரு,சு,எ)

முத்துமாமணிகளுமுழுமலர்த்திரள்களு
மெத்துமாமுகலியின்கரையினிலெழில்பெறக்
கத்திடவரக்கனைக்கால்விரலூன்றிய
வத்தனறன்காளத்தியணைவதுகருமமே. (அ)

மண்ணுமாவேங்கையும்மருதுகள்பீழ்ந்துந்தி
நண்ணுமாமுகலியின்கரையினிநன்மைசேர்
வண்ணமாமலரவன்மாலவன்காண்கிலா
வண்ணலார்காளத்தியாங்கணைந்துய்ம்மினே. (கூ)

வீங்கியவுடலினர்விரிதருதுவருடைப்
பாங்கிலார்சொலைவிடும்பானடிபணியுமி
ன்றேங்குவண்காளத்தியுள்ளமோடுணர்தம
வாங்கிடும்வினைகளைவானவர்க்கொருவனே. (௧௦)

அட்டமாசத்திகளட்
வட்டவார்சடையனைவயலணிகாழியான்
சிட்டநான்மறைவலஞானசம்பந்தன்சொ
லிட்டபாப்பாடுவார்க்கில்லையாம்பாவமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவிராகம்.

---

**பண் - சாதாரி.**

திருச்சிற்றம்பலம்.

வானவர்கடானவர்கள்வாதைபடவந்ததொருமாகடல்விடந்
தானமுதுசெய்தருள்புரிந்தசிவன்மேவுமலைதன்னைவினவி
லேனமினமானினொடுகிள்ளைதினைகொள்ளவெழிலார்கவணினாற்
கானவர்தமாமகளிர்கனகமணிவிலகுகாளத்திமலையே. (௧)

முதுசினவிலவுணர்புரமூன்றுமொருநொடிவரையின்மூளவெரிசெய்
சதுரர்மதிபொதிசடையர்சங்கரர்விரும்புமலைதன்னைவினவி
லெதிரெதிரவெதிர்பிணையவெழுபொறிகள்சிதறவெழிலேனமுழுத
கதிர்மணியின்வளரொளிகளிருளகலநிலவுகாளத்திமலையே. (௨)

கொல்லெனவிடுத்தருள்புரிந்தசிவன்மேவுமலைகூறிவினவிற்
பல்பலவிருங்கனிபருங்கிமிகவுண்டவைநெருங்கியினமாய்க்
கல்லதிரநின்றுகருமந்திவிளையாடுகாளத்திமலையே. (௩)

வேயனையதோளுமையொர்பாகமதுவாகவிடையேறிசடைமேற்
றூயமதிசூடிசுடுகாடினடமாடிமலைதன்னைவினவில்
வாய்கலசமாகவழிபாடுசெயும்வேடன்மலராகுநயனங்
காய்கணையினாலிடந்தீசனடிகூடுகாளத்திமலையே (௪)

மலையின்மிசைத்தனின்முகில்போல்வருவதொருமதகரியை மழைபோல
கொலைசெய்துமையஞ்சவுரிபோர்த்தசிவன்மேவுமலைகூறிவினவி [லறக்
[illegible] துவேய
தலைக்கிலனவொளிகொள்கதிர்மக்கமவைசிங்கைகாளத்திமலையே. (௫)

பாரகம்விளங்கியபகீரதனருந்தவமுயன்றபணிகண்
டாரருள்புரிந்தலைகொள்கங்கைசடையேற்றவான்மலையினவில்
வாரதரிருங்குறவர்சேவலின்மடுத்தவரொரித்தவிறகிற்
காரகிலிரும்புகைவிசும்புகம்ழ்கின்றகாளத்திமலையே (௬)

ஆருமெதிராதவலியாகியசலந்தரனையாழியதனு
லீரும்வகைசெய்தருள்புரிந்தவனிருந்தமலைதன்னைவினவி
லூருமரவம்மொளிகொண்மாமணியுமிழ்ந்தவையுலாவிவரலாற்
காரிருள்கடிந்துகனகம்மெனவிளங்குகாளத்திமலையே. (௭)

எரியனையசுரிமயிரிராவணனையீடழியவெழில்கொள்விரலாற்
பெரியவரையூன்றியருள்செய்தசிவன்மேவுமலைபெற்றிவினவில்
வரியசிலைவேடுவர்களாடவர்கணீடுவரையூடுவரலாற்
கரியினொடுவரியுழுவையரியினமும்வெருவுகாளத்திமலையே. (௮)

இனதளவிலிவனதடியிணையுமுடியறிதுமெனவிகலுமிருவர்
தனதுருவமறிவரியசகலசிவன்மேவுமலைதன்னைவினவிற்
புனவர்புனமயிலனையமாதரொடுமைந்தருமணம்புணருநாட்
கனகமெனமலர்களணிவேங்கைகணிலாவுகாளத்திமலையே. (௯)

நின்றுகவளம்பலகொள்கையரொடுமெய்யிலிடுபோர்வையவரு
நன்றியறியாதவகைநின்றசிவன்மேவுமலைநாடிவினவிற்
குன்றின்மலிதுன்றுபொழினின்றகுளிர்சந்தின்முறிதின்றுகுலவிக்
கன்றினொடுசென்றுபிடிநின்றுவிளையாடுகாளத்திமலையே. (௧௦)

காடதிடமாகநடமாடுசிவன்மேவுகாளத்திமலையை
மாடமொடுமாளிகைகணீடுவளர்கொச்சைவயமன்னுதலைவ
னாடுபலநீடுபுகழ்ஞானசம்பந்தனுரைநல்லதமிழின்
பாடலொடுபாடுமிசைவல்லவர்களல்லர்பரலோகமெளிதே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

# திருநாவுக்கரசுநாயனார்.

## திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

விற்றூணொன்றில்லாதநல்கூர்ந்தான்காண்
வியன்கச்சிக்கம்பன்காண்பிச்சையல்லான்
மற்றூணொன்றில்லாதமாசதுரன்காண்
மயானத்துமைந்தன்காண்மாசொன்றில்லாப்

பொற்றூண்காண்மாமணிநற்குன்றொப்பான்காண்
பொய்யாதுபொழிலேழுந்தாங்கிநின்ற
கற்றூண்காண்காளத்திகாணப்பட்ட
கணநாதன்காணவனென்கண்ணுளானே. (க)

இடிப்பான்காணென்வினையையேகம்பன்கா
ணெலும்பாபரணன்காணெல்லாமுன்னே
முடிப்பான்காண்மூவுலகுமாயினான்காண்
முறைமையாலைம்புரியும்வழுவாவண்ணம்
படைத்தான்றலையறுத்தபாசுபதன்காண்
பராய்த்துறையான்பழனம்பைஞ்ஞீலியான்காண்
கடித்தார்கமழ்கொன்றைக்கண்ணியான்காண்
காளத்தியானவனென்கண்ணுளானே. (உ)

நாரணன்காணான்முகன்காணால்வேதன்காண்
ஞானப்பெருங்கடற்கோர்நாவாயன்ன
பூரணன்காண்புண்ணியன்காண்புராணன்றான்காண்
புரிசடைமேற்புனலேற்றபுனிதன்றான்காண்
சாரணன்காண்சந்திரன்காண்கதிரோன்றான்காண்
டன்மைக்கட்டானேகாண்டக்கோர்க்கெல்லாங்
காரணன்காண்காளத்திகாணப்பட்ட
கணநாதன்காணவனென்கண்ணுளானே. (ங)

செற்றான்காணென்வினையைத்தீயாடிகாண்
டிருவொற்றியூரான்காண்சிந்தைசெய்வார்க்
குற்றான்காணேகம்பமேவினான்கா
ணுமையாணற்கொழுநன்காணிமையோரேத்துஞ்
சொற்றான்காண்சோற்றுத்துறையுளான்காண்
சுறாவேந்தனேவலத்தைநீறாநோக்கக்
கற்றான்காண்காளத்திகாணப்பட்ட
கணநாதன்காணவனென்கண்ணுளானே. (ச)

மனத்தகத்தான்றலைமேலான்வாக்கினுள்ளான்
வாயாரத்தன்னடியேபாடுந்தொண்ட
ரினத்தகத்தானிமையவர்தஞ்சிரத்தின்மேலா
னேழண்டத்தப்பாலானிப்பாற்செம்பொன்
புனத்தகத்தானறுங்கொன்றைப்போதினுள்ளான்
பொருப்பிடையானெருப்பிடையான்காற்றினுள்ளான
கனத்தகத்தான்கயிலாயத்துச்சியுள்ளான்
...ளத்தியானவனென்கண்ணுளானே. (ரு)

எல்லாமுன்றோன்றாமேதோன்றினான்கா
ணேகம்பமேயான்காணிமையோரேத்தப்

பொல்லாப்புலனைந் தும்போக்கினான் காண்
புரிசடைமேற்பாய்கங்கைபூரித்தான்கா
ணல்லவிடைமேற்கொண்டுநாகம்பூண்டு
நளிசிரமொன்றேந்தியோர்நாணயற்ற
கல்லாடைமேற்கொண்டகாபாலிகாண்
காளத்தியானவனென்கண்ணுளானே. (௬)

கரியுரிவுகண்டத்தன்கண்ணுளான்காண்
கண்டன்காண்வண்டுண்டகொன்றையா...
ணெரிபவள்வண்ணன்காணேகம்பன்கா
ணெண்டிசையுந்தானாயகுணத்தினான்காண்
டிரிபுரங்கடீயிட்டதீயாடிகாண்
டீவினைகடீர்த்திடுமென்சிந்தையான்காண்
கரியுரிமெய்போர்த்துகந்தகாபாலிகாண்
காளத்தியானவனென்கண்ணுளானே. (௭)

இல்லாடிச்சில்பலிசென்றேற்கின்றான்கா
ணிமையவர்கடொழுதிறைஞ்சவிருக்கின்றான்காண்
வில்லாடிவேடனாயோடினான்காண்
வெண்ணூலுஞ்சேர்ந்தவகலத்தான்காண்
மல்லாடுதிரடோண்மேன்மழுவாளன்காண்
மலைமகடன்மணாளன்காண்மகிழ்ந்துமுன்னாட்
கல்லாலின்கீழிருந்தகாபாலிகாண்
காளத்தியானவனென்கண்ணுளானே. (௮)

தேனப்பூவண்டுண்டகொன்றையான்காண்
டிருவேகம்பத்தான்காண்டேனார்ந்துக்க
ஞானப்பூங்கோதையாள்பாகத்தான்கா
ணம்பன்காண்ஞானத்தொளியானான்காண்
வானப்பேரூருமறியவோடி
மட்டித்துநின்றான்காண்வண்டார்சோலைக்
கானப்பேரூரான்காண்கறைக்கண்டன்காண்
காளத்தியானவனென்கண்ணுளானே. (௯)

இறையவன்காணேழுலகுமாயினான்கா
ணேழ்கடலுஞ்சூழ்மலையுமாயினான்காண்
குறையுடையார்குற்றேவல்கொள்வான்றான்காண்
குடமூக்கிற்கீழ்க்கோட்டமேவினான்காண்
மறையுடையவானோர்பெருமான்றான்காண்
மறைக்காட்டுறையுமணிகண்டன்காண்
கறையுடையகண்டத்தெங்காபாலிகாண்
காளத்தியானவனென்கண்ணுளானே. (௧0)

உண்ணாவருநஞ்சமுண்டான்றான்கா
ணூழித்தீயன்னான்காணுகப்பார்காண்
பண்ணாரப்பல்லிலயம்பாடினான்காண்
பயின்றநால்வேதத்தின்பண்பினான்கா
ணண்ணாமலையான்காணடியாரீட்ட
மடியிணைகடொழுதேத்தவருளுவான்காண்
கண்ணாரக்காண்பார்க்கோர்காட்சியான்காண்
காளத்தியானவனென்கண்ணுளானே. (கக)

திருச்சிற்றபலம்.

## சுந்தரமூர்த்திநாயனார்.

### பண்—நட்டராகம்.

திருச்சிற்றபலம்.

செண்டாடும்விடையாய்சிவனேயென்செழுஞ்சுடரே
வண்டாருங்குழலாளுமைபாகமகிழ்ந்தவனே
கண்டார்காதலிக்குங்கணநாதனெங்காளத்தியா
யண்டாவுன்னையல்லாலறிந்தேத்தமாட்டேனே. (க)

இமையோர்நாயகனேயிறைவாவென்னிடர்த்துணையே
கமையார்கருணையினாய்கருமாமுகில்போன்மிடற்று
யுமையோர்கூறுடையாயுருவேதிருக்காளத்தியு
ளமைவேயுன்னையல்லாலறிந்தேத்தமாட்டேனே. (உ)

படையார்வெண்மழுவாய்பகலோன்பல்லுகுத்தவனே
விடையார்வேதியனேவிளங்குங்குழைக்காதுடையாய்
கடையார்மாளிகைசூழ்கணநாதனெங்காளத்தியா
யுடையாயுன்னையல்லாலுகந்தேத்தமாட்டேனே. (௩)

மறிசேர்கையினனேமதமாவுரிபோர்த்தவனே
குறியேயென்னுடையகுருவேயுன்குற்றேவல்செய்வே
னெறியேநின்றடியார்நினைக்குந்திருக்காளத்தியு
ளறிவேயுன்னையல்லாலறிந்தேத்தமாட்டேனே. (௪)

செஞ்சேலன்னகண்ணார்திறத்தேகிடந்துற்றலறி
நஞ்சேனடியேனலமொன்றறியாமையினாற்
றுஞ்சேனானொருகாற்றொழுதேன்றிருக்காளத்தியா
யஞ்சாதுன்னையல்லாலறிந்தேத்தமாட்டேனே. (௫)

பொய்யவனாயடியேன்புகவேநெறியொன்றறியேன்
செய்யவனாகிவந்திங்கிடரானவைதீர்த்தவனே
மெய்யவனேதிருவேவிளங்குந்திருக்காளத்தியென்
னையனுன்றன்னையல்லாலறிந்தேத்தமாட்டேனே. (௬)

கடியேன்காதன்மையாற்கழற்போதறியாதவென்னுடை
சூடியாக்கேயில்கொண்டகுளிர்வார்சடையெங்குழகா
முடியால்வானவர்கண்முயங்குந்திருக்காளத்தியா
யடியேனுன்னையல்லாலறியேன்மற்றொருவரையே. (எ)

நீறார்மேனியனேநிமலாநினையன்றிமற்றுக்
கூறேனுவந்தன்றேற்கொழுந்தேயென்குணக்கடலே
பாறூர்வெண்டலையிற்பலிகொண்டுழல்காளத்தியா
யேறேயுன்னையல்லாலினியேத்தமாட்டேனே.

தளிர்போன்மெல்லடிப்பாடனையாகத்தமர்ந்தருளி
யெளிவாய்வந்தெனுள்ளம்புகுதவல்லவெம்பெருமான்
களியார்வண்டறையுந்திருகாளத்தியுள்ளிருந்த
வெளிவேயுன்னையல்லாலினியொன்றுமுணரேனே. (கூ)

காரூரும்பொழில்சூழ்கணநாதனெங்காளத்தியு
ளாராவின்னமுதையணிநாவலாரூரன்சொன்ன
சீரூர்செந்தமிழ்கள்செப்புவார்வினையாயினபோய்ப்
பேராவிண்ணுலகம்பெறுவார்பிறப்பொன்றிலரே. (கo)

திருச்சிற்றம்பலம்.

---

வேறுதலத்துப் பதிகங்களிலும் பொதுப்பதிகங்களிலும்
இத்தலப்பெயர்வந்தவற்றுள்,
இப்பொழுதுதெரிந்த தேவாரங்கள் வருமாறு:—

## திருநாவுக்கரசுநாயனார்.

### திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

உழையாடுகரதலமொன்றுடையான்கண்டா
யொற்றியூரொற்றியாவுடையான்கண்டாய்
கழையாடுகழுக்குன்றமமர்ந்தான்கண்டா
காளத்திக்கற்பகமாய்நின்றான்கண்டா
யிழையாடுமெண்புயத்தவிறைவன்கண்டா
யென்னெஞ்சத்துண்ணீங்காவெம்மான்கண்
குழையாடநடமாடுங்கூத்தன்கண்டாய்
கோடிகாவமர்ந்துறையுங்குழகன்றானே.

அல்லாய்ப்பகலானாய்நீயேயென்று
மாதிக்கயிலாயனீயேயென்றுங்

கல்லாலமர்ந்தாயுநீயேயென்றுங்
காளத்திக்கற்பகமுநீயேயென்றுஞ்
சொல்லாய்ப்பொருளானாய்நீயேயென்றுஞ்
சோற்றுத்துறையுறைவாய்நீயேயென்றுஞ்
செல்வாய்த்திருவானாய்நீயேயென்று
நின்றநெய்த்தானாவென்னெஞ்சுளாயே.

சொல்லானைச்சுடர்ப்பவளச்சோதியானைத்
தொல்லவுணர்புரமூன்றுமெரியச்செற்ற
வில்லானையெல்லார்க்குமேலானானை
மெல்லியலாள்பாகனைவேதநான்குங்
கல்லாலினீழற்கீழறங்கண்டானைக்
காளத்தியானைக்கயிலைமேய
நல்லானைநம்பியைநள்ளாற்றானை
நானடியேனினைக்கப்பெற்றுய்ந்தவாறே.

கயிலாயமலையுளார்காரோணத்தார்
கந்தமாதனத்துளார்காளத்தியார்
மயிலாடுதுறையுளார்மாகாளத்தார்
வக்கரையார்சக்கரமாற்கீந்தார்வாய்ந்த
வயில்வாயசூலமுங்காபாலமு
மமருந்திருக்கரத்தாரானேறேறி
வெயிலாயசோதிவிளங்குநீற்றார்
வீழிமிழலையேமேவினாரே.

பிண்டத்தைக்காக்கும்பிரானார்போலும்
பிறவியிறவியிலாதார்போலு
முண்டத்துமுக்கண்ணுடையார்போலு
முழுநீறுபூசுமுதல்வர்போலுங்
கண்டத்திறையேகறுத்தார்போலுங்
காளத்திகாரோணமேயார்போலு
மண்டத்துக்கப்புறமாய்நின்றார்போலு
மணியாரூர்த்திருமூலட்டானனாரே.

கற்பகமுமிருசுடருமாயினானைக்
காளத்திகயிலாயமலையுளானை
விற்பயிலுமதனழியவிழித்தான்றன்னை
விசயனுக்குவேடுவனாய்நின்றான்றன்னைப்
பொற்பமரும்பொழிலாரூர்மூலட்டானம்
பொருந்தியவெம்பெருமானைப்பொருந்தார்சிந்தை
பற்புதனையாநெறியிலப்பன்றன்னை
யடைந்தடியேனருவினைநோயறுத்தவாறே.

திருநீர்ப்புனற்கெடிலவீரட்டமுந்
திருவளப்பூர்தெற்கேறுசித்தவடமும்
வருநீர்வளம்பெருகுமாநிருபமும்
மயிலாப்பின்மன்னினார்மன்னியேத்தும்
பெருநீர்வளர்சடையான்பேணிநின்ற
பிரமபுரஞ்சுழியல்பெண்ணாகடங்
கருநீலவண்டரற்றுங்காளத்தியுங்
கயிலாயந்தம்முடையகாப்புக்களே.

பொற்றூணைப்புலானாறுகபாலமேந்திப்
புவலோகமெல்லாமுழிதந்தானை
முற்றாதவெண்டிங்கட்கண்ணியானை
முழுமுதலாய்மூவுலகுமுடிவொன்றில்லாக்
கற்றானைக்காளத்திமலையான்றன்னைக்
கருதாதார்புரமூன்றுமெரியவம்பாற்
செற்றானைத்திருமுதுகுன்றுடையான்றன்னைத்
தீவினையேனறியாதேதிகைத்தவாறே.

கல்லலகுதாங்கொண்டுகாளத்தியார்
கடியவிடையேறிக்காணக்காண
வில்லமேதாம்புகுதாவிடுமின்பிச்சை
யென்றாருக்கெதிரெழுந்தேனெங்குங்காணேன்
சொல்லாதேபோகின்றீருமூரேது
துருத்திபழனமோநெய்த்தானமோ
வல்லலைசெய்தடிகள்போகின்றீர்தா
மழகியரேயாமாத்தூரையனோ.

மருவினியமறைப்பொருளைமறைக்காட்டானை
மறப்பிலியைமதியேந்துசடையான்றன்னை
யுருநிலவுமொண்சுடரையும்பரானை
யுரைப்பினியதவத்தானையுலகில்வித்தைக்
கருநிலவுகண்டனைக்காளத்தியைக்
கருதுவார்மனத்தானைக்கல்விதன்னைச்
செருநிலவுபடையானைத்திருமாற்பேற்றெஞ்
செம்பவளக்குன்றினைச்[illegible]றடைந்தேனானே

வானகத்தில்வளர்முகிலைமதியந்தன்னை
வணங்குவார்மனத்தானைவடிவார்பொன்னை
யூனகத்திலூறுதுணையையுலவாதானை
யொற்றியூருதமனையூழிக்கன்றைக்

கானகத்துக்கருங்களிற்றைக்காளத்தியைக்
கருதுவார்கருத்தானைக்கருவைமூலத்
தேனகத்தினின்சுவையைத்திருமாற்பேற்றெஞ்
செம்பவளக்குன்றினைச்சென்றடைந்தேனானே.

திருச்சிற்றம்பலம்.

# பொது.



## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

### பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

அண்ணாமலையீங்கோயுமத்திமுத்தா
றகலாமுதுகுன்றங்கொடுங்குன்றமுங்
கண்ணார்கழுக்குன்றங்கயிலைகோணம்
பயில்கற்குடிகாளத்திவாட்போக்கியும்
பண்ணார்மொழிமங்கையோர்பங்குடையான்
பரங்குன்றம்பருப்பதம்பேணிநின்றே
யெண்ணாயிரவும்பகலுமிடும்பைக்
கடனீந்தலாங்காரணமே.

திருச்சிற்றம்பலம்.

## திருநாவுக்கரசுநாயனார்.

### திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

தில்லைச்சிற்றம்பலமுஞ்செம்பொன்பள்ளி
தேவன்குடிசிராப்பள்ளிதெங்கூர்
கொல்லிக்குளிரறைபள்ளிகோவல்
வீரட்டங்கோகர்ணங்கோடிகாவு
முல்லைப்புறவமுருகன்பூண்டி
முழையூர்பழையாறைசத்திமுற்றங்
கல்லிற்றிகழ்சீரார்காளத்தியுங்
கயிலாயநாதனையேகாணலாமே.

...தமாதனங்கயிலைமலைகேதாரங
காளத்திகழுக்குன்றங்கண்ணாண்ணு

## தேவாரம்.

மந்தபுரம்பொழிற்சாரல்வடபர்ப்பத
மகேந்திரமாமலைநீலமேமகூடம்
விந்தமாமலைவேதஞ்சையமிக்க
வியன்பொதியின்மலைமேருவுதயமத்த
மிந்துசேகரனுறையுமலைகண்மற்று
மேத்துவோமிடர்கெடநின்றேத்துவோமே.

திருச்சிற்றம்பலம்.

---

திருக்காளத்திஸ்தலவிருக்ஷமாகிய கல்லாலையும் பொன்முகரியாற்றை யும் வழிபட்டுப்பேறுபெற்ற சிலந்திமுதலியவற்றையும் கண்ணப்பநாயனர் முதலியோரையும் மற்றுமுள்ள இத்தலவிசேடங்கள் பலவற்றையும் பாராட் டிக்கூறும் தேவாரமுதலியவைகளும் பழையநூல்களிலுள்ள அருமைச்செய் யுட்களும் பிரபந்தங்களும் வருமாறு :—

## கல்லால்.

### திருஞானசம்பந்தமூர்த்திநாயனர்.

பண் - இந்தளம்.

---

திருச்சிற்றம்பலம்.

கல்லானிழன்மேயவனேகரும்பின்
வில்லானெழில்வேவவிழித்தவனே
நல்லார்தொழுநாகேச்சுரநகரிற்
செல்வாவெனவல்வினைதேய்ந்தறுமே.

பண் - நட்டபாடை.

கல்லானிழற்கீழாயிடர்காவாயெனவானோ
ரெல்லாமொருதேராவயன்மறைபூட்டிநின்றுய்ப்ப
வல்லாயெரிகாற்றீர்க்கரிகோல்வாசுகிநாண்கல்
வில்லாவெயிலெய்தானிடம்வீழிம்மிழலையே.

திருச்சிற்றம்பலம்.

---

### திருநாவுக்கரசுநாயனர்.

திருத்தாண்டகம்.

---

திருச்சிற்றம்பலம்.

நம்பனைநால்வேதங்கரைகண்டானை
ஞானப்பெருங்கடலைநன்மைதன்னைக்

கம்பனைக்கல்லாலிருந்தான்றன்னைக்
கற்பகமாயடியார்கட்கருள்செய்வானைச்
செம்பொன்னைப்பவளத்தைத்திரளுமுத்தைத்
திங்களை ஞாயிற்றைத்தீயைநீரை
யம்பொன்னையாவடுதண்டுறையுண்மேய
வானடியேயடிநாயேனடைந்துய்ந்தேனே.

சொல்லார்ந்தசோற்றுத்துறையான்றன்னைத்
தொன்னரகநன்னெறியாற்றார்ப்பான்றன்னை
வில்லானைமீயச்சூர்மேவினானை,
வேதியர்கணால்வர்க்கும்வேதஞ்சொல்லிப்
பொல்லாதார்தம்மரணமூன்றும்பொன்றப்
பொறியரவமார்பாரப்பூண்டான்றன்னைக்
கல்லாலின்கீழானைக்கழிசூழ்நாகைக்
காரோணத்தெஞ்ஞான்றுங்காணலாமே

ஏனத்திளமருப்புப்பூண்டார்போலு
மிமையவர்களேத்தவிருந்தார்போலுங்
கானக்கல்லாற்கீழ்நிழலார்போலுங்
கடனஞ்சமுண்டிருண்டகண்டர்போலும்
வானத்திளமதிசேர்சடையார்போலும்
வான்கயிலைவெற்பின்மகிழ்ந்தார்போலு
மானத்துமுன்னெழுத்தாய்நின்றார்போலு
மணியாரூர்த்திருமூலட்டானனாரே.

நீரேறுசடைமுடியெந்நிமலன்றான்கா
ணெற்றிமேலொற்றைக்கண்ணிறைவித்தான்காண்
வாரேறுவனமுலையாள்பாகத்தான்காண்
வளர்மதிசேர்சடையான்காண்மாதேவன்காண்
காரேறுமுகிலனையகண்டத்தான்காண்
கல்லாலின்கீழறங்கள்சொல்லினான்காண்
சீரேறுமணிமாடத்திருவாரூரிற்
றிருமூலட்டானத்தெஞ்செல்வன்றானே.

திருச்சிற்றம்பலம்.

---

## சுந்தரமூர்த்திநாயனார்.

### பண் — கொல்லி.

திருச்சிற்றம்பலம்.

கருக்கநஞ்சமுதுண்டகல்லாலன்கொல்லேற்றன்
தருக்கருக்கனைச்செற்றுகந்தான்றன்முடிமே

# தேவாரம்.

லெருக்கதாண்மலரிண்டையுமத்தமுஞ்சூடி
யிருக்குரூசெய்தமாணிடையாறிடைமருதே.

பண் - பழம்பஞ்சுரம்.

துருத்திச்சுடரேநெய்த்தானத்தாய்சொல்லாய்கல்லாலா
பருத்திநியமத்துறைவாய்வெயிலாய்ப்பலவாய்க்காறருணய்
திருத்தித்திருத்திவந்தென்சிந்தையிடங்கொள்கயிலாயா
யடைந்தார்வினைகளகலவருளாயே.

திருச்சிற்றம்பலம்.

---

## சிலந்தி.

## திருநாவுக்கரசுநாயனார்.

### திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

சிலந்திக்கருண்முன்னஞ்செய்தான்கண்டாய்
திரிபுரங்கடீவாய்ப்படுத்தான்கண்டாய்
நிலந்துக்கநீர்வளிதீயானான்கண்டாய்
நிரூபியாயுரூபியுமாய்நின்றான்கண்டாய்
சலந்துக்கச்சென்னிச்சடையான்கண்டாய்
தாமரையான்செங்கண்மாலுமானான்கண்டாய்
மலந்துக்கமால்விடையொன்றூர்ந்தான்கண்டாய்
மறைக்காட்டுறையுமணாளன்றானே.

திருச்சிற்றம்பலம்.

---

## சுந்தரமூர்த்திநாயனார்.

### பண் - தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

நற்றமிழ்வல்லஞானசமபந்த
னாவினுக்கரையனாளைப்போவானுங்
கற்றசூதனற்சாக்கியன்சிலந்தி
கண்ணப்பன்கணமபுலலனென்றிவர்கள்
குற்றஞ்செய்யினுங்குணமெனக்கருதுங்
கொள்கைகண்டுநின்குரைகழலடைந்தே

பொற்றிரண்மணிக்கமலங்கண்மலரும்
பொய்கைசூழ்திருப்புன்கூருளானே.

திருச்சிற்றம்பலம்.

# கண்ணப்பநாயனார்



## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.



### கூடசதுக்கம்.

திருச்சிற்றம்பலம்.

கண்ணனுநான்முகன்காண்பரியார்
வெண்ணாவல்விரும்புமயேந்திரருங்
கண்ணப்பர்க்கருள்செய்தகயிலையெங்
களண்ணலாரூராதியானைக்காவே.

பண் - கொல்லி.

நம்மவன்கண்ணிடந்தப்பனை
வானலைக்குந்தவத்தேவுவைத்தானிடந்
தானலைத்தெள்ளமூர்தாமரைத்தண்டுறை
தேனலைக்கும்வயற்றென்குடித்திட்டையே.

திருச்சிற்றம்பலம்.

## திருநாவுக்கரசுநாயனார்.



### திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

விண்ணப்பவிச்சாதரர்களேத்தவிரிகதிரானெரிசுடரான்விண்ணுமாகிப்
பண்ணப்பன்பத்தர்மனத்துளேயும்பசுபதிபாசுபதன்றேசமூர்த்தி
கண்ணப்பன்கண்ணப்பக்கண்டுகந்தார்கழிப்பாலைமேயகபாலப்பனா
ருண்ணப்பிணிமாயயாக்கைநீங்கவழிவைத்தார்க்கவ்வழியேபோதுநாமே.

பண் - திருநேரிசை.

குவப்பெருந்தடக்கைவேடன்கொடுஞ்சிலையிறைச்சிப்பாரந்
துவர்ப்பெருஞ்செருப்பானீக்கித்தூயவாய்க்கலசமாட்ட
வுவப்பெருங்குருதிசோரவொருகணையிடந்தப்பத்
தவப்பெருந்தேவுசெய்தார்சாய்க்காடுமேவினாரே,

காப்பதோர்வில்லுமம்புங்கையதோரிறைச்சிப்பாரந்
தோற்பெருஞ்செருப்புத்தொட்டுத்தூயவாய்க்கலசமாட்டித்
தீப்பெருங்கண்கள்செய்யகுருதிநீரொழுகத்தன்கண்
கோப்பதும்பற்றிக்கொண்டார்குறுக்கைவீரட்டனாரே.

## திருத்தாண்டகம்.

ஆலாலமுண்டுகந்தவாதிகண்டா
யடையலர்தம்புரமூன்றுமெய்தான்கண்டாய்
காலாலக்காலனையுங்காய்ந்தான்கண்டாய்
கண்ணப்பர்க்கருள்செய்தகாளைகண்டாய்
பாலாருமொழிமடவாள்பாகன்கண்டாய்
பசுவேறிப்பலிதிரியும்பண்பன்கண்டாய்
மாலாலுமறிவரியமைந்தன்கண்டாய்
மழபாடிமன்னுமணாளன்றானே.

வானவன்காண்வானவர்க்குமேலானான்காண்
வடமொழியுந்தென்றமிழுமறைகணான்கு
மானவன்காணானைந்துமாடினான்கா
ணையன்காண்கையிலனலேந்தியாடுங்
கானவன்காண்கானவனுக்கருள்செய்தான்காண்
கருதுவாரிதயத்துக்கமலத்தூறுந்
தேனவன்காண்சென்றடையாச்செல்வன்றான்காண்
சிவனவன்காண்சிவபுரத்தெஞ்செல்வன்றானே

ஆமயந்தீர்த்தடியேனையாளாக்கொண்டா
ரதிகைவீரட்டானமாட்சிகொண்டார்
தாமரையோன்சிரமரிந்துகையிற்கொண்டார்
தலையதனிற்பலிகொண்டார்நிறைவாந்தன்மை
வாமனனார்மாகாயத்துதிரங்கொண்டார்
மானிடங்கொண்டார்வலங்கைமழுவாள்கொண்டார்
காமனையுமுடல்கொண்டார்கண்ணானோக்கிக்
கண்ணப்பர்பணியுங்கொள்கபாலியாரே.

திருச்சிற்றம்பலம்.

## சுந்தரமூர்த்திநாயனார்.



### பண் - தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

அணிகொளாடையம்பூணணிமாலை
யமுதுசெய்தமுதம்பெறுசண்டி

யிணைக்கொளேழுநாற்றிருபனுவ
லீன்றவன்றிருநாவினுக்கரையன்
கணைகொள்கண்ணப்பனென்றிவர்பெற்ற
காதலின்னருளாதரித்தடைந்தேன்
றிணைகொள்செந்தமிழ்ப்பைங்கிளிதெரியுஞ்
செல்வத்தென்றிருநின்றியூரானே.

பண் - சீகாமரம்.

எறிந்தசண்டியிடந்தகண்ணப்பனைத்துபத்தர்கட்கேற்றநல்கினீர்
செறிந்தபூம்பொழிற்றேன்றுளிவீசுந்திருமிழலை
நிறைந்தவந்தணர்நித்தநாடொறுநேசத்தாலுமைப்பூசிக்குமிட
மறிந்துவீழிகொண்டீரடியேற்குமருளுதிரே.

திருத்தொண்டத்தொகை, ௨.

இலைமலிந்தவேனம்பியெறிபத்தற்கடியே
னேனாதிநாதன்றனடியார்க்குமடியேன்
கலைமலிந்தசீர்நம்பிகண்ணப்பர்க்கடியேன்.
கடவூரிற்கலயன்றனடியார்க்குமடியேன்
மலைமலிந்ததோள்வள்ளன்மானக்கஞ்சாற
னெஞ்சாதவாட்டாயனடியார்க்குமடியேன்
அலைமலிந்தபுனன்மங்கையானாயற்கடியே
னாரூரனாரூரிலம்மானுக்காளே.

திருச்சிற்றம்பலம்.

# திருவாசகம்.



## திருக்கோத்தும்பி,

திருச்சிற்றம்பலம்.

கண்ணப்பனொப்பதோரன்பின்மைகண்டபி
னென்னப்பனென்னொப்பிலென்னையுமாட்கொண்டருளி
வண்ணப்பணித்தென்னைவாவென்றவான்கருணைச்
சுண்ணப்பொன்னீற்றற்கேசென்றூதாய்கோத்தும்பீ.

திருத்தோணோக்கம், ௩.

பொருட்பற்றிச்செய்கின்றபூசனைகள்போல்விளங்கச்
செருப்புற்றசீரடிவாய்க்கலசமூனமுதம்
விருப்புற்றுவேடனார்சேடறியமெய்குளிர்ந்தங்
கருட்பெற்றுநின்றவாதோணோக்கமாடாமோ.

திருச்சிற்றம்பலம்.

# ௧௧-ஆம் திருமுறை.



## நக்கீரதேவர்.

### கயிலைபாதிகாளத்திபாதித்திருவந்தாதி.*

நேரிசைவெண்பா

சொல்லும் பொருளுமே தூத்திரியு நெய்யுமா
நல்லிடிஞ்சி லென்னுடைய நாவாகச் - சொல்லரிய
வெண்பா விளக்கா வியன்கயிலை மேலிருந்த
பெண்பாகர்க் கேற்றினேன் பெற்று

•... ... ... ... ...

௧00 மற்றும் பலபிதற்ற வேண்டா மடநெஞ்சே
கற்றைச் சடையண்ணல் காளத்தி - நெற்றிக்கண்
ணூரா வமுதின் றிருநாம மஞ்செழுத்துஞ்
சோரா மலெப்பொழுதுஞ் சொல்

---

## திருக்கண்ணப்பதேவர் திருமறம்.

### அகவற்பா.

... ... ... .. ...

கடும்பகல் வேட்டையிற் காதலிற் றடிந்த
வுடம்பொடு சிலைக்கணை யுடைத்தோல் செருப்புத்
தொடர்ந்த நாயொடு தோன்றினன் றோன்றலுஞ்
செல்வன் றிருக்கா ளத்தியு ளப்பன்
றிருமேனியின் மூன்றுகண்ணு
யாங்கொரு கண்ணிலு முதிர
மொழியா தொழுக விருந்தன னாங்
பார்த்து நடுக்குற்றுப் பதைத்து மனஞ்சுழன்று
வாய்ப்புனல் சிந்தக் கண்ணீ ரருவத்
காம்பயில் சிலைக்கணை கவசத் தழிந்து
நிலம்படப் புரண்டு நெடிதினிற் றேறிச்
சிலைக்கொடும் படைகடி தெடுத்துப் படுத்தவ
ரடுத்த விவ்வனத் துளரெனத் திரிந்தாங்
கின்மை கண்டு நன்மையிற்

---

* இத்திருமுறையிலுள்ளனவாகிய திருக்காளத்திக்குரிய கயிலைபாதி காளத்திபாதித் திருவந்தாதி முதல், கல்லாடதேவரருளிச்செய்த திருக்கண்ணப்பதேவர்திருமறம் இறுதியாகவுள்ள பிரபந்தங்களும், பெரியபுராணத்துள்ள கண்ணப்பநாயனார்புராணமுற்றும் "சர்க்கமிறி", "சிரத்தானத்தில்", "பங்கயனார்பெற்றிடு" என்னும் திருப்புகழ்ச்செய்யுட்கள்முதலிய பிறவும் இங்கே பதிப்பித்தற்குரியனவாயினும் விரிவஞ்சியே அவற்றுள் சிற்சிலபகுதிகள்மட்டும் பதிப்பிக்கப்பெறுகின்றன.

றக்கன மருந்துகள் பிழியவும் பிழிதொறும்
நெக்கு நெக்கிழி குருதியைக் கண்டு நிலைதளர்ந்தே
னத்தனுக் கடுத்ததெ னத்தனுக் கடுத்ததென்
றன்பொடுங் கனற்றி
யித்தனை தரிக்கில னிதுதனைக் கண்டவென்
கண்டனை யிடந்து கடவுடன் கண்ணுறும்
புண்ணி லப்பியுங் காண்ப னென்றொரு
கண்ணிடைக் கணையது மடுத்துக்
கையில் வாங்கி யணைதர வப்பின
னப்பலுங் குருதி நிற்பதொத் துருப்பெறக்
கண்டு நெஞ்சுகந் துகந்து மற்றைக்
கண்ணிலும வடிக்கணை மடுத்தனன் மடுத்தலு
நில்லுகண் ணப்ப நில்லுகண் ணப்பவென்
னன்புடைத் தோன்ற னில்லுகண் ணப்பவென்
றின்னுரை யதனொடு மெழிறசிவ லிங்கந்
தன்னிடைப் பிறந்த தடமலர்க் கையா
லன்னவன றன்கை யம்பொடு மகப்படப்
பிடித்தருளின னருளலும்
விண்மிசை வானவர் மலர்மழை பொழிந்தனர்
வளையொடு படகந் துந்துபி கறங்கின
தொல்சீர் முனிவரு மேத்தினர் வல்லே
சிவகதி பெற்றனன் றிருக்கண் ணப்பனே.

வெண்பா.

தத்தைதா யாநதந்தை நாகனுந் தன்பிறப்புப்
பொத்தப்பி நாட்டுடுப்பூர் வேடுவனாந் - தித்திக்குந்
திண்ணப்ப னஞ்சிறும்பர் செய்தவததாற் காளத்திக்
கண்ணப்ப னாய்நின்றான் காண்.

---

## பரணதேவர்.

### சிவபெருமான்திருவந்தாதி.

உஅ. சென்றுசெருப் புக்காலாற் செல்ல மலர்நீக்கிச்
சென்று திருமுடிவாய் நீர்வார்த்துச் - சென்றுதன்
கண்ணிடந் தப்புங் கருத்தற்குக் காட்டினான்
கண்ணிடந் தப்பாமைப பார்த்து.

௩0. நினையுடைந்தேன் சித்த நிலையாகும் வண்ண
நினையடைந்தேன் சித்த நிமலா - நினையடைந்தேன்
கண்டத்தாய் காளத்தி யானே கனலாருங்
கண்டத்தாய் காவாலி கா.

## நம்பியாண்டார்நம்பி.

**கோயிற்றிருப்பண்ணியர் திருவிருத்தம், உ0.**

ஏவுசெய்ம் மேருத் தடக்கை யெழிற்றில்லை யம்பலத்து
மேவுசெய் மேனிப் பிரானன்றி யங்கணர் மிக்குளரே
காவுசெய் காளத்திக் கண்ணுதல் வேண்டும் வாங்கொழித்துத்
தேவுசெய் வான்வாய்ப் புனலாட் டியதிறல் வேடுவனே.

**திருத்தொண்டர்திருவந்தாதி, கக.**

நிலத்திற் றிகழ்திருக் காளத்தி யார்திரு நெற்றியின்மே
னலத்திற் பொழிதரு கண்ணிற் குருதிகண் டுண்ணடுங்கி
வலத்திற் கடுங்கணை யாற்றன் மலர்க்கண் ணிடந்தப்பினான்
குலத்திற் கிராதனங் கண்ணப்ப னென்று கூறுவரே.

# பெரியபுராணம்.



## கண்ணப்பநாயனார்புராணம்.

**[சிவகோசரியார்கனவில் திருக்காளத்திநாதர் கூறியருளல்:]**

கஙசு - கஙஎ.

அன்றிரவு கனவின்க ணருண்முனிவர் தம்பாலே
மின்றிகழுஞ் சடைமவுலி வேதியர்தா மெழுந்தருளி
வன்றிறல்வே டுவனென்று மற்றவனை நீநினையே
லன்றவன்றன் செயறன்னை நாமுரைப்பக் கேளென்று.

அவனுடைய வடிவெல்லா நம்பக்க லன்பென்றும்
அவனுடைய வறிவெல்லா நமையறியு மறிவென்றும்
அவனுடைய செயலெல்லா நமக்கினிய வாமென்றும்
அவனுடைய நிலையிவ்வா றறிநீயென் றருள்செய்தார்.

பொருப்பினில்வந் தவன்செய்யும் பூசனைக்கு முன்பென்மே
லருப்புறுமென் மலர்முன்னை யவைநீக்கு மாதரவால்
விருப்புறுமன் பெனும்வெள்ளக் கால்பெருகிற் றெனவீழ்ந்த
செருப்படியவ் விளம்பருவச் சேயடியிற் சிறப்புடைத்தால்.

உருகியவன் பொழிவின்றி நிறைந்தவவ னுருவென்னும்
பெருகியகொள் கலமுகத்திற் பிறங்கியினி தொழுகுதலால்
ஒருமுனிவன் செவியுமிழு முயர்கங்கை முதற்றீர்த்தப்
பொருபுனலி னெனக்கவன்றன் வாயுமிழும் புனல்புனிதம்.

இம்மலைவந் தெனையடைந்த கானவன்ற னியல்பாலே
மெய்ம்மலரு மன்புமேல் விரிந்தனபோல் விழுதலாற்
செம்மலர்மே லயனொடுமான் முதற்றேவர் வந்துபுனை
யெம்மலரு மவன்றலையா லிடுமலர்போ லெனக்கொவ்வா.

வெய்யகனற் பதங்கொள்ள வெந்துளதோ வெனுழனபா
லையுமனத் தினிமையினி லையமிக வென்றிடலாற்
செய்யுமறை வேள்விலோர் முன்புதரு திருந்தவியி
னெய்யும்வரிச் சிலையவன்றா னிட்டவூ னெனக்கினிய.

மன்பெருமா மறைமொழிகண் மாமுனிவர் மகிழ்ந்துரைக்கு
மின்பமொழித் தோத்திரங்கண் மந்திரங்க ளியாவையினு
முன்பிருந் து மற்றவன்றன் முகமலர வகநெகிழ்ந்த
வன்பினினைந் தெனையல்லா லறிவுறா மொழிநல்ல.

உனக்கவன்றன் செயல்காட்ட நாளைநீ யொளித்திருந்தா
லெனக்கவன்றன் பரிவிருக்கும் பரிசெல்லாங் காண்கின்றாய்
மனக்கவலை யொழிகென்று மறைமுனிவற் கருள்செய்து
புனற்சடிலத் திருமுடியா ரெழுந்தருளிப் போயினார்.

---

## திருக்குறிப்புத்தொண்டநாயனார்புராணம்.

கஉ.

அங்கண் வான்மிசை யரம்பையர் கருங்குழற் சுரும்பு
பொங்கு பூண்முலைக் கொடிச்சியர் குழன்முள்கிப் போகாச்
செங்கண் மால்விடை யார்திருக் காளத்தி யென்னு
மங்குல் சூழ்வரை நிலவிய வாழ்வினுன் மல்கும்.

---

## திருநாவுக்கரசுநாயனார்புராணம்.

௩௪௩ - அ.

பல்பதியு நெடுங்கிரியும் படர்வனமுஞ் சென்றடைவார்
செல்கதிமுன் னளிப்பார்தந் திருக்காரி கரைபணிந்து
தொல்கலையின் பெருவேந்தர் தொண்டர்கள்பின் னும்பர்குழா
மல்குதிருக் காளத்தி மாமலைவந் தெய்தினார்.

பொன்முகரித் திருநதியின் புனிதநெடுந் தீர்த்தத்தின்
முன்முழுகிக் காளத்தி மொய்வரையின் றாழ்வரையிற்
சென்னியுறப் பணிந்தெழுந்து செங்கண்விடைத் தனிப்பாகர்
மன்னுமலை மிசையேறி வலங்கொண்டு வணங்குவார்.

காதணிவெண் குழையானைக் காளத்தி மலைக்கொழுந்தை
வேதமொழி மூலத்தை விழுந்திறைஞ்சி யெழுந்துபெருங்
காதல்புரி மனங்களிப்பக் கண்களிப்பப் பரவசமாய்
நாதனையே னைக் கண்ணுள்ளா னெனுந்திருத்தாண் டகநவின்றார்.

மலைச்சிகரச் சிகாமணியின் மருங்குறமுன் னேநிற்குஞ்
சிலைத்தடக்கைக் கண்ணப்பர் திருப்பாதஞ் சேர்ந்திறைஞ்சி
யலைத்துவிழுங் கண்ணருவி யாகத்துப் பாய்ந்திழியத்
தலைக்குவித்த கையினராய்த் தாழ்ந்துபுறம் போந்தணைந்தார்.

சேணிலவு திருமலையிற் றிருப்பணியா யினசெய்து
தாணுவினை யம்மலைமேற் றான்பணிந்த குறிப்பினாற்
பேணுதிருக் கயிலைமலை வீற்றிருந்த பெருங்கோலங்
காணுமது காதலித்தார் கலைவாய்மைக் காவலனார்.

வேறு.

அங்கண மாமலை மேன்மருந்தை வணங்கி யாரரு ளான்மிசை
பொங்கு காதலி னுத்த ரத்திசை மேல்வி ருப்பொடு போதுவார்
துங்க மால்வரை கானியாறு தொடர்ந்த நாடு கடந்துபின்
செங்கண் மால்விடை யண்ணன் மேவு திருப்பருப்பத மெய்தினார்.

---

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்புராணம்.

கOகரு - உ அ.

மன்னுதிருப் பதிகவிசை பாடிப் போற்றி வணங்கிப்போந் தப்பதியில் வைகி மாடு, பிஞ்ஞகர்தம் வெண்பாக்க முதலா வுள்ள பிற பதிகள் பணிந்தணைவார் பெருகு மன்பான், முன்னிறைந்த திருவாய் மஞ் சனநீ ராட்டு முதல்வேடர் கண்ணப்ப நாய னாரை, யுன்னி யொளிர் காளத்தி மலைவ ணங்க வுற்றபெரு வேட்கையுட னுவந்து சென்றார்.

மிக்கபெருங் காதலுடன் றொண்டர் சூழ மென்புனனாட் டிணை யகன்று வெற்புங் கானுந், தொக்கபெரு வன்புலக்கா னடைந்து போகிச் சூலகபா லக்கரத்துச் சுடரு மேனி, முக்கண்முதற் றலைவ னிட மாகி யுள்ள முகினெருங்கு காரிகரை முன்னர்ச் சென்று, புக் கிறைஞ்சிப் போற்றிசைத்தப் பதியில் வைகிப் பூதியரோ டுடன்மகிழ்ந்தார் புகலி வேந்தர்.

இறைவர்திருக் காரிகரை யிறைஞ்சி யப்பா லெண்ணில்பெரு வரைகளிரு மருங்கு மெங்கும், நிறையருவி நிரைபலவாய் மணியும் பொன்னும் நிறைதுவலை புடைசிதறி நிகழ்ப வாகி, யறைகழல்வா னவர்க்கிறைவன் குலிச வேற்று லற்றசிறை பெற்றவன்மே லெழுவ தற்குச், சிறகடித்துப் பறக்கமுயன் றுயர்ந்த போலுஞ் சிலைநிலத்தி லெழுந்தருளிச் செல்லா நின்றார்.

மாதவர்க ணெருங்குகுழாம் பரந்து செல்ல மணிமுத்தின் பரிச் சின்னம் வரம்பின் றாகப், பூதிநிறை கடலணைவ தென்னச் சண்பைப் புரவலனா ரெழுந்தருளும் பொழுது சின்னத், தீதிலொலி புலமுறையும் பொங்கி யெங்குந் திருஞான சம்பந்தன் வந்தா னென்று, நாத் நிறை செவியினவாய் மாக்க ளெல்லா நலமருவு நிலைமெய்யின்றாய் மருங்கு நண்ண.

கானவர்தங் குலமுலகு போற்ற வந்த கண்ணப்பர் திருப்பாதச் செருப்புத் தோய, மானவரிச் சிலைவேட்டை யாடுங் கானும் வான்

மறைய நிலைபெரிய முமாமுந் தூறும், ஏனையிமை யோர்தாமு மிறைஞ்சி யேத்தி யெய்தவரும் பெருமையுவா மெண்ணிலாத, தானமுமற் றவைகடந்து திருக்கா ளத்தி சாரவெழுந் தருளினார் சண்பை வேந்தர்.

அம்பொன்மலைக் கொடிமுலைப்பால் குழைத்த ஞானத் தமு துண்ட பிள்ளையா ரணைந்தா ரென்று, செம்பொன்மலை வில்லியார் திருக்காளத்தி சேர்ந்ததிருத் தொண்டர்குழா மடைய மீண்டிப், பம்புசடைத் திருமுனிவர் கபாலக் கையர் பலவேடச் சைவர்குல வேடர் மற்று, மும்பர்தவம் புரிவாரப் பதியிலுள்ளோ ருடன்விரும்பி யெதிர்கொள்ள வுழைச்சென் றுற்றார்.

திசையனைத்து நீற்றினொளி தழைப்ப மண்மேற் சிவலோக மணை ந்ததெனச் சென்ற போது, மிசைவிளங்கு மணிமுத்தின் சிவிகை நின்றும் வேதபா ரகரிழிந்து வணங்கி மிக்க, அசைவில்பெருந் தொண் டர்குழாந் தொழுது போற்றி யரவெனுமோ சையிலண்ட நிறைப்ப வன்பால், இசைவிளங்குந் தமிழ்விரகர் திருக்கா ளத்தித் திருமலை யிம் மலைகளில்யா தென்று கேட்டார்.

வந்தணைந்த மாதவத்தோர் வணங்கித் தாழ்ந்து மறைவாழ்வே சைவசிகா மணியே தோன்றும், இந்தமலை காளத்தி தம்பி விகலிவழி பாடுசெய விறைவர் மேவும், அந்தமில்சீர்க் காளத்தி மலையா மென்ன வவனிமேற் பணிந்தெழுந்தஞ் சலிமேற் கொண்டு, சிந்தைகளி மகிழ்ச்சிவரத் திருவி ராகம் வானவர்க டானவரென் றெடுத்துச் செல்வார்.

இருந்தியவின் னிசைவகுப்புத் திருக்கண் ணப்பர் திருத்தொ ண்டு சிறப்பித்துத் திகழப் பாடிப், பொருந்துபெருந் தவர்கூட்டம் போற்ற வந்து பொன்முகரிக் கரையணைந்து தொழுது போகி, யருந் தவர்க ளெம்மருங்கு மிடைந்து செல்ல வாளுடைய பிள்ளையா ரய ன்மா றேடு, மருந்துவெளி யேயிருந்த திருக்கா ளத்தி மலையடிவா ரஞ்சார வந்து தாழ்ந்தார்.

தாழ்ந்தெழுந்து திருமலையைத் தொழுது கொண்டே தடஞ்சிலா தலசோபா னத்தா லேறி, வாழ்ந்திமையோர் குழாநெருங்கு மணிநீள் வாயின் மருங்கிறைஞ்சி யுட்புகுந்து வளர்பொற் கோயில், சூழ்ந்து வலங் கொண்டிறைவர் திருமுன் பெய்தித் தொழுதுதலை மேற் செங்கை தொண்டு போற்றி, வீழ்ந்தெழுவார் கும்பிட்ட பயன்காண் பார்போன் மெய்வேடர் பெருமானைக் கண்டு வீழ்ந்தார்.

உள்ளத்திற் றெளிகின்ற வன்பின் மெய்ம்மை யுருவினையு மவ் வன்பி னுள்ளே மன்னும், வெள்ளச்செஞ் சடைக்கறறை நெற்றிச் செங்கண் விழுலரையு முடன்கண்ட விருப்பம் பொங்கிப், பள்ளத்தி விழிபுனல்போற் பாந்து செல்லப் பைம்பொன்மலை வல்லிபரிந் தளி த்த செம்பொன், வள்ளத்தின் ஞானவா ரமுத முண்டார் மகிழ்ந்தெ ழுந்து பலமுறையும் வணங்கு கின்றார்.

பஙகயககண ணருவிநீர் பாய நின்று பரவுமிசைத் திருபபதிகம் பாடி யாடித், தங்குபெருங களிகாத றகைந்து தட்பத தமபெருமான் கழல்போற்றுந தனமை நீட, அஙகரிதிற புறமபோநதங கயனமால போற்ற வரியாரைத திருமலைக்கீ ழணைநதி றைஞ்சிப, பொங்குதிருத தொண்டர்மடங காட்ட வஙகுப புகக்கருளி யினிதமர்நதார் புகலி வேநதர்.

யாவர்க்கு மறிவரிய விறைவன றன்னை யேழுலகு முடையானை யெண்ணிலாத, தேவர்கடம பெருமானைத திருக்காளத்தி மலையின மிசை வீற்றிருந்த செய்ய தேனைப, பூவலரும பொழில்புடைசூழ் சண்பை யாளும புரவலனார காலங்க டோறும புகுந்து, பாவலர்கொண டடிபோற்றிப பருகி யாரநது பணிபினிய திருபபதியிற பயிலு நாளில.

அங்கணவட திசைமேலுங குடக்கின மேலு மருந்தமிழின வழக்கங்கு நிகழா தாகத, திங்களபுனை முடியார்தந தானந தோறுஞ சென்றுதமி ழிசைபாடுஞ செயலைப போல, மங்கையுடன வானவர் கள போற்றி சைபப வீற்றிருநதார வடகயிலை வணங்கிப பாடிச, செங்கமல மலர்வாவித திருக்கேதாரந தொழுதுதிருப பதிகவிசை திருந்தப பாடி.

கூற்றுதைத்தார் மகிழ்நதகோ கரணம பாடிக குலவுதிருப பருப பதத்தின கொளகை பாடி, யேற்றினமிசை வருவாரிந திரனற னீலப பருபபதமும பாடிமகிழந திறைவர் தானம, போற்றியசொன மலர மாலை பிறவும பாடிப புகலியாதம பெருந்தகையார புனித மாகு, நீற்றினணி கோலததுத தொண்டர் சூழ நெடிதுமகிழந தபபதியி னிலவு கின்றார.

தென்றிசையிற் கயிலையெனுந திருக்கா ளத்தி போற்றியினி தமர்கின்றார் திரைசூழ வேலை, யொன்றுதிரு வொற்றியூ ருறைவார தம்மை யிறைஞ்சுவது திருவுளளத் தூன்னி யங்கண, இன்றமிழின விரகருள பெற்று மீள்வா ரெந்தையா ரிணையடியென் மனத்த வென்று, பொன்றாளங கொழிததிழிபொன் முகரி கூடப புணைந்த திருப பதிகவிசை போற்றிப போநதார

---

## ஏயர்கோன்கலிக்காமநாயனார்புராண

[சுந்தரமூர்த்திநாயனார்சரித்திரம் :]

௧௱௫ - ௭.

மனனு திருமாற பேறணைநது வணங்கிப பாவித திருவல்லந
தனனு ளெய்தி யிறைஞ்சிபபோயச் சாரு மேலபாற சடைக்கறறைப

பின்னன் முடியா நீடம்பலவும் பேணி வணங்கிப் *பெருந்தொண்டர்
சென்னி முகிலோய் தருங்குவட்டுத் திருக்கா ளத்தி மலைசேர்ந்தார்.

தடுக்க லாகாப் பெருங்காதற் றலைநின் றருளுங் கண்ணப்பர்
இடுக்கண் களைந்தாட் கொண்டருளு மிறைவர் மகிழ்ந்த காளத்தி
யடுக்கல் சேர வணைந்துபணிந் தருளா லேறி யன்பாறு
மடுப்பத் திருமுன் சென்றெய்தி மலைமேன் மருந்தை வணங்கினார்.

வணங்கி யுள்ளங் களிகூர மகிழ்ந்து போற்றி மதுரவிசை
யணங்கு சேண்டா டெனும்பதிகம் பாடி யன்பர் கண்ணப்பர்
மணங்கொண் மலரச்சே வடிபணிந்து வாழ்ந்து போந்து மன்னுபதி
யிணங்கு தொண்ட ருடன்கெழுமி யின்புற் றிருக்கு மந்நாளில்.

---

## திருமூலநாயனார்புராணம்.

௪ - ரு.

கங்கைநீர்த் துறையாடிக் கருத்துறைநீள் கடலேற்று
மங்கணார் மகிழ்ந்தருளு மவிமுத்தம் பணிந்தேத்தி
மங்குல்வளர் வரைவிந்த மன்னுபருப் பதமிறைஞ்சித்
திங்களணி சடையார்திருக் காளத்தி மலைசேர்ந்தார்.

நீடுதிருக் காளத்தி நிலவுதா ணுவைவணங்கி
யாடுதிரு வரங்கான வாலவனந் தொழுதேத்தித்
தேடுமிரு வருக்கரியார் திருவேகாம் பரம்பணிந்து
மாடுயர்மா மதிற்காஞ்சி வளநகருள் வைகினார்.

# திருத்தொண்டர்புராணசாரம்.

## கண்ணப்பநாயனார்.

வேடாதி பதியுடுப்பூர் வேந்த னாகன்
விளங்கியசேய் திண்ணனார் கன்னி வேட்டைக்
காடதனில்வாய் மஞ்சனமுங் குஞ்சிதரு மலருங்
கனியசினமென் றிடுதசையுங் காளத்தி யார்க்குத்
தேடருமன் பினிலாறு தினத்தளவு மளிப்பச்
சீருசிவ கோசரியுந் தெளியவிழிப் புண்ணீ
ரோடவொரு கண்ணப்பி யொருகண் ணப்ப
வொழிகவென மருள்கொடருங் குறநின் றூரே.

* சுந்தரமூர்த்திநாயனார்.

# வேறு நூல்கள்.

## கல்லாடம்.

கஅ.

முன்னொரு காலத் தடுகோலைக் கணைந்த
முகிலுருப் பெறுமோர் கொடுமோக் கிராதன்
அருமறைத் தாபத னமைத்திடு செம்மலைச்
செருப்புடைத் தாளால் விருப்புடன் றள்ளி
வாயெனுங் குடத்தில் வரம்பற வெடுத்த
அமுதுக்கடற் றள்ளு மணிநீ ராட்டிப்
பின்னல்விட் டமைந்த தன்றலை மலரினைத்
தருமலர் விண்புக மணிமுடி நிறைத்து
வெள்வாய் குதட்டிய விழுதுடைக் கருந்தடி
வைத்தமை யர்முன் மகிழ்ந்தமு துண்டவன்
மிச்சிலுக் கின்று மிச்சைசெய் பெருமான்.

## பட்டினத்துப்பிள்ளையார்

### தனிப்பாடல்கள்.

கட்டளைக்கலித்துறை.

பத்தும் புகுந்து பிறந்து வளர்ந்துபட் டாடைசுற்றி
முத்தும் பவளமும் பூண்டோடி யாடி முடிந்தபின்பு
செத்துக் கிடக்கும் பிணத்தருகேயினிச் சாம்பிணங்கள்
கத்துங் கணக்கென்ன காண்கயி லாபுரிக் காளத்தியே. (க)

பொன்றைற் ப்ரயோசனம் பொன்படைத் தாற்குண்டு பொன் படைத்தோன், றன்றைற் ப்ரயோசனம் பொன்னுக்கங் கேதுண்டத் தன்மையைப்போ, லுன்றைற் ப்ரயோசனம் வேணுதல் லாமுண் டெனைப்பணியு, மென்றைற் ப்ரயோசன மேதுண்டு காளத்தி யீச்சுரனே.

வாளான் மகவரிந் தூட்டவல் லேனலன் மாதுசொன்ன
சூளா லிளமை துறக்கவல் லேனலன் றொண்டுசெய்து
நாளாறிற் கண்ணிடந் தப்பவல் லேனல னானினிச்சென்
றாளாவ தெப்படி யோதிருக் காளத்தி யப்பனுக்கே. (ந)

முப்போது மன்னம் புசிக்கவுந் தூங்கவு மோகத்தினற்
செப்போ திளமுலை யாருடன் சேரவுஞ் சீவன்விடு
மப்போது கண்கலக் கப்பட வும்மமைத் தாயையனே
யெப்போது காணவல் லேன்றிருக் காளத்தி யீச்சுரனே. (ச)

இரைக்கே யிரவும் பகலுந் திரிந்திங் கிளைத்துமின்றை
யரைக்கே யவலக் குழியருகேயசும் பார்ந்தொழுகும்

புரைக்கே யுழலுந் தமியேனை யாண்டருள் பொன்முகரிக்
கரைக்கேகல் லால நிழற்கீ ழமர்ந்தருள் காளத்தியே. (௫)

## கந்தபுராணம்.

### ஆற்றுப்படலம், ௬.

பூட்டு கார்முகந் தன்னொடுந் தோன்றிய புயல்வா
யூட்டு தண்புன னந்தியங் கிரியிசை யுகுத்தல்
வேட்டு வக்குலத் திண்ணனார் மஞ்சனம் விமலற்
காட்டு கின்றதோர் தனிச்செயல் போன்றுள தன்றே.

### வழிநடைப்படலம், எ.

சிலந்தி மாசுண மும்மதக் கரிசிவ கோசன்
மலைந்தி டுஞ்சிலை வேட்டுவன் கீரனே மடவார்
பலந்த ரும்வழி பாட்டினாற் பாட்டினாற் பரனைக்
கலந்து முத்திசேர் தென்பெருங் காயிலையுங் கண்டான்.

## கந்தபுராணச்சுருக்கம்.

### உற்பத்திகாண்டம், ௧௫உ.

கருக்கடல் கடப்பவருள் காசிநகர் கண்டு
பருப்பத மெனும்பெயர் பரித்தகிரி கண்டு
விருப்பமுள வேங்கட வியன்குவடு கண்டு
மருக்குலவு தென்கயிலை வண்சிகரி கண்டு.

## உபதேசகாண்டம்.

### சிவபூசைமான்மியச்சருக்கம்.

௧௯. மொழிந்த தெய்வலிங் கத்திடைச் சதாசிவ மூர்த்தமா யினிதுவந் திருப்போம், பொழிந்த பத்தியிற் பூசனை புரிபவர் பொருபுனற் காசிகே தார, மிழிந்த தெள்ளரு வியவிருத் தாசலஞ் சிதம்பர மருணையெப் பவமுங், கழிந்த தென்கயி லாயமை யாறுவெண் காடு தென் மதுரையம் மருதூர்.

உ0. குடந்தை சீகுலப் பருப்பதங் காஞ்சிரா மேச்சுர மண்டகூடங்க ளூட்னபு டுந்திருக் கயிலையோ ரிரண்டுபொன் மேருவி னுச்சிமற் றிவற்றின், மடந்தை யோடுநங் கணத்தொடு மைந்தொழில் வகுத்தினி துஞ்மையா யுறைவோ மிடம்ப டுந்தல மிதுவென வுளத்துணர்ந் தெண்ணியெம் மருச்சனை புரிவீர்.

### வேறு.

வேளைத் தீப்பட நெற்றி விழித்தருள் விடையோனைக்
காளத் தியில்வழி பட்டன னனிலக் கடவுட்கோ

வாளப் புலிபடு மன்பதை மணிநீனை விரைவிற்போய்
மீளப் பெடுவடு தன்னல நிலையெனும் விறல்பெற்ருன்.

திருமால் சிவார்ச்சனைச்சருக்கம், க - எ.

மொழிந்து திரிந்தான் றுருவாசன் முளரிபூத்த முகில்வண்ண, னுழந்து துயரி னலமந்தா னெழிப்ப தெதுவென் றுளகினைந்தான், பொழிந்த கருணைத் திருப்பவளப் பொருப்பைப் போறறப் போமெனவுற், றெழுந்து நடந்தான் றெழற்குரிய திருக்காளத்தி யெனு மெல்லை.

சென்று பவளக் கொடிவேணித் திருக்காளத்திச் சிவபெருமான்
மன்றன் முளரிப் பரிபுரப்பொற் றிருத்தா டொழுது வலம்வந்தா
னன்று தொடுத்தெம் பெருமானை யவன துரையி னருச்சித்தான்
வென்று புரஞ்செற் றவன்சிலநாள் கழிந்த பின்னர் வெளிப்பட்டான்.

பிரமன்சிவார்ச்சனைச்சருக்கம்.

கரு. பரவுகா ளத்தியுட் புகுந்து பண்டைநாட்
புரமெரித் தவனடித் தொண்டு போற்றினன்
வாநதி நெடுமுடிச் சடில வானவன்
விரைமல ரவற்கெதிர் வெளிப்பட் டானரோ.

நரு. பின்னரு மாங்கவன் பேதை பாகனை
மின்னொளி விரவுதேன் கயிலை மேவியே
பொன்னடித் துணைமலர்க் கமலம் பூசியா
வுன்னரும் பற்பக னெடிதி னோம்பினன்.

திரிபுரவிசயச்சருக்கம், கஎ.

கொற்றவார் குடைநிழற்றி யமருலக மினிதளிக்குங் குலிசவேந் தன், கற்றைவார் சடையானைக் காளத்தி முக்கணனைக் கருதிப் பூசித், தற்றைநா ளவனருள வலாசுரனை யுயிர்செகுத்தா னவனியோடும், பெற்றவா னவருலகுந் துயரொழித்தான் வலாரியெனும் பெயரும் பெற்ருன்.

அரிபிரமாதியர்பூசனைச்சருக்கம், கஅ.

என்னப் பலவா றெடுதமேதத்தி நின்றிரந்து
பண்ணிப் பரசுதலு நன்கருணை பாலித்தா
பொன்னெத் திலங்கு சடையோற் புகழ்கணைத்து
மன்னிப் புகப்பணித்தா டென்கயிலை மன்னினர்.

---

சூதசங்கிதை.

சிவபூசாவிதியும் செயதோர்பெருமையும் உரைத்தஅத்தியாயம், ௩ட.

கார்தவழ் சிமயத்தேன் கயிலை கண்டவர்க்
கார்தர விண்பரு ளக்கி னீச்சுரஞ்
சீர்தரு சீகா தீர்த்தம் வெவ்வினை
வேரறுத் தருள்செய்வன் மீக கேத்திரம்.

**விமலன் வாதராயணன்முதலியோர் சங்கைதீர்த்தஅத்தியாயம்.**

௩௯. பிறங்குதென் கயிலை யெனுந்திருத் தலமும் பிரியமிக் கது நமக் கதன்பா, லறங்கிளர் தீர்த்த மெவைக்குமோ ருறையு ளாய பொன் முகரியுண் டதன்கண், ணிறங்கிளர் கதிர்வா ரங்குகு மகரீ டியமிதி பாதமிந் நாள்கண், மறங்கெடப் படிந்தோ ராண்டெமை யாங்கு வணங்குவோ ரிணங்குவர் முத்தி.

௪௦. தண்டுழாய் முகுந்தன் கமலைபின் றொடாத் தகுபரி சன முஞ்சூழ் தரக்கா, மண்டுமெய்யா சனையைந் தகலமு மிரட்டி நீளமும் வயங்குதென் கயிலை, விண்டுவை யடைந்தான் முகரியிற் படிந்தான் விழைநதுபல் லண்டமு மென்றுந், தொண்டுபூண் டிறைஞ்சுங் கடவுளைப் பணிந்தான் றுரிசற வெண்ணிய பெற்றான்.

**தீர்த்தமான்மியமுரைத்த அத்தியாயம், ௨௬ - ௧.**

திங்களுட னரிஞுமுடித் தென்கயிலை வீற்றிருக்கு
மங்கணனெவ் வுயிருமெளி தரும்போகங் கதியடையத்
தங்குமரு ளான்மாசி மகத்தமைத்த தடந்தீர்த்தம்
பொங்குசுவ ணங்கொழிக்கும் பொன்முகரி யெனுங்குடினை.

ஆயதிரு நதியின்க ணம்மாசி மகநாளின்
மாயிருஞா லத்துளபல் வகைத்தீர்த்த மெலாந்தம்பாற்
றோய்பவர்கள் கழித்தடைத்த தொகுபாவந் தொலைத்திடுவான்
பாய்தருமன் பொடுவந்து படிந்துகளித் தேகுமால்.

யாரேனு மந்நதியி லந்நாளிற் படிந்திதழித்
தாரேறு முடியானைத் தவளநிறப் பொடியானைக்
காரேறு களத்தானைக் கண்ணேறு குளத்தானை
யேரேறு மொருமானை யேந்தியவெம் பெருமானை.

புனிதருளம் புகுஞானப் பூங்கோதை நாயகனைக்
கனிதருமம் பொழில்சூழ்சீ காளத்தி மாமணியை
யினிதகவன் பினிற்றாழ்வார்க் கெவ்வகைப்போ கமுமுண்டா
முனிதாவில் பேரின்ப முத்தியுமெண் மையினுறுமால்.

**பிரமன்முன்னோர் தில்லையில் நோற்று ஞானம்பெற்றஅத்தியாயம், ௮௧.**

தலங்கள்பல் லவற்றுளுஞ் சாற்று மேன்மைநந்
நிலங்களை யுத்தமந் தகும வற்றுளு
மலங்களை வாரண வாசி காளத்தி
மூலங்கலில் லாதசீ சயில மாத்தலம்.

*முத்திசாதனவிசாரமுரைத்தஅத்தியாயம், ௧௬ - ௧௭.

பூவிரிநை மிசவனத்துப் புண்ணியமா தவப்பெரியீர்
நீவிருமெம் மானருளா னிரம்பிநெமைக் கொண்டுணர்ந்தீர்

---

இந்த அத்தியாயமுழுவதும் திருக்காளத்தியின்பெருமையைக்கூறுவமே,

காவியனுந் தென்கயிலை கரைதருபல் றலங்களினும்
மேவியவுத் தமமென்றே மெய்ம்மையுற வுணர்ந்திடுமின்.

துன்னுபுகழ்க் காளத்தி தொழுவார் திருமான் முதலியர்க்கு
மின்னுகயி லைப்பரனே வேந்தனென வாய்ந்துணரார்
பன்னுவரு ணச்சிரமப் படிநடவார் சிவஞான
மன்னுதலி லார்முத்தி மருவார்பல் பவமுறினும்.

பிரசாதக்கிரமமுரைத்தஅத்தியாயம், ௯0.

சீர்வளர் தில்லை முன்றூந் தென்கயி லாய மோங்க
லேர்வளர் காசி யின்னு மியைதலம் பலவு மன்னுங்
கார்வளர் கண்டத் தோனைக் கருதுதன் முதலாச் செய்யும்
பேர்வளர் யாவு மன்னன் பிரசாதம பெறுதற கன்றே.

சிவதலவிசாரமுரைத்தஅத்தியாயம், கஉ.

நிறைகடல் வறப்ப வாய்மடுத் தெழுந்த நெடுங்கமஞ் சூற்பசு முகிலைக், கறையடி நால்வாய்க் காற்றெறி செவிககார்க் கடம்பொழி களிறெனக் கருதி, யறைமுழக் கெழுப்பி முடங்குளை மடங்க லச்சுறப பாய்ந்துபின் வெள்குந், துறைபல மருவி நெடுவெளம்படைத்த தூயகா ளத்திமால் வரையும்.

சிவபபிரீத்கரமுரைத்தஅத்தியாயம், கசு - கஎ.

ஊழ்வலியா லவள்புணர்ச்சிக் குடமபட்ட வநதணன்பின்
வாழ்வகை தென் கயிலாய மருவுதறகு வெளிக்கொண்டான்
சூழ்வினைபோ லவளுமபின் றொடாநதாண்மற றென்செய்வான்
றூழ்வினையா மென்றுணர்நதுஞ சமமதிதது நடநதனனே.

சீகாளத் திமையமடைந்து சிவபிரான் சேவைபுரிந்
தாகாயத் தவாவணங்கு மததலவா சனுஞ்செய்தான
போகாள்ற பொடுமவறகுப பொருநதுபணி வினைசெய்து
மாகாதற கொடியுமுடன் வதிநதனளா னெடுங்காலம்.

காளத்திமான்மியமுரைத்தஅத்தியாயம்.

க - கக.

விலகி வில்லுமிழ் மணிபபணிக் கங்கண விகிர்த
னலகி னுமங்கள வழுத்துவாரு மைசயினுள மமைந்தி
ருலகு போற்றிடு குருமர பறிதர வுரைததா
மிலகு காளத்தி மான்மியஞ் சிறிதெடுத திசைப்பாம்.

அள்ளிக் கொள்ளலாம பேரொளி யழகுற வீசும
வெள்ளித தெய்வமால வரையமா விமலனை விமலை
யுள்ளிப போறறிமுன னொருநின முதலியவ வுயிர்க்கும
புள்ளித தோலபுனைந தாயவிரைந தருடலம புகறி.

எனவி ளுவலு மெம்பிரா னென்றுமெவ் வுயிர்க்கு
மநக மார்க்கதி விரைந்தரு ளொருதல மறைவரிங்
கனம்வி ராவிய கருங்குழல் வெண்ணகைக் கரும்பே
மனநி லாவுறக் கேண்மதி யென்றுவாய் மலரும்.

அறம ணுத்துணைச் செயினுமே ருவிற்பெரி தாக்கு
முறநி னைப்பினுங் கேட்பினு முறுபல னளிக்கு
மறமி குத்தவ ரெய்தொணு மான்மியத் தனுவா
னறம லர்ப்பொழிற் றென்கயி லாயநற் றலமே.

அழிவி லத்தலத் துயர்குலத் துதித்தவ ரனையா
விழிகு லத்துதித் தவர்மற்றி யாவரே யெனினும்
பழித பப்புகுந் தொருவரு டத்துணை பகரிச்
செழித லத்துறை வாமெனு நியதிசெய் தனராய்.

ஆடு சேர்மதிச் சித்திரை நாளணி யிடப
நீடு மாமதி விசாகநா ணிறைபுகழ் மிதுனங்
கூடு மாமதி மூலநாள் குறிகொளுங் கடகப்
பாடு சோமதி யடுத்தபூ ராடநாள பாவாய்.

சிங்க மாமதி வருதிரு வோணநாள் கன்னித்
துங்க மாமதி நாழிநா டுலாமதி முதனாள்
பொங்கு நலவிருச் சிகமதிக் கார்த்திகை பொலிநா
டங்கு கார்முகத் திருமதி மருவுமான் றலைநாள்.

மகர மாமதிப் பூசநாள் குடமதி மகநா
ணிகரின் மீனமா மதிநிக ழுத்தர நெடுநாள்
புகரி லித்திரு நாள்களிற் பொங்குபொன் முகரிப்
பகரு நீரிடைப் பத்தியின் மூழ்கிநீ றணிந்து.

ஆங்கு வைகுறு நின்னையு நமதையு மன்பி
னோங்கு பூசனை புரிந்துறப் பணிந்துசூழ் வுற்றுத்
தாங்கு தன்பொரு ளளவைக்குத் தக்கதா னமும்பொய்த்
தீங்கு தீர்ந்தவர்க் கீத்திரா வுண்ணுதல் செய்து.

இனைய வாறொரு வருடமு மித்தகு விரதம்
புனையச் செய்துறை வாரெனிற் பாதகப் புகர்தீர்ந்
தினைவி லாமுத்தி யெய்துவ துண்மையே யென்றான்
வனையு மெம்பிரா னுமையவள் கேட்டுள மகிழ்ந்தாள்.

பத்தி மாதவத் திருல குற்றபல் லுயிரும்
புத்தி முத்தியு மடைதரப் பொலியுந் தென்கயிலை
யுத்த மத்திரு மான்மிய முளத்துறக் கொண்மின்
முத்த லங்களும் படிப்பதித் தலமுழுச் சீரே.

உயிர்கள் முத்திபெறுவதற்கேதுவுரைத்த அத்தியாயம், ௫-௭.

மன்னிய தெய்வச் சிதம்பரங் கமஞ்சூன் மழைதவழ் சிகரத் தன்கயிலை, பின்னிய விருத்தா சலஞ்சுரா நாளும் விருப்புறு கோப நுப் பதஞ்சீர், துன்னிய வன்மீ கங்கசா ரணியஞ் சோமநா தஞ்செ ம்பச் சுரமே, பொன்னியல் புரிசை சூழ்தரு மாதி புரத்தலம் போற் றுகோ கருணம்.

நறைமலர்ப் பொழிற்பி மேச்சுரம் புன்னை நறுமணங் கான் மறைக் காடு, நிறைபுகழ்ச் சுவேதா ரணியங்கே தார நெடும்புனற் கங்கைசூழ் காசி, துறைகெழு பொன்னி சூழ்கும்ப கோணந் தூமறை முழங்கிடை மருதூ, ரறைதரு பிராமேச் சுரந்திரு வால வாயிவை

எத்தலத் தேனு நம்மடிப் பூசை யியற்றிமெய் யன்பினிற் சூழா வுத்தம பஞ்சாக் கரந்தினம் பன்னீ ராயிர முளத்துறச் செபித்துப் பத்தர்க ளடியும் போற்றிநன் குறைவார் பரகதி யடைவது திண்ண முத்தவெண் ணூரற் றிருமகள் களப முலைபொ நு மொய்ப்புடை மாலை

மரணகீதறியுரைத்த அத்தியாயம், ௩௦.

திருக்கா ளத்தி வரையென்னுந் திசைபோஞ் சீர்த்தித் தலமடைந்து
கருக்கா ளத்தி யக்கமறக் கதிர்பொன் முகரி யாடி மதப்
பெருக்கா ளத்தி யுரிபோர்த்த பிரானை யுமையாள் கலந்ததிரு
வுருக்கா ளத்தி யீச்சுரனை யொழியா வன்பிற் றொழுதேனும்.

---

## சிவக்ஷேத்திரவிளக்கம்.

காதல்கா ளத்திவாழ் காளத்தி நாதர்
கோதை ஞானபூக் குளிர்பொன் முகரி

---

## கோயிற்புராணம்.

இரணியவன்மச்சருக்கம், ௧௭

பருமபத மிறைஞ்சிவிழி சோதிபயில் வித்துத்
திருத்தகு நதிபொருவி றீதகமவை யாடி
யருத்திமிகு காளனுட னத்திபணி நித்தன்
பொருப்புற வுடன்றொழுது போதலுறு நாளில்.

## சிதம்பரபுராணம்.

திருச்சிற்றம்பலச்சருக்கம், ௪௫.

தேனு றருவித் தாளத் திரள்சேர் திருவேங் கடமொன் றுயமோரங் கலினின், றூனு நெறிகூ ரறிவா லெழுமை யன்பால் வழிபட் டென்பூ

பெருகத், தானு னெனுமா றிகழ்வோர் புகழுந் தகுபொன் முகரிக் கரையிற் பொழிலிற், சானுர் திருதென் கயிலைக் கிரியென் காளத் தியெமக் காள்பொற் பதியே.

## திருவெண்காட்டுப்புராணம்.

### சுவேதவனச்சருக்கம்.

௨௫௫. கங்கைநதி யமுனைநதி வாணியாறு கருதுசிந்து நன்மதை யே கண்ணவேணி, துங்கமிகு பம்பைநதி *கோதாவேரி சுதுக் கிரியே யதுக்கினிய சோணவாறு, மங்கரிய பொன்முகரி பாலியாறு மறையூரிற் சேயாறு மணிமுத்தாறு, பொங்கியவெள் ளாறிரண்டு வருகாவேரி புதியவையை நதியொடுதண் பொருநை யாறு.

௨எ. தீர்த்தகிரி காளத்தி மலைகே தாரந் திருக்கழுக்குன் றிராம கிரி யேமகூடம், வாய்த்தமுது குன்றுகயி லாயங் கந்த மாதனமா ணிக்கமலை திரிசிராவெற், பேத்தரிய நமதுவரை பிறவும் வாழ்க்கு யெழுவிடங்கம் வீரட்ட மெட்டும் போற்றிக், கார்த்திகைக்குக் கார்த் திகைநா ளருணை வெற்பிற் கவுரியிடு மணித்தீபங் கண்டான் முத்தி.

## சீகாழித்தலபுராணம்.

### சண்பையானவத்தியாயம், உஎ.

காசிபிர யாகைகயை திருச்சயிலங் காளத்தி காஞ்சி தில்லை
ஆசின்மயூ ரங்கழுக்குன் றருணையிடை மருதுகுட மூக்கை யாறு
வாசமலி பழமலைவெண் காடுகடவூர் வேத வனங்கோ டிக்கா[னன்றே
இசைபெறு கோகரண மிவற்றினுமைந் தெழுத்தையினி துரைத்த

## புள்ளிருக்குவேளூர்ப்புராணம்.

### வாலாம்பிகை அருச்சனைசெய்சருக்கம், கக - கஉ.

குலவிய குருக்கேத் திரத்தினி தமர்ந்த கொன்றைவே ணியன் றனை வணங்கி, யலகில்வண் புகழ்சேர் திருசசயி லத்தி லங்கண னிணையடி பணிந்து, பலதுதி வேத வாக்கிய மதனுற் பாவிநீ ணதிபல கடந்து, நலமிகுந் திடுபொன் முகரிசூழ் மலைவா னண்ணுகா ளத்தி வந்தனளால்.

செம்பொன்மால் வரையின் றெடுத்திடுஞ் செல்வி திகழ்தனி மலை தனில் விளங்கு, மம்பிகா பதியை யரியகா ளத்தி யையனைப் பூசை செய் தெழுந்து, கம்பைமா நதிசூழ் காஞ்சிமா நகரைக் கண்டுகண் களித்தருள் பழுத்த, வெம்பிரா னைகாம் பரனைநாண் மலரா லெழில் பெற வருச்சனை செய்தாள்.

---

* கோதாவரியென்பதன்மரூஉ.

## திருவாளொளிபுற்றூர்ப்புராணம்.

வாளொளிபுற்றூர்ப்படலம், ௮.

கரையெறியுந் திரைக்கங்கைப் புனன்மூழ்கி யதுசுமக்குங் காமர் வேணி, யுரையெறியும் பெரும்புகழ்விச் சுவநாதன் றுமமைத்தா ளுக மம் போற்றி, விரையெறியு மலர்ச்சோலை மிகப்பொலியுந் திருச்சயில மேவிப் போற்றிக், குரையெறியும் பொன்முகரி படிந்துதிருக் காளத்தி குறுகிப் போற்றி

---

## ஆற்றூர்ப்புராணம்.

தலவிசேடம்தேவிக்குணர்த்தியபடலம், ௩௮.

பரங்குன்றங் கழுக்குன்ற முதுகுன்ற நெற்குன்றம் பரவுவோர்க்கு, வரங்குன்று தருள்புரியுங் கொடுங்குன்ற முதலாக வகுக்கு மற்றுந், திரங்கொளண்ணு மலையீங்கோய் மலைதிருக்கா ளத்திமலை தேவர் போற்றி, யிரங்குறுமா ணிக்கமலை மகேந்திரமா மலைமுதலா விசைக்கு மற்றும்.

---

## உறையூர்ப்புராணம்.

உதங்கமுனி போலிவடைந்தபடலம், ௮௧.

நீளத்தி கிழிதரப்பாய் நெடுமுகரிப் புனன்மூழ்கி
வாளத்தி மாலையொடு மதியுமணி வானையுரற்
றுளத்தி யுரியானைச் சலதரமே னுலவுதிருக்
காளத்தி மலையானைக் கைதொழுது போற்றினன்.

வேடன் முத்தியடைந்தபடலம், ௬௪.

தன்னிழு லெனத்தொ டர்ந்த சுற்றமுந் தவாம னெஞ்ச
மன்னிய கோற லாதித் தொழில்களு மறியத் தள்ளித்
துன்னிய வன்புந் தானுந் துன்னியற நடந்துசென்று
கன்னியோர் பாகத் தெம்மான் காளத்தி வரையைப் போற்றி.

## செவ்வந்திப்புராணம்.

திருமலைச்சருக்கம், ௪௭ - ௮.

வந்து வாயுவும் வந்துவந் தறைந்தனன் வரையை
முந்தி வேரறப் பறித்தனன் கொடிமுடி மூன்றை
யந்த மூன்றையுங் கொடுபவன் றிசையினி லடைவே
சிந்தி னன்றல மூன்றி லே விழுந்தன சிகரம்.

முன்னர் வீழ்ந்திடு சிகரிகா ளத்தியா மொழிவர்
பின்னர் வீழ்ந்தது திரிசிரா மலையெனும் பிறங்க

லன்ன தின்பிற கமைந்தது கோணமா வசல
மின்ன மூன்றையும் தெக்கிண கயிலையென் றிசைப்பார்.

---

## திருநல்லூராப்புராணம்.

### சத்தசாகரம்வரவழைத்தசருக்கம், ௧௧.

*சேணிற் காணினுஞ் செல்கதி யுதவுஞ் சைலத்
தாணிப் பொன்னினைக் கைதொழு தவ்விட நீங்கி
மாணிக் கத்துடன் வயிரமும் வான்றபோன் முகரி
பேணிக் காளத்தி மலையினை வலம்வந்து பெயர்ந்தே.

### கோவிந்தாரத்துவசச்சருக்கம், ௬.

வயங்கலம் புசத்தின் வன்னிநற் றீர்த்த மணிகூட மென்னுமத் தலத்தி
னயங்கெழு திரிபுட் காச்செழுந் தீர்த்த நாடுசத் தாரணி யத்திற்
பயங்கெழு பிரம தீர்த்தம்போன் முகரி பாவுகா ளத்திமால் வரையில்
வியந்திடு வளங்கூர் பாபாசமற் றதன்கண் மேதகு வருணமெய்த் தீர்த்தம்.

## திருக்குடந்தைப்புராணம்.

### தலவிசேடபடலம், ௨.

வெள்ளியங் கயிலை விளங்குசீ சைல மேதகு பெரும்புகழ்க் காசி
வள்ளிய மறைசூழ் சிதம்பர மதுரை வான்றவ பூரதநா சலம்வா
னுள்ளிய திருக்கா ளத்திகோ கன்ன மோங்குகோ டீச்சர மோத்து
ரள்ளிய சிறப்பிற் பொலிதிரு வாரூ ராடகேச் சுரமறைக் காடு.

---

## மருதவனப்புராணம்.

### திருநாட்டுச்சிறப்பு, ௬.

தூங்க வெற்பினிற் கருமுகில் சிலையொடுந் துன்னிப்
பொங்கு தீம்புனல் சொரிதரல் புரையுநீ டெழிலா
லெங்கள காளத்தி யிடத்திமேலா ரன்பன்வா யிடுநீர்
சங்க ரன்றிரு முடிமிசை புமிழ்ந்திடுந் தன்மை.

### ஷை தலவிசேடச்சருக்கம், ௧௨, ௧௩.

நாரணி தன்வயிற் றிகழ்ந்திடு தலங்களு ளான்ற
வாரூர்ணை காசிகா ளத்திகே தாரந்தென் னாரூர்
திருவ லஞ்சுழி யோகந் தில்லைவெண் காடு
மருவு தண்பொழிற் குடந்தைபொன் வளரிடை மருது.

ஆதி யாகிய முத்திதந் தருளிடு தலங்கள்.

## திருத்துருத்திப்புராணம்.

சுந்தரதீர்த்தப்படலம், ௧௪௦

ஓங்கு திருக்கா ளத்திமலை யுற்று முதல்வர் கழலிறைஞ்சிப்
பாங்கு பெறுகண் ணப்பர்பதம் பணிந்து ளுருகிப் புளகித்து
வீங்கு புகழ்சால் செண்டாடும் விடையா ரென்னுந் தமிழ்பாடி
யாங்கு மருவிப் பருப்பதநற் றமைய மாறு மெனப்பாடி.

---

## மாயூரப்புராணம்.

திலீபன்முத்தியடைந்தபடலம், ௨௧.

மாதார நிறத்தா னாதி வானவர் வணங்கிப் போற்றுங்
கேதார மேய பெம்மான் கிளர்மலர்ச் சரணந் தாழ்ந்து
தீதார வுடன்ப டாது செறிந்தவர்க் கருளி யென்று
மாதார மாயி னானைக் காளத்தி யணைந்து போற்றி.

## திருவம்பர்ப்புராணம்.

நந்தன்வழிபடுபடலம், ௫௧.

நீளத்தி கிரிப்பொ ருப்பு நிறையுயி ருப்பு மாகார்
கோளத்தி யுடுத்த மைந்தர் குவலய மோலி யாகி
வாளத்தி யணிவா னென்று மவைதுறப் பெற்ற தாஞ்சீ
காளத்தி யெனுநா மத்தென் கயிலையை வணங்கிப் போற்றி.

## திருநாகைக்காரோணப்புராணம்.

தலவிசேடப்படலம், ௨௭.

மன்னுமிவ் விலங்க லென்றும் வடகயி லைப்பேர் மேவத்
துன்னுதென் கயிலை யாகித் தூத்தவக் காளனத்தி
யென்னுமிவ் விரண்டு மன்றி னிகழுபு பூசையாற்றப்
பன்னும்வான் பேறுநல்கிப் பதியுமோர் சிலம்பு முண்டால்.

நரபாகன்முத்தியடைந்தபடலம், ௬.

ஏமை செவ்வண டியு மேலா
முத்தியை வேண்டியு மொய்த்துப
பத்திசெய் வார்பர வுங்கா
ளத்தி யடைந்து பணிந்து.

---

## திருவாரூர்ப்புராணம்.

அனந்தேச்சுரச்சருக்கம், ௨௧

மாரவேள் வனப்பி னீதி மாட்சியின் மனுவேன் மைந்தன்
வீரவண் சிறப்பின்மேக மிகுபெருங் கொடையின் முக்கட்

கார்தவழ் கண்ட னன்பிற் கண்ணப்ப னிதிக்கோன் செல்வத்
தார்தரு கல்வி தன்னி லனந்தனென் றகில மேத்த.

## திருவாரூர்த்தியாகராசலீலை.

திருநாடடுப்படலம், ௨௮.

இழிதக விறைச்சி யெச்சி லெம்பிரா னுண்ண நல்கி
யழிவில்பே ரின்பந் துய்த்த வன்பர்கண் ணப்ப ரேபோ
லிழிதக வுவர்நீ ரெச்சி லெழிலிக ளுண்ண நல்கி
யழிவிலின் சுவைய நன்னீ ரருந்திய தாழி மாதோ

---

## வேதாரணியபுராணம் (அகோரமுனிவர்.)

ஓங்காரங் கங்கைநதி யுவரியுறுந் தலமுளத்தின்
பாங்காய மாகாளங் கோகரணம் பருப்பதஞ்சீர்
நீங்காத காளத்தி நிகழ்காஞ்சி முதுகுன்றம்
பூங்கான மலியண்ணு மலைவிரிஞ்சி புரம்பொதுவே.

---

## வேதாரணியபுராணம் (பரஞ்சோதிமுனிவர்.)

தலவிசிட்டச்சருக்கம், ௧௩.

கம்பனூர் விரிஞ்சை புள்ளூர் சேதுமா யூரங் காழி
சம்புநீள் வனங்கா ளத்தி குடந்தைமுச் சயிலம் வெண்கா
டிம்பரின் மதுரை வாஞ்சி யிடைமரு தருணை யையா
றம்பல மாரூர் காசி யிவற்றினு மதிகமா மால்.

## திருவிளையாடல்.

தலவிசேடம், ௩, ௪.

அவ்வகைய மூன்றின்முதற் றலப்பெருமை தனைச்சுருக்கி யறையக்
னெவ்வகைய வுலகத்துந் தருமதல மதிகமவற் றீறிலாத [கேண்மி
சைவதல மதிகமவற் றுறுபத்தெட் டதிகமவை தமிலீ ரெட்டுத்
தெய்வதல மதிகமவற் றதிகதல நான்கவற்றைச் செப்பக் கேண்மின்.

அன்னமலி வயற்புலியூர் காசிநகர் காளத்தி யால வாயாம்.

வெள்ளியம்பலத்திருக்கூத்தாடியபடலம், ௬.

திருவள ராரூர் மூலந் திருவானைக் காவே நாபி
மருவளர் பொழில்சூ ழண்ணு மலைமணி பூர நீவி
ரிருவருங் கண்ட மன்ற மிதயமாந் திருக்கா ளத்தி
பொருவருங் கண்ட மாகும் புருவமத் தியமாங் காசி.

### தருமிக்குப்பொற்கிழியளித்தபடலம், ௯௫.

பரவிநீ வழிபட் டேத்தும் பரஞ்சுடர் திருக்கா ளத்தி
யரவுநீர்ச் சடையார் பாகத் தமர்ந்தஞா னப்பூங் கோதை
யிரவினீர்ங் குழலு மற்றோ வெனவஃது மற்றே யென்று
வெருவிலான் சலமே முற்றச் சாதித்தான் விளைவு நோக்கான்.

---

### கீரனைக்கரையேற்றியபடலம், ௧௬, ௧௭.

போதையா ருலகீன்ற புனிதையார் பாஞா னப்பூங்
கோதையார் குழற்குத் தீங்கு கூறிய கொடிய நாவின்
றீதையார் பொறுப் பரேயோ வவரன்றித் திருக்கா ளத்திக்
காதையார் குழையி னாரைக் காளத்தி காவிலை யென்று.

எடுத்தசொன் மாறி மாறி யிசையநே ரிசைவெண் பாவாற்
றொடுத்தவந் தாதி சாத்தத் துணைச்செவி மடுத்து நேர்வந்
தடுத்தவன் கையைப் பற்றி யகன்கரை யேற்றினார் தாள்
கொடுத்தெழு பிறவி வேலைக் கொடுங்கரை யேற்ற வல்லார்.

### அருச்சனைப்படலம், ௧௬.

விற்பயி றடக்கை வேடன் மென்றவூன் பாகம் பார்த்தோன்
பொற்புறு கிரியீ தண்டம் புழைபட விடத்தா ணீட்டி
அற்புதன் காளி தோற்க வாடிய திதுமா நீழற்
கற்புடை யொருத்தி நோற்கும் பிலமிது காண்மின் காண்மின்.

---

## திருவாலவாயுடையார் திருவிளையாடற்புராணம்.

### கடவுள்வாழ்த்து, ௧௧.

ஆடுபவர் மாடமறை யேடெதிர்தெ னுடுவகை யாடவிளை யாடு பெரியோர், வேடனிடு கூடினிய கேடிறசை நாடுபவர் வேடனுடல் வீட வடுவோர், சேடன்மதி யோடுநதி யோடுதலை யோடுவிதி தேடு முடி சூடு முரவோர், கூடுமிட நீடுசது மாடமென மூடுமுகில் கூடு முயர் கூட னகரே.

### ௧௬.—கிழியறுத்த திருவிளையாடல், ௨௧.

வளந்தரு மடநாண் முன்னு வருங்குண நித்த மாதே
னுளங்கவ ரிருள்வா சந்தே சுரியன நித்த மாகுந்
தெளிந்தறிந் திலையோ பேதாய் *சிற்புட்ப கேசி யென்று
குளிர்ந்தமா மறைக ளொன்குங் கூப்பிடு கின்ற வாறு.

* ஞானப்பூங்கோதை.

இன்னபூ வாசகேசி தன்னையா ரறியா ரென்னப்
பின்னொருத் தரமுமின்றிப், போழற் கண்ணால் வெந்து
தன்னுளே பரிதவித்துத் தண்ணினீர் வேட்டுக் கூப்பிட்
டன்னமார் வாவியிற்போய் வீழ்ந்தன னற்றானே.

கள் - நக்கீரனைக் கரையேற்றின திருவிளையாடல், ரு.

ஆங்கவர் பணியத் திருவுளத் திரங்கி யங்கனை யொடுமெட வன்னர், தூங்கலர் வாவிக் கரையடைந் திருந்து *சொல்லெனுஞ் செழுந்தமிழ் கேட்டுப், பாங்குடை யுளஞ்சேர் நிறைவொடு நீங்காப் பரிவொடு முறுவல்கூர்ந் திமைப்பிற், றுங்குதல் கொடாது மலர்க்கரங் கொடுத்துத் தடத்தினின் றடுத்தினி தெடுத்தான்.

## கடம்பவனபுராணம்.

வேதாகமங்கள்நீபவனமானசருக்கம், ௧௭, ௧௮.

சேர்ந்திடு மூலகீ ரேழுமெய் யாகச் செறிதர வுயர்விராட் புருடற்
கேய்ந்த வாதார மாறினிற் கமலே யியன்றநா வற்பதி யருணை
யார்ந்தவம் பலங்கா ளத்திநற் காசி யாறின்மேற் கயிலை யேற்றுவாத
சாந்தமேற் சீவன் முத்திமா நகர்வாழ் தற்பா னெவர்க்குமே லானோன்

மண்புன லனலகால வானகத் மதுச் வனவடி
மன்னுங், தண்பொலி காலே நாவல்சீ ரருணை தடங்கொள்கா ளத்தி தென்றில்லை, விண்புகழ் திரிசி ராமலே சீவன் முத்தமாந் தலம்வியன் கருவூ, ரெண்பெருந் தலமுன் னாகவொவ் வொன்றிற் கியைந்தநா விருதல மியம்பும்.

• தேவியறம்வளர்த்தவத்தியாயம், ௧௪.

முத்தி நல்குபொன் முகரி சூழ்ந்தகா

பத்தி யாற்பணிந் தேத்திப் பாங்கர்சூழ்
மெய்த் தலங்களும் விரைந்து போற்றினாள்.

இலீலாசங்கிரகவத்தியாயம், ௮௨, ௮௩.

அம்பலமா ரூர்காசி காளத்தி விருத்தகிரி யதிக்கிராம
முப்பர்புகழ் திருவெண்கா டையாறு வேதவன முயர்கோ கன்ன
நப்பர்திரு வானைக்காக் கேதாரம் கோவலூர்நற் கும்பகோணந்
தப்பமுறு மிடைமருது வீமேசஞ் சோமநா தமிரா மீசம்.

இத்தலங்க டமிற்பஞ்சாக் கரப்பிரண வத்தோடு மியையக் கூடடிப், பத்தியினாற் பன்னீரா யிரஞ்செபித்துத் தரிசிக்குங் காலம் பார்த்து, நித்தியமுஞ் சேவைசெய்து நீங்காமல் வசிக்கினெய்தும் விசேட

* கயிலைபாதிகாளத்திபாதித்திருவந்தாதி.

முத்தி, சத்தியமித் தொகுத்ததலங் களின்மேலருஞ் சிவன்முத்தித் தலமொன் றுண்டால்.

## திருவாப்பனூர்ப்புராணம்.

அரிச்சந்திரன் தீர்த்தயாத்திரைச்சருக்கம், ௧௭.

அறுசுவையூண் மறையவரை யருத்தினன்பின் கயைவந் தடைந் தியல்பற் குனிதோய்ந்து சிரார்த்ததருப் பணத்தோ, டுறுதிரளோ தனபிண்ட முதவிவரு நதிபோ யுவர்கடலக்கு மிடம்படிந்தா யிரங் குடஞ்சுட் டளித்துத், தெறுபவந்தீர்த் தருள்சகரா தம்பணிந்தெம் பெருமான் சீசைலங் காளத்தி வேங்கடஞ்சென் றிறைஞ்சி, மறைபயி லே காம்பரத்தெம் பரம்பரனை வணங்கி வாதரா சனைத்தெரிசித் தேத் தியக மகிழ்ந்தான்.

---

## திருப்பூவணப்புராணம்.

சுச்சோதிதீர்த்தயாத்திரைச்சருக்கம், ௨௨.

சம்பரா லயநீட ருங்கதலி கானந் தருஞ்சீர் விரூபாக்கந் தரு கோடி யீச, மம்புவி தொழும்வசிட் டாச்சிரம மன்ப ரமர்கபிலை யீசுர மருட்காள கண்டம், வம்புலவு கின்றமா வனநகர மேவான் வாளு ற்று வளமிக்க காளத்தி மலைமேச, ரெம்பிரான் மகிழ்தங்கு பம்பாதி யீச மிருளோட வருண்மேவு திரிகூட வீசம்.

## திருக்குற்றாலத்தலபுராணம்.

அவையடக்கம்.

கவையடி விலங்கின் வல்லூன் கண்ணப்பன் கனிவா யேற்றி
யவிகளி னமிழ்தின் மிக்கா வமலனுக் கானாற் போலக்
குவிதரு நெறியொன் றில்லேன் குறைமொழி நிறைசொன் மேலா
செவிபுகிற் றிரிகூ டத்துச் செல்வனுக் கினிய தாமால்.

திருக்குற்றாலத்தலமகிமைச்சருக்கம்.

௨. வரமேவு திருவாரூர் காளத்தி யருணைதில்லை மதுரை காஞ்சி, புரமாதி பலதலத்தும் போநதுறைத லெவ்வொருவர் பொரு ட்டே யாகும், பரமான தனிமுதல்வ னாழிதொறு முலகமெல் லாம் படைத்துங் காத்துந, திரமாக வாசிருக்கும் பரமாக சியத் தானந் திருக்குற் றாலம்.

௧௦. ஆல வாய்திருக் காளத்தி காசியண் ணாமலை திருவாரூர்
மேல மன்றகந் திருவிரா மீசுரம் விடைபணைக் கவராகச்
சூல பாணியார் மருவுள தலமெலாந் துணர்த்தவைஞ் சினையாக
மூல மாகவே யுலகெலாந் தழைத்திட முளைத்த குற்றாலம்.

திருநடச்சருக்கம், ௩௦.

அருணைகே தாரந் தில்லை காளத்தி யாரூர் காசி
திருமறைக் காடு சீர்ஞ்சி செங்காடு வெண்கா டாதி
யொருதலத் தோரோர் கூறே யுறைகுவந் திரிகூ டத்து
நிருமல வடிவாய் ஞானக் கலைபெலா நிரம்பா நிற்பேம்.

## பாவநாசத்தலபுராணம்.

சிவதலவிசிட்டச்சருக்கம், ௬.

தேவாருந் தில்லையிலா காயலிங்கம் வாயுலிங்கந் திருக்கா ளத்தி
யோவாத தேயுலிங்க மருணையிலா னைக்காவி லுதக லிங்கம்
பூவாருந் திருநாளும் போற்றுபிரு திவிலிங்கம் புகழா ரூரிற்
பாவாணர் பணிபாவ நாசலிங்கம் பரஞ்சோதி யிலிங்க மாமால்.

## திருப்பெருந்துறைப்புராணம்.

திருநாடடுபபடலம், ௪

கடமை பன்றிமான் முதலிய மிருகவூன் கவர்ந்து
சுடர்கொ ளுந்தழற் காய்ச்சுபு தேனிற்றோய்த் தருந்து
மடமை யென்னெனக் கிராதரை யிகழுவா யுண்டோ
படவ ராவணி காளத்தி யார்செயல் பார்த்தும்.

நைமிசமுனிவர் பெருந்துறையடைந்துபூசித்தபடலம், ௮.

சாநாக மொருமூன்றுட் டாநாக மல்லாத
வுரனுக விரோதித்துத் தொழுவரைமற் றதுகாண்மின்
காவார்புரல் வஞ்சமிலார் வஞ்சநிழல் காதலித்து
விரவாநன் கமர்தான மெய்த்தவத்தி ரிதுகாண்மின்.

## வீரவனப்புராணம்.

வீரசேகரர் திருமுடித்தழும்புற்றபடலம், ௩௩, ௩௪.

பரம்பரன் முடியிற் றழும்புறச் செய்தேம் பாவியே மென்றுநீ கவலல், பிரம்படித தழும்பும் வில்லடித் தழும்பும் பெயர்த்தெறி கல்லடித தழும்பும், வரம்பறு சிறப்பிற் செருப்படித் தழும்பும் வயங்கிய வாள்வெட்டுத் தழும்பு, நிரம்பிய வியலிற் பரிக்குரத் தழும்பு நிகழுறு பூசைவாய்த் தழும்பும்.

குடம்புரை செருத்தற் றேனுவோ டடுத்த குழக்கன்றின் குளப படிச் சுவடுந், தடம்புயத் தொருவன் கதையடிச் சுவடுந் தாங்கிய நமக்கிதோர் பொருளோ.

## வீரைத்தலபுராணம்.

**சித்திரசேனச்சருக்கம், ௬௪.**

வணங்கியே புட்பப தத்தை வழிபட்டு மற்று முள்ள
குணங்குறி கடந்தோன் வாழுங் குவலயம் வணங்கிப் போற்றி
யணங்குடன் காஞ்சி யெய்திக் காளத்தி வழிபா டாற்றிக்
கணந்திகழ் மங்கை யேத்திக் கழுக்குன்றங் கலந்து போற்றி.

## அருணசலபுராணம.

**திருநகரச்சருக்கம்.**

அ. கம்பைநதி கும்பநதிக் காவிரிகோ தாவேரி கண்ண வேணி, பம்பைநதி வேகவதி வேதவதி சரயுநதி பரமாங் கங்கை, செம்பு நதி பொன்முகிநல் யமுனைநதி நருமதைமேற் செப்புஞ் சோணை, அம்புவியின் மிகவுளவங் காடினர்தம் வினையகற்றுமதுவல்லாமல்.

கரு. விருப்படியார் சொரிந்தவறு கலருடனே விழியிடந்த வேடர் காலிற், செருப்படியு முகந்தபிரான் காளத்தி நகரமெனுந் தெய் வப் பூமி, பருப்பதயா கியும்விளங்குந் தண்ணருக் கொழிக்குமல ர்ப் பதுமையோடு, மருப்படியுந் துழாய்மார்பன் வடமலைமே லிருந்துகண்டு வணங்க மாதோ.

## வில்லைப்புராணம்.

**சகலாங்கசௌந்தரிசருக்கம்.**

சசு. கண்டமால் வரையைத் தாழ்ந்து கடவுளை வழுத்தி யிப்பாற்
றெண்டைநா டெனலுங் கேட்டுப் போதலுந் தூரத்தேயோ
ரண்டநீள் குவடு தோன்ற யாதென வான்கா ளத்திக்
கொண்டலே றுயச யிலமென்னக் கொம்பனார் தொழுதுபோந்தார்.

சஎ. முகரியா றிழிந்து மூழ்கி முக்கணன் கோயில் புக்கு
மகரயாழ் முரலப் பாடி வலங்கொடு வணங்கி மீண்டு
நகரிசூழ் மறுகு நோக்கி நாரியர் கயிலை சாரப்
பகரொணு வளமை பார்க்கும் வேட்கையிற் பாளி நின்றார்.

நஎ. இவ்வளம் பிறவும் வெற்பி னீரிரு மருங்கு நோக்கிக்
கைவளை கறங்கக் கூப்பி மலர்கொய்து கயங்களாடி
மொய்வளந் தாவோர் வைகன் முகரியங் கரையில் வைகி
மைவளர் விழியா ரோடும் புலரியும் வணங்கிப் போனார்.

## காஞ்சிப்புராணம்.

**திருநாட்டுப்படலம், ௩௦.**

அன்பெ லாமொரு பிழம்பெனத் திரண்டகண் ணப்ப
னெம்பி ராற்கொரு விழியிடத் தப்புகா ளத்திப்

பொன்பி றங்கிய முகரிசூழ் கயிலையம் பொருப்புந்
தன்பு லத்திடை யுடையது தடவரைக் குறிஞ்சி.'

தலவிசேடப்படலம், கசு, கஎ.

ஆலவனங் காளத்தி திருச்சயிலஞ் சித்தவட மடியார் சைவக்
கோல நிறை விரூபாக்கந் திரியம்பகந்திருக்கோ கன்ன மின்பஞ்
சாலவுத வுஞ்சயினி மாகாளங் காசிகே தார மென்றும்
காலனுறாப் பிரபாச மிமயமலை மந்தாரஞ்சீர்க் கயிலை யாதி

எண்ணிலவாம்யாமருவுமிடங்கள்.

இருபத்தெண்டளிப்படலம்.

சங்கின முயிர்த்த நித்திலம் வான்றித் தமனியங் கொழித்து வார்ந் தொழுகிக், கொங்கலர்ப் பொதும்பர்ச் சுண்ணமுந் தளிருங் குலாய்த்துறை தொறுமெழில் கஞற்றும், பொங்குவெண் டரங்க முகலியா றடிக்கட் போர்ப்பநீண் முடிக்கண்வான் செழுநீர்க், கங்கை போர்த் தொளிர்தென் கயிலைமால் வரையிற் காளத்தி நாதனே யெனவும்.

---

## திருக்கூவப்புராணம்.

திருத்தலச்சருக்கம், ௩அ.

கயிலைகே தாரங் காசி கச்சிதென் மதுரை சோண
சயிலமா ரூர்கா ளத்தி தடம்பணைத் தில்லை யாதி
யியலுறு தானந் தோறு மிருந்திறை பகர்வ தெல்லாம்
பயிலுமா தவர்வாழ் கூவப் பதிப்பெரும் புகழே யம்மா.

## திருவாலங்காட்டுப்புராணம்.

சுநந்தர் உபதேசச்சருக்கம், ௩அ.

வீறுசுர நதிக்காசி காஞ்சியவந் திகைமதுரை மிக்க மாயை
யூறுமலர்த் தேன்பாவு துவரைதிரு வயோத்தியே யுரைத்த வேழுங்
கூறுசிதம் பரஞ்சேது வாதபுரி யம்பைகோ கரண முத்திப்
பேறுதவு காளத்தி கழுக்குன்றந் திருவோத்தூர் பெருமை சாலும்.

---

## திருப்பாசூர்ப்புராணம்.

நாட்டுச்சிறப்பு, க.

விளங்கிடுவா தியெண்ணெணீ விளையாடல் புரியுங் கூடல்
வளம்பதி தன்னின் மிக்க வளர்பதி கிரர் நாடித்
துளங்கொளிக் கயிலை தென்பாற் றாயகா ளத்தியென்றுங்
குளங்கொடு துதித்துக் கூறற் குடையதித் தொண்டை நாடு.

வேறுநூல்கள்.

## திருவொற்றியூர்ப்புராணம்.

தீர்த்தலச்சருக்கம், கரு.

நண்ணியே பயின்முளைக் கமலத்தாற் பூசை செய்து
கண்ணர்கண் ணிடந்து சாத்தி யாழிகைக் கொண்ட தங்கண்
திண்ணியீ வாயுநீ ராட்டி மென்றசை யூட்டிச் சேர்ந்து
திண்ணர்கண் ணிடந்து சாத்திச் சிவகதி யடைந்த தங்கண்

## திருவேற்காட்டுப்புராணம்.

வேதவனச்சருக்கம், ருo.

மையாருங் காளத்தி யிடைமருதூர் கழுக்குன்றம் வயித்ய நாத
மையாறு திருச்சயிலம் வான்மியூ ருச்சயினி யாலங் காடு
செய்யாரும் வடமுல்லை வலிதாயஞ் சித்தவடந் திகழ்கே தார
முய்யான நிறைவிரிஞ்சை விரூபாக்கம் பிரபாச மொளிசே ரோத்தூர்.

## திருக்கழுக்குன்றப்புராணம்.

நாடடுச்சருக்கம்.

ரு. குறிஞ்சிதென் கயிலை வெற்பு மருணைப்பொற் குவடு மாக
நிறஞ்செயு மொற்றி யூரு மயிலையு நெய்த லாக
நறுஞ்செழு முல்லை வாயி னருமுல்லைத் திணைய தாக
வறஞ்செயு மருத நாப்ப ணுகப்பெற் றுளதந் நாடே.

சு. அத்திணைக் கயிலைப் பாம்பொன் ருணையொன் றொருவில் வேடன்
மெய்த்துணை சிவனே யென்றென் றிறைஞ்சி வீடடையப் பெ
ணித்திய னருமே சன்று ணிலமகழ்ந் தேன மொன்று [ற்று
பத்தியிற் றேடிற் றென்று லிவற்றினும் பலித்த துண்டோ.

கூ. முகரிசே யாறு பாலி முரறிசைக் கம்பை பம்பை
யகருவே நாறும் பெண்ணை யருநதிரு நதியந் நாட்டின்
மகாவா ரியினும் பொங்கி மடைதொறும் பிரிந்தொன் றுகு
நிகரிலான் பலமே வாத னிகரெனக் காக்கு மன்றே.

உருத்திரகோடிச்சருக்கம்.

காசி யம்பலங் கமலைசோ ணசலங் காஞ்சி
மாசில் காளத்தி மதுரையா திப்பதி யங்கம்.

தீர்த்தச்சருக்கம், சுo.

கங்கைகா ளிந்தி வாணிவை தரணி கவுதமை மலப்பிர தரணி
துங்கபத் திரைநர் மதைகம்பை பமபை சோமுகை முகரிதென் குமரி
சிங்கைகண் டகிவேத் திரவதி பிராமி தேவிகை பிறுகினி பாலி
கொங்குலாம் பொருநைத தாம்பிர பருணி கோவதி சிநதுகோ மதியே.

### தலவிசிட்டச்சருக்கம், ௪, (

ஆரையா வசைததோன யாாககு மருடாக் கருதி வெள்ளி
வரையினுங குவடு மூன்று வைததுயவை யென்றெ ரெறவப்
புரைதபு பருபப தததிற காளததிப பொருபபி லிந்த
வுரைதெரி வேத வெறபி னநிவரு துய்ததுப போனுன.

கயிலையிற சிகா மூனறுங காளததி பருபப ததோ
டெயில்கெழு வேத வெறபி னெரோனறு விருக்கு மாற்று
லயிலவன் றநதைக கிநத வசலஙகண் மூன்று மெனறும
வெயிலவன குலவேந தேதென கயிலையாய் விளஙகுங கண்டாய்

---

### தில்லைக்கலம்பகம், ௩௨

கடலவிட நுகாநத காசினி யிலிஙகங காஞசிமா நகருறை யிலிங கங - காவிரி வடபால வருதிரு வானைக காவினி லபபுலிங் கமதாப, வடதிசை யணணு மலையினி லிலிஙகம வனனியின வடிவுகா ளததி - வாயுலிங கமதாஞ சிதமபா லிஙக மாசிலா காயலிங கமதாம, குட திசை யதனின மருவுகுற றுலங கோதறு சிததிர சபையாங - குறற மில குணககிற பழையனூா மனறங குலநவ ரதனமன றென்பா, ரட லவிடைப பாக னெலலையம பதியி லமபலந தாமபிர சபைபா - மால வாய மதுரை வெளளியம பலமா மணிதிலலை பைமபொனம பலமே

---

### காசிக்கலம்பகம், ௮௮.

கூறறடிக களுசி முறையோ வெனககுல நானமறையும
போறறடிக களுசம புகலடைந தேழுமைப போல வைததாற
சேறறடிக் களுச வயறகாசி நாதசெ ருபபடிககும
மாறறடிக குநதொணடா விலலடிக குமபுகன மறறிலலையே.

---

திருவாரூாத்தியாகராசதேசிகாசெயத

### அன்பர் போற்றிக்கலிவெண்பா.

போததமபி நாடடுபபூா போறறுதிண்ண னாறுநாள
காதமெதாபபில பூசைசெய்து கண்கலககம—பாாத்தபபாற
றணணப பணிவாா தடஙகணிறறன கண்ணபபிக
கிண்ணபப ரான கதை போறறி.

---

### சோமேசர் முதுமொழிவெண்பா, ௪௨

ஊனுககூ னெனனு முரைகண டுவநதனரே
தூநறசீாக கணணபபா சோமேசா—வானதனற

கற்றில னாயினுங் கேட்க வஃதொருவற்
கொற்கத்தி னூற்றாந் துணை.

## முதுமொழி மேல்வைப்பு.

கண்ணுதலோன் கண்ணோவு கண்டளவிற் கண்ணப்பன்
கண்ணினீர் சோரக் கதறுமா—லுண்ணெகிழ
வன்பிற்கு முண்டோ வடைக்குந்தா ழார்வலர்
புன்கணீர் பூச றரும்.

## திருவிடைமருதூர் உலா.

சகச. வேடரெச்சி லல்லாது வெங்கா னுழலுமற்றை
வேடரெச்சி லும்முணவாய் மேவுமே.

சஉரு கண்ணப்பர் பாதங் கமழ்செருப்புத் தோயுமென
வெண்ணப் படுவ திதற்குண்டோ.

சருசு-எ. மண்டுபுலால், ஏங்கொடுக்க வாட்டதென் றெங்கட் குரைத
தாங்கொடுக்கும் போதெல்லாந் தானுண்டான். [தொருவர்

ருசரு. கண்ணப்பர் கையிற கலந்ததவ நாயனாவின்
வண்ணப் பொலிவின் வருபதத்தாள்.

## பிரபுலிங்கலீ

### முனிவரர்கதி, சு.

அனபனாயக கணணிடந தபபும வேட னாக
இன்பமீ குதல்புகழ்க் கேறற தன்றானான்
வன்பனாய்த் திரியுமிம் மறவற் காப்பலென்
றென்பொலா மணிமன மிரங்கிற றென்பமே.

### ஆரோகணகதி, ௬0

கண்ணப்ப னன்பி னானே கறியென வமைத்த வூனை
யுண்ணப்ப னூனின் வேறா முயிருணி னமைவ னென்று
வண்ணப்பொன் னனைய சென்ன வசவதே சிகன்வ ணங்கி
• விண்ணப்பஞ் செய்தான் றுங்க விடைமுகங் காந்தா னோடு.

## சோணசைலமாலை, சுக.

மாணமும் பிறவித துயருநீங் குறநூல வாய்ச்சிலம் பிககருள் புரிந்த, கருணியென் றனைவர தடைந்தன னினிநின் கருத்தினை யின்னதென் றறியேன், முரணிபம பரூஉககை தலைமிசை யெடுப்ப

முழைக்கரும் பாம்பென மணித்தேர்த், தரணியுள் வெருவி யகன்
றிடுஞ் சோண சைலனே. கைலைநா யகனே.

---

## பழமலையந்தாதி.

௧௨. கொல்லைக் குறவரை வாயனை யார்கரிக் கோட்டைவிளை
நெல்லைக் குறவரை யாதுகொள் காளத்தி நேயரைவான்
றில்லைக் குறவரை நம்முது குன்றரைச் சேர்வலென்றா
ரொல்லைக் குறவரை மாத்திரைக் கேநல மீகுவரே.

## திருவெங்கைக்கலம்பகம்.

### தாழிசை.

௧. நீவிர்புல வருந்திலெரி நிரயத்தி லிடுவமெனத்
தேவமெமக் கியம்பினைநீ சிலைவேட னிடும்பிசித
மாவலொடு மிசைந்தவனுக் கருளினைமெய்க் கதியென்கொல்.

### அகவல்.

௧௫. நின்னொரு விழிசெந் நீர்கொளக் கலங்கித்
தன்னொரு விழிவெஞ் சரத்தினா லிடந்து
சாத்தி மற்றைத் தடங்கணவ் வகைபெற
வின்னமுண் டொருக ணென்றுளங் களித்து
மற்றதுங் களைவான் வாளிநட் டவனே

### வேறு.

௯௨. காணாம லயன்றேடு நின்மு டிக்கட் கண்ணப்பன் றொடு
கழற்கால் வைத்த போதிற், கோணாக முரிந்ததுவோ குளிர்வெண்
டிங்கட் கொழுந்துபொரு தொதுங்கிற்றோ நீர்ப்பெ ணன்பு, பூணாம
லருவருத்து நோக்கி னாள்கொல் பொன்னிதழித் தொடையல்சூழ்ந்
திழுத்ததோசொல், வீணாள்பட் டழியாத வன்பர்க் கன்பாம் விய
லனே வெங்கைவரு மமர ரேறே.

## திருவெங்கைக்கோவை.

### (விருந்திறைவிரும்பல்.)

௧௪௪. நணுக் களப முலையீ ரெனக்கு நவில்வதென்னீர் [கள்
வானத் தவர்தொழு தேத்துறுஞ் சீர்வெங்கை வாணர்க்குங்
கானக் குறவ ரிறைமகன் றன்முனங் கல்லையிற்பெய்
யேனத் தசைக்கறி யன்றோ மிகவு மினியதுவே.

## குறுங்கழிநெடில், அ.

ஆடுற வடியேன் புதுக்குடந் தருநீ யன்பன்வாய்ப் புனலுனக் காமோ, கூன்டியின் மலர்பித் தையிற்றரு மலரோ கூறுமென் கவி யவன் மொழியோ, நாடரு மொருநீ யிறையெனும் வழக்கை ஞானசம் பந்தனுற் றிட்ட, வேடுரை செய்‥ வென்காத் திருக்கு மீசனே மாசி லா மணியே.

---

## சிவஞானபாலயதேசிகர் நெஞ்சுவிடுதூது.

கண்ணி, கசுய.

கணணபபா மமனறசையைக் காளத்தி யார்தமமை
யுண்ணப்ப வென்றுமுன மூட்டியதும்.

## தனிப்பாடற்றிரட்டு.

வெண்பா.

காளத்தி கண்டத்தே காளத்தி நெற்றியிலே
காளத்தி யுன்றன் கரத்திலே—காளத்தி
அங்கமெங்கும் வெவ்வழலை யாற்றினுண் ஞானப்பூங்
கங்கையென னும் பெண்ணொருத்தி கண்டு.

அம்மானை.

கல்லாலின் கீழிருக்குங் காளத்தி நாதருக்குப்
பொல்லாச் சிலந்தி புகுந்ததுகா ணம்மானை
பொல்லாச் சிலந்தி புகுந்ததுவே யாமாயின்
வல்லா னொருபணிக்கன் வாரானோ வம்மானை
வந்தல்லோ பண்டு வடுப்பட்ட தம்மானை.

கட்டளைக்கலித்துறை.

வில்லா லடிக்கச் செருப்பா லுதைக்க வெகுண்டொருவன்
கல்லா லெறியப் பிரம்பா லடிக்கவிக் காசினியில்
அல்லார் பொழிற்றில்லை யம்பல வாணற்கொ ரன்னைபிதா
இல்லாத தாழ்வல்ல வோவிங்ங னேயெளி தானதுவே.

மண்ணென்ற மண்டல மெல்லாம் புரக்கும் வழுதிசற்றுந்
தண்ணென்ற நெஞ்சந் தரித்தில னேதனு வேடனெச்சில்
உண்ணென்ற போதுண் டவர்சொக்கர் பாதி யுடலம்பச்சைப்
பெண்ணென் றறிந்து மடித்தா னெவ்வாறு பிரம்புகொண்டே.

சோராத வேடன் செருப்பா லடிக்கவுந் தீண்டவுந்தன்
நீர்வா யுமிழவு முச்சிட்டம் போடவு நீண்டசிலைத்
தாரா லடிக்கவுங் கண்ணீர் ததும்பவுந் தாய்தமர்கள்
ஆரா கிலுமில்லை யோதிருக் காளத்தி யப்பனுக்கே.

வெண்பா.

முக்கண்ண னென்றரனை முன்னோர் மொழிந்திடுவார்
அக்கண்ணற் குள்ள தறைக்கண்ணே—மிக்க
உமையாள்கண் ணொன்றரைமற் றான்வேடன் கண்ணொன்
றமையுமித னாலென் றறி.

விருத்தம்.

செல்லாரும் பொழில்புடைசூழ் புலியூரம் பலவாண தேவர வும்மைக், கல்லாலும் வில்லாலுஞ் செருப்பாலும் பிரம்பாலுங் கடிந்து சாடும், எல்லாரு நல்லவரென் றெண்ணியரு ளீந்ததென்ன விகழ்ச்சி யொன்றும், சொல்லாமன் மலரால்விட் டெறிந்தவனைக் காய்ந்ததெ ன்ன சொல்லு வீரே.

நல்லானை யிடமருவுந் தியாகையா வுமதிடத்தின் ஞாயங்கா ணேங், கல்லாலே யெறிந்தோர்க்குஞ் செருப்படியா லுதைத்தோர்க் குங் கடிந்து போரில், வில்லாலே யடித்தோர்க்குங் கொடுத்தீரே யல் லாமல் விழிநீர் சோர, எல்லாமுன் செயலென்றே யிருப்போருக் கியா தேனு மீகி லீரே.

---

## திருக்காளத்திநாதர் இட்டகாமியமாலை, ௩.

கட்டளைக்கலித்துறை.

தருமந் தவஞ்சற் றறியாத வேடுவன் றன்செருப்பு
மருமுந்து வேணிக் கணிமா மலரவன் வாயுதகந்
திருமஞ் சனக்குடம் பல்லா லவன்மென்று தின்றதசை
யருமந்த போனக மன்றோநங் காளத்தி யப்பருக்கே.

---

## திருக்காளத்திக்கோவை.

காப்பு.

சீர்க்கோவை சேர்தென் கயிலாயர் தம்மைத் தெரிந்தன்பினேன்
மாற்கோவை யானு முரைத்திடவேபனி மால்வரைபோற்
கார்க்கோவை மேனியஞ் சந்திக்கணபதி கஞ்சமலர்த்
தார்க்கோவைத் தாளிணையே துணையா வந்து சந்திக்கவே.

இக்காப்புச்செய்யுள், திருநெல்வேலி ஸ்ரீ அம்பலவாண கவிராயரவர்கள் வீட்டிற்கிடைத்த திருக்காளத்தி நாதருலா எட்டுப்புத்தகத்தில் எழுதப்பட்டி ருந்தது; நூல் எங்குங்கிடைக்கவில்லை.

செங்கோட்டை

# ஸ்ரீபூவநாசதேசிகரியற்றியவை.

## ௧. திருக்காளத்திநாதர்கட்டளைக்கலிப்பா.

அத்திமுகத், துத்தமனை
நித்தநினை, சித்தமே.

க. இருப்புக் காலினும் வன்காலென் காறினை
மிரப்புக் காக நடக்கவென் றாலெந்தை
பொருப்புக் கால்வலஞ் செய்யென்று மேலவர்
புகன்றக் காலிது பொய்க்காலென் சொல்லுவேன்
செருப்புக் காலெற்றிச் செவ்வாய்ப் புனல்விட்டுச்
சென்னிப் பூப்பெய்து செங்கையி னூன்வைத்துக்
கருப்புக் கான்மட்டுந் தின்றா லெனநின்ற
கண்ணப் பன்பணி காளத்தி வாணனே.

ஏப் பஞ்சிறி யேன்மாற்ற மற்றலை
தொன்று மில்லைவெங் கூற்றுவன் சீற்றமே
பண்ணப் பங்கம் வருமுன்ன முன்னிரு
பாதப் பங்கயப் பாக்கியம் வேண்டுமா
லுண்ணப் பங்குசெய் தூன்சுவை பார்த்தவற்
றெவ்வொன் றாவெடுத் துண்ணுமென் றேயன்று
கண்ணப் பன்றரா வாயூறி நின்றகங்
காத ரா திருக் காளத்தி வாணனே.

ங. பருப்புக் குக்கொதி பாலுக்குச் சீனிக்குப்
பட்டு டைக்குப் பணிக்குப் பணத்துக்கு
விருப்புக் குச்சடை யாமட வீருக்கு
வீணுக் குச்சுழல் வேனிது வேட்கையோ
செருப்புக் குச்சுப்புல் செவ்வாய் கலசம்பூஞ்
சென்னி கூடைகை செம்பொற்றம் பாளமாக்
கருப்புக் குச்சரி யாவண முன்னின்று
கண்ணப் பன்பணி காளத்தி வாணனே.

ச. வண்ணப் பாவையர் மீதாசை யான்மன
மறுகிப் பாயும் விருப்பிர தத்தினை
லெண்ணப் பாடன்றி மேம்பா டிலைப்புண்பா
டிந்தப் பாட்டுக் கிடம்பாடு தாகுமோ
வுண்ணப் பால்வைத்த வூன்வேடன் கண்ணப்ப
வொளித்துப் பார்க்கு மொலிமறை யோன்முன்பு
கண்ணப் பாவென் றெருமாற்ற மோதுமுக்
கண்ணப் பாதிருக் காளத்தி வாணனே.

௫. சூடன் காட்டுஞ் சுடர்ப்பொறி போலுஞ்சொ
ரூபங் காட்டிச் சுகங்காட் டியநின்னை
நீடன் பாற்றுதித் தெந்நாளுஞ் ஞானந்த
நிருத்தங் காண்பதிந் நேரம்வந் தாட்கொள்வாய்
வேடன் கோத்திர நாணன்முன் னேசெல்ல
விரைந்து காந்தமு மூசியும் போற்பற்றிக்
காடன் காட்டவென் கோனிவு ளுமென்று
கண்ணப் பன்பணி காளத்தி வாணனே.

௬. விண்ணி டந்தப்பி மீப்போம் விரிஞ்சனும்
விண்டு வும்பண்டு தேடரி யாய்மலைப்
பெண்ணி டங்கொண்ட கோவே யெனுவிந்தப
பேதை யேன்செய் பிழைபொறுத் தாட்கொளவாய்
மண்ணி டந்தப்பிக் கானிட முந்தப்பி
மலையி டந்தப்பி வந்துவந் தானுக்கூன்
கண்ணி டந்தப்பிக் கைகூப்பிக் கூப்பியே
கண்ணப் பன்பணி காளத்தி வாணனே.

௭. நீளுந் திக்கரை நாணிட்டுப் பூணிட்டு
நேத்தி ரங்கட்டிக் காத்திரங் கெட்டியா
யாளுந் திட்ப மதனுலெ னீதடுத்
தாட்கொண் டாலன்றி யாளாவ தாரையா
மீளுந் திக்கெங்கும் போய்ப்போய்நல் லூன்கொண்டு
வெண்டி ரைத்தொனி நீத்தோ ருருக்கொண்டு
காளுந் திப்பெய ராறுநின் றூலென்னக்
கண்ணப் பன்பணி காளத்தி வாணனே.

௮. ஒன்று தேட வஃதொழிந் தேமறுத்
தொன்று கூடு முலகத்துள் ளோர்செய
லென்று தேடுந் திரவிய நின்னரு
ளென்ன முன்னிநின் றேத்துவ னேவையா
மன்று தேட மறைதேட வேதனு
மாலுந் தேட மருந்தொன்று தேடியான்
கன்று தேடிக் கதறுதல் போனின்று
கண்ணப் பன்பணி காளத்தி வாணனே.

௯. துரிய மாய்த்துரி யாதீத மாய்ப்பரஞ்
சோதி யாய்ச்சுட ராய்விந்து நாதமா
யரிய மாயை யகன்றேசிற் றம்பலத்
தாடுஞ் சேவை யடியனுங் காண்பனோ
வரிய மான்மரை பன்றிபுல் வாய்புலி
யுலவுங் கானகத் தூன்கொணர்ந் தேநெடுங்
கரிய மாணிக்க மால்வரை போனின்று
கண்ணப் பன்பணி காளத்தி வாணனே.

௰. அடநின் றானை யுதைத்தாய் கணைகொடெய்
யாநின் றானை வதைத்தாய் திரிபுரத்
திடநின் றூரைச் சிதைத்தா யுனதரு
ளொன்னென் றேத்தி யியம்பிடக் கூடுமோ
தொடநின் றனெவன் சொல்லென வேதியன்
றுன்னென் றார்த்தொளிப் பத்தோன்றி யேபெருங்
கடனின் றாலெனக் கங்குலெல் லாநின்று
கண்ணப் பன்பணி காளத்தி வாணனே.

௧௧. நாள கண்டக முண்டகப் பூம்பத
நாளுங் கண்டகத் தானந்த மெய்திட
நீள கண்ட பரிபூ ரணமென
நிறைந்த கோலமெந் நேரத்துக் காண்பனோ
தாள கண்ட முயங்கிட வேயண்டர்
சந்தித் தேதகுந தலைவா புதியவெங்
காள கண்டவண் டாபரா ணுமுன்பு
கண்ணப் பன்பணி காளத்தி வாணனே.

௧௨. நீவ லாரியென் றற்பரைப் பாடிய
நினைவ லானுனை நேசித்துப் பூசித்துப்
பூவ லாம்புயத் தாள்பணி கின்றிலேன்
புரவ லாவென் பிழைபொறுப் பாயையா
ஆவ லாகிக்கண் ணீர்வார மெய்குழைந்
தழுத ரற்றியம் பும்விலுந் தாங்கிமெய்
காவ லாயிர வெல்லாந் தனிநின்று
கண்ணப் பன்பணி காளத்தி வாணனே.

௧௩. மாநெ லாந்தண் டலஞ்சா கினிகொக்கு
வடுவெ லாஞ்சமைத் தூட்டிய பேர்முன்பு
நானெ லாமறிந் தேனென்று பேசுமென்
னவையெ லாம்பொறுத் தாட்கொள்ள வேண்டுங்கா
ணூனெ லாமொரு கையேந்தி யேவெயர்த்
துடம்பெ லாங்கட் டழிந்துகண் ணீர்மல்கக்
கானெ லாந்திரிந் தோடிவந் தேயன்று
கண்ணப் பன்பணி காளத்தி வாணனே.

௧௪. வெதிர்வந் தாலன தோளிபங் காபரா
வெளிவந் தாலென வெள்விடை மேலெனக்
கெதிர்வந் தாவிரு கண்கொள்ளு மோவுனை
யேன்வந் தாயென் றிசைப்பவ ராரையா
அதிர்வந் தார்ப்பெழு தொண்டகங் கோடிப்ப
வம்பும் வில்லுந தடக்கையு மாய்க்கருங்
கதிர்வந் தோர்புடை நின்றேத்து மாறெனக்
கண்ணப் பன்பணி காளத்தி வாணனே.

கரு. வண்ண நாண்மல ரிட்டுனைப் பூசித்து
வாண னென்ன மார்க்கண்ட னென்ன
வெண்ண நாண மிலாநாயி னேனுமவந்
தினிய னெனிகை யாலர்ச்சிப் பேன்கண்பார்
திண்ண னெமனப் பொத்தப்பி நாட்டுளோர்
செப்பும் பேர்கொண்டு செந்தா மரைத்தடங்
கண்ண னார்வந்து தெண்டனிட் டாலென்க்
கண்ணப் பன்பணி காளத்தி வாணனே.

கசு. அருவ மாயுரு வாகிப் பிரமமா
யங்க மாய்த்துங்க மாய்ச்சிவ மாய்விச்வ
சொருவ மாய்வளி யாய்வெளி யாய்ப்பரஞ்
சோதி யாமுன் சொருபமென் சொல்லுவேன்
வெருவ மானின மெய்தூன்கை மீதில்லை
மேல்வைத் தோரிலை மேன்மூடி வந்தொரு
கருவ லாரியர்ச் சித்தா லெனநின்று
கண்ணப் பன்பணி காளத்தி வாணனே.

கஎ. குட்டிக் கொண்டு சுமுகனைப் போற்றவுங்
குறித்துக் கொண்டு குகன்றனை வாழ்த்தவுங்
கிட்டிக் கொண்டுன தன்பரொப் பாகவுங்
கிருபைக் கொண்டலொப் பாயருள் கூரையா
ஒட்டிக் கொண்ட தொருகண்ணென் றெண்ணுமுன்
னொருக ணுங்கு ருதியாயக் கண்டஞ்சிக்
கட்டிக் கொண்டு கதறிக்கண் ணீர்மல்கிக்
கண்ணப் பன்பணி காளத்தி வாணனே.

கஅ. அலம்புந் தேற லிளங்கிளி போன்மொழி
யரிவை யர்க்கென் னகமுரு கித்தினம்
புலம்புந் தேவ கணமாஞ் சிலந்தியும்
புயங்க முந்தொழும் பொற்பதங் காண்பனோ
சிலம்புஞ் சாரலுஞ் செங்குன்றி லேவில்லைச்
செருப்புக் காலின் மெலவூன்றி யேபடைக்
கலம்பின் னுகச் சிறுநா ணெலிகொண்டு
கண்ணப் பன்பணி காளத்தி வாணனே.

ககூ. பவள வார்சடை யுந்திரு ஞானப்பூம்
பாவை மேவிய பாகமு மார்பிடைத்
துவள நூலணி யுந்திருக் கோலமுந்
தொழப்பெ றும்பயன் சொல்லவுங் கூடுமோ
தவள வாளியுஞ் சோகியுந் தூவியுந்
தங்கு வாகு வலயமுங் கொண்டொரு
கவள வாரண பேபணிந் தாலொப்பக்
கண்ணப் பன்பணி காளத்தி வாணனே.

௨௦. குருவி யோடிய குன்றிடத் தேக
குருதி யோடிய கொள்கையைப் பார்த்துளம்
வெருவி யோடி யிலைமருந் தியாவையும்
விரைய வேகுழைத் திட்டொன் றுங் காண்கிலாப்
பெருவி யாகுலத் தோடென்செய் வேனெனப்
பேத லித்தினி யூனே மருந்தென்று
கருவி யோடுங் கணிவொடும் வில்லொடுங்
கண்ணப் பன்புணி காளத்தி வாணனே.

## ௨. திருக்காளத்திநாதர்பதிகம்.

சீரேறு பொற்கமல பீடிகைச் செல்வன்
றிருக்கா வருத்தமுந்தென்
றிசைநாத னுள்ளத்தி லோயா வருத்தமுஞ்
செனனந் தொறுஞ்சுமக்கு
நாரேறு சிந்தைமா தாவருத் தமுமேக
நாயினுங் கடைபட்டிடு
நானுமொரு கதிசேர்ந் தினைப்பாற வேண்டியு
னலம்புரிசந் நிதியடைந்தேன்
போரேற தாய்ச்சுமந் தானுமடி காணாத
புண்ணியா நண்ணியார்கைப்
புகுநெல்லி யங்கனியி னெளிதுகண் டேத்தும்
புராதனா வினியிரங்காய்
காரேறு நீள்சிமைய விபினவைப் பெங்குங்
கலந்தமரர் கணநெருங்குங்
காளத்தி மலைமேவு கருணைமலை யேதிருக்
கண்ணபபா காதனமலையே.

௨. பானற் கருங்கட் பசுந்தோகை யனையபொற்
பாரமுலை யார்தமக்கும்
பைம்பொனணி பட்டாடை யானயா தியபொருட்
பகுதிக்கு மிகுதிவளமார்
தேனக்க மலர்வாவி சூழ்புவிக் குங்காதல்
செய்துசிறு தெய்வமேத்துஞ்
சிற்றறிவி னோர்செனுஞ் சிறுநெறிச் செல்லாது
சிவஞான தீரர்கூட்டந்
தானுற்று வெம்பசிக் கொருமருந் தாய்ப்பிச்சை
தாவேற் றருந்தியுன்பொற்
றுணிழற் கீழிரவு பகலற்ற வீட்டிலே
தனியிருந் திடவைத்திடாய்

கானக் குறச்சிறுமி மாரொடு மாம்பையர்
கலந்துவிளை யாடுசெல்வக்
காளத்தி மலைமேவு கருணைமலை யேதிருக்
கண்ணப்பர் காதன்மலையே.

ரு. தண்டாள மணிகொழிக் குந்தினைப் பொன்முகரி
தாழ்ந்துநீ ராடிநீறுஞ்
சண்ணித் தருட்சாத னம்பூண்டு நின்வரைச
சாரல்வல மாகவந்தே
யண்டர்கண மிடைதிருமுன் வீழ்ந்தெழுந் தானந்த
மாராத நட்டமாடி
யன்புவட் டெறிதுதிகள் செய்துபன் னாள்கணை
தாய்க்கழித் திடவருள்செய்வாய்
துண்டமதி நுதன்ஞான மலராளக வல்லிபுணர்
சுந்தரச் சந்தமார்பச்
சோதியே யகிலகா ரணமுமா யொன்றினுந்
தோயாது நின்றசுடரே
கண்டவர்க டீவினைகள் காணாது பாமகதி
காணவே றிடுமேணியாங்
காளத்தி மலைமேவு கருணைமலை யேதிருக்
கண்ணப்பர் காதன்மலையே.

முந்திரிகை யிற்பாதி பொன்னுகி லுங்கொடா
மூடராம் லோபர்தமையும்
முழுதுமருள் கற்பகத் தாருவே யென்றுபொய்
மொழிக்கவிகள் பாடியலையா
தெந்தைநின் றிருவடிக் கென்று மியன்றபா
வினமாலை சாத்தியேத்தி
யிறைவநி னருட்பணிக் குரியனாய் வீட்டின்ப
மெய்துபெரு வாழ்வளிப்பாய்
அந்தரத் தமரர்விளை யாடுபொற் சிமையநிரை
யகடுமிடை பகடுவிண்போந்
தலர்தூவு கற்பகப் பூங்கொம் பொசித்துவயி
றாரவுண் டிடிவரைச்சார்
கந்தரத் தொடுமாறு கொண்டுபிளி றித்தேவ
கங்கைநீர் வீசியாடுங்
காளத்தி மலைமேவு கருணைமலை யேதிருக்
கண்ணப்பர் காதன்மலையே.

ரு. வாளனைய கூர்விழி மடந்தையர்க ளேமனு
வழுத்துகுரு வாகவின்ற
மைந்தர்கண மான்மார்த்த லிங்கமா கச்சுற்ற
மருவுசங் கமமதாகத்

## உ. திருக்காளத்திநாதர்பதிகம்.

தாள்வலியி னல்வருஞ் செல்வபோ கங்களே
தனியின்ப வீடதாகத்
தழ்மிலே மகிழுமா யாசால பந்தந்
தவிர்த்தாண்டு நின்னையென்னைக்
கோளுறு பெரும்பாச மதனைவெவ் வேறாக்
குறிக்கொள வுணர்த்திநின்றாள்
கூடுசுத் தாத்துவித நிலையில்வைத் தின்பங்
கொடுத்தமெய்க் குருமூர்த்தியே
காளனுட னத்திநித மிகவிவழி பாடுபுரி
காரணக் குறிபூண்டிடுங்
காளத்தி மலைமேவு கருணைமலை யேதிருக்
கண்ணப்பர் காதன்மலையே.

சு. பைக்கடு விடத்தீ மிடற்றடக் கித்தமது
பாவையர்க டாலிகாத்தும்
பங்கயக் கண்ணேற தேறிமுப் புரமழல்
படுத்துபுதம் வாழ்வளித்தும்
மைக்கரு நிறத்தந்த காசுரற் கொன்றுகா
வளமாற்று வித்துமுள்ள
மயறீர்கி லாதுசெத் துப்பிறக் குந்தெய்வ
மால்கொள்வ ரமரரென்று
விக்குவல யத்தேழை மானிடப் பிறவியேற்
கெந்தைநின் றிருவடியலா
வின்னமொரு தெய்வமுண் டென்னவறி யாதவாழ்
வீந்ததற் புதமற்புதங்
கைக்கவுண் மதக்களிறு கற்பகத் தளிர்கொய்து
கயமுனி யருந்தவூட்டுங்
காளத்தி மலைமேவு கருணைமலை யேதிருக்
கண்ணப்பர் காதன்மலையே.

எ. மணமருவு கற்பகப் பூங்கா நிழற்கனக
மணியாச னத்தும்பர்வான்
வாழ்த்தவா சாட்சிபுரி பதுமமலர் வேதிகையின்
வைகியுல குதவுபதமும்
பணமருவு துத்திகெட் டேலணைத் துஞ்சுமப்
பதமும்வேண் டேனுனதுபொற்
பதமலர் புனைந்தமுடி யடியார்த மடியார்கள்
பதம்வேண்டி யானலந்தேன்
குணமருவு மன்பர்சிந் தனையறிந் துதவுநீ
குற்றமே சகசமாம்பொய்க்
கொடியனேற் குனதுதிரு வுளமிரங் கிக்காதல்
கொண்டவா மீதுதருவாய்

கணைமருவு புயலிளைத் தேறியடி வரைமேவு
களிறேறும்
காளத்தி மலைமேவு கருணைமலை யேதிருக்
கண்ணப்பர் காதன்மலையே.

௮. வெங்கொடிய வாணவப் பார்த்தில்வாய்ப் பட்டுமதி
வீயவிரு வினையடவிவாய்
விடயவைம் புலவேட ராறலைப் பத்தன்மம்
விட்டுமற நெறிபோய்ச்சமன்
கிங்கரர்க ளாம்புலிக் கிரையாகி மீளவுங்
கெடுசென்ம வாரியலையிற்
கீழ்மேல தாய்ச்சுழல் கறங்கெனச் சுழலுமிக்
கீழ்மைதீர்த் தாண்டுகொள்வாய்
கொங்குலவு ஞானமல ரளகமின் புணரருட்
கொண்டலே தண்டதரனுங்
கூற்றகல மிடிபடத் திருவடி நிமிர்த்தன்பர்
குறைதீர்த்த குணவாரியே
கங்கைநதி தோயவெண் பிறைதவழ வவிர்சடைக்
காட்டழகு சென்னிகாட்டுங்
காளத்தி மலைமேவு கருணைமலை யேதிருக்
கண்ணப்பர் காதன்மலையே.

௯. வளையேந்தி வேற்கடைக் கஞ்சனந் தீட்டிமண
மஞ்சட்ட விக்கந்தமார்
மான்மதம் பூசிமணி யணியாடை தாங்கிமலர்
மாலைசூற் றுபுநாபுரத்
தளைபூண்டு திரிமுடைப் புன்றசைக் கூடதைத்
தமதாவி யென்றுமதுரந்
தருமமுத மேயென்று மால்கொண்டு கொட்புறுஞ்
சஞ்சலப் பித்தவுலகக்
கிளைநீங்கி மும்மலப் பிணிநீங்கி யின்பங்
கிடைத்தபர முத்தர்குழுவிற்
கிட்டவைத் தாண்டாய்க்கொர் கைம்மாறு தேடியுங்
கிட்டகில தென்செய்குவேன்
கலையோங்கு சாரற் பரப்பினிறை மணிநிலவு
காட்டியிர வோட்டுதெய்வக்
காளத்தி மலைமேவு கருணைமலை யேதிருக்
கண்ணப்பர் காதன்மலையே.

௧௦. பஞ்சணைய சிற்றடிப் பேரமர்க் கட்கொடிய
பாவையர் திறத்துமழலைப்
பன்மகார் தந்திறத் துந்தேக வபிமான
பாசநே சத்திறத்தும்

மிஞ்சுபல காலம்யான் பாழுக் கிறைத்தமன
வெப்பெலா மாறுமாறு
விரிதிரை சுருட்டுமெணி யொளிவீசு பொன்முகரி
வெள்ளநீ ராடுவித்துத்
தஞ்சமா முன்றிருச் சேவையெனு மமுதசஞ்
சீவியுந் தந்தளித்தாய்
நரையில்லா னினிவாழுவி யுற்பவக் கொடியவெங்
தளையுறு வாமளிப்பாய்
கஞ்சனுங்-கஞ்சவிழி மஞ்சனுந தேடக்
கனற்பிழம பானவொளியே
காளத்தி மலைமேவு கருணைமலை யேதிருக்
கண்ணப்பர் காதன்மலையே.

---

## தனிச்செய்யுட்கள்

வெண்பா.

என்றுவந்து சேவிப்பே னென்றிருந்த காதன்முற்ற
வின்றுவந்துன் சந்நிதிப்பே றெய்தினேன் - குன்றுபொழிற்
காளத்தி நாதா கடைக்கணித்துத் தநகருள்வாய்
மீளத் திரும்பாத வீடு (க)

விருத்தம்.

அன்புபிழம் பானதிருக கண்ணப்பர் போன்றி னகத்தே பொங்கும், பொன்புரிசெஞ் சடைக்கருணை நிதியேயுன் றிருமுன்பு புகுந்து போற்றி, யின்பவெள்ளத் தாடியுய்வ தென்றோவென் றிருந்தேனின் றெய்தப பெற்றேன். துன்பமலம் வேரோடுங் களைந்தென்மற் றினியேதுந் தொடக்கிலேனே. (உ)

கானப்பூம் பொழிலுடுத்த காளத்தி மலைமேவு கருணை வெற்பே ஞானப்பூங் கோதையிடம் பிரியாத வானந்த நறுந்தே னேயேழ் [ன் தானப்பூம் பொழில்புரக்கும் பெருவாழ்வு மருவருத்துத் தள்ளி யுன்ற மானப்பூங் கழலடைந்தா ரடியாருக் கடிபேணும் வரமீ வாயே. (ங)

வண்டமர்பூங் குழல்போற்றி மதிமுகமண் டலம்போற்றி மலர்வாய் போற்றி, கண்டவர்தீ வினையோட்டுங் கடைக்கணருள் போற்றி யெழிற் கண்டம் போற்றி, துண்டமதிச் சடிலர்திரு மார்பகலாப் பொற்கலசத் துணைகள் போற்றி, செண்டமருங் கைபோற்றி ஞானப் பூங் கோதையம்மை திருத்தாள் போற்றி. (ச)

அல்லுறுத்துங் காளகண்டர்க் கமுதருத்தும் பெருவேட்கை யதனல் வேட்டம், வில்லுறுத்துங் கைவேடர் பிரான்புரியுங் காளத்தி வெற்பைச் சூழ்ந்து, கல்லுறுத்த வலம்புரியுங் காலினான் றோவாசர் கதிர்கான் மோலி, யெல்லுறுத்து மணியுறுத்துங் காலினரா யுலகாளு மியற்கை யோரே. (ரு)

# பிழையும் திருத்தமும்.

| பக்கம். | பாட்டு. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௭ | ௪ | ௨ | ய்ந்தனை | யங்களை |
| ௨௨ | ௫௪ | ௪ | தியையீண்டு | தியொயடண்டு |
| ௪௦ | ௭ | ௩ | தொழுந்து | தெழுந்து |
| ௫௩ | ௧௩ | ௧ | ஞாதுரு | ஞாதிரு |
| ௫௬ | ௩௪ | ௩ | டரய | டரைய |
| ௫௭ | ௪௩ | ௨ | ஞெசிப் | ஞெகிப் |
| ௬௩ | ௨௮ | ௧ | கீப்பா | கீழ்பா |
| ௬௪ | ௩௯ | ௪ | மிலிங்க | விழிங்க |
| ௬௬ | ௫௯ | ௩ | புரைக் | புரை |
| ௬௯ | ௮௩ | ௨ | நாட்டொ | நாடொ |
| ௭௩ | ௧௧௩ | ௧ | தண்டை | தண்டு |
| ௭௯ | ௨௨ | ,, | ருணை | ரிணை |
| ,, | ,, | ௩ | கள்விக்கியாதர் | களேயீதர் |
| ௮௨ | ௧௩ | ௪ | யிரமாண்டு | யிரவாணடு |
| ௯௨ | ௧௨ | ௩ | லீகை | லீப்கை |
| ௧௧௧ | ௪௭ | ,, | றிலைச் | றிலை |
| ,, | ௪௯ | ௪ | றிலைப் | றிலை |
| ௧௧௪ | ௩ | ௧ | றெடை | றடை |
| ௧௨௪ | ௨௮ | ௨ | மாதவர் | மாவவர் |
| ௧௩௫ | ௨௩ | ௩ | மதீ | மதி |
| ௧௪௧ | ௮ | ௪ | யத் | கத் |
| ,, | ௯ | ௪ | பிணையலளி | பிணையலணி |
| ,, | ௧௧ | ௧ | தனப் | தனம |
| ௧௪௨ | ௨௩ | ௩ | ஞெகி | ஞெதி |
| ௧௪௫ | ௪௩ | ௪ | மாய்முத் | மாமுத் |
| ௧௫௧ |  | ௩௪ | ௧௦௮௮ | ௧௦௮௯ |
| ௧௫௨ | ௫ | ௨ | துமெவ்வழ | தும்வெவ்வழ |
| ௧௫௪ | ௯௯ | ௧ | முழூக்கு | முழுகத |
| ,, | ௨௧ | ௨ | திதீக் | திதிக் |
| ௧௬௭ | ௩ | ௩ | லாதவன் | லாதவவ் |
| ௧௮௯ | ௧௨ | ௩ | விலக்கிய | விலக்கித |
| ௧௯௨ | ௩௯ | ௨ | சன்னத்த | சன்னத |
| ௨௦௦ | ௧௩ | ௧ | சியசிலா | கியசிலர் |
| ௨௦௪ | ௪௧ | ௪ | ளிருந்தெ | ளிருநதே |
| ௨௦௫ | ௧ | ௩ | சிந்தையின் | சிந்தையன் |
| ,, | ௪ | ௪ | டுன்ஹுணர் | டுன்ஹுநர் |
| ௨௦௭ | ௧௬ | ,, | பெற்றவன் | பெற்றவர் |
| ௨௧௭ | ௧௦௦ | ௨ | மன்றன் | மன்ற |
| ௨௨௪ | ௩௨ | ௪ | ரெனை | ளெனை |
| ௨௨௫ | ௪௦ | ௨ | மெப்பொரு | யெப்பொரு |
| ௨௩௨ | ௨௩ | ௪ | நயமொடு | நயனொடு |
| ௨௪௦ | ௮௪ | ௧ | எய்ச்சது | எய்ச்சன |
| ௨௪௩ | ௪௭ | ௪ | நீரான் | நீரார் |
| [illegible]௮௧ |  | ௪௮ | சித்தி - சித்திரை | சித்திரை |

உ

கணபதி துணை.

சிவமயம்.

திருக்காளத்திநாதர் துணை.

# திருக்காளத்திப்புராணம்.

## பாயிரம்.

### காப்பு.

செழுவிய வடமொழி தென்மொழிப்பட
மொழிவுறு மாக்கதை முழுதுங் காக்குமாற்
குழவியந் திங்கள்வெண் கோட்டு மும்மதத்
தழைசெவிப் புகர்முகத் தடக்கை வேழமே. (௧)

*ஐஞ்சந்திவிநாயகர். வேறு.

செஞ்சந்தக் களபக் கொங்கைச் செழுமலை யிமய மங்கை
கஞ்சந்தங் கியபொன் போற்றுங் கருணைஞா னப்பூங் கோதை
நஞ்சந்தெள் ளமிர்தா வுண்ட நாதரோ டிவர்ந்து பெற்ற
வஞ்சந்திப் பிள்ளை செம்பொ னடிமலர் முடிமேற் கொள்வாம். (௨)

## கடவுள் வாழ்த்து.

### திருக்காளத்திநாதர். வேறு.

சீர்பூத்த பேரொளியாய்ச் சித்துருவாய் நித்தமாய்ச் சிவமா யொன்று
பேர்பூத்த சத்தாகி நிருமலமா யநாதியா யாண்டு மாகிப்
போர்பூத்த வகளமா யகண்டமா யுயிர்க்குயிராய்ப் பிரியா தோங்குங்
கார்பூத்த காவுசூழ் காளத்திப் பரம்பொருளைக் கருத்துள் வைப்பாம். ()

### ஞானப்பூங்கோதையம்மை.

அளவிலாத் தோற்றமீ றுயவற்றிற் போகவீ ரவலங்கெடுஞ் ஞீன்று
மளவிலா வழிதுயரா னெஞ்சிளைத்த வளவிலா வுயிர்க்குந் தாயா
யளவிலா வருட்டேம்பா லினிதருத்தி யளவிலா வூழி வாழ்
வளவிலா வானந்த மருண்ஞானப் பூங்கோதைக் கன்பு செய்வாம். (௪)

* பஞ்சஸந்திவிநாயகர்.

வேறு.

கானப்பூங் குழல்போற்றி கருணைபொழி விழிபோற்றி
தானப்பூங் களபமுலை தாங்கிறுடங் கிடைபோற்றி
வானப்பூந் தருமகவான் வணங்குதிருக் காளத்தி
ஞானப்பூங் கோதையுமை நற்கமல பதம்போற்றி. (௩)

ஐந்தநதிவிநாயகர். வேறு.

செஞ்சந்தச் சேறளவிச் செழுந்திதலை பொதிந்தமுலைப்
பஞ்சந்த மெல்லடியிற் பனிவரைமா மகளீன்ற
வஞ்சந்திப் பிள்ளையெனு மருவிமத மழகளிற்றை
நெஞ்சந்தங் கியவுவப்பான் முச்சந்தி தொழுநினைவாம். (௪)

முருகக்கடவுள்.

முழுதுலகங் களிசிறப்ப முனிவர்குழா மமரர் குழாங்
கழிபெருந்துன் புறவெழுந்த *களிமுதலைமா முதறடிந்து
பொழிமதவெள் ளானைமிசைப் புரந்தரனுக் காசளித்த
கெழுசுடர்வே னம்பிதண்டைக் கிண்கிணிச்சீ றடிதொழுவாம். (௫)

திருநந்திதேவர். வேறு.

அந்தி வெண்பிறை சூடு மவிர்சடை
முந்து மான்மழு மூன்றுக ணான்குதோ
ளந்தை போல்வெள்ளி வெற்பி னிதாமர்
நந்தி சேவடி நாண்மலர் போற்றுவோம். (௬)

கலைமகள். வேறு.

புத்தகஞ் செபவடம் புனித ஞானமா
முத்திரை குண்டிகை முழுது மேந்தெழிற்
கைத்தலத் தமிர்தினைக் கலைம டந்தையை
முத்தமிழ்க் கிழத்தியை முடிவ ணங்குவாம். (௭)

வேறு.

ஞான முத்திரை நற்குண் டிகையறி
வான புத்தக மங்கைச் செபவடந்
தான மைத்துவெண் டாமரை மேவிய
பாணி றத்தவள் பாதம் பணிகுவாம். (௮)

அகத்தியமுனிவர். வேறு.

விந்தகிரி யொன்றடக்கி வேதமொரு நான்கடக்குஞ்
சிந்தைதனி லைந்தடக்கிச் சிறுகரகத் தாறடக்கி

" கீழ்மே னின்றலைக் கொடுங்கொழிற் கொக்கு " என்பது கல்லாடம் முருகக்கடவுள் துதி.

வந்துகட லோரேழும் வயிற்றடக்கிப் *பொன்முகரி
முந்துதவத் தாற்கொணர்ந்த முனிவனடி முடிபுனைவாம். (௯)

**சிலந்தி, காளன், அத்தி.**

பொலங்குவட்டுத் தென்கயிலைப் புனிதனடிக் காளாய
சிலந்திதனைச் சிந்தித்தே மெய்ப்பிணியுந் தீர்ந்தொழிந்தே
நலந்திகழ்மா காளனென்று னந்திபொற்று ணண்ணுவேம்
வலந்தருசீ ரத்தியென்றால் வானரசும் வேண்டேமே. (௧0)

**கண்ணப்பநாயனார்.**

மண்ணிடந்து மணிவண்ணன் மருவருஞ்சே வடியார்க்கு
விண்ணிடந்து மறைக்கிழவன் விரவரும்பொன் முடியார்க்குக்
கண்ணிடந்து சாத்தியிரு கண்ணுறுக்குக் கண்மூன்று
பெண்ணிடங்கொண் டவாருளாற் பெற்றவர்தாள் பெற்றிடுவாம்.(௧௧)

**†சிவகோசர். வேறு.**

‡கண்ணப்ப னொப்பதோ ரன்பின்மை யெனக்கழறி
வண்ணச்சொன் மாணிக்க வாசகர்வாக் காற்புகழ்ந்த
திண்ணாற்கு நிகராகச் சிவபூசை செய்துமுத்தி
நண்ணிக்கண் களித்தசிவ கோசாக்கு நாமடியேம். (௧௨)

**சமயாசாரியர்மூவர். வேறு.**

தெளிந்தபுனற் §பொன்முகரிக் கரையமர்ந்தார் திருவருளா
லுளங்குளிர்வா விக்கரையி னுமைமுலைபா லுண்டார்க்குங்
களங்கமின்றிக் கடற்கரைக்கே கன்மிதப்பிற் சேர்ந்தார்க்குங்
குளங்கரையின் முதலைவாய் மதலைதந்தார்க் குங்குடிநாம். (௧௩)

**திருவாதவூரடிகள்.**

கருந்தடங்கண் ஞானப்பூங் கோதையொடுங் ||கல்லாலின்
விரிந்தநறு நீழலிடை வீற்றிருந்த பெருமானைக்
குருந்தமலர்த் தண்ணிழற்கே குருவடிவா வருவித்துப்
பெருந்துறையி னுபதேசம் பெற்றவர்தாள் பெற்றிடுவாம். (௧௪)

* 'பொன்முகலி' எனவும்வழங்கும்.

† 'சிவகோசரியார்' எனவும் இவர்கூறப்பெறுவர்.

‡ "கண்ணப்ப னொப்பதோ ரன்பின்மை கண்டபி, னென்னப்ப னென் னொப்பி லென்னையுமாட் கொண்டருளி, வண்ணப் பணித்தென்னை வாவென் றவான்கருணைச், சுண்ணப்பொன் னீற்றற்கே சென்றூதாய் கோத்தும்பி" என்பது, திருவாசகம், திருக்கோத்தும்பி. ௪.

§ பொன்முகரிக்கரையென்றதற்கேற்ப, வாவிக்கரை, கடற்கரை, குளங் கரையென்று அமைத்திருக்குமழகு பாராட்டற்பாலது.

|| கல்லால் - இந்தஸ்தலவிருக்ஷம்; "கல்லாலின் கீழிருந்த காபாலிகாண் காளத்தி யானவனென் கண்ணுளானே" என்னுந் தேவாரத்தாலுமுணர்க. இதுபற்றியே திருக்காளத்திநாதரைக் கல்லாலடிக்கரும்பென்றும், கல்லா

### நக்கீரதேவர்.

செந்தாது நறைதுளித்த செழுங்கமல மேயானும்
பைந்தாம நறுந்துழாய்ப் படலைமுடிப் பசியானும்
மந்தாதி காண்பரிய காளத்தியண்ணலார்க்
*கந்தாதி கண்டவருந் தமிழ்ப்புலவர்க் காளானேம். (க௫)

### கன்னியரிருவர்.

பொருகன்னி குமரிமுதற் றீர்த்தமெலாம் போற்றுகங்கை
யொருகன்னி சடாமகுட மிசைவாழ வுலகேழுந்
தருகன்னி யுடன்வாழ்வார் தம்பால்வாழ்க் கைப்பட்ட
†விருகன்னி மார்கமலச் சீறடிக ளேத்துவாம். (க௬)

### யாதவவேந்தர்.

கதியிலிபோற் கல்லாலின் கீழ்வதிந்த கண்ணுதற்கு
மதிதவழ்பொற் கோபுரமு மணிமதிலு மண்டபமு
முதுசுடர்மா மாளிகையே முதலாய மற்றெவையும்
விதிமுறையே யமைத்தளித்த ‡யாதவவேந் தினைப்புகழ்வாம். (க௭)

---

லடியின்கனியென்றும் வழங்குவதுண்டு; அது, "கல்லா லடியிற் கரும்பினிர தந்தனை, எல்லாருங் கண்ணு லினிதருந்தீர்", "ஆரென்றாள் கல்லா லடிக் கரும்பென் றாதனைத், தாரு மெனக்கென்னத் தாய்மாருங் - காரிகையே, இந்தக் கரும்பெவர்க்கு மெய்தாக் கரும்புகாண், அந்தவயன் மாலுக் கரிது காண் - செந்தமிழ்சேர், ஆலவா யிற்பண்டு மாடுங்கா ஞொடியுங்கல், லாலை யடைந்துமழி யாதுகாண் - சாலவொரு, சற்றுங்கோ தில்லைக்காண் சாற்றி லதிகங்காண், சிற்றின்பர் நாவிற்சே ராதுகாண் - முற்றும்பே, ரின்பப் பெருக கங்கா ணிச்சை கடந்தேறும், அன்பர்க்கோ ராரா வமுதங்காண்", "அஞ் சென்று கல்லா லடியிற் கரும்பினுயர், அஞ்சு கொழுந்தி னடிபாடி", "கனி யார்கல் லாலின் கனியார் மடவார்க், கினியா ரினியாரிங் கென்பார்" (திருக் காளத்திநாதருலா) என்பவற்றால் அறியலாகும்.

* அந்தாதி - கைலைபாதி காளத்திபாதித் திருவந்தாதி.

† 'இருகன்னிமார்' என்றது, மதுரையிலிருந்த மாணிக்கவல்லியென் னும் கணிகையின்மகளிரிருவரை. இவர்கள்வரலாற்றைச் சீகாளத்திப்புரா ணத்துள்ள கன்னியர்கதைச்சருக்கத்தாலுணர்க.

‡ யாதவவேந்தராவார்: பண்டைக்காலத்தில் நாராயணநகரத்தில் அரசு புரிந்திருந்தவர். திருக்காளத்திநாதர், ஓரடியார்வேடங்கொண்டுசென்று இத் தலவிசேடங்களைக்கூறி இவரை ஆட்கொண்டு பணிபுரியும்படி கட்டளையிட்டு மறைந்தருள, இவர் அங்ஙனமே இத்தலத்திற்குரிய பலவகைப்பணியும் நல முறப்புரிந்து பின்பு முத்திபெற்றனர். இவை, சீகாளத்திப்புராணத்துள்ள விடசங்கமச்சருக்கத்தாலும், சிலந்திமுதலியவற்றின் முற்கதைச்சருக்கத்தின் ௬௩-ம் செய்யுள்முதலியவற்றாலும் அறியலாகும்; "யாதவற்குத் தால மிடு வீளைப் புல்கிநீ, போதியெனப் போதுபோய்ப் போந்தானை - யாதவனுஞ் சீரளகங் கொய்யத் திரும்பிவந்து வைவானைத், தாரளகங் கூடத் தடவியே

ஒருபொன்முகரியின் இருகரைவாழ்வோர்.

திருந்தவர்க ணனிவேண்ட விருந்தமிழ்மா முனியழைப்பப்
பெருந்தரையி னுயிர்க்கெல்லாந் தாயாகிப் பெரிதுவந்து
புரிந்தமிர்தப் பாலூட்டி வளர்த்தருளும் பொன்முகரி
விரிந்தகரை யிருமருங்கும் வதிந்தவரை மிகப்பணிவாம். (க௮)

மற்றுச்சிவநேசச்செல்வர்.

முன்னாளி லிறையவன்மு னினிதடைந்த முதியோர்கள்
பின்னாளி லன்னவற்றைப் பெறவுற்ற பெற்றியோ
ரிந்நாளிற் பெறுகின்றா ரெனுஞ்சிவமே வடத்தெவர்க்கு
மந்நீர்மை வைதிகசை வத்தெவர்க்கு மடியேம்யாம். (க௯)

ஞானாசிரியர்.

ஈசனைநீ பூசனைசெய் யென்றுமையோ டினிதளித்து
மாசிலா வருள்பொழிந்த வளர்ஞான சிகாமணியைப்
பாசமுதன் மூன்றுணர்த்திப் பிறப்பொழித்த பரஞான
தேசிகனுஞ் சத்தியஞா னியைப்பணிந்து சிந்தைசெய்வாம். (௨0)

தமிழாசிரியர். வேறு.

எழுத்தொடு சொற்பொரு ளுணர்த்தி யின்புற
வழுத்திடு கவிதையும் வருவித் தாரையு
மழுத்திய தொன்றினை யறிவித் தாரையும்
விழுத்தகு முவப்பொடு மிகவ ணங்குவாம். (௨௧)

வடநூல் மொழிபெயர்த்தளித்த பௌராணிகர்.

எண்ணிய விக்கதை யெமக்கு ணர்த்திய
நண்ணிய சங்கர நார ணன்னெனும்
புண்ணியன் வீரைவாழ் புராணி கன்றனை
வண்மைவே தியர்குல மணியை வாழ்த்துவாம். (௨௨)

பேரவென, வந்தானைக் கூந்தல் வருவித்தா ராரென்னத், தந்தாரைச் சொல்ல விறை தாள்போற்றி - எந்தாய், தலைமை தெனக்கயிலைச் சங்கமனு முன்னை, நலமேவப் பண்ண நடந்த - முலகில், இரும்பெல்லாங் கூட்டெடுத், திரதவா தஞ்செய், தரும்பொ னளகேச ருக்கித் - திரும்பவுந்தன், கோபுரங்கண் மண் டபங்கள் கோயில் வலமேறு, மாபுரங்கொள் வீதி மணித்தேர்கள் - சோப னங்க, ளாகத் திருப்பணிகொண் டந்தத்தி லேயவனை, யோகக் கதவுதிறந் திட்கொண்டோன்" (திருக்காளத்திநாதருலா. ௬௬ - ௭௨) என்பதனாலும் விளங்கும்.

## நூலியற்றுதற்குக்காரணம்.

பொன்கொழிக்கும் வெண்டரங்கப் பொன்முகரி சூழ்போந்த
தென்கயிலை மால்வரையாய்த் திகழ்திருக்கா ளத்திநகர்
நன்கதையை நூன்முறையே தென்மொழியி னடாத்துகென
வன்பொடுசொற் றனரென்னைச் சந்நிதிக்க ணமர்பெரியோர். (௧)

தெரிசனப்பே றிம்மையிலே திருவருள்பா லித்ததெனப்
பெருகவுளங் களிசிறந்தேன் கவிதைநலம் பெற்றறியே
னுரைசெயுமா றென்கொலென வொல்கினே னொருவாறும்
பெரியவர்தந் திருவாக்கு மறுமைபே றெனத்துணிந்தேன். (௨)

## அவையடக்கம்.

வேதமுனி சூதமுனி மெய்ஞ்ஞான சம்பந்தர்
காதலினா வுக்கரையர் கண்ணுனை வாரூரர்
வாதவூர் மாணிக்க வாசகனார் நக்கீர
ராதியசான் றோர்புகழ்ந்த வத்தலத்தை யென்சொல்கேன். (௩)

நானிலையுஞ் சொன்முழுது நாவாணர் சொல்லாகும்
யானினியிங் கென்செய்கே னெச்சிலாய்ப் போனவெலா
மானதா லெச்சிலுமிவ் வண்ணலார்க் கமிர்தன்றே
*கானவன்ற னெச்சிலையுங் கனியமிர்தாக் கைக்கொளலால். (௪)

மருப்படியும் பைங்கடம்பன் றழுவுபொன்மா பினில்வேடன்
செருப்படியும் படப்பொறுத்த செய்தியாற் றென்கயிலைப்
பொருப்படியில் வீற்றிருக்கும் புண்ணியற்கென் புன்சொல்லும்
விருப்படியர் செஞ்சொலென விழுமியதாய் விளங்குமால். (௫)

தீயவிட வாவுமிழ்ந்த செஞ்சுடர்மா ணிக்கமதன்
வாயினில்வந் ததுவென்னத் தள்ளுவரோ மகிழ்ந்துகொள்வ
ராயதனாற் றாயதமி ழறியாத சிறியேன்சொ
லாயகன்றன் சரிதமென நயந்துகொள்வர் நல்லோரே. (௬)

## நூல்வரலாறு.

வாய்ந்த பல்புரா ணங்தொறுங் காளத்தி மகிமை
யாய்ந்தி டும்பொழு தளப்பில வெனக்கவை யடங்கா
காந்த நூலினுட் டீர்த்தவை பவமெனுங் கண்டத்
தேய்ந்த பொன்முக ரிக்கதை யிற்சில வெடுத்து. (௭)

* கானவன் - கண்ணப்பநாயனார்; "கானவனுக் கருள்செய்தான்காண்" என்பது தேவாரம்.

சூத சங்கிதை தன்னிலு மியன்றவை தொகுத்து
மாதொ டைப்படக் கூட்டுபு வாசிட்ட லிங்கத்
தேத *மின்றிய சிலதெரிந் திவற்றொடு மியைத்தே
யாத ரித்தகா ளத்திமான் மியமென வறைந்தேன். (உ)

தலத்து மான்மியம் வேறினிக் காணினுந் தமிழிற்
புலப்ப டுத்திடல் வேண்டுமேற் புலமையின் வல்லோர்
நலத்த கும்படி பாடுக நானறிந் துளதாய்ச்
சொலத்த குங்கதை கண்டதைக் கொண்டியான் சொற்றேன். (௩)

மற்று நான்கிருடைப் படுத்திய புராணமூ வகைக்கு
முற்ற வத்தியா யந்தனை யொருங்குற வுரைக்கிற்
பற்றி டும்பதி னெட்டொரு மூன்றுபன் னிரண்டு
முற்று மோர்தொகைப் படுத்துறின் முப்பத்து மூன்றால். (௪)

பரத்து வாசன்முன் விசயனுக் குரைத்ததோர் பாற்றா
மருத்து ழாயவன் மலரவன் மாதவ ருமைக்குக்
கரத்து மான்மழுக் கடவுள்கட் டுரைத்ததோர் கதையாம்
விருப்பி னுலவன் வசிட்ட னாக் குமரத்ததோர் விதமாம். (௫)

## பதிகம்.

சிறப்புடை யருச்சுனன் றீர்த்த யாத்திரை
புறப்படு ஞான்றுபொன் முகரிப் பூம்புனற்
றுறைப்படிந் திறைவனைத் தொழுது மால்வரை
மறைக்குலத் தவரொடும் வலஞ்செய் காலையில். (க)

பாங்கரில் வதிந்துள பரத்து வாசனை
யாங்கவன் கண்ணுறு வடிப ணிந்தெனக்
கீங்குள சரிதைநீ யியம்பு கென்னலு
மோங்கிய வருந்தவ னுணர்த்து மேல்வையில். (உ)

ஒண்மறைக் கிழவனு முரைக்கி ழத்தியு
மெண்ணிலா வமரரு முனிவர் யாவரும்
விண்ணவர் மகளிரு மண்ணின் வேந்தரும்
புண்ணியச் சிலந்தியும் பூசை செய்ததும். (௩)

---

* 'இன்றிய' என்னும்சொல்லை இந்நூலிற் பரக்கக்காணலாகும். இதில் இங்ஙனம் வரும்சொற்கள் இன்னும்சில.

முத்திவேம் பொறிமணிச் சுடிகைக் காளனு
மத்தமால் யானையும் வணக்கஞ் செய்தது
மத்தன துண்மையு மதிக மாகியே
யுத்தமத் தலங்களா யவனுக் குள்ளவும். (௪)

தலந்திகழ் தீர்த்தமுந் தவமுந் தானமும்
பொலஞ்சுட ரிலிங்கமும் புத்துமை யுள்ளவு
மிலங்கிழை யுமையொடு மிறைவன் றெல்கிரி
வலம்புரி கருணையு மற்றி யாவையும். (௫)

வெள்ளியஞ் சுடர்க்கயி லாய வெற்பிருந்
தள்ளிலை மழுப்படை யண்ண லம்மையோ
டொள்ளிய மழவிடை யும்பர்ப் போந்துலாய்த்
தெள்ளுநீர்த் தென்கயி லாயஞ் சேர்ந்ததும். (௬)

மேவிவீற் றிருந்துமை விழைந்து கேட்கவே
தீவிரு மூன்றினு ளுள்ள செய்தியும்
நாவலந் தீவினி னலமு நல்வினை
பாவமென் றிருவகைப் பகுதி யானவும். (௭)

நண்ணுமாச் சிரமநாற் குலத்தொ ழுக்கமும்
புண்ணிய வுயிர்க்கெலாம் பொதுவொ ழுக்கமும்
தண்ணளி தழைத்தரு டான மேன்மையும்
எண்ணருஞ் சுடர்ச்சிவ லிங்கத் தோற்றமும். (௮)

இன்னுயிர் துன்பமு மின்ப மும்பெற
முன்னுள காரண முறையு முத்திசேர்
நன்னல மாகிய ஞான யோகமும்
இன்னவை யுமையவட் கிறைவன் சொற்றதும். (௯)

வெண்ணிலாப் பரந்தென விரிந்த பாயொளித்
தண்ணுலா நித்திலந் தனைப்ப ரப்புறு
விண்ணுலா நெடுந்திரை வீசுந் தெய்விகப்
புண்ணியப் பொன்முக ரிப்பொ லங்கரை. (௧0)

உத்தமத் தலமிறை யரிக்கு ரைத்ததும்
பத்திர்க ளாற்றொரு பத்தி ரண்டுபேர்
மெய்த்தகா ளத்தியின் ஞான மேயது
முத்திசா தனமுமைக் கான்மொ ழிந்ததும். (௧

அருந்தவ வசிட்டன்மு ணொண்டொ ராயிர
மிருந்தவ மிழைத்தபின் னிறைவன் றோன்றிடாப்
பரிந்தவன் வினவிய படிக்கப் பண்ணவன்
றெரிந்தனன் முறைமுறை செப்ப லுற்றதும். (கஉ)

உலகுண்டத் தோற்றமு முயர்த லங்களும்
பலபல விசேடமாப் பயிலும் பூசையு
மிலங்கிய திருவெண்ணீற் றியல்பும் யாவரும்
பலனுறு மக்கமா மணியின் மாண்மையும். (கங)

தாரக மந்திரத் துண்மைத் தன்மையும்
பாரினி னல்வர்கள் பயிலொ ழுக்கமுஞ்
சீரிய *வருணிமுன் னவர்கள் செய்தியு
மோருதற் கரியநா லுகத்தி னுண்மையும். (கச)

தண்ணடை பொதுளிய தாரு காவினி
னண்ணுமா தவர்க்கருண் ஞான போதமும்
†வெண்ணிறக் கமலமேல் வீற்றி ருந்தரு
ளண்ணலுக் கொருமக வளித்த செல்வமும். (கரு)

பரசிவ யோகியைப் பணிந்த பண்பினால்
விரகுறு பின்னவன் வீடு பெற்றதும்
வரன்முறை யிவையென வசிட்ட மாமுனிக்
குரைசெய்த காதையோ டொருங்கு செப்புவாம். (கசு)

ஆகத்திருவிருத்தம்,

முதலாவது

# அருச்சுனன்றீர்த்தயாத்திரையுரைத்த அத்தியாயம்.



நறைகமழ் பூந்தண் சோலை நைமிசா ரணியந் தன்னி
லறுதொழில் வளர்த்து வைகுஞ் சவுனக ராதி யாரோ
டுறுபுலப் பகையை வென்றோ ருழையதட் போர்வை மார்ப
மறுவில்சீர் முனிவர் தீர்க்க சத்திர மாயிற் செய்தார். (க)

* வருணி - பிரமசாரி.

† "சாமவெண்டாமரைமேலயனும்" (திருவக்கரைத்தேவாரம்), "வெண்மலரான் பாற்கடலான் செப்புவபோ, லெம்பெருமான் றேவர்பிரா னென்று......உரையாய்" (திருவாசகம், திருத்தசாங்கம், க.) என்பவற்றால், பிரமதேவர் வெண்டாமரையிலும் வீற்றிருப்பவரென்று விளங்குகின்றது.

செய்புமக் காலந் தன்னிற் சூதமா முனிவன் செல்ல
மையறு காட்சி மேலோர் மற்றவன் வரவு நோக்கி
யையநீ யெம்பா லீண்டுப் போந்தினி தணையப் பெற்றே
மெய்திய விந்நா ளென்றே *வேலவு மினிய தென்றார் (உ)

ஆதனத் திருத்தித் தூய வருக்கிய மாதி நல்கி
யோதரு மகிழ்தூங் குள்ளத் துளுற்றுநல் லறத்தின் மேலா
மாதவக் கிழவர் யாரு மாங்கவன் வதன நோக்கிச்
சூதநீ யெமக்கு முன்னாட் சொற்றபல் புராணந் தம்முள். (௩)

கந்தவேள் புராண நூலிற் காளத்தி நகரின் காதை
முந்தநீ மொழிந்தா யின்னுங் கேட்கவே †முறுகு காதல்
சிந்தையு ளமையா தம்ம தீஞ்சுவை யமிர்த முண்டே
யுய்ந்தவர் பின்னு முண்டா லுவர்க்குமோ வுவரா தென்றார். (௪)

வேறு.

அந்த ஞள ரிவையுரைப்ப வாலம் பழுத்த மணிமிடற்றி
னெந்தை பாத நிளைந்துபுன லிருகண் டுளிப்ப மயிர்பொடிப்பச்
சிந்தை யார்வங் கரைபுரளத் தொழுது சூதன் றிருநந்தி
கந்தன் வியாத னென்னுமிவர் கமல பதமுங் கருத்திருத்தி. (௫)

முழுதும் வெண்ணீற் றொளிபழுத்த முனிவர்க் கதனை மொழிந்திடுவான்
பழுதில் சூத னெதிர்நோக்கிப் ‡பனவீர் காணீர் வினவுகதை
யழுகி தழுகி தம்மவிது சால வினிய தனைவோர்க்கு
மெழுதொ ணாத மறைச்சிரத்தி லிருக்குஞ் சித்தி யளித்திடுமால். (௬)

வினையைத் தூக்க வல்லதிது மேனாட் பாத்து வாசமுனி
குனிவிற் றடக்கை விசயனுக்குச் சொற்ற துமக்குக் கூறுகின்றே
மனைய விதனை யெல்லீரு முள்ள மொருப்பட் டாதரவா
லினிது கேண்மி னென்றுரைத்தான் புராண மெவையு மியம்பவல்லோன்.

வேறு.

தண்ணளி தழைத்த வுள்ளத் தருமனு தியரா மைவ
ரெண்ணருங் §கரிபு ரத்தை யிகந்துகாண் டவப்பி ரத்த
நண்ணிமுன் றந்தை யாண்டு நல்கிய பாதி நாடுந்
திண்ணிதிற் கைக்கொண் டாணை செலுத்தியாங் கிருந்தா ரன்றே. ()

அந்நிலை யவரிருப்ப வவிர்சுட ராழி யானுந்
தன்னக ரடைந்தா னன்ன காலையிற் றரும னுதி

---

*ஏலவும் - மிகவும்.
†முறுகுகாதல் - கடுகிமிகுத்தஅன்பு.
‡பனவீர்காள், நீர்.
§கரிபுரம் - அஸ்தினபுரம்.

மன்னவ ரைவர் தம்பான் மாடக மகதி வீணை
யின்னிசை தெளிந்த தெய்வ முனிவன்சென் றிதனைச் சொல்வான். ()

காவியங் கருங்கட் செவ்வாய் வெண்ணகைக் கமழ்மென் கூந்த
லோவியம் பொருவு மெய்யி னொருத்தியை யையவர் தாமு
மேவியீண் டிருந்தீர் மற்றோர் வேலையில் வேறு பாடாய்த்
தேவியின் னொருட்டு நும்மிற் செற்றம்வா ராமற் சொல்கேன். (க0)

ஒவ்வொரு வருட காலு மோரொரு வருக்குப பாங்கா
வைவரும் வேறு வேறிங் கிரிவையை முயங்கல் வேண்டு
மிவ்வகை யிருவர் கூடி யிருக்கமற் றொருவர் காணி
னவ்வள வவர்தாந் தீர்த்த யாத்திரை யாக வென்ன. (கக)

இம்முறை நடத்திக் கொள்வேம் யாமென வியைந்து தம்மி
லம்முறை நடத்துமாறு மருந்தவ னறியக் கூறித்
தம்முனு பனைய வாறே தனித்தனி வகுத்துக் கொண்டு
கொம்மையங் கொங்கை வனுசிக் கொடியொடு மின்பந் துய்த்தார். ()

இன்னவா றொழுகு நாளி லினையவர் தேயந் தன்னிற்
றுன்னுமோர் மறையோ னில்லிற சுரபியைச் சோரர் கொண்டா
ரன்னபோ தவன்மற் றேங்கி யாசறிந் திடவே வாய்தன்
முன்னர்ப்போய் *முறையிட் டானை யருச்சுனன் முகமன் கூறி.(கந)

கடிதெழுந் துள்ளே சென்று களிறறினை வீழ்க்கும வாளி
யடுசிலை யுடன்கைக் கொள்வா னுயுத சாலை நண்ணிச்
சுடர்கெழு மணிபபூண் மார்பிற் றருமனுஞ் சுணங்கு பூத்த
தடமுலை யணங்கு தானுந் தமியராயிருந்தல் கண்டான. (கச)

காண்டலுந் திரும்பா னுகிக் கவிழ்தலை யொடுமபோய்க் கைவி
லாண்டனை தெடுத்து மீண்டு கள்வரை யடர்த்துப †பெறற
‡மீண்டன னுகிப் போந்து வேதியற் களித்துப் போக்கிச்
சேண்டொடர் மதியந் தோயுந் திருமணி மாடஞ் சேர்ந்து. (கரு)

முன்னவன் றனக்குப் பெற்ற மீட்டமை மொழிந்து முன்னுட்
சொன்னசொற் றவரு வண்ணந் தீர்த்தயாத் திரையைச் சொல்லி
யன்னவன் றுளில் வீழ்ந்தே யருளுதி விடையென் றேத
மின்னவிர் கழற்கால் வெம்போர் விசயனுக் கவன்சொல் வானுல். ()

* 'முறையிட்டானைநோக்கி' என ஒருசொல்வருவிக்க.
† பெற்றம் - பசுக்கள். ‡ மீண்டனனுகி - மீட்டு; மெலித்தல்

மறையவர் நிமித்த மாக வானபசுப பொருட்டே யாக
வறைவது பொய்யென றுலு மம்மொழி மெய்மமை யாங்காண்
முறைமையீ தாத லாலே முந்துநா மொழிந்த சொற்குக
குறைவில வாய்மை யாகக கொளளுதி குணத்தின மேலோய் (கஎ)

மாநிலம புரககு நீதி மனனவன றனது தேயத
தானபல வுயிர்க்குந துனப மணைந்திடு னதனைத தீரக்குத
தானுயிர காவா னுயிற றவறுகா ளுத லாலே
யூனமன றிதுதா னெனறன றனஞசய னுரைப்பான பின்னும. (கஅ)

அறநெறி பலவு மாராய்ந தறிந்தபே ரறிஞ நீயே
திறனல பகர லாமோ செபபிய சபதந தனனைக
குறைவற நடாதத லனறே குணத்தினமிக கவாகள கொளகை
யறைதருமு வாயமை பொயபப தழுகிதோ வறிஞாக கமமா (கக)

செபபிய சபதத தாலே தீரததயாத திரைககுச செலகை
யொபபல வெனதத டுதோ ரொருசொலே நடததி னுனென
றிபபுவி தனிலவ ருதத வலலரோ விலலென றுலுந
தபபுரை யாகா வணணஞ சபதமே நடாதது கென்ன (உ0)

அனனவை யியமபி முனறே னனுமதி பெறறே யனனுன
மினனவிர கழறகால சென்னி மிசைகொணடு விடைகொண டேகித
தனனுடைச செலவி னுககுந தருமனசெய வதறகுந தகக
பொனனினை யுழைய ராறோ பொறுததனர புடையிற போத. (உக)

அருமறைக கிழவ ரோடும புரோகித ரமைசசா சூழப
பொருதிறற படைககை வீரா புகடதமீ இ யொருஙகு போதத
திருநக ரெலலை நீஙகி வழிககொடு செலவோன றெணணீர
விரிதிரை முதத நசிநதுங கஙகைமா நதிககண மேவி (உஉ)

வேறு.

கஙகை சூழதரு காசி வளமபதித
திஙக ளஞசுடரச செஞசடை யணணலைப
பஙக யபபதந தாழந்து பழிசசினன
பொஙகு தெனகட லூ றேயம புகுநதனன. (உங)

பூரவு சீர*நர சிஙகப பதிபுகாக
குனரபு னறறினைக கோதா வரியடைந

நரசிஙகபபதி, 'விஹமாசலம' என்று இநதபபகுதியின முதனூலாகிய ஸவாணமுகரீ மாஹாதமியததிற கூறபபெறறுளளது.

தரிய தெண்புன லாடி யளித்தனன்
சுருதி மேலவர்க் கன்பொடு தூநிதி. (உச)

*கண்ண வேணி கடந்து நடந்தனன்
றண்ணி லாமுடிச் சம்புவின் றானமாய்
நண்ணும் வாயில்க ணான்கு நலந்திகழ்
பண்ணு வன்றன் †பருப்பதம் போற்றினு (உரு)

வீங்கு தண்புனல் ‡வேக வதிநதி
நீங்கி வேங்கட நீனிற மாயவன்
வாங்கு தெண்டிரை வைய மளந்தருள்
பூங்க ழற்றுணை போற்றி யகன்றனன். (உசு)

§வினையி னீங்கி விளங்குந தமிழ்முனி
நனித வஞ்செய் தழைபபவெஞ் ஞான்றினு
முனிவர் சித்தர் குழாங்கொடு மொய்ப்பதோ
ரினிய பொன்முக ரிக்கரை யெய்தினன். (உஎ)

அருச்சுனன்றீர்த்தயாத்திரையுரைத்தஅத்தியாயம்முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம், எசு.

இரண்டாவது

# பரத்துவாச தரிசனமுரைத்த அத்தியாயம்.

பூவுல கதனிற் றேவுல கெனலாம் பொன்முக ரித்திரு நாடு
தேவுல கதனிற் றிருவுல கெனலாந் திகழ்திருக் காளத்தி மூதூர்
மூவுல குள்ளு முதனுல கிதுவே முருகவிழ் நறியகற் பகப்பூங்
காவுல கதனி லமரர்மாத் திரையே கடவுளர் யாவரு மிங்கே. (க)

கண்ணவேணி - கிருஷ்ணவேணிநதி.

† பருப்பதம் - ஸ்ரீசைலம். இதிலுள்ளதிருக்கோயிலில் நான்குவாயில்களுள்ளனவென்பது இதன்முதனூலாலும் தெரிகின்றது.

‡ வேகவதி - காஞ்சியம்பதியைச்சார்ந்த நதிகளேழனுள் ஒன்று.

§ இவர் முதனூலாசிரியரென்பார், "வினையி னீங்கி விளங்கிய வறிவின், முனைவன்" (தொல். மர.) என்னும் சூத்திரத்தைத் தழுவிக்கூறினர்.

கனவரை யுலகு*நெட்டிலைச் சூலக் காளிதன் வாழ்க்கைய வுலகும்
பனிமலர்த் தளவக் காடுறை யுலகும் படுதிரைத் தீம்புன லுலகு
நனைகமழ் புன்னைப் பெருமண லுலகு நவின்றிடிற் குறிஞ்சிவெம் பாலை
யினிதமர் முல்லை மருதமே நெய்த லென்றைந் திருகரை யினையவ.(

குறிஞ்சி.

அருவரைச் சந்தும் †காரகின் முருடு மளாய்வரு மருவிப
யொழுக்கு, மருவிரு ளேங்கும் வறியவாய் முழையும் வார்குவட் டிருள்
வயி றழிந்து, பாவுசெந் தேற லிழிவது ‡மிறடிப் பைம்பெரும் போ
விரித் துதறும், கருநிறக் §கழைவிற் குன்றவர் குழாமுங் கருந்
னைப் பைங்கிளி கடிவோர். (௩)

கடுங்¶கழைத் தட்டைக் குன்றவர் மகளிர் காவலுங் குரவையங்
கூத்துங், தடஞ்சினை வேங்கைப் பொற்றகட் டலர்தூய்த் தண்டையா
தாளுடை முருகற், கடங்கருஞ் சிறப்பின் விழாவயர் வுறலுங் கான
வர் தொண்டகத் தார்ப்பு, நெடுங்கழை மிடறு காய்ந்தரற் றுவது நீங்
கிடா நலத்தது குறிஞ்சி. (௪)

பாலை.

அங்கியங் கடவு ளாசுவிற் றிருப்ப வாள்வழக் கற்றவெங் கா
னுஞ், செங்கையா லள்ளித் தெளித்தன போன்று சில்லிடைப் புள்
ளிநன் னிழலும், பொங்கெரி மேய்ந்து கரிபடு புலமும் பொருநுதிச
சிறுபரன் முரம்பும், வெங்கதிர் தெறலாற் காய்ந்துடல் வறந்த வெறி
யவா முதுமர நிலையும். (௫)

நிலததலை கிழித்த நெடுவிடர்ப் பிளப்பு நெடிதுகாற் றுருத்தெறி
நீலனு, முலப்புற வுணங்கு வயிற்றுநெட் டைப்பே $யுலறனு முயர்ந்த
கள் ளிகளுந், திலத்தின தளவு மூற்றுநீ ரில்லாச் சேற்றுநீர்க் கூவ
லின் றிரளுங், கலக்கமுற் றுழைக ளுணற்குநீ ரின்றிக் கண்ணினீர்
சுவைப்பதும் பாலை. (௬)

* குறிஞ்சிமுதலியவற்றை உலகென்றது, "மாயோன் மேய காடுறை யுலகமும்" (தொல். பொ. சூ. ரு.) என்பதைநோக்கி. இச்செய்யுள் நிரனிறை

† 'காழகில்' என்றும்பாடம். ‡ இறடி - தினை.

§ கழைவில் - மூங்கில்வில்.

¶ கழைத்தட்டை - மூங்கிலாற்செய்த தட்டையென்னுங்கருவி; தினைப் புனங்காப்போர் இதனாற் கிளியை ஓட்டுவர்; "ஒலிகழைத் தட்டை புடையுநர் புனந்தொறுங், கிளிகடி மகளிர் விளிபடு பூசல்" என்பது, மலைபடு கடாம், ௩௨௮ - ௯.

$ 'அலறனும்' என்றும்பாடம்.

## முல்லை.

அரும்பற வெடித்த முல்லையங் கானு மாம்பலந் தீங்குழ லிசை யுங், *குருந்தினார்க் கண்ணி நெற்றியம் பொதுவர் கொன்றையந் தீங் குழ லிசையு, நிரந்தரம் பதலை வெண்டயி ருடைக்கு நெடுநிலை மத் தெறி முழக்கும், பரந்திடு புனிற்றுக் கனைகுர லொலியும் பாய்குழக் கன்றினர்ப் †பரவும். (எ)

வெண்டயிர்ப் புள்ளி யாரமா விகையாம் வெம்முலை நெய்ம் முடைக் கூந்த, லொண்டொடி மாத ‡ரளைவிலை வாழ்க்கை யோகையு முடம்புகூன் படலு, மண்டிய தாம்பு மெருத்துடைக் களமு மன்றமு மானிலை யொழுங்குங், கண்டவ ருள்ளங் கவர்ந்திடும் வனப்பிற் களிசிறந் துள்ளது முல்லை. (அ)

## நெய்தல்.

அரிபடு பவள நெடுங்கொடிப் பரப்பு மரில்வலை யுணங்குமுன் றில்களு, மிரைதரு பரவை யெறிசுறாப் பகடு மிளநிலா நிகர்மணற் பரப்பும், பரவையின் மேறவைப் படர்சுறுக் கோட்டிற் பரவுறு மிடமும் பல்பொருளும், வரையறக் கொணர்ந்து கரையினிற் சொரியும் வண் மைபெற் றுளகரும் படகும். (கூ)

கருங்கடல் வயிறு கான்றவெண் முத்துங் கருங்கடற் செங்கய லுணங்கு, மருங்கினி லளவர் குரம்பையுங் கமஞ்சூல் வளைதவழ் கைதையங் கானுங், குரும்பையம் பெண்ணைக் கரும்புறத் தனசெம் பழங்களும் புன்னையங் குழாமு, மிருந்துறைத் தூங்கு மியன்றநா வாயுங் கழியுமாங் கியைவது நெய்தல். (கO)

## மருதம். வேறு.

இந்நிலமற் றொருநான்கும் வேறுவே றியற்கையவா
மாநிலைமை திரிந்தனைத்துந் தீம்புனலு டதுபோலப்
பொன்முகரிக் கால்வாய்க ளிருமருங்கும் புடைதழீஇத்
§தென்னிலையின் பகுதியெனத் திசைமுழுதும் பரத்தலால். (கக)

---

"குருந்தம்பூங்கண்ணிப்பொதுவன்" என்பது கலித்தொ. ககக.

† அரவும் - அரவமும்.

‡ "ஆய்மக ளளைவிலை யுணவிற் கிளையுட னருத்தி" என்பது பெரும் பாணாற்றுப்படை, கசுரு.

§ தென்னிலை - தென்னையின் இலை; "பழங்கொடெங்கிலையெனப் பரந்து பாய்புனல், வழங்கமுன்னியற்றிய சுதைசெய் வாய்த்தலை" (சீவக. சுஂ) என்பதில் இவ்வுவமை அமைந்திருத்தல் காண்க.

வேறுய விந்நான்கு மென்பாலாய்த் தனையடைந்து
சேருரு மகன்கழனிச் செந்நெலடர் புலமாக
வாருருங் கால்வாயு மணிபழன முந்திகழ்ந்து
மாருத விளையுள்பெற்று வயங்குவது தண்மருதம். (கஉ)

வேறு.

ஆற்றுநீர்ப் படுக ரஞ்சிறை *வாக மலம்புறு தொழுதியு மருகே, யூற்றிருந் தொழுகு நறுமலர்ப் பொதும்ப ரொண்சிறை வண்டிறே னைதகளு, நாற்றிசை மருங்கு நாகிள வாளை யுகண்டெழ நதிகறங் குவதுஞ், சேற்றிதழ்க் கமலச் செழும்புனற் கழனி யுழவரோ தையுந தின மடங்கா. (கஙு)

அளியின முரல்வ ரக்கிதழ்க் குவளை யரும்பற வெடித்தலே தாம்ப, லொளியுமிழ் நிலவு திரண்டன †புளினத் தோலொடு தவழ் வன பணிலங், களிமட வன்னம் பெடையொடு மினிது கலந்து வீற் றிருப்பன கமலங், கிளியினம் பூவைக் குழாத்தொடு மழலை கிளப்பன கெழுமணி மாடம். (கச)

குலைகவி ழரம்பைப் படப்பைக ளெங்குங் கொழுமடற் குலைக் கமு கெங்குந், தலைவிரி குரும்பைக் குலைபொரு தலையுந் தடமுதற் றுழைக ளெங்கும், குலவுமுட் புறத்த குடக்கனி முருகு கொப்புளித் தெழுபல வெங்கும், ‡கலைகடி யாவ மொழிவற வந்தீங் கனிசொரி சூதங்க ளெங்கும். (கரு)

ஆர்க்கும்வெண் டிரைக ரேர்க்கும்வெண் டாளத் தறலெறி ரேறுவ கெண்டை, நீர்த்தடந் துறையி லரில்வலை கிண்டி நிமிர்ந்தெழு வனவ ராற் பகடு, போர்க்கடங் காத வபெடை மள்ளர் போன்றெதிர் பொரு வன வாளை, கார்ச்சுரும் பாற்றுங் கடிமலர்த் தேறல் குதித்தெழுப பாய்வன கயல்கள். (கசு)

மாகதப் புழைத்தா ணிமிர்ந்தசூற் கொண்டு வரம்பெலாம் வழி யில வாகக், குரகத முகமா யொருங்குற நெருங்கிக் கூன்பிடர் கொள் வன சாலி, விரைகமழ் தேறல் வாய்மடுத் தறுகான் மென்சுரும் §பரிப பன கன்ன, னிரைநிரை பவளக் கொடியொடு வல்லிக் கொடிபடர் கின்றன நெடுங்கா. (கள)

* வாகம் - சக்கரவாகப்பறவை.
† புளினத்து ஒலொடு - மணற்குன்றுகளில் முழக்கத்துடனே.
‡ கலை - முசுக்கலைகள்.
§ "வண்டரிப்பவொண் கமலம்" என்பர்பின்னும்; ஙுக.

குடம்படு செருத்தற் பால்வளஞ் சுரக்கு *நாகிள மேதிகள் குண்டு, தடங்களிற் படிந்து வள்ளை வாய் குத்திடுந் தண்பழ னம்புடை தழீஇய, நெடுங்கரை யலைத்துக் கழையினை மாய்த்து நிறைகடுங் கலுழிவாய் நீத்த, மடங்குருக் கடலுஞ் சுருங்கிடப் பெருகி யலைசுருட் டுவதுபொன் முகரி. (கஅ)

வேறு.

கழைக்க ணுடைக்குங் கொழுஞ்சாறுங் கவரிப் பாளைக் கமழ்தேனும் பழுக்குந் தேமாங் கனிநறவும் பசுந்தாற் றரம்பைச் செழுமதுவும் [ய் குழைக்கும் வருக்கைக் குடக்கனியிற் குலவு நறவுங் குழீஇயொன்று வழுக்கும் பிடி செஞ் சேறாகி வழிக டோறு மழிவனவால். (கக)

வாளைக் குழக்கன் றெழத்தாவி வருக்கை போழ வளர்வபலா
வாளைப் பகடு விழிதூங்க மாறப் புனல்பாய் வனமதகு
வாளைக் களிறு வாய்மடுப்ப வண்டீங் கனிகள் சொரிவனமா
வாளைக் கன்றும் வாரற் பகடும் விளையாட் டயர்வ வாவியெலாம். (உ0)

கணைக்காற் பசிய செங்குவளை களிவண் டலமபக் கட்டவிழ்வ
துணர்ப்பூந் துறையி னெறிமருப்பிற் கயவாய் மேதி மடிசுரந்து
பணைத்தாள் வழிதீம் பாலிழியப் பங்கே ருகத்திற் பார்ப்பையிற
கணைத்தே துயிலு மடவன்னக் கருகே கிடந்து மூச்செறிவ. (உக)

செந்நெற் காடு செழும்பவளக் கொடிபோன் மிடைந்த செழும்பழனங்
கன்னற் காடு விளிம்புடுத்து வேலி யாகுங் காட்சியன
துன்னற் காடாங் கன்னற்குச் சுற்றும் வேலி சோலையெலாம்
பன்னற் கரிய விவையனைத்தும் பதிக ளெவைக்கும் படர்வேலி. ()

வேறு.

கண்ணகன் கழனிக் கடைசியர் குரவை கலித்தெழு கம்பலை யெங்குந், தண்ணெடும் புனலிற் றடங்கரை யெங்குஞ் சாற்றிடு கிணை யொலி யெங்குந், திண்ணிய காரே றுழக்கிடக் களமர் செயற்படக் கருந்தொளி பழுக்க,வெண்ணிலாப் பகடு நடாத்திடு முழவி னோதைக ளிடையறு வெங்கும். (உரு)

கள்ளடு கின்ற நெடுஞ்சுடர்ப் புகைகள் கமழ்வன கழனிக ளெங்கு, மள்ளர்தீங் கருப்பம் பாகடு புகைகண் மணப்பமீந் றாலைக ளெங்கு, மொள்ளிய மறையோர் மகப்புகை வாச முலாவுவ வொண்

கழையினை மாய்த்து - ஓடந்தள்ளுமூங்கிலைமறைத்து; "கழைமாய் கல்பொரு திரங்க" என்பது, அகநானூறு, எஉ.

மனை யெங்குந், தெள்ளுமா தவத்தோர்க் கமுதடு புகைகள் கமழ்வன
திருமட மெங்கும். (உச)

வேறு.

இன்ன வாகிப் பொன்முகரிக் கடவு ணதியி னிருமருங்குந்
துன்னும் பலசீர் நகர்பலவுந் துவன்று காவும் பூந்தடமும் ,
பொன்னம் புரிசைச் சினகரமும் புனிதன் விழாவும் வதுவைகளு
மன்னுஞ் சிறப்பின் வளநாடு நோக்கிக் கரையின் வழிச்செல்வோன்.()

திருக்காளத்திநகர், வேறு.

இந்நதிக் குணபா லேகி வடபாலி னெய்து மெல்லைச்
செந்நெறி நதிக்குக் கீழ்பாற் றென்கயி லாயங் கண்டான்
பன்னுபா ரதத்திற் பாசு பதம்பெறப் *பசியா னோடு
மன்னுசீர்க் கலுழன் மீப்போய் வடகயி லாயங் காண்போன். (உசு)

ஈடிரை நதியின வாளை விரைகமழ் காவிற் பாய
வண்டமர் காவிற் பைந்தேன் வந்துமா நதியிற் பாயக்
கொண்டல்பொன் மதிலி னுடுங் கொடிநிழற் றுஞ்சக் கொண்டன்
மண்டலங் கடந்தப் பாலும் வளர்பொற்கோ புரங்கண் டானால். (உஎ)

வேறு.

பைங்கட் கருப்பங் காடுழக்கிப் பவளச் செந்நெற் காய்கறித்துச்
செங்கட் பணைத்தாட் கருமேதி செருத்தற் செழுந்தீம் பால்பொழியா
வங்கட் கமலத் தடநிரப்பிக் கிடந்தாங் குயிர்க்கு மகன்பழனச்
சங்கத் தரள நிலவெறிக்குந் தமிழ்க்கா ளத்தி நகர்கண்டான். (உஅ)

கன்னி வாளைப் பகடெழுந்து பசிய கமுகந் தாறுடித்துத்
தென்னம் பழத்தைச் சிதறிநறுந் தேமாங் கனியின் றிரள்சிந்தித்
துன்னும் பலவின் குடக்கனியைக் கீண்டு துதைந்த சோழிலைய
பின்னுங் கதலிக் குலைசாய்த்துப் பழனத் திடையே பெரிதுதிர்ப்ப. ()

வேறு.

கூன்பழுத்த செழும்பவளக் கொழுஞ்சாலிக் கதிர்க்குலைக
டேன்பழுத்த நெட்டிலைய வாழையின்றேம் பழத்தாறு
கான்பழுத்த தீஞ்சுவைக்கட் கன்னலங்காட் டொண்முத்தம்
வான்பழுத்த தாரகையி னுலகெனவே வயங்குவன. (௩0)

ஊறுமதுச் சாடியென வண்டூரிப்ப வொண்கமல
நாறுநடு கடைசியர்க ணறவினிது மாந்துதலால்
வேறுபடு சேதாம்ப லெனவிளர்ப்ப வெள்ளாம்ப
றேறுமிரு பைங்குவளை யெனச்சிவப்ப செங்குவளை. (௩க)

---

பசியான் - கண்ணபிரான்.

மண்மலிசே யிதழ்க்கமல மலர்ப்பொகுட்டின் மடவன்னந்
துணையினொடு மினிதமரச் சூல்வளைய சங்குதவழ்
குணகரையி னிடந்துதெய்வக் குரைபுனன்மா நதியாடித்
தணிவரிய நன்னியதி மரபுளிசா லவுமுஞற்றி. (௯௨)

வேறு.

கடியகல் லறுத்து மிடைந்தகோ புரத்திற் கவினுற நுடங்கு வெண் கொடியி, னெடி தமர் பகுவாய் மகரமீ னிழு னிழற்றிய நெடும் புன லூடு, கொடியசேவட் சுறவச் குழாமுமுள் ளெயிற்ற விடங்கரு முடற்றுகுண் டகழி, புடைதழீஇ யுயர்ந்த பொன்மதில் வாயில் கடந் துமா நகரினுட் புக்கான். (௯௩)

மண்டலந் தன்னின் மற்றுநே ரின்றி மனங்கவர் வனப்புடைத் தாகி, யெண்டிசை வளனு மொருங்குதொக் கீண்டி யெற்றைஞான் றினுநிலை யெய்தி, யண்டர்கோ னரசு நடாத்து பொன்னகரு மளகை யம் பதியுமொன் றுகக், கண்டதோர் சிறபபின் மல்கிவாழ் வுறுதென் கயிலையா மந்நகர் கண்டான். (௯௪)

அளந்திட லரிய வரும்பெறல் வளம்பெற் றதிர்கடற் பேரொலி மேவி, விளங்கிய *வடையா நெடுங்கடை மருவி விண்டொட நிவந்த மே னிலங்க, ளொளிர்ந்திடு கனகப் பொருப்பென வுயர்ந்த வொழு ங்குறு மாளிகை பலவும், பளிங்கினி னிழைத்த மாடவா டரங்கும் பைம்பொன்மே டைகளுநோக் கினனால். (௯௫)

ஆரணக் கிழவர் தோரண மறுகு மனுதினம விழவறு வீதிப்
பூரண குமப நிரைநிரை யமைதத பொற்கபா டத்தவா யில்களுஞ
சீரணி வதுவை தினமுமா றுது திளைததிடு மின்பமுஞ சிறப்புங்
காரணி கூந்தல் வயங்கிழை மகளிர் காளையர் களிப்பதுங் கண்டான்.()

எழுதுபொற் சுவரிற் றவளமா டத்தி லீரமு மன்றலுங் கொ ண்டு, குழுவியந் தென்ற றவழ்வுற விமையோர் குழாமும்விண் மக ளிரும் போன்று, விழுமிய மகர யாழிமேல மிசையை வீற்றுவீற் றெழுப்பிமெல் லமுதை, யழகுறச் செவியி லுகுத்தெனப் பாட லயர் பவ ரிருக்கைகண் டனனால். (௯௭)

இளவெயிற் குடுமிப் பதுமரா கத்தி னிருஞ்சுடர்க் கனகமா ளிகையிற், றெளிதரு மறையின் முறைவழி வேள்வி செய்தருள்

---

* அடையாநெடுங்கடை - இரவலர்முதலியோர்க்கு அடையாத நெடிய வாயில்; "அடையா வாயிலவ னருங்கடை" (சிறுபாணாற்றுப்படை, உ0௬), "அடையா நெடுங்கடையு மஞ்சலென்ற சொல்லு, முடையான்" (கம்பர் வாக்கு) எனபவை இங்கே அறியற்பாலன.

வைதிக மேலோ, ரொளிதிக ழுவிப்பா கங்கொள்பண் ணவரை யொருங்
குற மந்திர விதியாற, களிசிறந் தழைக்கு மோதைகள் பலவுங் கரு
ணையி னிலைமையுங் கண்டான (௩அ)

இளங்கதிர் மணியா விழைத்தமே னிலத்தி லிழையொளி துளு
மபுரி லத்தாற, றுளங்குமா டாங்கிற பைமபொனமே டைகளிற சுடா
கெழு சாளர மருங்கில, வளங்கெழு பசுமபொற பூவையுஞ் செவ
வாய மழலையங் கிளளையின குழாமுங, களங்கனி மிடறறோ னரு
ளுமா கமநூல களிந்துபாட டயாவன கண்டான (௩௯)

உலகமீக கூறும புகழுடை யதனி லுருவவெண டுகிறகொடி
நுடங்கி, யிலகுமா டாங்கி லினனிசைச சுருதி யாழசதி முழவிசை
யியைந்து, திலகவா ணுதலின் சேயரிக கருங்கட செயயவாயப பசிய
பொன னேலைக, கலவமா மஞளைஞ் மெலலிய லுருதா கனனிய ராடல
கண டனனால (௪0)

நெடியமே னிலத்தி னேரிழை மகளிர செறிகுழற கமழ்கிற
புகையின, படலமு மாங்குத் தவழதரு மேக படலமும பாங்குறல
பாாத்தா, *னுடைமணி கடடி யொணசிறா சிறுதே ருருடடுபொன
வீதிகண டுவந்தான, கடையளந் தறியாக கனநிதிக குடயை யாவண
முமபல கண்டான (௪க)

அணணலங களிநல யானைக ளுலாவு மாடகக கொடிமதின மறு
குங, திணணிய கவனப பாயபரி நடாத்துஞ் தெவவடு வீராவாழ
தெருவும, விணணுய ரமபொற கொடிஞசியந் தடந்தோ விழவறு
வீதிகள பலவு, மெணணிலா வளங்கள யாவையுங கணணுற றிறை
வனு லயமடைந தனனால (௪உ)

வேறு.

மணியினிற குயிறறு மமபொற கோபுர வாயில புகக்குத்
திணிசுடாக கொடிககம பதஞ்ச செங்கணமால விடைமுன றொழுந்து
பணைமுலை நறுமென கூந்தன ஞானபபூங கோதை பாகத
துணைவனைக கணணுற றுங்குச சூழந்துமுன பணிந்து போறறி ()

தனையவிபு மலரால வாசந் தணணறும புனலா னீடு
மளவிலா வபிடே கத்தா லமபொனு டையினு லனபி
ஞெளிசுடா மணிபபொற பூணு லறுசுவை நிவேத னத்தால
வளரொளித தீப தூப மறறுநல லுபசா ரத்தால (௪௪)

இவவடி, "உடைமணி கடடிச சிறுதே ருருடடி யுலாத்தருங
கடைமணி" (௨அரு) எனனுங திருக்கோவையாரைத தழுவிவந்தது.

பாங்குடன் வழிபா டாற்றிப் பழமறைத் துதிக ளாகி
யோங்குமந் திரத்தால் வாழ்த்தி யுளமகிழ் சிறந்து நாளு
நீங்கரும் பெட்பி னோடு நெக்குநெக் குருகிப் போற்றிப்
பூங்கழ றொழுது பின்னர் விடைகொண்டு போத லுற்றான். (சரு)

தழைவுறு கருணை பெற்றுத் தந்திரத் தலைவ ரோடு
மழைதவழ் திருக்கா ளத்தி மால்வரை வலங்கொண் டாங்கு
விழுமிய சிறப்புக் காண்பான் விழைந்தன னாகி யம்பொ
னழகினு லயமு நீங்கி நகரமு மகன்று னப்பால். (சகூ)

வேறு.

ஆறுபா யருவி யாயிரம் படைத்த வண்ணலங் குவட்டனு தினமு, மீறிலா விருளின் றேறனினை யிருகோட் டிளமதி யிழிக்கும் வெற் பெய்தி, மாறிலா வானத் தரம்பையர் திளைக்கும் வார்சுனை பூத்தபைங் காவி, நாறுதண் சோலைக் குலவரைச் சார னண்ணினு னயந்துகண் ணுறலும். (சஎ)

கல்லெனக் கறங்குங் கவிழ்தலை யருவி களிற்றுமும் மதங்கமழ் சார, லெல்லையில் சிறப்பிற் கற்றைவெண் கவரி யினிதுமேய் வன வொரு பாலின், மல்லன்மா ஞால வரைப்புமெண் டிசையு மணங் கமழ் மறுவிலா நரந்த, நல்கியெம் பரம னணிந்திட வுதவு நாவிமேய் வனவொரு பாலில். (சஅ)

விரிசிறைப் பைம்புள் புலப்பகை கடிந்தோர் மெய்த்தவப் பாச டைப் பள்ளி, யருகுசூழ் போந்த தண்ணறும் பொதும்ப ராயிடை வதிந்தவர் பயிலுந், தருமநூல் பலவுஞ் செவிமடுத் துணர்வு சார்ந் தினி தடங்கின *வேத, கிரியிடை வதிபுள் ளெனவிரண் டன்றி யாவையுந் தவங்கெழீ யினவால். (சகூ)

உளக்கணிற் காணு முணர்வுடை மேலோ ருள்ளொளி யாமொரு பொருளைத், துளக்கறக் காண்பா னேற்றிய ஞானச் சோதி தாண் டாவிளக் காகி, விளக்கமாய் மேன்மேற் கொழுந்துவிட் டெழுந்து விரிசுடர் பரப்பியீ டிலவா, லளபபரும பெருமைக் காஞ் சியா வடிக்கீ ழும்மைதூண் டாவிளக் கதுபோல். (ருo)

பொறிவரி யாவும் வயப்புலிப் போததும் புவிபுகழ் தென்கயி லாயத், துறைதரப் பெற்ற வுபர்தவப் பயனே வுறுபுலனைந்தவித் துள்ளோர், முறைமைநூல் கேள்விப பட்டதோர் நலனே முழுச்சுட

* வேதகிரி - திருக்கழுக்குன்றம்.

ர்க் கனகமன் றத்னு, ளறிவுடை *முனிவ ரிருவர்தம் முறவா மலை
தியோ வமைந்தடங் கின்வால். (ருக)

முடங்குளை யரிமான் மும்மதக் களிற்றை முடுக்குறு முதல்வனை
வழிபட், டடைந்ததற் கினமென் றெண்ணியோ வன்றி யடரினுஞ்
சிம்புளொன் றந்நாண், மடங்கலைத்தொலைத்த திவ்வுள தென்றோ
வழுவைவு மதனையஞ் சாது, கொடுஞ்சினக் †களிற்றுறைக் குறுமுய
றுரத்து வனங்கொலோ குலகிரித் தலமே. (ருஉ)

களிமட மஞ்ஞை கறைமிடற் றரவைக் கண்ணெதிர் காணினுந
கவ்வா, தொளிமணிச் சுடிகைக் காளனுக் கினமென் றுன்னியோ
வுரகமு மதற்குத், தளர்வுறு திரண்டுந் தம்பிலொன் றுகிச் சார்ந்தன
தண்ணிலா மதியுந, துளையெயிற் றரவு மொன்றிவாழ் சடிலன் றொல
கிரி மகிமையோ விதுவே. (ருங)

புள்ளினஞ் சிலம்பு சுனைகளிற் செங்கேழ்ப் பூங்கம லத்துவெண்
பணிலம், வள்ளையங் குழையின் றிருவொடுங் கொழுநன் வந்தன
னிவனென வழுததும், வெள்ளையோ திமம்வெண் டாமரை யொரு
ங்கு விரவின வியன்மறைக் கிழவன், றெள்ளிய நாவின் கிழத்தியை
யீண்டுச் சேர்ந்தன னெனுங்குறி செப்பும். (ருச)

மாடுறு பொய்கை நறைகமழ் கழுநீர் மலர்வன மலைமகண் மலா
க்கை, நீடுறு குவளை நிகர்வமா வடியி னிமலனுக் கணிவன நேர்வ,
நாடொறுஞ் செவ்வி நனிமிகச் சிறப்ப நான்கலர் யாவுமம் முறைய,
வேடவிழ்ந் தினிது முப்பொழு தலர்வ ‡செருத்தணிச் சுனையல
ரெனலா. (ருரு)

கிள்ளைகள் காவிற் கேழ்கிளர் கமலக் கெண்டையங் கண்ணினு
ளங்கை, விள்ளருங் கிள்ளை மிழற்றுவ போன்று மிழற்றுவ மென்
மொழி குயில்க, ளொள்ளிணர் குழைத்து விண்டொட நிவந்த
பொதும்பரு ளாலுவ வுயர்வே, டெள்ளிய §சின்னக் குயிலினும் பெரிய
சிவன்றிருச் செவிபுகு மொழியால். (ருசு)

பலபல புட்க ளுயிர்க்கொலை தவிர்த்துப் பைங்கனி காய்முத னுகாவ
சிலசில பைம்பு ளருந்தவர் தினமுஞ் செய்பலி மிசைவன சிலபுள்

* முனிவரிருவர் - பதஞ்சலிமுனிவர், வியாக்கிரபாதமுனிவர்.
† களிற்றைமுயல்துரத்தியவனம் - காஞ்சி.
‡ செருத்தணி - திருத்தணிகைமலை.
§ சின்னக்குயில் - சின்னமாகியகுயில்.

ளிலகுதென கயிலை யமையவா நாதன சினகரத திணிதிடு பழுதி
னலமலி மிசசின மிசைவன கூட ஞரையி னறிவுநண ணினவோ ()

தொழுதிங ளொழியாக குரீஇயினம பலவுந தூயநல லறிவின
வாகி, முழுவதுந தமமி லொனறுபட டமரு முறைமைய *வொன
றிலா தானை, வழிபடாத தூரநது வலியனென றெருபோ படைககல
பறவையு ளெலலாங, கழிபடு காககை யடாமலவெல கூடற கருங
குருவி பிணகள விலவால (ருஅ)

மனனுயி ரவையுட கதககமக குரிய பழவினைக கிளமுலை சுரத,
வினைமு தருதகி வளாததிடும பிறவற றிளஙகுழ விகருமூட டுவ
வோ, வுனனுழி யிணடை விலஙகுபுள பிறவற றெணகுழ விகருமூட
டுவபால, பொனனெயிற கடமப வனதத†புல வாய்ககுப புலிமுலை
யளிததபுண ணியமபோல (ருகூ)

‡சிகரியை யாவஞ சீறல விதுவுஞ செழுஙமறை வனததுழி நாம
பொன, முகரியந துறைவற றெழுகென முனனுண முயனறது பூசை
யென றுணாநதோ, வகலசிறைக கலுழன றனுமவா ளரவை யடுகல
||வேடகந தனிலப, பகவனைப பரிதாங கிஙகிது பாமற பணிநத
தென றுணாநதுள பரிவோ. (சுO)

தணணறுஞ சாரற றவழமுகிற படலஞ சாறறுவ சகமகன வரவை
வெணமதி யுலவுப விரைமலாக காவின மிடைாதுள வானர வெள்ள
ரணணின னிராம னெனறுநா டுவதற கேதுவா ரணபுறு முசுகக
ளணணலை முசுகுந தனுமவழி படட தறிவதற கொருகுறி யாவ ()

மனிதாக ளறிவிற குுநதவா ளரவும வழுவையும வழிபட லாற
றற, கினியநல லறிவு பெறறன வவறறி னிழிநதுள §சிலநதியு மீஙகு,
நனிதவப பூசை யிழைததுள ததிலுா கா நகவா ரனவிழற றருவுங,
கனியொடு தணடேன கடிமலா சொரிநது கடவுளை வணஙகுகாட
சியவே (சுஉ)

நறறவத திணணா தஙகுலத துதிகக வருவ்தாா ரனமையை
முநதிப, பெறறன ரயினா தெனகயிலாய வரையினைக கணடிடப

* ஒனறிலாது - ஒனறுபடுதலினறி, விரோதமுறறு

† "புலிமுலை புலவாயக கருளினை போறறி" எனபது திருவாசகம், போறறிததிருவகவல, உ0எ இது ஸ்ரீ சோமசுந்தரக்கடவுளுடைய திருவிளையாடலகளுள ஒனறு.

‡ சிகரி - எலி

மறைவனம - வேதாரணியம

|| திருவேடகம - கருடனபூசிததலம

வழுவை - யானை.

§ 'சிலமபியும' எனவுமபாடம

பெறலா, னொருவனுறைஞான் றுள்ளூ மிறந்திடா தின்புற் றிருக்குமார்க கண்டனுற் பவிக்கப், பெற்றிடும் பேற்றை யவன்குடிப் பிறந்தோா பெறலருந் தவத்தினாற் பெறல்போல். (கூரு)

வேறு.

ஈங்கினி திவ்வா றுய விருஞ்சிலம் பந்தண் சாரற்
பாங்குறச் செல்வோன் வாசப் பனிமலர் நறவ மாந்தி
யாங்குள மயர்ந்து சோரு மமுதுறழ் மழலைத் தீஞ்சொற்
பூங்குழ லார்க ளோடுங் கின்னரர் பொலிதல் கண்டான். (௪௪)

அரக்கிதழ்க் காந்த ளங்கை யேற்புழி யலர்ந்த வேங்கை
நிரைத்தபொன் சொரியுஞ் சார னெடுவரை முழையி னூடு
விருப்பொடு வெறுப்பு மின்றி மெய்புணர்ந் தைய மில்லாக்
கருத்துறு சிவத்தி யான யோகிய ரிருத்தல் கண்டான். (கூரு)

அகின்முரு குருட்டி வீழு மருவியஞ் சிலம்பி லார்த்த
முகிலினை யணையா நின்ற மும்மதக் களிநல் யானை
யிகல்படு களிறென் றெண்ணி யிடிபடப் பிளிறி யேற்கும்
புகரில்சீர் முழைக்கட் *பன்ன போசனர் தம்மைக் கண்டான். (கூ௬)

அருவரைச் செய்ய சாந்தங் காரகி லளாவி வீசு
மிரைபுன லருவி யார வடமென விமைக்குஞ் சாரல்
விரிசுடர் மணிகள் சோதி விளக்கிடு முழையிற் றெண்ணீர்
பருகியூண் வெறுத்து வைகு மருந்தவர் பலரைக் கண்டான். (கூஎ)

காரகிற் புகையிற் றோய்ந்து †கனமுடல் வெதும்புஞ் சாரல்
வார்புன லருவி பாய்ந்து மழைமதக் களிநல் யானை
வீரவெண் மருப்பின் முத்தஞ் சிந்திய வியன்பா றைக்க
ணீரையு மறுத்து வாயுப் பருகுநர் நிலைமை கண்டான். (கூஅ)

பரத்துவாசாச்சிரமக்காட்சி. வேறு.

இரைத்தெழு மருவியஞ் சிலம்பி னின்னவை
விருப்பினி னோக்கிய விசயன் கண்டனன்
றிருத்தகு மவ்வரைத் தென்பு றத்தினிற்
பரத்துவா சன்றவப் பன்ன சாலையை. (கூகூ)

தேம்பொழி வாழையின் றிரளுந் தெள்ளமிர்
தாம்பசுங் குரும்பைக ளடருந் தாழையு
மேம்படு வருக்கையி னினமு மென்சுவை
மாம்பழக் குவைசொரி தருவு மல்குவ. (௭0)

பன்ன போசனர் - இலையையுண்பவர். † கனம் - மேகம்.

பொன்னிதழ்ச் சண்பகப் பூந்த ருக்களுந்
தன்னிகர் சந்தனத் தருவி னீட்டமுங்
கன்னியங் கதலியங் கான முங்குலை
துன்னுபைம் பூகதத் தொகையுஞ் சூழ்வன. (எக)

தாதவிழ் பிண்டியுந் தழைதக் கோலமுந்
தீதில்சீர்ச் சாளமுந் தேவ தாருவும்
பாதிரி யீட்டமும் பைங்க டம்புநீண்
மாதளை வருக்கமு மலிந்த வெங்கணும். (எஉ)

இலங்குகுங் குலியமு மிலவங் கங்களுந்
துலங்குபச் சிலைகளுஞ் சூழ்ம தூகமும்
பலம்படு நரந்தமும் படர்சம பீரமு
நலங்கிள ரின்னன பிறவு ஞாங்கரில். (எந)

கற்பகஞ் சூழ்தரு காம வல்லிபோற்
பொற்புறு தருக்கள்பூங் கொடிபொ திந்தன
நிற்பன மதுத்துளி நிரப்பு கின்றன
பற்பல நறுமலர் பரிம ளிப்பன. (எச)

அரக்கித ழாம்பலின் மடுவு மாயிடை
முருக்கிதழ் மடந்தையர் முகம லர்ந்தென
மருக்கமழ் சேயிதழ் வனச வாவியுந்
திருக்கிளர் காவியந் தடமுஞ் சேர்வன. (எரு)

அன்னமு *மகன்றிலு மாடன் மஞ்ஞையுந்
தன்னிகர் கம்புளுஞ் சக்ர வாகமு
மன்னுகா ரண்டமு மழலைக் கிள்ளையும்
பன்னுசொற் பூவையுங் குயிலும் பாங்கெலாம். (எசு)

பண்டைநாட் †கோதமன் பன்ன சாலையி
லொண்டொடி யுமைசெலப் புதுமை யுற்றென
மண்டுமெவ் வுயிர்களு ‡மாற்ற மின்றிவாழ்
தண்டவப் பள்ளியின் வாய்தல் சார்ந்தனன். (எஎ)

* மகன்றில் - நீர்வாழ்பறவைச்சாதிகளுள் ஒன்று; "அன்னமு மகன்றிலு மணிந்து தாமரைப், பன்மலர்க் கிடங்கு" (சீவக. கஉருo).

† கௌதமாச்சிரமத்தில் உமாதேவியார் எழுந்தருளியபொழுது உற்ற புதுமை - வனம் கற்பகவனம்போற்காணப்பட்டமை. இது, அருணாசலபுராணம், திருக்கண்புதைத்தசருக்கம், ருகூ - ம்செய்யுள்முதலியவற்றால் அறியலாகும்.

‡ மாற்றம் - விரோதம்.

பொருபடை வீரரைப் புறநி றுத்தினு
னிருபுடை மறையவ ரினிது போதர
விரிசுடர் மணிக்கலன் விளங்கு மார்பினன்
பரிவுடன் புகுந்தனன் பன்ன சாலையுள். (எஅ)

வேறு.

மாசில் செந்தழல் வயங்கும் வண்ணம்போ
லாசில் பேரொளி யழகு மெய்யினிற்
பூசு வெண்பொடிப் புதுநி லாவொளி
வீசு வெள்ளிவெற் பெனவி ளங்குவான். (எகூ)

சுருதி யாவையுந் தொல்பு ராணமு
மிருதி யாவுமோர் மேனி யாயுளா
னரிய திப்பிய ஞான மானதற்
குரிய *சோபனத் தான மொத்துளான். (அ0)

†தயிரி யம்பொறை யுவகை சாந்தியாங்
கயனெ டுங்கணர் நாளுங் காதலா
லுயிரி னுஞ்சிறந் துள்ள கொண்கனென்
றயர்வ தின்றிவந் தடைந்த பெற்றியான். (அக)

அழிவி லின்பமாங் கமைந்த தன்மையான்
முழுதொ ருங்குணர் முதல்வன் போன்றுளான்
கழிபெ ருந்தவக் கருணை மாமுனிக்
குழுவ ளைந்ததோர் குணக்குன் றுயினன். (அஉ)

இன்ன பான்மையா லிருந்த வன்றனை
முன்னர் நோக்கிப்போய் முளரி யம்பதந்
தன்னில் வீழ்ந்தனன் றனஞ்ச யன்முனி
யன்ன வன்றனை யங்கை யாலெடா. (அங)

ஆங்க வன்றனக் கமைந்த பண்பினாற்
பாங்க ருக்கிய பாத்தி யங்கொடா
வீங்கு வாவென விருத்தி யாதனத்
தோங்கு வாழ்த்தொடு முகம லர்ந்தினன். (அச)

* சோபனத்தானம் - சுபஸ்தானம்.

† தைரியமுதலியவற்றைப் பெண்பாலாகக்கூறியது, வடமொழிமுறைமைபற்றி. தைரியம் திருதியெனவும் பொறை க்ஷாந்தியெனவும் உவகை துஷ்டியெனவும் முதனூலிற்காணப்படுகின்றன.

ஓது நன்மொழிக் குத்த ரங்களாத்
தீதி னன்னயஞ் செப்பி யொப்பிலா
மாத வன்றனை மகிழ்வித் தான்மலர்த்
தாத லர்ந்ததண் டாம மார்பினன். (அரு)

தோமில் காட்சியன் றுறவின் மேலையோன்
காம தேனுவைக் கருத்தி லுன்னினன்
மாம கிழ்ச்சியால் வந்த தாலது
கோம கற்*கனங் கொடுத்தி யென்றனன். (அசு)

அனைய காலயி லறுசு வைப்பட
வினிய வோதன மியற்றி யன்னது
நனிய ளித்திட நன்க ருந்தினன்
றனது சுற்றமுந் தானு மென்பவே. (அஎ)

துய்த்த சாலையின் மீண்டு தொன்மறை
வித்த கன்றனை மேவி நன்கதை
யுத்த மன்சொல வுவந்து கேட்டன
னத்த மிக்குமுன் னய போதெலாம். (அஅ)

மாலை யம்பொழு தணைய மற்றவன்
சாலு மன்பினிற் சந்தி செய்துபின்
வேலை வெந்தழல் வேட்டு மீண்டனன்
பால்வெண் ணீற்றொளி பழுத்த மெய்யன்பால். (அகூ)

முன்னி ருந்†திரா முனிவன் வாக்கினாற்
பன்ன ருங்கதை பலவுங் கேட்டினி
யிந்நெ டும்பதி யியல்பு கேட்பமென்
றுன்னி னன்றொலைந் துளது கங்குலே. (கூ0)

பரத்துவாச தரிசனமுரைத்தஅத்தியாயம்முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம், கசுசு.

* அனமென்றது, உண்ணுதற்குரியபொருள்களை.
† இரா - இராத்திரியில்.

மூன்றாவது

# பலருஞ்சிலந்தியும்பூசித்த அத்தியாயம்.



கங்குல் புலரக் கடிதெழுந்து காலைப் பொழுதிற் கடன்முடித்து
மங்குறவழு மலர்ச்சோலைத் திருக்கா ளத்தி மருங்கணைந்து
தங்கும் பரத்து வாசமுனி தன்பா லெய்தித் தாள்வணங்கி
யங்க ணிருந்து கேட்கலுற்று னடுவெஞ் சிலைப்போ ராண்டகையே. ()

சிரத்து வாச நறையிதழி மிலைந்த வானோன் றிருவருள்சேர்
பரத்து வாச முனிவரகேள் யானே மிகவும் பாக்கியன்காண்
பெருத்த காத றன்புதல்வ ரிடத்தே வைத்த பிதாவெனநீ
கருத்தி னிறைந்த கருணையென்பால் வைத்தே புரக்குங் காரணத்தால்.

நினது கருணை யென்னுழைநீ நிறைத்த வதனுன் மகிழ்தூங்கு
மெனது மனநின் வாக்கமுதை யினிது பருக வெண்ணியதால்
பனிவெண் குழவி மதிதவழும் பவழச் சடிலன் பாவையுடன்
புனித நதிக்கண் வதிந்துளவிப் பொருப்பே தினைய தலமேது. (ங)

யாவ ரீண்டு வழிபட்டோர் யாவ ரீண்டு வரம்பெற்றோர்
தேவ தேவன் றிருமுன்னர்த் தீர்த்த மேது பலனேது
மூவர் தமக்குண் முதலாய முக்கட் பகவன் முகிறவழும்
*பூவர் சோலை பொதிதருமிப் பொருப்புற் றதுவென் புகலுதியால். ()

பத்தர் மருங்கு தண்ணளியைப் புரித லுனக்குப் பரமெனலா
லத்த விவற்றை யுணர்த்துவதற் கஃமைந்தோ னீயென் றவன்கூறத்[யெம
தத்து திரைவெண் மணிகொழிக்குந் தடம்பொன் முகரித் தண்டுறை
மத்தன் றிருக்கா ளத்திமுத லனைத்து முரைப்பா னருமுனிவன். (ரு)

முரசு முழங்க மணிமுன்றின் முத்த மாலைக் குடைநிழற்றப் [கொண
பிரசந் துளிக்கு நறுந்தொடையற் புயத்தாற் பாந்தட் பிடர்ச்சுமை
டரசு புரியு முடிமன்ன ரளப்பி லாரை யறிவேம்யாம்
புரசை வயப்போர் மால்யானைப் பொருவிற் றடக்கைப் போரேறே. ()

குருமா மரபு தழைக்கவந்தோய் கோடா வாய்மைக் குலவேந்தர்
பெருமான் றரும புத்திரன்ற னுடனே பிறந்த பெருந்தகாய்

* பூவர்சோலை - பூக்களையுடைய சோலை ; அர், பகுதிப்பொருள் விகுதி; "பூவர் சோலை புகுவலென் றெண்ணினான்" (சீவக. கூஉஅ) என்பதனுலை யால் அறிக.

தருமா தரவா லொழுக்கத்தாற் சாந்த குணத்தாற் றப்பிரியத்தாற்
றிருமா நிலத்து மன்னவரி னீயே சாலத் திண்ணியனே. (அ)

சால வுயர்ந்து வழிவழியாய்த் தழையுஞ் செல்வந் தயங்குகல்வி
யேல வமைந்த பெருமைபெற்று மிறையுஞ் செருக்கி லாதிருந்தாய்
சீல மிகுந்தா யாதனினு னினக்கிக் கதையைத் தெளியவே
மேலை நாளெங் குருவெமக்குச் சொற்ற முறையே விளம்புதுங்கேள்.

வேறு.

இத்த லத்தினின் மான்மியம் யாவரே பகர்வா
ருத்த மத்தினு முத்தமத் தலமிஃ துலகி
லெத்த லத்தினு மிதற்கெதி ரொருதல மின்று
லத்த லந்தொழு பலனெலா மித்தல மளிக்கும். (கூ)

வேறு.

உலகெலாம் விதித்த நான்முக னுலகி லூரெலா முணர்பவ னல
னே, வலகிலாத் தலங்க ளெவற்றுளு மிதுவே யதிகமென் றறிந்ததா
லன்றே, மலருளோன் றனு மனைவியோ டிங்கு வதிந்துமா தவமினி
தாற்றிப், பலனெலாம் பெற்றான் கற்றைவார் சடையிற் பாய்புனல் சூடு
மெம் பரனால். (கO)

மறையெலாந் தெளிந்த வியாதன்வை குண்ட மலர்மகள் கொ
ழுநனை வினவுங், குறையினுக் கவனும விடைதெரி யாது குழாத்
தொடங் கயிலையிற் குறுகி, யிறைவனைக் கேட்ப வெவற்றையு முணர்
ந்தோ னிவையென வவற்றினை யுணர்ந்தே, யறையு†நாற் பதியு ளார்
க்குமேலாய வரியுமிங் கடைந்தன னம்மா. (கக)

தென்மலை முனிவன் கொணர்ந்ததண் ‡பொருநை திரைபொரு
காவிரி யுடனே, பொன்முக ரியையு மொன்றெனப் புணர்ந்துப் புகல்
வது புகழ்மைய தன்று, துன்னருந் தீர்த்த மூன்றரைக் கோடி யுள்
ளுமே லாமொரு கங்கை, மன்னுசீர்க் கோதா வரியிதின் மூழ்கி வரம்
பல பெற்றுள வென்றால். (கஉ)

* இச்செய்யுளிற் கூறப்பெற்ற வரலாற்றை இப்புராணத்தின் கக - ம் அத்தியாயத்தாலும், சூதசங்கிதையில், சிவமான்மியகாண்டத்தில் விமலன் வாதநாராயணன் முதலோர் சங்கைதீர்த்த அத்தியாயத்தாலுமுணர்க.

† நாற்பதியாவன : காசி, திருக்காளத்தி, சிதம்பரம், திருமுதுகுன்றம்.

‡ பொருநை - தாம்பிரபன்னிநதி ; இதனை அகத்தியமுனிவர் கொணர்ந்தாரென்பது பாபநாசபுராணத்தால் அறியலாகும். [மேஷ் புராணம், பார்வதி திருக்கல்யாணச்சருக்கம், உஅ - ம் செய்யுளையும், அகத்தியர் வரவுரைத்த சருக்கம், கஅ - ம் செய்யுளையும் திருமணக்கோலக் காட்சிதந்த சருக்கம் கஅ-ம் செய்யுளையும், தாம்பிரபன்னிச்சருக்கத்தையும் பார்க்க.]

*இனையதோர் நதியு மருந்தமிழ் முனிவ னிருந்தவ மினழுத தழைத் ததனுற், புனிதன்வீற் றிருக்குஞ் சந்நிதிப் படமுற் புண்ணி யம் யாதுசெய் ததுவோ, குனிசிலைத் தடக்கைப் பகீரதன் றவத்தாற் கொணர்ந்தவப் பகீரதி காசி, தனையடைந் †தகிலே சன்றிரு முன்னஞ் சார்ந்திடப் பெற்றநற் றவம்போல். (கங)

மறுவறு சிறப்பி னனைத்துல கமுமோர் வடிவமாய்த் தனக்கு வாய்த் தூற்ற, சிறையளி முரலு நறைகமழ் பதுமச் செழுந்தவி சுவ ந்தவன் றிருமெய், மறுவகை யாதா ரங்களு ளிதனை யநாகத மாமென வறிந்தோர், குறையற வியம்புந் தகைமையா லிதன்சீர் கூறுதற் கெ ளியதொன் றன்றே. (கச)

தண்ணிலா முடித்த வண்ணலார் கமலத் தாளிணை யருச்சனை செய்தோ, ரெண்ணிலா விமையோ ரெண்ணிலா முனிவ ரெண்ணி லாக் கடவுளர் யோக, ரெண்ணிலா வியக்க ரெண்ணிலா வேந்த ரெண் ணிலா வரமடந் தையர்க, ளெண்ணிலா ரீண்டு வரம்பல பெற்றே ரெண்ணிலார் முத்தியெய் தினரே. (கரு)

அருந்தவச் ‡சுவேத வச்சுவ தரனீ ருயநூற் றொருருபதோ டிருவர் திருந்திய நீலே திகழ்மணி மான்முன் னியக்கர்க டிகழ்முசு குந்தன் பெருந்திற லிராமன் முதலிய வரசர் பின்னரு மற்றுமற் றெவருங் கருந்தடங் கண்ணி பாகனை யீண்டுக் கழலிணை வணங்கின ருய்ந்தார்.

பாயொளி யெறிக்கும் வெள்ளியம் பொருப்பிற் பண்ணவர் யாண டினின் முன்னு, ளாயிரம் யாண்டு காறருந் தவமுற் றருந்ததி கேள் வனூ ணகன்று, வாயுவைப் பருகி யைந்தழ னுப்பண் மாதவஞ் செய மழ விடையோ, னீயுநன் திருக்கா ளத்தியிற் போதி நிகழ்கதி பெறு வதற் கென்றான். (கஎ)

பின்னவ னொருவன் முன்னவ னருளப் பெற்றுள பேற்றை யென் சொல்கேன், னன்னவன் றன்பா லொருசிவ யோகி யருநெறி நடந்திளைத் தனுகத், தன்மனைக் கிழத்தி யொடுமவன் மெய்யைத் தைவந்து தளர்வினை நீக்க, வுன்னருங் களிப்புற் றடைதிகா ளத்திக் கிவனொடு முய்தியென் றேவ. (கஅ)

வந்தன னிங்கே யவனொடு நதியின் மூழ்கினன் வணங்கின னிறையை யிந்திர னுகி யமரர்க டொழவீற் றிருந்தனன் மறித்துமிங் கெய்தி

* இனையதோர்நதி - பொன்முகரியாறு.
† அகிலேசர் - ஸ்ரீ விசுவநாதா.
‡ 'சுவேதவச்சுவதரன்முன்னுய' என்றும்பாடம்.

யெந்தையை வழிபட் டிருந்தனன் பின்ன ரிந்திர பதமும்விட் டலர்மே
லந்தண ஞகி யவண்வதிந் தப்பா லரும்பெறன் முத்தியு மடைந்தான்.

வடகயி லாய மகிமையா வையுமித் தென்கயி லாயமும் வாய்க்
குங், கடவுளர் முனிவர் சித்தர்க ளியக்கர் கந்தரு வர்கள்கண நாதர்,
புடைதழீஇ யிருப்ப வுமையவ ளோடும் புனிதனுங் கமர்வது போல,
விடைவிடா தெற்றை ஞான்றுமப் பரிசே யீண்டுமெம் மானினி திருப்
பன். (௨௦)

வேறு.

இனைய மால்வரைப் பெயர்திருக் காளத்தி யென்பர்
வினவு தென்கயி லாயமென் றும்பெயர் மேஞட்
புனித னுந்திருக் காளத்தி நாதனே புகலிற்
றனிந கர்ப்பெய ருந்திருக் காளத்தி தானும். (௨௧)

குரைபு னற்றிரைப் பவழமு முத்தமுங் கொழித்துக்
கரைபு ரண்டபொன் முகரிகா னின்னதி கழறிற்
பரமர் சந்நிதித் தீர்த்தம்யாம் பகர்வதற் கெளிதோ
மருவு ருத்திர தீர்த்தமென் றேபெயர் வழங்கும். (௨௨)

இத்த டங்கிரிப் புதுமைக ளளப்பில வென்றுஞ்
சித்தி பற்பல வளிப்பவாய்த் தேவரி னமுதாய்த்
தத்து தீம்புனற் றடஞ்சுனை சூழ்ந்துசந் ததமுஞ்
சுத்த நற்றவ முனிவரர் துவன்றினர் வதிய. (௨௩)

தேவர் விஞ்சையர் சித்தர்கந் தருவர்க டிகழப்
பாவை பங்கினன் பரஞ்சுட ரிலிங்கமாம் படிவ
மேவி யீண்டையின் விளங்குகின் றுனிதன் மேன்மை
யாவர் சொல்வரென் றியம்புறத் தனஞ்சய னிசைப்பான். (௨௪)

அருந்த வம்பெரி திழைத்துள வந்தணர்க் கரசே
திருந்து மிவ்வரை தென்கயி லாயமாந் திருப்பேர்
பொருந்து காரண மினையதென் றறைகெனப் புகல
விரிந்த மின்னென வவிர்சடை முனிவரன் விளம்பும். (௨௫)

தேற லின்றுளி பிலிற்றுசெந் தாமரைப் பொகுட்டின்
வீறு நான்மறைக் கிழவன்முன் ஞள்விரி சடைமே
லாறு சூடிய வாதியம் பண்ணவ னருளான்
மாறி லாவினை தீர்ந்தனன் பெற்றனன் வரங்கள். (௨௬)

பெற்ற நான்மறைப் பெருந்தகை பின்னரும் பிறைசேர்
கற்றை வார்சடைக் கண்ணுத லண்ணலைத் தொழுதே
யெற்றை ஞான்றுமிவ் வரையினி லேந்திழை யுடனீ
சுற்று பல்கணத் தொகையொடும் வைகெனச் சொற்றான். (உஎ)

சொற்ற வண்ணமே சுடர்விடு மழுவலான் சொல்வா
னிற்றை வைகறேட் டென்றும்யா மினையுமால் வரையிற்
கற்றை யங்குழ லுமையொடுங் கணத்தொடும் வதிவோம்
பெற்ற திவ்வரை தென்கயி லாயமாம் பெயரே. (உஅ)

என்ற வாய்மொழி யிருங்கடற் புவிமுழு தியற்று
மன்ற ஞண்மலர்த் தவிசின்மே லவனுக்கு வழங்கி
யன்று தொட்டுமிங் கமர்ந்தன னம்மைபங் காள
னென்று மிவ்வரை தென்கயி லாயமா யினதே. (உகூ)

பூம கன்பெறு வரத்தினிற் கிழத்தியாப் புகன்ற
நாம டந்தையு மிவ்வரை நண்ணியே நாதன்
றேம லர்ப்பத மருச்சனை செய்தன டேவர்
கோம கன்முதற் றிசைபுரப் பவர்களுங் குழுமி. (௩0)

மலர்சொ ரிந்தனர் வானவர் தானவர் தாமு
மலர்பொ ழிந்தன ரமலனை வணங்கின ரமர
ருலக மர்ந்தருள் யோகினி நீலையென் பவளுந்
தலைவ னம்புயத் தாளருச் சித்தனள் சால. (௩க)

முழங்கு தெண்டிரைப் பரவைசூழ் நெடுநில முழுதுந்
தழங்கு தன்புக ழெறித்திடத் தனிக்குடை நிழற்றி
வழங்கு நூன்முறை நடாத்திய மாமுசு குந்தன்
விழைந்த காதலா லருச்சனை புரிந்தனன் விசயா. (௩உ)

ஆத ரந்திக ழக்கினிப் பிரபனு மசுரான்
றூத விழ்ந்ததண் மலர்கடு யிறைஞ்சினன் றலைநாண்
மாத வம்புரி வசிட்டமா முனிவனும் வணங்கி
யாதி யம்பர மன்றிரு வருளடைந் தனனல். (௩௩)

அருந்த வம்புரி கோசிக னருச்சனை செய்தான்
பரந்த வைம்பொறி யெறிந்திடு மத்திரி பணிந்தான்
வருந்தி நோற்றுள கோதம மாமுனி யாய
பெருந்த வன்முத லோர்வழி பட்டனர் பிரானை. (௩௪)

தூத்தி வெம்பொறிக் கணபணச் சுடர்மணிச் சுடிலகப்
பத்தி தங்கிய பஃறலை யநந்தன்முற் பாந்த
ளித்த லந்தனி லிளம்பிறை சூடுமெம் மிறையைப்
பத்தி யன்பொடும் பணிந்தன வின்னமும் பகர்வாம். (௯௫)

விலையி னீங்கிய் விளங்கிய வறிவுடை மேன்மைச்
சனக ளாதிய யோகியர் தாங்கள்பூ சித்தா
ரினிய சித்திர சேனன்முன் னனையா ழிசையிற்
பனிவி சும்பிடைக் கந்தரு வரும்பணிந் தனரால். (௯௬)

குறைவில் சீர்மணி மான்முத லியக்கர்கள் குழுமி
நறைக மழ்ந்துதண் டளையவிழ் நாண்மலர் பெய்தார்
சிறிய நுண்ணிடைக் கனதனச் சீறடிச் செவ்வாய்
மறுவில் வெண்ணகை யரம்பையா தியர்வணங் கினரால். (௯௭)

பூத்த தண்ணறுந் தொடைகமழ் பொருசிலைத் திணிதோட்
பார்த்த கேண்மதி சாலவோ ரதிசயம் பகர்வா
நாத்த ழும்பெழு மாரண னாணன் காணப்
பார்த்தி பன்றனை யொருசிலந் தியும்பணிந் ததுகாண். (௯௮)

வேறு.

தன்னுத ரத்திற் றோன்றுந் தந்துவைத் தனது வாயான்
முன்னுற விழைத்தே வான முகடுதோய் கயிலை போன்று
மின்னவிர் பிறையொப் பாகி விளங்குவெங் கோட்டுச் செங்கண்
மன்னிய வடுபோர் வெள்ளை மழவிடை வடிவம் போன்றும். (௯௯)

தண்டுளி நறவு கான்று தளையவிழ் வாசப் பொற்பூ
வண்டினங் கறித்த *தெய்வத் தருநிழல் வளமை போன்றுங்
கோண்டலி னகடு போழ்ந்த குடுமியஞ் சிகரம் போன்று
மண்டர்தம் பெருமான் கோயிற் பிரதிமை யவையே போன்றும். (௨0)

இன்னவா வெள்ளி வெற்பி லெவையுள வவைமற் றெல்லாம்
பன்னுநுண் ணிழையாற் கோட்டிப் பண்டுசெய் தவத்தி னாலே
முன்னவன் றனி னேய முற்றியிவ் வாறு பன்னா
ளுன்னரும் பணிக ளாற்றி வருதலு மவற்றி லோர்நாள். (௨௧)

ஆங்கத னன்பை யார்க்கு மறிவித்தல் வேண்டி யம்பொற்
கோங்குறழ் குவிமென் கொங்கை ஞானப்பூங் கோதை பாகன்

* தெய்வத்தரு - கற்பகத்தரு.

றேங்குறு முவப்பி னாலே சிலந்திசெய் துள்ள வெல்லா
மோங்கொளித் தீபம் பட்டு வெந்திட வுஞற்றி னானே. (௪௨)

இழைந்திடு மிழையிற் பன்னா ளியற்றிய பணிகள் யாவுந்
தழைந்திடா தொருக ணத்திற் மயங்கிய தீபத் தால்வெந்
தொழிந்தது சிலம்பி காணா வுளநனி மிகவுஞ் சோர்வுற்
றழுங்குறு துயர்பொ றாம லதுசெய்த தாரோ சொல்வார். (௪௩)

புழுவுடைக் குரம்பை யின்னும் பொறுத்துநா னிருப்ப தென்னே
மழுவலான் றிருத்தா ளன்றிப் பிறவிநோய் மருந்தொன் றில்லை
விழுமிய திதுவே யென்று விமலனை நினைந்து தீபத்
தழலிடை யுடல மெல்லா மாகுதி பண்ணிற் றம்மா. (௪௪)

பண்ணிய துணிவு நோக்கிப் பவழமால் வரைபோன் மேனிக்
கண்ணுதல் கருணை பொங்கிக் கணங்களின் றலைமை யீந்தான்
விண்ணவர் தமக்கு மெய்தா வாழ்வது மேவிற் றென்றாற்
புண்ணியப் பயனால் வந்த பூசையின் பலன்யார் சொல்வார். (௪௫)

ஈங்கிது பெற்ற பேற்றை யார்சில ரினிது கேட்பார்
தீங்குமற் றவையு நீங்கிச் சிவபா னருளி னாலே
தூங்கிருள் பருகிச் சோதி கான்றெழு பரிதி சோம
னாங்கவ ருள்ள காறு †மமருல கெய்தி வாழ்வார். (௪௬)

சிறியதோர் சிலந்தி யீண்டுச் செய்தது பூசை யென்றா
லறிவினா லுயர்ந்த ஞான யோகரை யறைவ தென்னே
நறியபூந் தருக்க டாமு நாண்மலர் கனிக ணல்கி
மறுவில்சீர்ச் சார லென்றும் வழிபடா நிற்கு மாதோ. (௪௭)

கற்பக நீழல் வாழுங் காவல னேவ லாலே
பொற்பதி யமர்ந்த பெண்மைக் கரும்பெனும் பூவை நல்லா
ரற்புத நாத கீத முழவினாற் பரவத் தாலே
சிற்பரற் குறுகிச் சேவை யுஞற்றுவார் தினமும் வந்து. (௪௮)

இம்மட மாதர் சேவை யிசைப்பதென் குறவர் மாதர்
கொம்மைவெம் முலையின் வள்ளி குலத்துள நலத்தி னாலோ

௯ஆ - ௪௫. "நெஞ்சிலந்தி வண்ணனே நித்தா வெனப்போற்றிச், செஞ்
சிலந்தி நூலினாற் செய்கோயில் - பஞ்சிலங்கு, தீபம் படவதுதன் சீவன் விடத்
தோன்றி - நீபங் கயத்தாளி னில்லென்றோன்" —திருக்காளத்திநாதருலா,
௯௧, ௪௦.

† அமருலகு - அமரருலகு; தேவருலகம்.

செம்மணிக் குன்றி பூண்டு பைந்தழை யாடை சேர்த்தி
யம்மைடங் காளற் காண்டான் சினகரத் தணையப் பெற்றால். (௪௯)

அங்கண்மா ஞாலத் துற்ற வரும்பெறற் றீர்த்தம் யாவுங்
கங்கையே யாதி யாய கடவுண்மா நதிகண் முற்றும்
பொங்குவெண் டிரைகள் வீசிப் பொருகடன் முழுது மீங்குத்
திங்களங் கண்ணி வானோ னருளினாற் சேர்வ வென்றான். (௫0)

ஆகச்செய்யுள், ௨௧௯.

நான்காவது

# பிரமா வரம்பெற்றஅத்தியாயம்.

என்றலும் பாத்து வாச முனிவனை யினிது நோக்கி
வென்றியஞ் சிலைக்கை வெம்போர் விசயனென் றுரைக்கு மேனாண்
மன்றலங் கமலப் புத்தேண் மாதவ மிழைத்தா னென்றாய்
நன்றதை விரித்துச் சால நவில்கென நவில லுற்றான். (௧)

வேறு.

முன்னோர் கால முகிழ்த்த நிலாவணி
மன்னன் மாயை மயக்குற நான்முகன்
பன்னெ டும்பகல் பாரியொ டின்புறாத்
தன்ம றந்து தவிர்ந்தனன் றன்செயல். (௨)

இன்ன வாறிவ னின்புறு நாளினிற்
றுன்னு மூடர் பிறர்மனை தோய்பவ
ருன்ன ருஞ்செருக் குற்றுள மைந்தராய்
முன்னு தித்தனர் முப்பதி னாயிரர். (௩)

கடிய ராகி யுதித்தவக் காமுகக்
கொடியர் வந்து குழுமிக் குரைகடற்
படியி னோர்படு பாவைய ரைத்தழீஇ
முடிவி லின்ப முயக்கமுற் றாரரோ. (௪)

முயங்க லுற்ற முகிழ்முலை மாதர்பாற்
*கயங்கு நெஞ்சுடைக் கண்டக ராய்ப்புவி
நயங்கெ டுத்து நலிதரு †தீம்பரா
யியங்கி ராக்கத ரெண்ணிலர் தோன்றினர். (௫)

*யங்கல் - கலங்கல். † தீம்பர் - தீமையையுடையவர்.

தோற்ற முற்ற வரக்கர் தொகுதியான்
*மாற்ற முற்று மறிதிரை வையக
மாற்ற ருந்துய ரெய்தி யலேவுறப்
போற்று வானவர் கண்டு பொறுமையால். (ரு)

கழியுங் காமக் கவலே மிகுந்துணர்
வழியுஞ் சிந்தைய ளுகி யடைந்துள
பழியுந் தேறல ளுகிய பன்மறை
மொழியின் பண்ணவன் பான்முறை யிட்டனர். (௬)

முறையி டுந்தொனி கேட்டலு மூதுணர்
மறைவி ரிஞ்சனவ் வஞ்சப் புதல்வரு
மறனி ழந்த வரக்கரு மாண்டிட
வுறுதி மைந்த †னொருவனைப் பெற்றனன். (அ)

பெற்ற போதப் பெருந்திறன் மைந்தனுற்
குற்ற மேவு கொடியரு மாங்கவர்
பற்றி னல்கிய பாலர்கள் சார்ந்துளோர்
முற்று மொல்லே முடிந்து தொலேந்தனர். (௯)

தொலேந்த பின்னேத் தொடுகடல் வையக
நலந்த ழைந்து சிறந்தது நாடொறு
மிலங்கு சோதி யிமையவர் யாவரும்
பொலஞ்சு டர்த்துறக் கத்திடைப் போயினர். (க0)

புண்ட ரீக னதன்பின் பொருக்கெனப்
பண்ட மர்ந்த வியற்கையைப் பாற்றிமால்
கொண்ட தீங்கைக் குறித்துப் புணர்ச்சியை
விண்டு ளத்திடை நொந்து விளம்புவான். (கக)

இக்க டுங்கொலேக் கையரை யாதுக்கு
மக்க ளென்று பயந்தனன் மற்றியான்
மிக்க வங்கவர் தங்களே மீளவு
மொக்க யாதின் பொருட்டுயி ருண்டதே. (கஉ)

கறங்கு தெண்டிரைக் காசினிக் கிங்கிவர்
பிறந்து துன்பம் பெரிதும் விளேந்ததா
லறிந்த பின்ன ரவர்களுக் கென்பொருட்
டிறந்து பாடுவந் தெய்திய தென்பவே. (கங)

---

* மாற்றம் - மாறுதல். † ஒருவன் - உக்கிரன்.

இனைய பாதகம் யானினி நீங்குறப்
புனித வெண்பிறை சூடும் புரிசடைத்
தனிமு தற்பொரு டாளருச் சித்தவ
னினிய நல்லரு ளாலின்ப மெய்துவேன் (கச)

தன்ன டைந்தவர் தங்கட் குறுதுணை
யன்ன வன்றனை யன்றிமற் றில்லென
விந்நெ டுங்கிரி யெய்தி யருச்சனை
யுன்ன ருந்தவத் தோடு முஞற்றினன். (கரு)

மாசித் திங்கண் மகதமொரு மைந்தனை
நேசித் திங்கொரு நீள்விர தத்தொடு
*மாசைத் திங்க ளவிர்சடை யண்ணலைப்
பூசித் தன்பொடும் போற்றின னங்கவன். (கசு)

வேறு.

தேற்றுறு மெழுத்தோ ரைந்து மாயினிற் செபித்துத் தேவை
நூற்றுட னிருநான் காய வலஞ்செய்து நூன மின்றி
யேற்றுமத் தொகைவி டாத வணக்கமு மியல்பி னாற்றிப்
போற்றினன் றெழுது நின்றான் பொருசுடர்ப் புலவு மேலோய். (கஎ)

இம்முறை யருச்சித் தேத்து மெல்லையி லெழுமெ தாதை
வம்மறை யவனைச் சால வகமகிழ்ந் தகில மீன்ற
கொம்மையங் கொங்கைச் செவ்வாய் ஞானப்பூங் கோதை யோடும்
வெம்மழ விடையென் றூய வெள்ளியங் கிரியின் மிசை. (கஅ)

சேட்டிளம் பரிதி கோடி திரண்டெழுந் தனைய சோதி
யீட்டமாஞ் செய்ய மேனிக் கருமிடற் றிறைவன் றோன்றிப்
பாட்டளி முரலப் பைந்தேன் றுளித்தலர் பதும மேலோய்
கேட்டவை யாவு மீவாம் வேண்டுவ கிளத்தி யென்றான். (கசு)

பற்றிய மோகத் தாலே பழிபடு பாவஞ் செய்தே
னெற்றுநீர்ப் பரவை ஞால மிருவிசும் பிகழ வன்பா
அற்றுள பாவந் தன்னை யொழித்தருள் புரிதல் வேண்டு
மற்றிது வன்றி யின்னும் வரமொன்று வேட்பன் மன்னே. (உ0)

சொல்லரு மதியி னின்னே டொத்திடுந் தூயோ னாகி
யெல்லையி லுலகுக் கெல்லா மினிதுப காரி யாகி

*ஆசைச்சடையெனக் கூட்டிப் பொன்போலுஞ் சடையெனப் பொருள்கொள்க.

வல்லவோர் புதல்வன் றன்னை வழங்கிடல் வேண்டு மற்றீ
தல்லது வரமொன் றின்னு மறைகுவ னமரா ரேறே. (உ௧)

இத்திரு நகரி னின்னை யார்சில ரினிது போற்றிப்
புத்திரன் வேண்டு மென்று புகன்றன ரனையர்க் கெல்லா
மத்திற மளித்தல் வேண்டு மென்றன னகல்வி சும்புந்
தத்துநீர் வரைப்பும் யாவும் விதித்தபூந் தவிசின் மேலோன். (உ௨)

என்றிவை நவின்ற போழ்தி னினிதுவந் திறையோன் சொல்வான்
மன்றலங் கமலப் புத்தேண் மற்றுநீ மயக்கத் தாலே
யொன்றுமிங் குணர்வி லாம லுஞற்றிய பாவம் போயிற்
றின்றருந் தவத்தை யாற்றி யீண்டெமைப் பணிந்த ஞான்றே. (உ௩)

மைந்தனை விழைவுற் றெம்மை வலஞ்செய்து வணக்கஞ் செய்தா
யந்தண்மா மலரின் மேலோ யாதலா லருண்மெய்ஞ் ஞானஞ்
சந்ததம் விளங்கி நாளுந் தகைமைசா றவத்திற் றாய
புந்திமே லவனு யிங்கோர் புதல்வன்மற் றுனக்குண் டாக. (உ௪)

வீசிவெண் டரங்க முத்தங் கொழிக்குமிவ் விரிநீர் யாற்றின்
மாசிமா மகந்தொ டங்கி மற்றைமா மகத்தின் காறு
நேசமாய்ச் சங்கற் பித்து மகந்தொறு நெறியின் மூழ்கி
யாசிலா நியம சீல னாகியைந் தெழுத்து முன்னி. (உ௫)

உன்னருங் காத லோடு வலம்வரா வுவந்து தாழ்ந்து
தன்னுளத தியன்ற வாறு தயவொடு தானஞ் செய்து
மன்னுமிவ் விரத மிவ்வா றிழைத்திட வல்லா னென்னி
னன்னதோர் வருடத் தீற்றி லவற்குநன் மகவுண் டாக. (உ௬)

அரும்பெறற் புதல்வ னுய வனையவ னதிக வாணு
ணிரம்பிநல் லுடம்பு பெற்று நீடிருஞ் செலவ மோங்கிப்
பெரும்புக ழெய்தி நாளுஞ் சுகத்தினைப் பெற்று வாழ்வ
னிரும்புவி மதிக்க வென்ன மறைந்தன னிமையோர் நாதன். (உ௭)

அந்தணன் றானு யிர்த்த புதல்வரை யடர்த்த பாவஞ்
சிந்தின னதன்பின் னாகச் சிவபரா னருளி னாலே
யந்தமில் பரம ஞானி யாகவே ரிபுவென் றாங்கோர்
மைந்தனைப் பயந்தான் சால வாழ்ந்தனன் மகிழ்சி றந்தே. (உ௮)

துரைபுனற் கங்கை வேணிக் குழகன்முன் சொற்ற வாறே
தரையினில் யாவ ரேயித் தலத்திலிந் நோன்பு தன்னை

மரபுளி வழாம லாற்றி வணங்குந ரவர்க்கு வாய்ந்த
வரியநற் புதல்வர் தாம்வந் தவதரித் திடுவ ரன்றே. (௨௯)

விசயகேள் பரம ஞானம் விளங்கிய ரிபுவு மேனுள்
வசையில்சீர் நிதாக னென்னு மறையவன் றனக்கு வந்திங்
கசைவிலா வனைய ஞான முபதேசித் தருள்செய் தேகத்
திசைபுகழ் நிதாகன் றானுஞ் சனகனு தியர்க்குச் செப்ப. (௩௦)

அன்னவர் தாமும் வானோர்க் கருளுட னுணர்த்தா நிற்பச்
சொன்னவிம் முறையே ஞானம் வழிவழித் தொடர்ந்து போந்த
தின்னதோர் பெருமைத் தாய வித்தல மெவைக்கு மேலா
முன்னருஞ் சேவை செய்வார்க் கெளிதினி லுய்தற் பாற்றும். (௩௧)

என்றிவை பரத்து வாச னியம்புறச் செவிம டுத்த
மன்றலந் தொடையன் மார்பின் வரிசிலை விசயன் சொல்வா
னன்றுதென் கயிலை யாகி யகலிரு விசும்பு தோய்ந்து
நின்றது திருக்கா ளத்தி யாயதென் னிகழ்த்து கென்றான். (௩௨)

இன்னண முனிவன் பார்த்தற் கினிதறி வித்த காதை
நன்னெறி யறியும் வண்ண நைமிசா ரணியந் தன்னின்
மன்னிமுப் பொறியும் வென்ற மாதவக் கிழவர் யார்க்குந்
தொன்முறை யுரைத்தான் றூய சூதமா முனிவன் மாதோ. (௩௩)

ஆகச்செய்யுள், ௨௪௯.

ஐந்தாவது

# காளன் அத்தி முத்தியடைந்த அத்தியாயம்.



ஆதியே தென்கயிலை யாகியவிப் பொலங்கிரியி லமர்ந்த ஞானச்,
சோதிதனைக் காளனெனுஞ் சுடிகைமணித் துளையெயிற்றுத் துத்தி
நாகந், காதலால் வழிபட்ட தஞ்ஞான்றோர் புகர்முகத்த களிநல்
யானை, தீதிலா முற்றவத்தாற் றானுமினி தருச்சித்துத் திரிந்த தன்றே.

அந்நிலையிற் பைவிரிந்த கவர்படநாப் பருவாய்வா ளரவு நாளும் [ய
பொன்னிலகு மிளஞாயிற் றொளியினைவெல் சுடர்மணியாற் பூசைசெய்
வுன்னரிய பிறைமருப்பிற் றழைசெவிய மால்யானை யுரகஞ் சாத்து
மின்னவிர்செம்மணிபலவுந்தள்ளிநெடும்புழைக்கரத்துமிகவுங்கொண்டு.

தண்புனலே யினிதாட்டித் தலையவிழ்மென் கமலமலர் பலவுஞ் சாத்தி, யொண்பரிவோ டருச்சித்த திம்முறைநாள் சிலகழிய வொன் றுக்கொன்று, பண்புடைநற் பூசனையை யழிக்கையாற் பொருதுதம மிற் பகைமை யெய்திப, புண்படுநெஞ் சுடையவா யமையாத வெகு சினத்தாற் புழுங்கிச் சொல்வ. (௩)

என்பூசை யழித்தானை யாவனென வுணர்கிலே னென்னுங் காளன், றன்பூசை தடுத்தவன்றான் பாவனென நினைந்தழுங்குந் தடக்கை வேழ, நன்பூசை சிதைத்ததமை யறியாதிவ வாறுசில நாள செல் போது, பின்பூசை செயவொருநாட பிறைபெயிறறு வாளரப பெரிதும் போந்து. (௪)

எறித்தசுடர்த் திபபியமா மணிகள்சொரிந தருச்சனையை யிழை த்துப் பின்னர்க், குறித்தவொரு நினைவதனை றினநதினம்பூ சிதத குரு மணிகள் யாவும், பறித்தெறிநது பாஞ்சோதி திருமுடியிற் பது மத்தைப் பல்காற் சூட்டுங், கறுத்தமனத் தவனைநெறி யில்லானைப பாதகனைக் கண்ணிற் கண்டு. (௫)

இன்றளவே மறலிவாய்க் கிரையாக்கிப் பின்னரியா னெனது பூசை, யொன்றியநற் பயன்பெறுவே னெனததுணிநது பனைக்காதத் துயர்வே ழத்தைப், பொன்றுவிததற பொருட்டாகப பொருவில்சிவ லிங்கத்தின் பின்னே போநது, மன்றவுமால் யானைவரும் வரவுபாரத திருந்ததங்ஙன் வாள ராவே. (௬)

அவ்வேலே மேன்மேனற் சிவபூசை யிழைபபமத வருவி பாயுந, கைவேழம் வநதிலகுங் கதிர்மணியாற் செய்பூசை கண்ட போழ்தே, வெவ்வேகங் கொதித்தொழுநது கலங்கியுளம பதைபதைத்து விரைய வொன்று, செவ்வேதன் னுளளததிற குறிக்கொண்ட தடுசிலேக்கைத தெவ்வ ரேறே. (௭)

தன்னுயிரை வேண்டாத யாவனே யிழைத்தானித் தவறு தன்னைப், நன்னறவங் கொப்புளித்த கமலத்தாற் றண்கழுநீர் நறு மென் போதாற், றுன்னியவென் பூசனையைத் துணிநதழித்துக் கடின மாய்ச் சுமத்த லாற்று, வன்மைமிகு நிலத்தாலேக் கற்களாற் சிவபானை மறைத்திட் டானல். (௮)

கல்லினான் மறைத்தபொல்லாக் கயவனைநா னிக்கணமே கண்டு வீட்டி, நல்லதோர் மகிழ்சிறநது நாடியமவன் 'பயன்பெறுவே னன்கென் றெண்ணி, வெல்லொணு வொருதுணிவான் மிகவடங்கித்.

திருமுன்னே விரைய நண்ணி, மல்குகுருச் சுடர்மணிக டள்ளிநெடும் புழைக்கரத்து மாரீ ராட்டி. (௯)

பூங்கமல நாண்மலரு முகைவிண்ட செங்குவளைப் போதும் பெய்து, தீங்கனியு மின்சுவைத்தா மரைக்கிழங்குந் திருவமுது செய் வித் தன்பால், வீங்கிளமென் முலையுமையா டழுவுதிரு மேனிதனை வேழந் தானுந், தாங்கரிய மகிழ்தூங்கு முளத்தினெடும் புழைக்கரத் தாற் றழுவிற் றன்றே. (௧0)

தழுவுகையிற் றழலுமிழ்கட் பேராவஞ் சிற்றுருவந் தனைக்கொண் டின்னே, வழுவையுயிர் நீப்பனென வன்றடக்கை யுட்புகலு மருண்டு வேழ, மழிதுயர்கொண் டுடன்பிளிறி யாற்றரிதாய்த் தலையுதறிற் றனைய காலை, யெழுதுபொறி வரியரவந் தலைகாறு நுழைந்துகுடைந் திட்ட தம்மா. (௧௧)

குடைந்துகுடைந் திடர்விளைப்பக் குஞ்சரஞ்செஞ் சடைமவுலிக் குழகன பின்னே, தடம்பொருப்பி னெடுங்குவட்டிற் சாலவுந்தன் றலைமோதத் தலைமோதத் துண்டு, நெடுங்கிரியும் பொலங்குவட்டோ டலைந்துபெரும் பாறைகளுஞ் சிதறி நீங்க, வுடன்களிறுந் தலைவிண்டு பாஞ்சுடரை நினைந்தாவி யொழிந்த தம்மா. (௧௨)

ஒழிந்திடலுந் தலையறைந்த வலியினு லெண்புதைத்தவ் வுரகந் தானு, மழுந்தியுட னெருங்கியரு ளமலனடி நினைந்துடனே யாவி நீங்கி, விழுந்ததவை யோரிரண்டும விண்ணவர்நா யகன்றாய மேனி யாகிக், கொழுஞ்சுடர்க்க ணொருமூன்றுங் குழவிமதி யவிர்சடையுங் கொண்ட மாதோ. (௧௩)

வேறு.

கொண்ட போதவர் கண்டு குழைவுற
†வண்ட லம்பு மலர்க்குழ லாளொடு
மண்டர் நாயக னவ்விலிங் கத்துணின்
றெண்டி றல்விடை யூர்ந்தெதிர் தோன்றினன். (௧௪)

௧ - ௧௩. "கடுவரிக்கா ளன்மணியைக் கல்லென்று தள்ளித், தடமத க்கை நீராட்டித் தந்தி - இடுமலரைச், செற்றையெனப் பாம்பிகழச் செய்ந் நாளின் மற்றிரண்டு, மொற்றை யொருநா ளுவாவாலும் - புற்றரவம், மூக்கிற் புகுந்து முடிகுடைய வெய்யவிடந், தாக்கித் தலைமண்டை தான்கொண்டு - மாக்கிரியை, முட்டிநா கப்பெட்டி முத்துமா ணிக்கததின், பெட்டிபோற் கும்பம் பிளந்திரண்டும் - பட்டளவிற், கைந்நாகம் பைந்நாக கங்கணம்பூ ணப் பொருமப், பைந்நாகங் கைந்நாகப் பட்டுடுக்க - முன்னாகித், தாளிற் கலந்தவற் றூற் றன்பேருங் கொண்டேருங், காளத்தி யூராகக் கற்பித்தோன்." திருக்கா ளத்திநாதருலா, ௭௧ - ௯.

† "வண்டாருங்குழலா ளுமை பாகமகிழ்ந்தவனே" என்பது திருக்கா ளத்தித்தேவாரம்.

ஆர ணன்றன் னனத்தி னணைந்தன
ஞார ணன்புள் ளரசினி னண்ணினன்
பேர ணங்கொடும் பெற்றத் தமர்ந்தருள்
பூர ணன்றனைப் போற்றிநின் றார்புடை. (கரு)

கொள்ளை மும்மதக் குஞ்சர மாமுகப்
பிள்ளை மூடிக மேல்வரப் பெற்றன
னள்ளி லைச்சுடர் வேற்படை யங்கையின்
வள்ளி கொண்கனு மஞ்ஞையிற் போந்தனன். (கசு)

பிருகு மாதவன் பீடுடை யங்கிராப்
பொருவி லத்திரி மாசில் புலத்திய
னருள்வ சிட்டன்முன் னைய வருந்தவர்
சுருதி நூன்மனு வாற்றுதி செய்தனர். (கஎ)

மாதி ரங்கள் பரிப்போர் வசுக்களென்
றோது மெண்மர் பதினொ ருருத்திர
ரோத மற்ற விருவர் மருத்துவர்
சோதி யாறிரு சூரியர் சூழ்ந்தனர். (கஅ)

சித்தர் சாத்தியர் சேரத் துவன்றினர்
தத்து பாற்கடற் றண்ணமிர் தின்சுவை
யொத்த யாழினி னுள்ள முருக்கியே
மொய்த்த கின்னரர் செங்கை முகிழ்த்தனர். (கசு)

தேங்கு புட்கர மாதிய தீர்த்தமும்
வீங்கு வர்க்கட லாதிய வேலையு
மோங்கு கங்கைமுன் மாநதி யுள்ளவும்
பாங்கு றுக்கொடு போந்து பணிந்தன. (உ0)

வேறு.

பருப்பத முதல வாய பனிவரை பலவும் பைந்தேன்
மருப்பொழி தேவ தாரு வனமுதல் வனங்கள் யாவுந்
திருத்தகு காசி யாதித் தெய்வமா நகருந் தேவர்
விருப்புறு சோதிட் டோம முதலிய வேள்வி யாவும். (உக)

அரித்துணர் வேத நான்கு மங்கமோ ராறு முள்ளத்
துரைதெய்மந் திரமு மாதி புராணமு மொருங்கு போந்த
பொருவில்கந் தருவர் செங்கைத் தாளத்தி னுடனே போத
மருவுவிண் ணிடியே றென்ன வானதுந் துபிக ளார்த்த. (உஉ)

சுந்தரத் தெய்வக் கங்கை வெண்டிரைத் துளிய ளாவி
யிந்திரன் மலர்த்தண் காவின் வாடையோ டினிது கூடி
யந்தரத் தமர ரம்பொன் விமானமேற் கொடிய சைத்துச்
செந்தமிழ் மணத்தி னோடு தென்றலங் கன்று லாவ. (உங)

துன்னுமெண் டிசைப்பா ரேந்துஞ் சொரிமதக் கலுழி நால்வாய்
மின்னவிர் பிறைவெண் கோட்டு வேழமா மதம்விட் டோடிப்
பன்னரும் பசுந்தேன் மாந்திப் பாட்டளி முரன்று பற்றப்
பொன்னிதழ்த் தருவின் வாசப் பூமழை பொழிந்த வன்றே. (உச)

வேறு.

குருந்த மலர்ந்து குளிர்ந்துள போதும்
விரிந்தெழு தண்மதி வெண்ணில வும்போற்
பரந்து விளங்கிய பானிற மெய்யுந்
திருந்தி யொளிர்ந்து சிறந்தகண் மூன்றும். (உரு)

நயங்கெழு சோதி நகைமுக மைந்தும்
வியந்த*கட் டங்கமுஞ் சூலமும் வேலும்
வயங்க பயம்வடி வாளுடன் வாய்ந்து
தயங்கும் வலத்த தடக்கர மைந்தும். (உசா)

வெறிகம ழுற்பலம் வெய்ய கணிச்சி
யுறுசுவை மாதளை யொண்கனி செங்கட்
பொறியர வக்க மணித்தொடை பூண்டங்
கெறிசுடர் வீசு மிடக்கர மைந்தும். (உஎ)

படர்ந்தொளிர் புன்சடை மீது பரந்த
தடந்திரை யாலலை தண்பிறை தானு
†முடங்குளை யீரத ளாடையு மூசு
விடம்பயி னுகமுந் நூலும் விளங்க. (உஅ)

கண்ணெதிர் வந்தருள் கண்ணுத லோனை
யண்ணலை நாகமு மத்தியு மானோர்
மண்ணில் விழுந்து விழுந்து வணங்கி
யுண்ணிறை காத லுடன்புகழ் கின்றார். (உகூ)

* இந்தஇடத்தில் முதனூலிற் கட்வாங்கமென்னும்பெயர் காணப்படுகின்றது.

† முடங்குளையீரதளாடை - சிங்கத்தோலாகிய ஆடை; முடங்குளை - சிங்கம்; சிங்கத்தோல்புனைந்தமை, "அடையரி மாவொடு வேங்கையின்றோல், புடைபட வரையிசைப் புனைந்தவனே" என்னும் தேவாரத்தாலும் விளங்குகின்றது.

வேறு.

உயர்வுறு முழுதுல குடையாய் சயசய
மயிலியன் மடமொழி மதிநுத லுமையவள்
கயல்விழி மலைமகள் கணவா சயசய
தயவுடை யடியவர் தாயே சயசய. (௯0)

நின்னொரு சத்தியி னிகழு மிராசத
மன்னி யனைத்துல கங்களு மறைமுறை
பொன்னி னிதழ்க்கம லத்தமர் புங்கவ
னென்ன விதித்தரு ளிறையவ சயசய. (௯க)

ஏத்தரு நின்னுடை யிச்சையி லேயுயர்
சாத்துவி கங்கொடு தண்டுள வோனென
வாய்த்திடு வடிவொடு மாபுனி யுலகவை
காத்தினி தருள்பொழி கருணைய சயசய. (௯உ)

திருத்தகு நின்னொரு திருவரு ளாலுல
கரித்திடு தாமத மதுகொடு யாவையும்
விரித்துணர் ஞான மிகுநது விளங்கிய
வுருத்திர னேயெமை யுடையவ சயசய. (௯௩)

*மூவகை யாகிய சத்தியின் மூவுரு
வாவை விகார மகன்றனை யுறுகதி
மேவிலை யன்புற வெளிவரு வாயுனை
நாவினி னெவ்வகை நவில்வது சயசய. (௯௪)

நீயே வினைமுத னீயே†காரணமு
நீயே காரண நீயே காரிய
நீயே தருபவ னீயே‡சான்றொரு
நீயே யிவையினு ணீங்கினை சயசய. (௯௫)

மாயை கடந்தனை மாயையின் வேறலை
நீயுடல் சேர்கலை யாகியு நின்றனை
யாய்வுறு சாங்கிய §இருபதொ டைந்தினு
மீயுய ரொன்றென விழைகுவர் சயசய. (௯௬)

---

* மூவகையாகியசத்தி - இச்சாஞானக்கிரியைகள்.

† காரணம் - இங்கேதுணைக்காரணம். ‡ சான்று - சாக்ஷி

§ இருபதொடைந்து - இருபத்தைந்துதத்துவங்கள்; ஞானேந்திரியங்கள், ௫; கன்மேந்திரியங்கள், ௫; பூதங்கள், ௫; தன்மாத்திரைகள், ௫; அந்தக்கரணங்கள், ௪; புருடன், க.

அருமறை நுண்பொரு ளாய்ந்து துறந்தவர்
விரிசக மாயையின் விதமென விட்டுனைத்
தெரிவுரு நல்ல சிதானந்த மாகிய
வொருதனி யுயிரென வுணர்குவர் சயசய. (கூஎ)

உன்னரும் யோகிக ளெண்வகை யோகினின்
மன்னிய வாயுவை வலிது தகைந்துனை
நன்ன ருளத்திடை நாடிவர் நாடிட
வந்நிலை யவ்வுரு வாகுவை சயசய. (கூஅ)

மந்திரம் வல்லவர் மற்றவ் வெழுத்தினின்
முந்துறு மங்க நியாச முடித்தே
சிந்தனை செய்து செபிப்பர் செபிக்கு
*மந்திர வுருவென வருகுவை சயசய. (கூகூ)

சைவர்க ளவகை தங்கிய சுத்திசெய்
தைவகை யாவர ணத்தொ டருச்சனை
யெவ்வகை செய்துனை யேத்துவ ரவ்வகை
யுய்வகை யாவரு ளொருமுதல் சயசய. (ச0)

ஆய்ந்த †கணுதர்க ளம்புயன் முதலென
வாய்ந்தபுல் லீறென மருவுமெவ் வுலகையு
மேந்தலுன் வடிவென வெண்ணுவ ரவ்வகை
தோய்ந்தவர் கண்ணெதிர் தோன்றுவை சயசய. (சக)

மன்னிய தாரணி முதலிய வடிவினி
னுன்னரும் யாவு மொருங்கு வளைந்தனை
நின்னுழை யாவு நிறைந்தன நின்னல
தன்னியம் யாதுள தறைகுதி சயசய. (சஉ)

இலையெனு மவர்க ளிடத்திலு முண்டென
நிலையுறு மவர்கண் மருங்கிலு நீயுளை
பலவித வன்பர்கள் பாவனைப் படியுளத்
திலகுவை யவர்நினை வின்படி சயசய. (சங)

---

* "மந்திரமுந் தந்திரமு மாயவடி", "மந்திரமுந் தந்திரமு மருந்து மாகித, தீராநோய் தீர்த்தருள வல்லான்றன்னை" என்னுந்திருவாக்குக்கள் இங்கேகருதற்பாலன.

† கணுதர்கள் - காணுதர்கள்; தார்க்கிகர். இப்பாடம்முதனூலிற்கு ஒத்தது; 'கணுதிபர்' எனவும்பாடம்.

தூங்கிருளல்லவு சோதியு மல்லவ
வோங்கு புறத்துட னுள்ளிவை யல்லவ
தாங்கு மசத்தொடு சத்தசத் தல்லவ
வீங்குனை யறிகுவ தெவ்வகை சயசய. (சச)

நுண்மையு மல்லவ நுவலுறு பருமையின்
வண்மையு மல்லவ வாண்மையின் வடிவொடு
பெண்மையு மல்லவ பேடியு மல்லவ
வுண்மையை யெவ்வகை யுணர்வது சய்சய (சரு)

வேறு.

அரிய தீர்த்த யாத்திரையா லாக மெலிந்து பயனென்னே
பெரிய யாக மினிதிழைத்துப் பெறுதற் கரிய பேறென்னே
கரிய மிடற்று வெண்ணீற்றுக் கருணைக் கடலுன் றிருநாம
முரிய வுவப்பின் வழுத்தவல்லார்க் கெல்லாப பயனு முளவாமால். ()

தண்ணங் கமலத் தவிசினுறை தலைவன் றானும் பசுந்துளவ
வண்ணங் கரிய திருமாலும் வயிரப் படைவேந் தனுமுதலா
வெண்ணுங் கணிப்பி லுயிரெவையும் பசுவாம் பசுவுக் கிறையவனீ
யண்ண லதனாற் பசுபதியென் றறைவார் நின்னை யறிந்தோரே. (சஎ)

கற்ப முடிவாங் கடைநாளிற் கணிப்பி லுயிர்க ளெவற்றினையு
மற்கந் தவிருன் னிச்சையிலே யுரோதிப் பிபபா யாதலினாற்
பொற்கென் றிலகுஞ் சடைமௌலிப் புனிற்று மதியெம் போரேறே
நிற்கண் டுணர்ந்த முனிவருருத் திரனென் றுன்னை நிகழ்த்துவரே. ()

தீதி லாத கற்பத்தி னாதி தனிலே செம்பொனிதழ்த்
தாது கமழ்தண் டாமரைமேற் றனிவீற் றிருக்குஞ் சதுமுகற்கு
நாத வடிவாம் வேதத்தை யுருதம் பண்ணு நலத்தாலு
மோத வரிய நின்னையுருத் திரனென் றுரைப்ப ருயர்ந்தோரே. (சகூ)

ஓமென் பதனுக் குயிராகி யோங்கா ரத்தி னுருவமுநீ
யாமென் பதனா லருமறையின் வடிவா யதனுக் காவியுமாய்த்
தோமின் றிலகு மெவறறினையுந் திராவம் புரியுந் தொழிலாலுங்,
காமங் கடிந்தோர் நின்னையுருத் திரனென் றுரைப்பர் கண்ணுதலே ()

உலகு மூடலு முதலியவா மவற்றின் றுயரைத் திராவணஞ்செய்
யிலகு கருணை யாலுமுருத் திரனென் றுன்னை யினிதுரைப்பார்
தலைவா நின்னிற் சிவதரமாம் பொருள்வே றின்மை யாலுயிர்க்கு
நலமே புரிகை யாலுன்னைச் சிவனென் றுரைப்பார் நல்லோரே. (ருக)

யாவும் பவிக்கு நின்னிடத்தே யெவற்றி னுழையு நீபவிப்பா
யாவும் பவிப்பிப் பாய்நீயே யென்றும் பவியா தேமிகு வாய்
பாவந் தவிர யூருநின்னைப் பாவித்திடுவர் பவங் கடந்து [தோர்.
மேவும் பொருட்டா தவிற்பவனென் றுரைப்பர் வேத முடிவுணர்ந்

அளவி னுலக மெவற்றையுநீ யறுக்கின் றதனாற் சருவனென்ப
ரளவில் பிறப்பை யழித்துலகு மழிக்கின் றதனா லரனென்ப
ரளவி னுலகை யாள்கையினு லளவி னுலகை யாள்வதனுக்
களவில் பெருமை யுடைமையினு லளவு தவினு லீசனென்பார். (௫௩)

வரம்பி லிமையோ ரிடத்திலொரு கானுந் திரும்பா மகத்துவநீ
நிரம்பு மதனுன் மாதேவ னென்பார் நின்னை மறையீற்றிற்
பரம்புங் கீரோ தாரகமோ பனிமால் வரையோ பைம்புயலோ
விரும்பு மவற்றுன் றினிற்கிடந்து கிரிச னெனும்பேர் மேவுதியால்.

அரிய பிருகத் துவமுடையை யதனு லுன்னைப் பிரமமென்பர்
விரிய யாண்டு நிறைந்திடலால் விண்டு வெனவே விளம்புவர்கள்
பொருவி லொருவாச் சுகமுண்டா வதற்கு நீயே பொருட்டெனலாற்
கருத வரிய சம்புவென வுயர்ந்தோர் நின்னைக் கட்டுரைப்பார். (௫௫)

நின்னு மத்து ளொருநாம நிகழ்த்தும் பயனை நிச்சயித்துத் [தெவ
தொன்னுன் மறையுஞ் சொலமாட்டா வெம்போ னெய்யர் சொல்வ
னன்னுன் முகனு நாரணனு மறையுந் தெரியா ஞானவுயி
ரென்னு நின்ற வுனைச்சடமாம் யாமோ துதிப்ப மென்றார்கள். (௫௬)

வேறு.

என்றெதிர் வழுத்திய விருவர் தம்மையும்
பின்றிகழ் வார்சடைப் பிறைக்கொ ழுந்துடன்
கொன்றையந் தொடைபுனை குழக னேக்குபு
நன்றுற விவையிவை நவில்கின் றனரோ. (௫௭)

அத்தியுங் காளனு மாகு மன்பர்காள்
பத்தியின் மகிழ்ந்தனம் பாலர் காளுமை
யுத்தமக் குணமுடை யுமக்கு வேண்டிய
மெய்த்தநல் வரந்தா விளம்பி டீரென்றான். (௫௮)

என்னலு மிருவரு மிறைஞ்சி யாரினு
முன்னவ வெமக்குநீ முன்னின் றண்டனை
நின்னுண்மு யடியரோ நிகழ்த்தும் வாய்மொழி
யின்னரு ளுடனுவந் தினிது கேட்டியால்.

மன்னிய வருட்கட லேம கோதய
தனனிக ரில்லவ தவறு ருவகை
யுன்னிடத் தெங்களை *யுசுப்பித் துக்கொள்வாய்
முன்னவ வெமக்கிது முந்து மோர்வரம். (கூ0)

ஈங்கினிப் பெறுவர மிற்றை நாண்முத
லோங்குமித் தென்கயி லாயந் தன்னையே
வாங்குதெண் டிரைக்கடற் புவியும் வானமு
மோங்குகா ளத்திவெற் பெனவு ரைக்கவே. (கூக)

கொவ்வையங் கனியிதழ்க் கோதை பாகசே
ளெவ்வகை யுயிர்கண்மற் றெனினு மீண்டையின்
வவ்வுறு முடல்விடி னனைய மன்னுயி
ருய்வுற முத்தியிங் குறுதல் வேண்டுமால். (கூஉ)

இந்நதித் தடங்கரை யினிது வைகிய
நின்னைவா னவர்முத னிறைந்த யாவரு
நன்னல முதவுகா ளத்தி நாதனென்
றுன்னரும் பெயரினி யுரைத்தல் வேண்டுமால். (கூங)

நின்னடி வழுத்துற நிகரி லன்பினற்
றுன்னுமிக் கடவுளர் தொகுதி யாவையுந்
தன்னிக ராயவித் தலத்திற் சந்தத
மன்னிய வுவப்பொடு வதிதல் வேண்டுமால். (கூச)

எறிதிரைப பரவையியா ரேழுங் கங்கைமு
னுறுசுவைக் கடவுண்மா நதிக ளுள்ளவும்
பிறிதுள தீர்த்தங்கள் யாவும் பெட்பினன்
மறுவில்சீ ரிவ்வயின் வதிக வைகலும். (கூரு)

என்றவ ரிவையிவை யியம்ப வேடவிழ்
கொன்றையஞ் சடைமுடிக் குழகன் கூறுவா
னன்றுநீ ருவநதெமை வேண்டு நல்வர
மன்றவு மனையவா றுகி வாய்க்கவே. (கூசு)

இலங்குசீர்த் தென்கயி லாய மென்றவிப்
பொலங்குவட் டண்ணலம் பொருப்பிந் நாண்முத
லலந்குகொள்கா ளத்திவெற் பென்னு நாமத்தா
லுலம்புதெண் டிரைக்கட லுலகி லோங்குக. (கூஎ)

யுசுப்பித்தல் - சேர்த்தல்.

நம்மையுங் காளத்தி நாத!
மும்மைசே லுலகுளோர் மொழிக யாமுமிச்
செம்மணிச் சுடர்கெழு சிகரஞ் சேணுய
ரிம்மலை யதனுழை யென்றும் வைகுதும். (௬௮)

நந்தமைத் தொழுதுட னணிய தேவரு
முய்ந்திடு பழமறை யுணர்ந்து நாடொறு
மந்தமி லருந்தவ மின்றி ஞற்றிடுஞ்
சிந்தைகூர் முனிவருங் கடவுட் டீர்த்தமும். (௬௯)

முருகவிழ் நாண்மலர் மொய்வ னங்களுங்
கரைபொரு நதிகளுங் கறங்கு தெண்டிரை
விரிதரு பரவையும் வெற்பி யாவையு
மருமறை முறையினி தமைக்கும் யாகமும். (௭0)

தத்தம துருவின்ற றங்கும் பதததா
லித்தலத் தமர்கமற் றெமதொ ராணையாற்
றத்துமித் தீர்த்தமுஞ் சகல தீர்த்தத்து
ளுத்தம தீர்த்தமா யுலகி லோங்குக. (௭௧)

கங்கைவெண் டிரைபொரு காசி யுங்கதி
பொங்குதண் புனற்பிர யாகை யும்புகழ்
தங்குகே தாரமுஞ் *சயில மேமுத
லெங்குள தலமுமிங் கினிது வைகுக. (௭௨)

இன்பமுற் றெவர்சில ரித்த லத்திலே
தென்புலத் தவர்கடன் றீர்க்கின் றாரவர்
முன்புள கயைதனின் முயன்ற வற்றினு
நன்பலன் சதமடங் காக நண்ணுக. (௭௩)

எரிசுடர் யாகமு மிழைக்குந் தானமு
மரிதுசெய் பூசையு மாதி யாகிய
வுரியநற் கருமங்கள் பலவு மோர்முறை
பொருவிலித் தலத்திடைப் புரிந்த போதினில். (௭௪)

வேறு.

எற்றுதிரை வார்கட லிரும்புவி யிடத்தின
மற்றுமுள புண்ணிய தலங்களின் மகிழ்ந்தே

* சயிலம் - ஸ்ரீசைலம்.

யுற்றவொரு கோடிவித மாமிவை யுளுற்றிப்
பெற்றிடு பலத்தையிவை பெற்றிடுத றிண்ணம். (எ௫)

இப்பொழுது நீரெமை யிறைஞ்சியினி தேத்து
மெய்ப்புகழை யாவனொரு வன்விழைவி னோதி
யப்படி வழுத்துவ னவன்வினை யனைத்துந்
தப்பியிடு மின்பமொடு வாழ்வுக டழைக்கும். (எ௬)

ஆதிமறை நான்குமுய ரங்கமவை யாறு
மோதுறு பலத்தையவ னுற்றொழிவி லாத
நீதிவள மெய்திடுவ னித்தம துரைப்போர்
தீதுதவிர் யோகிகள் பலன்பெரிது சேர்வார். (எஎ)

அருந்தவ மிழைத்தமுனி வோர்பயனு மார்வார்
பரிந்திதனை யாவனொரு வன்பகர்வ னுளும்
விரும்புமவ னிம்மையில் விழைந்தவை நுகர்ந்து
திருந்தமறு மைக்கணம தோருலகு சேர்வான். (எஅ)

என்றருள் புரிந்தருளு மெல்லையிரு பேரு
மன்றவிமை யோர்முனிவர் மற்றுமுளர் காணப்
பின்றிகழும் வார்சடைய பிஞ்ஞகன்மெய்ஞ் ஞானக்
குன்றனைய மேனியொடு கூடினர் கலந்தார். (எ௯)

வேறு.

*தென்ற லம்புகழ் தென்கயி லாயமால் வரையு
மன்று தொட்டருட் காளத்தி வெற்பென லாகி
நின்றி லங்கிய திறைவனை யாவரு நிறைவுற்
றொன்று மன்பொடு காளத்தி நாதனென் றுரைத்தார். (அ0)

மாறி லாவுவப் பெய்திய வானவர் களித்துத்
தேற லூற்றிருந் தொழுகுபூ மழைசித றினரால்
வேறு வேறுமற் றனைவரும் வியப்புற வுமையோ
டாறு சூடினோ னருட்சிவ லிங்கத்து ளமர்ந்தான். (அக)

இனைய விக்கதை யினிதுகேட் கின்றவர் யார்க்கும்
வினைய னைத்தையும் வீட்டிடு மிகவுரைப் பவர்க்கும்

* எ௯-ம் செய்யுளின்பின், ஒருபிரதியில், "தென்கயிலை யாகிய செழுஞ் சயில மன்றோ, யன்பர்கள் வணங்குகா ளத்திவரை யாகி, நன்பெயர் படைத் துலக நாளுமினி தேத்த, மன்புகழ் தழைந்திட வயங்கியது மாதோ." என்று ஒருபாடல் காணப்படுகின்றது.

கனியு நெஞ்சொடு கேட்பவர்க் குங்கதி யளிக்கு
மணம்லி மைழந்துள மன்பெருஞ் செல்வமும் வழங்கும். (அஉ)

என்றி வற்றினைப் பாத்துவா சன்பெரி தியம்பிப்
பின்றை யேசிவ மான்மியம் பேசுவா னெனவே
மன்ற லம்பொழி லைமிசா ரணியமா தவர்க்கு
நன்று சொற்றனன் சூதமா முனிபின்னு நவில்வான். (அங)

ஆகச்செய்யுள், நநஉ.

ஆறுவது

# சிவமான்மியமுரைத்த அத்தியாயம்.



வரிசிலைத் தடக்கை வரையுறழ் திணிதோள் வார்கழற் றனஞ்சய னுவப்ப, விரிசடைத் தவள நீறொளி பழுத்த மேனிமா முனிவரன் விளம்பும், பரிசுடைத் தவத்தாற் பாமயோ கத்தாற் பயின்றதானங்களாற் பாவக், கரிசினைத் துடைப்பார்க் கினிதுமுன் னிற்குங் கடவுள்கா ளத்திநா யகனே. (க)

அன்னதோர் தலத்தி லரும்பெறற் றீர்த்த மாடியவ் வருட்சிவ லிங்கந்
தன்னையா தரித்து வழிபட லுற்றூர் சதமொடு பத்துறழ் புரவி
நன்மக மவற்றைப் பழமறை விதியி னனியிழைத் திடவரும் பயனும்
பன்னுமத் தொகைய வாசபே யஞ்செய் பயனுமிங் கெய்துவர் பார்த்த.

உவந்தருட் சேவை புரிகையிற் பயன்வே றொன்றையும் பெட்புறு துளுற்றி, னவந்தனி லழுந்தி யுளங்கவன் றிரங்கு மழிதுயர் தானும்விட் டகன்று, நிவந்தொளிர் பசும்பொற் கற்பக தருவி னெடுநக ரின்பமு நிறையத், தவழ்ந்துபன் னெடுநா ணீந்தரும் பிறவித் தடங்கட றனையுநீந் துவரே. (ங)

விரிதரு புவன மூன்றினிற் கடவுட் டீர்த்தங்கண் மிகப்பல விளங்குந்
தெரிதரு மவற்றுட் சிறந்தகா ளத்தித் தலத்துள தீர்த்தமோ டிணையா
வுரைசெயுந் தீர்த்த முன்னுள வாய வவற்றுளு முலகினி லினிமேல்
வருவன வாய வளங்கெழு தூய வார்புனற் றீர்த்தத்து மிலையால். (ச)

எங்தெழிற் குடுமி யிலகுமிப் பொருப்பி லெரிபுரை தூற்றையஞ் சடைமேற், பூந்துண ரிதழி பொருதிரைக் கங்கை புனிற்றிள மதிபுனை புனிதன், வாய்ந்தபே ரொளியாய் வயங்கில னென்னின் வன்பு

வப் பிணிப்பினுல் வருந்தி, யாய்ந்திடு முணர்வின் மாந்தருக் கெவ்வா றளவிலவெம் பாவம்விட் டகலும். (ரு)

ஆயுநுண் மறையு மளப்பருஞ் சோதி யங்கண்மா ஞாலத்தி லெவர்க்குந், தாயுமா யுயிர்த்த தந்தையு மாகித் தணப்பருஞ் சுற்ற மூந் தானுய்த், தூயவின் னருள்சேர் குருவனு மாகித் தொழுகுல தெய்வமு மாகி, நேயமாய்ப் புரக்குந் தலைவனு மாகி நிரந்தர மிவ ணமர்ந் தனனுல். (சு)

அறிவிலா மையினுற் றுயருழப் பவஞ் யாங்கிடை யூறுவந் தடையின், மறுகியுள் ளழியு மனத்தனு யுடையோர் மற்றொரு வரு மில னுகிச், சிறிதுமோர் கிளேயி லாத்தமி யனுக்குத் தெய்வநா யகன் றுணை யல்லா, லுறுதுணை பிறிதொன் றில்லைமற் றடந்தோ ளுமிழ் சுடர்ப் புலவுவே லுரவோய். (எ)

பல்குணங் கடந்து விகாரமு மிகந்த பரசிவன் குணத்தொடு மே பழகி, யெல்லையில் விகார மெய்தியிவ் வுலகை யினிதளிக் குதுமென விரங்கிச், சொல்லருந் தனதோ ரிச்சையா லரிய சுடர்ச்சிவ லிங்க மாய்த் தோன்றி, மல்லன்மா ஞாலத் தின்னுயி ருய்யும் வகைவிளை யாடனுற் றனனுல். (அ)

ஆங்கவன் றனது மாயையொன் றுளதா லளப்பிலா வுலகினுக் கதுதா னீங்கரும் பிறவி நிமித்தமா மதனு னீடில கியாவையு மயங்கு மீங்கது பிறவிக் குருடர்மற் றறியா ரின்னவை மாயையின் றன்மை யோங்கொரு பெயருந் தனக்கில னுகி யொளியுரு வாகிய வொருவன்.

பல்பல பெயரும் பரித்தவ னுகிப் புல்வகை யுலகுமே லினுய்த் தொல்லைய வுலகிற் றேய்ந்தவ னுகித் தொழிற்படும் விளையில னுகி யெல்லையில் கரும நிரதனு மாகி யிருப்பனென் றிருந்தவ னியம்ப வல்லியங் கமல முகமலர்ந் தினிதி னருச்சுனன் வினவலுற் றனனுல். ()

அருந்தவக் கிழமை யந்தணர்க் கரசே யமலன்யா துருவமா யமர்வன், றிருந்திய குணத்தோ டெவ்வகை சேர்வன் சேருமக் குண மெது தேவன், விரிந்திடு மாயை யெவ்வகைத் தாகும் விரித்திவை விளம்புதல் வேண்டும், பரிந்தெனைப் புரத்தல் வல்லநீ யிவற்றின் பகு தியெப் படியினு முணர்த்தாய். (கக)

என்றுவ னிசைப்ப விருந்தவ முனிவ னியம்புவா னெறுழ்வலித் தடந்தோள், வென்றிவார் சிலைக்கை விசயகே ளனைய 'விமலன தியற் கையாம் வடிவை, யொன்றுற யாரு முணர்வுற மாட்டா ராயினு முவந்-

துநங் குரவ, னன்றெமக் குணர்த்த நாமுணர்ந் தவற்றை யறிந்தவா நவிற்றுவ முனக்கே. (௧௨)

நாதன திருவம் வெலற்கரி தாகி ஞாதுரு ஞேயபா வகமா, யோதுறு மொழிக்கு மண்டரி தாகி யசைவில தாகியொற் றுமையாற், பேதமி லின்பப் பேரும்பெருக் காகு மின்னதோர் வடிவுடைப் பெம்மான், சேதன வடிவ னாகியா வைக்கும் விளக்கமே செய்யனுற் றனனால்.

எண்ணுறு முப்பத் தாறின்மே லாய விறைவனை யாவரே யறிவார், பண்ணரு நுண்மை தனிலுநுண் மையனுப் பருமைதன் னிலும்பரு மையனு, யண்ணுறு மெவையு மாய்நிலை பெற்ற வவன்றனை மனமொடு மொழியு, நண்ணுற மாட்டா வென்னினிங் கவனை யென்னென நவிற்றுது நாமே. (௧௪)

நித்தமாய் விழைவும் வெறுப்புமின் றாகி நீக்கரி தாயளப் பரிதாய்ச், சுத்தஞா னத்தா லுணர்வதாய்க் குணத்திற் றோய்விலாப் பொருள்சிவ னவன்றான், புத்தியு மல்லன் மனமுமே யல்லன் பொறியலன் பூதங்க ளல்லன், மொய்த்திடு மிருளோ டொளியல னதனாற் குணத்தினைக் கடந்தவன் முதல்வன். (௧௫)

புந்தியை விதித்த கருத்தனு மவனைப் புந்தியு ளடங்கினு னென்று, சிந்தைசெய் துரைப்பர் சிலருணர் வில்லோ ராங்கவ ரத்திறஞ் செப்ப, விந்தனஞ் சுடுவ தென்றுரை செய்து மெரிதழ லிந்தன மதனுன், வெந்திடப் பட்ட தென்றுமே விளம்பும் விரகலா லன்றிவே றன்றே. (௧௬)

அணியனே யாகி யுள்ளினுட் சிறிது மமைத்திடப் படாதவனாகித் துணிவுறு நினைவு ளடங்கிடா தவனாய்த் தொல்குணங் கடந்தவ னாகி யிணையிலி யாய வன்னவன் றன்னை யுணர்விலா ரெய்திட மாட்டார் வினைமுதலன்றாய் மறைக்கவொண் ணாத விரிசுட ராய்விளங் குற்றான்.

இன்னவன் றன்னை யறிவிலா தவர்தாம் யாவைக்குங் கருத்தனென் றிசைப்பர், மன்னிய வொட்டை மாத்திரை யாகி வயங்குவ னென்பர்மற் றவன்றா, னின்னதை யிழையென் றேவுவா னல்ல னிழைத்திடே லென்பவ னல்லன், மன்னுமெவ் வினைக்குஞ் சான்றவ னென்று மதியுளோ ரவன்றனை மதிப்பார். (௧௭)

குணந்தனை யிகந்தா னென்னினு மொருகாற் குணத்தொடுங் கூடுவ னுயிர்க, ட்ணந்திடா திழைக்குஞ் செய்வினை விழைந்து சகத்திலவ் வுயிர்களைப் புரப்பா, னுணர்ந்துள தனதோ ரருளினாற் குண

த்தோ டுற்றிடி னுண்சுடர்ப் பளிங்கிற், றிணிந்தொளிர் புனித மேனி
தண் மதிபோற் றிருமுக மண்டலந் திகழ்ந்து. (கக)

குழவியந் திங்க டவழசடை மவுலி கூர்நுதி மழுப்படை மறி
மான், றழுவிய விருகை வரதமோ டபயந் தங்கிய தடக்கைமாத் தறுக,
ணுழுவையின் புள்ளி யதளுடை யுரக °வொண்சுடர்ப் பூணிவை
யெஃளிர, விழுமிய ஞான சுந்தரி யோடும் விளங்குவன் பங்கயத
தவிசில். (உ0)

பலபல வாகப பண்ணவர் தவதநர் பழிச்சின ருச்சனை பண்ண,
மல்குசீர வித்தேச் சுரர்முதற் கணத்தோர் மாதிரம் பரிப்பவர் சுலவ,
வெல்லையில் கருணை பொழிந்தினி தமர்வ னிவன்பிர விருத்தியை
யெணணிற், சொல்லருங் குணத்திற் றோய்குவ னிவிர்த்தி விழை
வுறிற் குணத்தொடுந் தோயான். (உக)

படைத்தபல் விதமாய்ப் பரந்தவிவ் வுலகம் பரியதோ ருருவவ
றனக்குக், கிடைப்பரு நுண்மை யுருவமுன் னெடுத்துக் கிளத்திய
நாமமும் வடிவுந, துடைத்திடு வியோம வடிவமாய் விளங்கும் வரி
யளி துதைந்துபாட் டயர, வுடைத்தெழு பசுந்தே னூற்றிருந் தலர்தா
ருரனுடைத் திணிதடந் தோளாய். (உஉ)

குணங்கடந் தவனுந் தன்னுட னிரண்டாய்க் கூறுதற் கொரு
பொரு ளின்றி, யிணங்கருஞ் சிறப்பி னொருவனுந் தான்மற றியா
தினும் விழைவில னாகித், துணிந்தொரு வகைககுங் காரண மின்றி
யிருப்பினுந் தொல்லுயிர்க் கெல்லாந், தணந்திட லரிய மலத்தினைத
தவிர்ப்பன் றவிர்ப்பது மியல்பவன் றனக்கே. (உந)

அற்றமி லுயிர்கள் யாவையுந் தத்தம் வினையினுன் மாயையி லக
ப்பட், டுற்றதோர் பிணிப்புண் டுழலுமாங் கதனை யுஞற்றினு னவ
னென வுரைப்பர், சொற்றவம் மாயை யின்னதென் றளந்து சொல
லொணுச் சத்திகள் பலவாய், முற்றுமே மறைத்து நின்றிடு மதுவு
மொழிவுறி னவன்வய மாகும். (உச)

காரியத் துடனே காரணம் விரும்பிற் கலக்குவன் மாயையைக
கலக்கி, ஞரியன் கருணை யடைந்துளார் தம்மை யாங்கதன் சத்திவிட்
டகலும், பாரிய வுலகோ டிருப்பினு மவர்கள் பன்னிறம் பத்திபாய்ந
தாலுஞ், சீரிய படிகந் தன்னிறந் திரியாத் தெளிவென்த் தெளிந்தசிந
தையரே.

அங்கவன் மாயை யவத்தைமூன் றாகி யாற்றுமுத தொழிலினுக் கிடமா, மிங்குமுத் தொழிலி லழிவுசெய் கருத்தா வெனுமவன் காலமென் பதுவே, பொங்கொளி வடிவாய்க் கொள்பவன் போன்று பொலிகுவ னியற்கையாம் புனிதன், மங்குலி னிறத்துக் காண்டிவத் தடக்கை மடங்கலே றனையுமன் னவனே. (உசு)

நாளொடு திங்கள் வருடமே கற்ப முதலிய வளவையை நண்ணி நீளுமக் கால மளவுகோல் போன்றுநிகழுமற் றதனிமித் தமதாய் மூளுறு மவ்வவ் வளவையி னுலக முழுவது முயன்றிட வுளவாய் மீளவு மழிக்கப் பட்டன வதனால் யாவரு மவன்வயம் விசய. (உஎ)

அன்னவ னொருத்தர் வயத்தினு மாகா னளவிறேற் பாவையாட் டயர்வோன், பின்னிய நாணிற் பிணித்தினி தாட்டும் பெற்றிபோற் பிரானுமா யையினன், மன்னுயிர் முழுது நரைதிரை மரண வகையினு லாட்டுதல் வல்லான், மின்னவிர் கழற்கா லள்ளிலை யொள்வே லடு படை விரவல ரேறே. (உஅ)

உன்னரும் பவனே சருவனே யொப்பி லுருத்திர னுக்கிரன் வீமன் மன்னிய சிறப்பிற் பசுபதி யீசன் மாதேவ னெனும்பெயர் முறையே துன்னுமைம் பூதம் பரிதிவெண் டிங்கள் சுடரிய மான*னென் வடிவா மன்னின னிதனை மதித்தருச் சிக்க வல்லவன் மற்றவன் றானே.(உகூ)

தழைவுறு முவப்பின் யார்சில ரவன்றன் சத்தியோ சாதமுன் னைய, விழுமிய வைந்து பிரமமும் பகுத்து விரித்துணர் கின்றவ ரன்றே, ரழிவிலாப் பரம முத்தியை யடைவ ரவன்றிருப் பெயரளப் பிலவாம், வழிபடு குணத்தான் மருவிய வவற்றை மறைவலோர் தெருண்டுவாழ்த் துவரால். (௩0)

ஆங்கவ னிச்சை ஞானமே கிரியை யாயதன் சத்தியென் றவற்று லோங்குவை பவமு மொழிவில்சம் பத்து முடையனு குவனவன் சரித மீங்களந் தறிதற் கரியன தொல்லோ ரேத்துவ வதிசயித் திசைப்ப பாங்கினி லவற்றைப் பன்னுவன் கடைநா ளாடல்கண் டுமையவள் பழிச்ச.

எண்ணிலா வுலக முழுவது மேகப் பிரளய மாக்கிமற் றேவ, னண்ணுதன் மாயை யான்மயங் குற்ற நாரணன் நான்முகர் தங்கட், கொண்மைய சிவலிங் கத்தனி வடிவா யுவந்திருந் துணர்வினை யுதவி, யண்ணுற வெவையு மவர்க்கினி துரைத்தா னன்னவன் குணத்தொடு மமைந்தோன் (௩உ)

* 'எண்வடிவாய்' என்றும்பாடம்.

சேயிதழ்க் கமலப் பொருட்டில்வீற் றிருக்குந் திசைமுகக் கடவுள்பாற் றிரும்பத், தூயதன் னுழைய தொன்மறை யளித்துத் துகளில்சீ ரவன்றனைத் தூண்டி, மாயிரும் புவன நிற்பன நடப்ப வாகிய மன்னுயிர் வடிவ, மீயுய ரருளால் விதித்திடு வித்தா னெவனவன் குணத்தொடு மேயான். (௩௩)

அரியதொன் மறையும் புராணமு மிருதி யாயது மென்றிவை யனைத்தும், விரியவாய்ந் துணர்ந்து வியனுல கதனிற் றருமத்தை விதிமுறை நடாத்தற், குரியகற் பகநாட் டரபனு தியரை முனிவரை மனுக்களை யுதவிப், பெரிதுமின் னருளைப் புரிந்தவன் யாவ னுங்கவன் குணத்தினைப் பெற்றோன். (௩௪)

மிகுந்ததோர் கருணைச் சுவேதனே யென்றும் விளங்கிய லகுளியே யென்றுஞ், சகந்தொழ வுணர்த்துஞ் சாந்தனே யென்றுஞ் சைவதே சிகர்வடி வாகி, யுகந்தொறுஞ் சைவத் திப்பிய ஞான முஞற்றிமன் னுயிர்களுய்ந் திடுவான், மகிழ்ந்தினி தளிக்க வல்லவன் யாவன் மற்றவன் குணமரு வினனால். (௩௫)

களங்கனி வண்ண னிழைத்த பூசனையிற் கமலமா மலரொன்று குறைய, வுளங்கனி வெய்தித் தனதுகண் ணகழ்ந்தங் கொருங்குதண் மலரொடும் வனைய, வளங்கெழு பரிதி விரிசுடர் மட்க வயங்குபே ராழியம் படையைத், துளங்குசீர் நெடுமாற் களித்தவன் யாவ னனையவன் குணத்தினைத் தோய்ந்தான். (௩௬)

நறையிதழ்க் கமலை கொழுநனு மணக்கு நனையவிழ் கற்பக நீழ, லுறைதரு தேவர் தங்களா ணைக்கு மொல்குறு துலகம்யா வைக்கு, மிறுதியை விளைத்துத் திரைக்கட னுப்ப னெழுதரு கடுவினை யெழுதா, மறையவன் வழுத்த மிடற்றினி லமைத்தோ னெவனவன் குணமரு வுற்றான். (௩௭)

அலங்குளைப் புரவி யருமறை யாக வகனில மாழியந் தேராப்
பொலஞ்சுடர்ப் பரிதி மதியுரு ளாகப் பூமகன் பாகனே யாக
விலங்குபொற் குவடு வரிசிலை யாக விந்திரை கொழுநனம் பாக
நலம்பெறச் சாதித் தடுபடை வீர னெனனத் தேரினை நடாத்தி. (௩௮)

மீமிசைத் திருவிற் கோலமே கொண்டு மற்றடம் புயத்துவில் லேந்திக், காமர்வில் லாளி யாகியுங் கரித்துக் கடிதெழுப் பியகொடுங் கனலாற், றுமத மின்றி யிமைக்குமுன் கொடிய தடமதின் மூன்றையும் யாவன், றேமில்சீர் வலியாற் றுகள்படுத் தினனங் கனையனே குணத்தொடுந் தோய்ந்தான், (௩௯)

தண்டுழாய் மார்பன் புலோமசை கேள்வன் சபையினிற் றலைவரா யிருப்ப, மண்டுமோ தாக்கண் மரீசிமுற் பதின்மர் வாய்ப்பமற் றுணை யைக் கடந்து, மிண்டினுற் றக்கன் விதித்துள வேள்வி சிறிதெவன் வெகுளுமுன் விரைந்து, நுண்டுக ளாகி யொருத்தரா னிறுத்தா விறு தியை நொடிக்குமுன் னடைந்து. (௪0)

அற்றிடு தலையு முடைந்தபொன் முடியு மாயின ராயிடைச் சில் லோ, ரிற்றிடு கரமு மிழந்திடு பதமு மெய்தினர் சிலர்சிலர் மூக்குந், துற்றவெள் ளெயிறுஞ் சுழல்கணுங் கோற்றுத் துடித்தனர் சிலர்சில ரிவைபோன், முற்றுமங் கழிந்தார் யாவரு மிறந்தா ரவன்குணந் தழு விய முதல்வன். (௪௧)

வேதமா னுமலி விரைந்துபின் றொடர விண்ணவர் வெங்கண நாத, மாதியா மவரோ டருவனத் திடையே யடுதிறல் வேடுவ னுகிப், போதவிழ் நறுமென் புரிகுழற் றுவர்வாய்ப் பொறிசுணங் கிள முலைப் பொருப்பின், மாதுமோர் கிராதி யாய்மருங் கணைய வரிசிலை யொடுவனம் புகுந்து. (௪௨)

முள்ளுடை மூல முண்டக முதல்வன் முயங்குவான் புதல்வியை முடுகப், புள்ளிமா னுகிப் புதல்வியோ டலுந்தான் புரிமருப் பிரலை யாய்த் தொடர்ந்து, தெள்ளிய வுணர்வு நிறைபொறை சால்பு சிலைம தன் பகழியாற் றேம்பக், கிள்ளினு னன்னோன் றலையினை யாவ னனை யவ னேகுணங் கெழீஇயோன். (௪௩)

வரியா வணிந்து மூவிலை வைவேல் வரையுறழ் திணிபுயத் தேந் திக், குரைபுனல் புலராச் சடையொடுங் குறுகிக் குழுமிய வானவர மகளிர், திரைகட லுலக மடந்தைய ரசுரத் தெரிவையர் செங்கண்வா ளரவ, வரிவையர் குழாங்கொண் டிடுபலி யுவந்தா னெவனவன் குண த்தினை யடைந்தோன். (௪௪)

மைவரை புரையு மறலியை வெருவி மலர்க்கழற் சிந்தனை யோடுங், கைவரு பூசை நிலைபிடித் துளமார்க் கண்டனை முண்டகன் முதலா, வெவ்வெவ ருள்ளு மிணையிலா திருபப விவன்மிருத் துஞ்சய னென வைத், துய்வகை யமனைத் துரந்தவன் யாவ னுங்கவன் குணத்தொடு முற்றேன். (௪௫)

சேயிதழ்க் கமலத் திருவடிப் பூசைத் திடமுறு சுவேதனென் றியம்பு, நேயமன் னவனை நெட்டிலைச் சூல நெருப்புமிழ் செங்கண் வெள் ளெயிற்றுக், காய்சின மறலி பிணித்திடக் கொணர்ந்த கயிற்

றினம் மறலியைத் தானே, யாயிடைச் சிக்க வெவன்பிணிப் பித்தா ளுங்கவன் குணத்தொடு மமர்ந்தோன். (சசு)

திவ்விய வடிவின் றிகழொளி விளங்கத் தென்றிசைத் திருமுக நோக்கி, வெவ்வினை யொருவி யாற்றருந் தவத்தை விதியினி னிழைத் தவே தியரா, மெவ்வமின் முனிவர்க் கினியஞா னத்தை யெதிரிருந் தருளரியாங் குணர்த்திச், செவ்விதிற் கருணை பொழிந்தவன் யாவ னங்கவன் குணத்தொடுஞ் சேர்ந்தோன். (சஎ)

எற்றைஞான் றினுந்தான் யாவன்மற் றொருவ னிச்சையிற் செய் வன செய்து, பொற்றகட் டிதழின் பொகுட்டுறை புத்தேண் முதலிய புங்கவர்க் கெய்தாப், பெற்றிமை யொடுந்தன் வடிவினைத் தானே பெரிதுணர்ந் தழிவிலா னந்த, முற்றுநித் தியனு யுயிர்க்குயி ராகி யுவமையற் றெவற்றையு முடையோன். (சஅ)

இனியவெப் பொருளு மிருந்திட வூர்தி யெருதுதன் னிருப் பிடஞ் சுடலை, கனல்விழிப் பகுவாய்க் கட்செவி பணியூண் கழியும் வெள் ளென்புகண் மாலை, நனிபடை பூத மதளுடை நீறு நறியசாந் தூண்பலி யாயுந், தனையடைந் தவர்க்கெவ் வாழ்க்கையுந் தருவோ னெவனவன் குணத்தினைச் சார்ந்தோன். (சகூ)

மனமொழி யிகந்த வனையவன் சரிதம் வாய்மையிற் பற்பல வகைய, வினையவென் றவற்றை யாவரோ தெளிவா ரீண்டவன் பெரு மையை யளந்து, நனிமிக வுரைக்க வல்லரு முளரோ நாடரும் பழ மறை நவில்வ, தனையவ னளப்பி லானந்த நிலையை யுருத்திர வத்தியா யத்தில். (ருo)

எண்ணில வாய விலங்கொளி வதன மெண்ணில வாகிய நயன
மெண்ணில வாய தடம்புய நோன்றா ளிவற்றொடு கூடியெம் மருங்குந்
தண்ணளி வடிவிற் றயங்குறு மவனைச் சகத்துளும் புறமுமானவனென்
றுண்ணினைந் துணரு மறிஞனே பிறவி யொழிந்தவ னன்றியா ரொழிவார்

திங்களங் கடவுள் செஞ்சுடர்ப் பரிதி தெண்புனல் சேயுயர் விசும்போ, டங்கண்மா ஞால மாடகப் பசும்பொ னமருல காள்பவ னழல்வாய்ப், பொங்கொளிச் சுடிகைக் கணபணச் சேடன் பொருந் திரைக் கருங்கடல் வண்ணன், பங்கய னெனப்பேர் படைத்துருப் பலவா யுலகெலாம் பரிக்குந னவனே. (ருஉ)

இன்னண மளவில் பெருமைய னுகி யெழுதொணுப் பழமறை யீற்றிற், சொன்னதோர் ஞானச் சுடர்வடி வாகிக் குடிலையிற் றெல்

பொரு ளாய, வன்னவ னில்லை யெனுமவர்க் கில்லை யவனுள னென் பவர்க் குளனே, தன்னையெவ் வண்ண மன்பர்க ணினைவர் தானுமவ் வண்ணமாய்ச் சாரும். (௫௩)

இன்பமா கின்ற யாவையும் விழைநதோர்க் கினிதளித் தீறொடு பிறவித், துன்பமிங் கொழிக்கு மவன்வினை யாட றாயமெய்ஞ் ஞான வா தனைபெற், றிருன்பதி றுன்கு தத்துவங் கடந்த யோகரெப் பொழு திலுன் னுவர்க, ளன்புட னப்போழ் தவர்நினைந் துள்ள வவ்வுருக் கொண்டருள் புரிவான். (௫௪)

ஆதலா லவன்றன் றிருவரு ளாலே யவன்றிரு மேனியை நன் மை, காதலிப் பவர்கள் கருதுவர் சின்பாற் கனக்காம் விருப்பம் வைத் ததனு, லீதெலாஞ் சொற்றே மிச்சிவ ஞான மிச்சையால் வைக லுங் கேட்டிங், காதரித் துணர்ந்து தினஞ்சிவ போத மடைபவ ரவ னடி யடைவார். (௫௫)

ஆகச்செய்யுள், ௩௮௭.

---

ஏழாவது

# பஞ்சாக்கரமகிமை தீர்த்தவிசேடமுதலிய உரைத்த அத்தியாயம்.*

---

இன்னு மற்றொரு மறையுள மொழியியம் புதுங்கே
ளன்ன தோர்மொழி நன்மைக ளனைத்திறகு முதலா
புன்ன ரும்பரி பூரண ஞானத்தை யுதவு
மின்னி லங்கிய கனைகழற் சுடரிலை வேலோய். (௧)

ஆதி யோநம வென்பதாய்ச் சிவாயவென் றந்த
மோது மைந்தெழுத் துரைப்பருங் குடிலையோ டேனுஞ்
சோதி†மா யையின் வீசமோ டென்னினுந் தொடரிற்
றீதி லாறெழுத் தாமிது சிவன்றிரு மேனி. (௨)

இனைய் தோர்திரு மேனியி லினிதுள முவந்து
முனைவன் வைகுவ னிதுபிரா சாதமே முதலா
மனுவை யெண்ணுறிற் பலபல வகையவாய் வயங்குங்
கனக வெற்புறழ் திணிபுயக் கதிர்மணிப் பூணாய். (௩)

* தீர்த்தவிரத பஞ்சாக்கர மகிமையுரைத்த அத்தியாயமென்றும் பிரதி பேதமுண்டு. † மாயையின் வீசம் - மாயாபீசம்.

முன்னர் மாதிரு காநியா தந்தனை முடித்துப்
பின்ன ரக்கர நியாதமே செய்ததன் பின்றைப்
பன்னு மங்கமோ ராறையு நியாதங்கள் பண்ணி
யுன்னு மைந்துடன் பிரணவ முறச்செப முஞற்றின். (௪)

குருந்த லர்ந்திடு கொழுமலர் வண்ணமுங் குளிர்ந்து
விரிந்த தண்மதி வண்ணமும் போன்றொளிர் மெய்யு
மரிந்த கூர்மழு மான்மறி வரதமோ டபயம்
பொருந்து கைத்தல நான்கும்வெம் புலியத ளுடையும். (௫)

மூன்று நோக்கமு முளைமதி யவிர்சடை முடியு
மான்ற வின்னருள் வாணகை முகிழ்த்தவா னனமுந்
தோன்று நல்லெழி லிலக்கணம் யாவையுஞ் சுடர
வீன்ற தாயினு மினியனை நினைக்கவவ் வேல்வை. (௬)

மாயை வீசமோ டைந்தெழுத் தின்செபம் வருத்திற்
றாய வெண்பிறை மௌலியுஞ் சுடர்முக மைந்தும்
பாய பேரொளித் திருக்கரம் பத்துமப் படையு
நேய மாகிமுற் சொற்றவா றொழிந்தவு நிலவ. (௭)

நறவு பில்கிய நனையவிழ் நளினவா தனத்திற்
பிறைநு தறழுவர் வாயுமை யெதிர்தொழப் பெற்று
நிறையு மின்னரு ணன்னகை நீணிலா முகிழ்ப்ப
மறைமு தற்பொரு ளினிதுவீற் றிருப்பது மதிக்க. (௮)

செவ்வி திற்பிரா சாதமுன் ஞனமந் திரங்கட்
கவ்வ வற்றுநூ லறைந்துள வடிவமா யழகா
யெவ்வி லக்கணத் தொடுமியைந் திருப்பதா யெதிரே
கொவ்வை யங்கனி வாயுமை தொழுவதாக் குறிக்க. (௯)

செவமு டிந்தபின் மறைவழிச் செந்தழ லோம்பித்
தவறி லன்பொடு தருப்பணம் புரிந்துசந் ததமு
முவம மின்றிய வவ்வவ நூன்முறை யொழுகிப்
பவம கன்றிடு பூசனை பரிவொடும் புரிக. (௧0)

ஓது மிம்முறை யருச்சனை யாதியா வுஞற்றி
மாத வங்களை யிழைத்திட வல்லவன் மனத்தில்
யாது யாதுதான் விழைந்தனன் விழைந்தவா றினிது
பேத மின்றிமற் றன்னதை யன்னதைப் பெறுவான். (௧௧)

இன்ன பானமைய மந்திர மறைகளை யாவன்,
பன்னி யீண்டுணர் விப்பவ னவன்றனைப் பாரின்
மன்னு மானிடத் தொருவனென் றெண்ணிமேன் மலரோன்
றுன்னு கற்பஞான் றளவும்வெங் நரகிடைத் துயர்வான். (௧௨)

இங்கி யார்சில ரிம்முறை யாகவைந் தெழுத்தும்
பொங்கு பெட்பினுற் கருத்துற வருஞ்செவம் புரிவ
ரங்க வர்க்குமை யவளொர்டு மானகப் பட்டுப்
பொங்கு சீர்திகழ் வாழ்வொடு வீடருள் புரிவான். (௧௩)

இன்ன மந்திர மொருமுறை செபித்தவ ரெழுதாப்
பன்னு நுண்மறை முழுவதும பயின்றுள பயனு
முன்னி யெவ்வகை யாகமுஞ் செய்பயன் முறறுந
துன்னு வாரவர் முழவுறழ் திணிதடந தோளாய். (௧௪)

வேறு.

செந்திரு மார்பினனுந் தேமலர் மேயானு
மந்தமில் வானவரு மரிதுணர் சித்தர்களு
முந்திய கந்தருவர் முற்று மிராக்கதரு
முய்ந்த சனறகுமா ரதிய யோகிகளும். (௧௫)

மாதமிழ் நன்முனியும் வாய்நத விராகவன்முன்
னோதிடு மன்னவரு மேனைய வுத்தமரு
நாத னடிக்கமல நன்கு நினைந்திதனை
நீதியி னுற்செபியா நீள்கதி பெற்றனரால். (௧௬)

ஞான வருட்குருவு நாடு மெழுத்தைநதுந்
தேனலர் பொன்னிதழித் தேவர்க டேவனுமொன்
றூன வரும்பொருளென் றுய்ந்து தெளிந்தொருவன்
றூனனி யன்புசெயின் வாழ்வெவை யுந்தழைவான். (௧௭)

தண்மதி வார்சடிலச் சம்புவை யுண்ணினையு
முண்மைய பாவனைக ளுணரு முபாயவகை
யிண்மைய வாகவுரை செய்தன மிதுகேட்போர்
வண்மையி னுற்பெறுவார் வேண்டிய வாழ்வென்றான். (௧௮)

என்றலும் விசயன்று னிவ்வரை புடைசூழ்ந்து
துன்றிய மாதீர்த்த மெத்துணை தொழுதெய்வ
மன்றவு மமர்கோட்ட மெத்துணை மற்றிங்ஙு
னன்றுசெய் விரதங்க ளெத்துணை நவில்கென்றான். (௧௯)

தேங்தொடை மணிமார்பா தெவ்வடு போரேறே
யேங்தெழி லுயர்கோட்டி னிவ்வரை யிடமாக
வாய்ந்துள மாதீர்த்தம் பண்ணவர் வாழ்கோட்டு
மாய்நதினி துரைசெய்வா முந்துற வவைகேண்மோ. (உ0)

இக்கிரி வடபாலே யிரைபுனல் யாற்றுக்கு
மிக்குயர் கீழ்கரையில் விண்டொடு பொலங்கோட்டு
மைக்குல வரைமீதே பகவதி வாழ்கோட்டங்
தக்கவர் புகழ்தீர்த்த மொன்றுள தாலங்கண். (உக)

அங்கதி னீராடி யாயிழை யவள்பூசை
கொங்கவிழ் மலராலே கோதற வினிதாற்றி
மங்கையை வழிபட்டோர் வயிணவ யாகங்க
ளிங்கொரு நூறுசெய்தோ ரெய்துறு பயனமடைவார். (உஉ)

அன்னத னிடைமூழ்கி யாயிடை வதிவுற்ற
மின்னவிர் சடையோனை யுமைதனை மிகமோனங்
தன்னொடு பூசித்துத் தாள்பணி பவர்நூறு
துன்னிய பரிமேதப் பயனவை தோய்குவரால். (உங)

இந்திர கிரியுளதா லிவ்வரை யின்கீழ்பா
லிந்திர நாதனெனு விலகுமொர் சிவலிங்க
மிந்திரன் வெம்படையாற் பாறையை யெதிர்கீள
வந்துள தொருதீர்த்தம் வச்சிர தாரையெனு. (உச)

அப்புன லூடுபடிந் தாயிடை யமர்கின்ற
செப்பிள முலைபாகத் தேவர்கள் பெருமானைக்
கைப்புது மலர்தூவிக் கழலிணை தொழுவோர்கண்
மெய்ப்பரி மகநூறு தருபயன் மேவுவரால். (உரு)

உரைதரு மதன்வடபா லோங்கரு வித்தாரை
யாகர வெனின்வீழு மாகர தீர்த்தமெனுச்
சுரர்முனி வரர்சொற்றூர் தோய்வுறி னொருநூறு
மருவிய*சோதிட்டு மகப்பலன் வருமென்பார். (உசு)

வேறு.

மழைதவழ் திருக்கா ளத்தி வரைமிசை மயூர தீர்த்தம்
விழுமிய தீர்த்தம் யாவுங் தருபயன் மிகவு நல்கு
முழுகவல் லவர்க ணூறு பரிமக முயன்ற செல்வங்
தழைகுவ ரென்று விண்ணோர் முனிவரர் சாற்றி னரால். (உஎ)

---

* சோதிட்டுமகம் - சோதிட்டோமம்.

பொருதிரை கறங்கு தெய்வப் பொன்முக ரிக்குக் கீபா
லருள்பொழி திருக்கா ளத்தி யண்ணறன் றிருமுன் னாக
வுரியபே றனைத்து நல்கு முருத்திர தீர்த்த மோங்கும்
விரிதரு புவன மூன்றுக் கேற்றிய விளக்குப் போன்று. (உஅ)

அன்னதி னறுமென் கூந்த லனநடை யமிர்தத் தீஞ்சொன்
மின்னிடைக் குவவுக் கொங்கை வெண்ணகைப் பசிய சாயற்
பொன்னிதழ்க் கமலச் செய்ய சீறடிப் பொருப்பின் மாதோ
டுன்னரும் புராரி மூழ்க வுருத்திர தீர்த்த மென்பார். (உகூ)

அங்கதி னனைஞ் செய்வோ ராயிரம் புரவி மேதம்
பொங்குபன் னூறு சோதிட் டோமங்கள் புரிந்தோ ரொப்ப
ரிங்கிதற் கைய மில்லை யாவனோர் மனிதன் மூழ்கித்
திங்களங் கண்ணிவானோன் றிருவடி தொழுது மீள்வான். (௩0)

அன்னவன் பிறவி யாவு மகல்வனென் றலரின் மேலா
மன்னவன் சொற்றான் றூய மாகத்தின் மகத்தில் வந்து
பொன்னொடு துகிரு முத்துங் கொழிக்கும்பொன் முகரி யாறு
மின்னவிர் திருக்கா ளத்தி வெற்பினை யடைந்த தன்றே. (௩௧)

அனையதோர் வேலை தன்னி லாதியம் பகவன் சோதிப்
பனிமதி வதன வேற்கட் பணைமுலைப் பசிய வேய்த்தோட்
கனிதரு துவர்வாய்த் தீஞ்சொற் கனங்குழைக் கருணை மேனி
வனிதைதன் னுடனே போந்து மஞ்சன மாடி னானால். (௩௨)

ஆதலிற றிருக்கா ளத்தி யண்ணலம் பொருப்பைச் சேர்ந்த
சீதநுண் டிவலை வீசுந் தெய்வப்பொன் முகரி தன்னை
யாதொரு தீர்த்தத் துள்ளு மீங்கிது பெரிதென் றெண்ணித்
தீதெறிந் தினிது நோற்ற செழுந்தவ முனிவர் சொற்றார். (௩௩)

ஆங்கதிற் றிருவா றுட லாதியாந் தீர்த்த வேளைப்
பாங்கம ருமையா ளோடும் பனிமதிச் சடிலன் மூழ்கிற்
றுங்களு மொருங்கு மூழ்கத் தக்கவர் யாவ ரன்னோ
ரோங்கொளி வடிவ மாமவ் வொருவன துருவஞ் சேர்வார். (௩௪)

அன்னது தனக்குத் தென்பா லருண்மணி கன்னி யென்னு
முன்னெடுந் தீர்த்த மொன்று மூவகை யுலகை நாளு
மன்னிய புனித மாக்கு மணிகன்னி கேச னென்றோர்
தன்னிகர் சோதி லிங்க மாயிடைத் தயங்கு மாதோ. (௩௫)

ஆதரித் தங்கீ ரர்டி யப்புராஞ் சுடரைப் போற்றிக்
காதலித் திறைஞ்சிற் றேற்ற மீறிவை கடக்க லாமத்
தீதறு தீர்த்தத் தென்பாற் றிருநதி தனக்குக் கீழ்பான்
மீதுயர் கரையி னிற்கும் விண்டொடு நீல வெற்பில். (கூகூ)

முத்தலை வேற்கைக் கால வயிரவ முதல்வன் வைகு
மத்தலைப் புனித மான வயிரவ தீர்த்த மாடிக்
கைத்தலங் கூப்பிக் கால வயிரவற் றொழுவோர் தாங்கள்
பைத்தலை யுலகி னூறு பரிமகப் பயன்பெற் றோரே. (கூஎ)

கங்குலிற் சென்றுகால வயிரவன் கனகக் கோயிற்
றங்குசா தகர்விண் மாதர் தனிநட மினிது காண்பர்
மங்குலி னுருமே றென்ன வானவர் முழவி னோதை
யங்கிரு செவியுங் கேட்ப வாரவா ரிக்கு மன்றே. (கூஅ)

காயுமுத் தலைவேற் கால வயிரவன் கருணை பெற்றோர்
தூயநல் லணிமா வாதி சித்தியோ ரெட்டுந் தோய்வர்
மீயுயர் நீல வெற்பில் விளங்குமே னிலத்து மீதே
யாயிர லிலிங்க மாக வாதியெம் பரமன் வைகும். (கூகூ)

ஆங்கவன் றொழுது தன்னை யடைந்தவர் பிறவி தீர்ப்ப
னோங்குமத் தலத்து மேனா ளூறுபுலப் பகையை வென்று
தீங்ககன் முனிவ ரோரா யிரர்தவஞ் செய்த காலை
யீங்குநல் வரங்க ணல்க வாயிர லிலிங்க மானான். (சo)

ஆயிடை மயிடற் காய்ந்த வணங்கினி தமர்வா டன்னை
நேயமுற் றிறைஞ்சி னோர்க்கு நீங்கருந் துயர நீக்கி
மேயவெப் பயமும் போக்கி வேண்டிய வரங்க ணல்கித்
தூயநல் யோகர் போற்ற வதிவளத் துர்க்கை யாங்கு. (சக)

அவ்வுழி விளங்குந் தீர்த்த மடைந்தினி தாடி யாங்குச்
சைவமா முனிவ ரேத்துஞ் சகத்திர லிலிங்கந் தன்னை
வெவ்வழற் றிகிரி யேந்து மின்னெடுந் தொழுவோர் நூறு
தெய்விக ராய சூயஞ் செய்கதோர் பயனைச் சேர்வார். (சஉ)

விண்ணுயர் நீல வெற்பின் றென்றிசை யதனின் மேன்மை
நண்ணிய மூக தீர்த்த நாடொறு மிலங்கு மங்க
ணண்ணலி னருளான் மூழ்கி னதிராத்ர நூறு செய்த
புண்ணிய மடைவ ரம்மா பொருசுடர்ப் புலவு வேலோய். (சங)

அடைந்தவர்க் கருளை வைப்பா னழற்பொலி சூல மேந்துந்
தடங்கிரித் திணிதோட் கால வைரவன் றயங்கு மாங்கே
தொடர்ந்தவன் றன்னைப் போற்றிற் சுடர்த்தழல் வேள்வி யாவு
நெடுங்கடல் வரைப்பிற் செய்த நிறைபலன் பெறுவர் மாதோ. (௪௪)

நேசமார்க் கண்டன் றன்பேர் நிகழ்சிவ லிங்க மங்ஙன்
பூசனை செய்தாளுங்குப் புனல்படிந் ததனைப் போற்றின்
வாசபே யங்க ளாறும் வாம்பரி மகங்க ளாறு
மாசிலா தினிதி ழைத்த வரியபே றெளிதி னுமால். (௪௫)

ஆங்குமூ வருடம் வைகி யைம்பொறி யடக்கி யன்பிற்
பாங்குற வங்கீ ராடித் தானமும் பரிவிற் செய்து
தீங்கிலா நியமத் தோடுந் திரியம்ப கப்பேர் பெற்ற
வோங்குமந் திரத்தை நாவி னுறச்செபித் தோமஞ் செய்து. (௪௬)

நித்தமு மினைய வாறே நிகழ்த்திமூ வருட மீங்கு
மத்தினத் தினைய நோன்பை முடித்தவ ரார்க்குந் தோலா
முத்தலை வேற்கைக் காலன் றன்னையு முடுகி வெலவர்
கைத்தவெம் பிணிகள் யாவுங் கடந்துளங் களிசி றப்பார். (௪௭)

பாய்மதக் கலுழி நால்வாய்ப் பணைமருப் பியானைக் கஞ்சார்
காய்கனற் செங்கட் சீற்றக் கடும்புலி தனக்கு மஞ்சார்
தீயினுங் கொடிய கள்வர் தங்களுக் கஞ்சார் சிந்தை
மேயவா றிறுதி யெய்தி விண்ணவர் வணங்க வாழ்வார். (௪௮)

ஈண்டுமற் றுள்ள தீர்த்தம் யாவையு மினிது மூழ்கி
ஞெண்டவை தமக்குச் சொற்ற வவ்வவப் பேற ளிக்குஞ்
சேண்டொட நிவந்த செம்பொற் சிகரகீ டிருக்கா ளத்தி
வேண்டிய தீர்த்தந் தம்முட் சிலசில விளம்பி னேமால். (௪௯)

பனிவிசும் பகடு தோய்ந்து பாயொளிப் பதும ராகந்
தனிவெயி லெறிக்க வோங்குஞ் சாரலின் றலங்க ளெங்கு
மனைவரு முணர்த றேற்று வடிக்கடி தீர்த்த மாகு
மினையுவென் றளக்க வொண்ணு வினிவிர தங்கள் சொல்வாம். (௫0)

வேறு.

எவர்சிலர் நல்வள னினிது பெற்றுள்ளா
ரவர்சிலர் விரதமீண் டாற்ற வல்லரேற்
சிவனடித் தாமரை சேர்வ ரன்னவாந்
தவறிலா விரதம்யாஞ் சாற்றக் கேட்டியால். (௫௧)

பாயிருள் சீத்தெழு பரிதி வானவன்
றாயதோர் மகரமா தத்திற் றோன்றுநாண்
மீயுயர்ந் திலங்குகா ளத்தி வெற்பினை
நாயகன் வலமுற நண்ணு வானரோ. (௫உ)

நண்ணுமப் பொழுதுதா னகுவெண் டிங்களை
விண்ணுயர் பரிதியை யாரவி ழுங்குமப்
புண்ணியப் போழ்தினும் பொலிவிற் றுமதி
லண்ணலோ டேன்வரி னவனு ருக்கோள்வார். (௫௩)

அனையதோர் காலையி லகில நாயக
னனையவிழ் வாசிகை நறவு கான்றொளிர்
பனிமல ரிண்டைதண் சுருக்குப் பைந்தொடை
வனைதரு சூட்டிவை வாச மல்கவே. (௫௪)

மழைதவழ் குவட்டுயர் மலயச் சந்தனம்
விழுமிய சாந்தமென் களப மேதகு
கொழுவிய காரகிற் குழம்பு குங்குமம்
புழுகுபொன் னம்பர்பூ வம்பர் பொங்கவே. (௫௫)

விரிசுடர் மணிமுடி வெயிலெ றித்தெழப
பொருவனித் திலவடம் புதுநி லாவெழ
வெரிகதிர் நீலமா ணிகையி ருண்டிட
மாகத மணிக்குழை பசுமை வாய்க்கவே. (௫௬)

இன்னண மிறையவ னினிது போதர
வந்நிலை நாரத னருள கத்தியன்
பன்னரும் வசிட்டனத் திரிப ராசான்
மன்னுசீ ரருந்தவர் மற்றி யாவரும். (௫௭)

பொற்றுணர் முகையவிழ் புதிய நாண்மலர்
துற்றிய வரியளி துதைந்து பாட்டயர்
கற்பக நறுநிழற் கனக நாடருஞ்
சிற்பர னெடுவலஞ் செய்து போதர. (௫அ)

அரும்புறழ் வெணணகை யன்ன மென்னடைச்
சுரும்பமர் புரிகுழற் றெண்டை யஞ்செவாய்க்
குரும்பையங் குவிமுலைக் கொடிநு சுப்புரைக்
கரும்பெனு முருத்திர கணிகை மாரெலாம். (௫௯)

அம்பொனிர்ஞலவட் டங்கள் கைக்கொளப்
பைம்பொனி னடைப்பைகள் பாங்கர் நண்ணுறச்
செம்பொனின் களாசியு மருங்கு சேர்வுற
வம்பவிழ் குழலியர் *சுருள்கண் மல்கவே. (கூ0)

அருமறைப் புகழ்ச்சியா லமரர் மாதவர்
பரவுறு வாழ்த்தொலி திசைப ரம்புற
முரசொடு பெருங்குட முழவ மாதியா
யுருமொலி கடலொலி யொப்ப வோவிட. (கூக)

சுரும்பினு மினியமென் சுருதி கூடிய
நரம்புளர் மகரயாழ் நாத கீதமு
மொருங்குமத் தளமொடு சதியு மொத்தெழ
வரம்பையர் நடத்தினு மாடல் வாய்த்திட. (கூஉ)

களங்கனி வார்குழற் கலச மென்முலை

ருளங்கனி வினைதமோ டொண்செஞ் சீறடித்
துளங்குபொற் பரிபுரத் தொனியுந் துற்றிட. (கூ௩)

குவளையுண் கண்ணியர் கவரிக் கொத்தெழப்
பவளநன் குடைவரப் பதும ராகத்தாற்
றிவளுமொண் குடைவரத் தெண்ணி லாவிரி
தவளநுண் கவிகையுந் தாம்பொ திந்திட. (கூச)

கெட்டிலை யரம்பைக ணிறைய விண்ணினைத்
தொட்டியர் மகரதோ ரணந்து தைந்திடக்
கட்டெழிற் கரும்புகள் கவினக் காவணப்
பட்டுடை விதானமும் பரம்பப் பாங்கெலாம். (கூரு)

பொன்னெழுத் தெழுதுசே ருடி பொற்புற
மின்னெழுத் தியதெனப் பதாகை மீதெழ
மன்மதக் கடவுளைத் தொலைத்த வாகைபோன்
முன்மக ரக்கொடி முழுது மொய்ப்பவே. (கூகா)

மாமணிக் குப்பைகண் மரக தக்குவால்
காமரு வச்சிரங் கதிர்வெண் ணித்தில
மேமுறு செந்துகி ரிந்த்ர நீலமிங்
காமனைப் பரப்புற வாவ ணம்மெலாம். (கூஎ)

* சுருள்கள் - வெற்றிலைச்சுருள்கள்.

கனகக்குண் டலமணிக் கடகந் தோள்வளை
புனைசுட ராழிபொன் னாரம் பொங்கொளி
வனையுநித் திலவட மற்று மாணிழை
யினிதினிற் பரப்புற வெங்கு மெங்குமே. (௬௮)

வீரபா ளிதப்படாம் வெண்பட் டாடைநற்
சீருலாம் பசியபட் டாடை செம்படாஞ்
சூரியப் படாஞ்சுடர் பொன்னெ ழுத்திவை
யோர்பெற விரித்திட வெங்கு மெங்குமே. (௬௯)

வாசநீர்ப் பந்தர்கள் வழியின் வைக்குந
ராசிலா வறுசுவை யடிசி லீகுநர்
வீசுபா ளிதமொடு பாகு வெள்ளிலை
நேசமாய் வழங்குநர் நிறைய நீணெறி. (௭0)

அறிவினி லுயர்ந்துளோ ராகி நல்லற
நெறியினி லுஞற்றுவோ ராகி நீண்மழு
மறிதிகழ் கரத்தினன் மலர்ப்ப தத்திலன்
புறுதியுள் ளவர்மிடைந் தொருங்கு போதர. (௭௧)

இன்னன விருஞ்சிறப் பிரும ருங்கினுந்
துன்னுற விமையவர் மாந்தர் துற்றிட
மின்னுற ழவிர்சடை வெண்ணி லாவணி
மன்னவன் வலம்வரும் வளமை யார்சொல்வார். (௭௨)

ஆற்றருந் தவங்களு மளிக்குந் தானமு
மாற்றரும் விரதமு மகங்கள் யாவையும்
போற்றுமிப் பொருப்பினிற் புரிவ லங்களி
லேற்றிய வொன்றினுக் கிணையன் றென்பரால். (௭௩)

என்றியா மறிந்தவ ரியம்பக் கேட்டன
மன்றவு முணர்வினி லுயர்ந்த மாட்சியோர்
கொன்றையஞ் சடைமுடிக் குழகன் றன்னொடு
மன்றுதா மும்புடை சூழ்வ ரக்கிரி. (௭௪)

அன்னவ ரொருவலஞ் செய்தங் காயிரம்
பன்னரும் பரிமகப் பயனை யெய்துவர்
துன்னிய நூறுபல் சோதிட் டோமமு
முன்னிழைத் திடுபயன் முழுதுங் கொள்வரே. (௭௫)

யாவனே யாயினு மியாண்டு தோறுமிப்
பூவல யம்புகழ் பொருப்பைச் சூழ்வனேன்
மூவிலை வேற்படை முதல்வன் றன்வடி
வாவன்மற் றவனிதற் கைய மில்லையால். (எசு)

வேறு.

தென்புலத்தார்க் கீண்டொருவன் செயற்குரிய செய்கின்றோ
னன்பினொடு மவர்பிண்ட மிடுகின்றா னவ னுடைய
நன்பிதிரா யினர்பரிதி நாண்மதியி னுள்வரையு
மின்பமொடு வீற்றிருப்ப ரினிதுறுகர் போகமுடன். (எஎ)

விழைதகுநல் லுணவினதாய் வெண்டீம்பால் பொழிசேதா
வழகுபெற வலங்கரித்து மழவிளங்கன் றதனோடு
மொழுகியநல் லொழுக்கமொடு முணர்வுதனி லுயர்ந்தவனுஞ்
செழுமறையோன் றனக்கீண்டுத் தானமாச் செய்தக்கால். (எஅ)

செய்யுமவன் கயைபொருவெண் டிரையெறிதண் பிரயாகை
மையறுசீர்த் தலத்திடையா யிரம்புனிற்று வழங்கியது
மெய்யுணர்ந்த வைந்தவித்தார் வீற்றிருக்கும் காசியின்க
ணையமற வயுதநிரை யருள்பயனும் பெறுதன்மெய்யே. (எகூ)

இத்தலத்தி லெவனொருவ னெழுதரிய பழமறைதே
ருத்தமனுக் கொருமுழமா யினும்பூமி யுவநதளிப்பிற்
பைத்தலைக்குச் சுமையாய பார்முழுதும் பாலித்த
வித்தகன்பெற் றிடுபயனை யெளிதிலவன் மேவுவனால். (அ0)

மல்லல்வளஞ் சிறந்தோங்கு மிந்நகரின் மாகம்வரு
மெல்லைதனி லெறிதிரைநீ ரினிதாடிக் குளிர்பொருநா
நல்லொழுக்கந் தலைநின்ற வுத்தமர்க்கு நனிவளர்த்திட்
டொல்லையழல் காய்வித்தோ ரொழியார்விண் ணுலகின்பம். (அக)

மூன்றுநாண் மாகத்தின் முக்குறும்பு மெறிந்துள்ள
மான்றதோர் தூய்மையொடு மலையெறிதண் புனல்படிந்தோர்
மான்றல்கூர் மதியுடையார் தாங்கடக்க மாட்டாத
தோன்றுதுயர்ப் பிறவிநெடுங் கடல்கடப்பர் சுடர்வேலோய். (அஉ)

நல்லறத்தி னிருப்பிடமாய் நலந்திகழ்கா ளத்தியெனுந்
தொல்லைநெடும் பதியதனின் மாகநாட் டொடங்குற்ற
வெல்லைதொடுத் ததனிறுதி வரையுமுழு கிடுமொருவ
னுல்லும்வகை யாற்றினமு முதவுறுதா னமுமுரைப்பாம். (அங)

ஆதியாந் திதியொன்றி னவிரொளிய பைம்பொன்னுங்
கோதிலிரண் டாந்திதியிற் கொழும்பவளச் சாலிகளு
மோதுமூன் றாந்திதியி லுறுசுவைக்கன் னலின்பாகு
நீதியினான் காந்திதியி னிலவனைய வெள்ளுப்பும். (௮௪)

ஐந்தாய திதிதன்னி லதிசீத சந்தனமு
நந்தாத திதியாறி னறியவிரை நாண்மலரு
முந்தாய திதியேழின் முதிர்பாகும் வெள்ளிலையும்
பைந்தாம மணிமார்பா திதியெட்டிற் பசுநெய்யும். (௮௫)

பரவுதிதி யொன்பானிற் பசுந்தோட்டுச் சாகினியு
மருவுதிதி யொருபத்தின் மாச்சுக்குந் துவர்க்கடுவும்
விரவுதிதி பதினொன்றிற் சேதாவெண் டீம்பாலுங்
கருதுதிதி பனிரண்டிற் கனிந்தசுவை மோதகமும். (௮௬)

வற்றுதிதி பதின்மூன்றி லின்னமிர்தாம் வெண்டயிரும்
போற்றுதிதி பதினான்கிற் பொங்கொளிய பசும்பொன்னுஞ்
சாற்றுதிதி பதினைந்தி லிடைமுரியாத் தண்டுலமுந்
தேற்றுமதி பரிதியைச்சேர் திதியதனிற் சிறுதிலமும். (௮௭)

இன்னமுறை மறையவர்கட் கினிதளித்து மாதீர்த்தந்
தன்னிடைத்தோய்ந் தினையதொரு தருமத்தை முடிக்கவல்லோர்
பொன்னினிதழ்ப் பொலந்தருவிற் பூநிழலி லமரர்தொழ
மின்னவிர்வச் சிரத்தடக்கை வேந்தமென வீற்றிருப்பார். (௮௮)

வேறு.

இத்த லத்துழி நல்லற மேனுவா
மைத்த டங்கிரி யேறி மடிவதூஉந்
தத்து நீரிடை யாவி தணப்பதூஉங்
கொத்து வெவ்வழ லூடு குதிப்பதும். (௮௯)

ஒன்று தானு முணவு கொளாமலே
மன்ற வுங்கிடந் தாருயிர் மாய்ப்பது
மென்ற நான்கி னொன்று லிறப்பவர்
நன்று கூர்சிவ மாய்நனி வாழ்வரே. (௯0)

பாகு நேர்மொழிப் பாவைபங் காளனு
மேகன் வாழ்திருக் காளத்தி யென்பதின்
மாக மாதம் வருபூ ரணைதொடுத்
தாகு நோன்பினி தாற்றுதல் கேட்டியால். (௯௧)

ஒப்பில் வண்மை யுருத்திர தீர்த்தமா
மப்பு னற்படிந் தன்பி னடங்குறுத்
தப்பில் சீர்ப்புண்ணி யாகமுந் தந்துபின்
செப்பு மவ்விர தத்தினைச் சிந்தியா. (சுஉ)

தண்டு லம்மொரைஞ் ஞாழி தயங்குறுண்
பிண்டி யாக்கியப் பிண்டியிற் பீடமு
மண்டர் போற்று மருட்சிவ லிங்கமுங்
கண்டு வப்பக் கவின்றெ டியற்றுறு. (சுங)

அலங்க ரித்ததை யம்பொற் சிவிகைமே
லிலங்க வேற்றி யிறைவன் சினகரம்
வலங்கண் மும்முறை வந்துள் புகுந்தருட்
பொலஞ்சு டர்ச்சிவ லிங்கம் பொருந்திட. (சுச)

பீட மீமிசைப் பெட்புடன் வைத்தபின்
றேடு பூசையா மந்தொறுஞ் செய்துநல்
லாடல் பாட லணிமுழ வாதியாற்
பாடு தோத்ர புராண படனத்தால். (சுரு)

கங்குற் போழ்து கழித்துப் புலரிவா
யங்குப் பூம்புன லாடி யகமகிழ்
பொங்கித் தூய நியதி புரிந்துவெண்
டிங்கட் கண்ணியஞ் செஞ்சடை வானவன். (சுசு)

புனிதச் செம்பொற் சினகரம் புக்கதி
லினித மர்ந்த விலிங்க மிரண்டையும்
பனுவல் சொற்ற பரிசு வழாவகை
தனிய ருச்சனை செய்து தயாவுடன். (சுஎ)

முத்தி வேண்டினும் வாழ்க்கையை முன்னினும்
பத்தி யாலப் பயன்பெற வேண்டினோர்
புத்தி லிங்க மதனைப் பொருளொடு
மத்தன் கையி லளிக்கநற் றனமா. (சுஅ)

அருளும் வேலை யருமறை யந்தண
ரிரவ லாள ரிளைத்தவர் பங்கினர்
மருவு மந்தர் வெதிரர்மற் றேனையோர்க்
குருகு முள்ளமொ டொல்லும் வகையினால். (சுகூ)

முல்லை வெண்முகை போன்ற முதிர்சுவை
நல்ல வுண்டி நவையறு மென்றுகின்
மல்ல லோங்கு நிதியும் வழங்குபு
மெல்ல வுண்மகிழ் வித்து விடுத்தபின். (கOO)

சுருதி மேலவர் தம்மொடுஞ் சூழ்வுறு
பரிச னத்தொடும் பைம்பொன் மனைபுகா
வருகி ருத்தி யறுசுவை யோதனம்
பரிவு தன்னெடு பாரணம் பண்ணுக. (கOக)

அனைய நோன்பையவ் வாறு முடித்தவன்
புனித கங்கைப் புரிசடை வானவன்
றனது நல்லருள் பெற்றுத் தணந்திடா
வினிய செல்வமுற் றின்புற் றிருந்துபின். (கOஉ)

வேறு.

மன்னுயிர் தணந்திடின் வயங்குகண நாதன்
றன்னுருவ மாகிமயி றுங்குபு குலாவு
மின்மெளிர் விமானமிசை மேவின னுருத்ர
கன்னியர்க ளாடலொடு பாடலவை காண. (கOங)

நெஞ்சமகிழ் தூங்கநிக ரின்றிய வுருத்ரர்
விஞ்சையர்கள் கந்தருவர் மேவினர் வழுத்தக்
கஞ்சமல ரிற்கடவுள் கற்பக நிழற்கீழ்
முஞ்சுட ரடற்குலிச பாணிமுத லானோர். (கOச)

பற்பலர் மருங்குற நெருங்கினர் பழிச்ச
நற்கனக மானமிசை யெங்கணு நடந்தோர்
கற்பமள வுங்கருது மின்பமவை கண்டு
சிற்பரம தாகிய சிவத்தினெடு சேர்வார். (கOரு)

மல்லல்வள மோங்குநெடு வானுலகில் வாழ்வோர்
தொல்லைமறை யின்றுறைகள் போயதுற வோர்கள்
செல்வம்வளர் கின்னர ரியக்கரொடு சித்த
ரெல்லையில் வளம்பெரிது மெய்தினரிந் நோன்பின். (கOசு)

பலபல வெடுத்தினி யுரைப்பதெவன் பல்கா
லலனுற நினக்குறுதி நாமிக வுரைத்தே
மூலகினி லிதற்குநிக ரோர்விரத மில்லை
சிலைகெழு புயத்தினுயர் தெவ்வரட லேறே. (கOஎ)

இழைத்திடு தவங்களி னிளைத்திடுவ தென்னே
யழற்பொலி மகம்பலவு மாற்றும்வகை யென்னே
செழித்தபல தானமவை செய்யும்வகை யென்னே
விழுத்தகைய தீர்த்தம்விழை கின்றவறி வென்னே. (௧௦௮)

இத்தகைய நோன்பினை யிழைக்கினெளி தாக
வத்தகைய புண்ணிய மனைத்துமுற லாகு
மெத்தலமு மிவ்விரத நோற்றிடுத லேற்கு
முத்தம மிகப்பெரிது மித்தல முஞற்றின். (௧௦௯)

மற்றிதனை யிம்முறையின் மாகமதி யல்லா
லுற்றபதி னொன்றினு முஞற்றுதல் சொலக்கே
ளொற்றையட லாழியை யுருட்டியுல கெங்குங்
கொற்றமதி வெண்குடை நிழற்றரசர் கோவே. (௧௧௦)

பங்குனியி லத்திதியின் முன்சொல்படி மாவிற்
றிங்களணி யண்ணலொடு செங்கணெடு மாலைப்
பொங்குமொரு பீடமுறு பொற்பினி லியற்றி
யங்கவ ரிரண்டுருவு மப்பரி சளிக்க. (௧௧௧)

மழுமறி தரித்தகரம் வரதமப யங்க
டழுவுகர மாகிய தடக்கையொரு நான்கும்
விழிகளொரு மூன்றுமொளிர் வெண்பிறையும் வேணி
யழகும்வரி வேங்கையத ளாடையு மமைக்க. (௧௧௨)

சங்கொடு பொலந்திகிரி தண்டைநற வீசுஞ்
செங்கமல மேந்திய திருக்கையொரு நான்கும்
பொங்குமணி மாமவுலி பொன்னினுடை மார்பந்
தங்குறு கவுத்துவ மிவற்றொடு மமைக்க. (௧௧௩)

சித்திரையி லிங்கிவரொ டுந்திசை முகத்தோ
னத்திரு வுருத்தனை யமைக்கமுடி நான்கு
மெய்த்தசெப மாலைமிளிர் குண்டிகைமெய்ஞ் ஞான
முத்திரையி னோடபய கைத்தல முயன்றே. (௧௧௪)

சீரியவை காசியுயர் தெற்குமுக நோக்கு
மாரியனை யாடரவ மாகியமுந் நூலும்
வீரிய மிகுந்தவரி யாதனமும் வீறு
மேரியலு மாலநிழ லெய்திய விருப்பும். (௧௧௫)

துயரின் வார்சடையு முக்கணு முழுந்தா
ணளினமிசை யட்டிய விடப்பதமு நல்ல
குளிர்நகையு மக்கமணி முத்தமொடு கோத்த
வொளிவடமு மொள்ளழலு முற்றவிரு கையும். (ககசு)

புத்தக மமைத்தகா மும்புனித ஞான
முத்திரை மலர்க்கரமு முத்தமிழ் தெளித்த
வித்தகன்முன் ஞனவர்செய் சேவையு மிகப்பா
லொத்ததிரு மேனியு முஞற்றியருள் செய்க. (ககஎ)

ஆனிதனி லம்பொன்மணி மன்றுளினி தாடும்
ஞானவடி வானவனை ஞான்றசடை யோடு
மேன்மையொ டெடுத்தபதம் வீசுகர மாகத்
தானுரு வமைத்தனைய தன்மையி னளிக்க. (ககஅ)

ஆடிதனி லம்மையொரு பாகமுற வம்பொற்
பாடக மணிந்தவடி பட்டுடை பசும்பொற்
சூடக மலர்க்கைசுருள் வார்குழல் கயற்கட்
கோடனைய கொங்கையொ டமைத்தெதிர் கொடுக்க. (ககசு)

வேறு.

தொல்லா வணியிற் கங்காள வேடஞ் சூல கபாலமொடு
நல்லார் புகழுங் கட்டங்க நவ்விக் கரமு நகைமுகமுஞ்
செல்லா நடையும் விழிமயக்குந் தேவர் மகளிர் முதலாய
வெல்லா ருளமுங் கவர்பாட லிசைவு மியற்றி யினிதளிக்க. (கஉ0)

வடுவில் சிறப்பிற் புரட்டாசி கிராத வடிவை வலிகெழுதோட்
கொடுவிற் குழைத்துக் கூர்ம்பகழி கோத்த தடக்கை யொடுங்கூடி
யடவிற் பெருத்துச் சாசாத்த வுரோமத் தகன்ற தசைமார்புஞ்
சுடர்விட் டெறிக்குங் கருநிறமுங் கொடிய நோக்குந் தோற்றுவிக்க.

அளவில் சிறப்பி னைப்பசியிற் கால கால னவ்வடிவை [முகமும்
முளைவெண் மதிபோன் முடங்கியவெள் ளெயிற்றால் வெருவந் திரு
வளர்வெஞ் சினத்தான் மூவிலைவேன் மறலி யுடல்கோத் தெடுத்தகையு
மொளிருங் கணிச்சி கட்டங்க மடமான் கரங்க ளொருமூன்றும். ()

நீண்ட பவளப் படர்சடையு நிலவெண் மதியு நெடுவிசும்பை
மூண்டு சினத்தி ஞெக்குகின்ற நோக்க மூன்று முனிவர்விண்ணோ
ராண்டு வெருவந் தடியிணைக்கீ ழொதுங்கிப் பரவு மந்நிலையும்
பூண்டு வகுத்துப் புதுமலரா லருச்சித் தன்பு புரிந்தளிக்க. (கஉ௩)

நன்கார்த் திகையின் மழவிடைமே னயன மூன்று நகைமுகமு
மின்கான் றிலகு சடைமுடியும் விளங்கு மழுமா னிருகாமுந்
தன்கா தலியைத் தழுவுமிரு காமும் பால்போற் றவளமெய்யு
மின்கா தலினு லமைத்தருச்சித் தனைய விதியா லினிதளிக்க. (கஉச)

மாசில் சிறப்பின் மார்கழியில் வயங்குந் தவள மதிநிறமும்
பூசல் வரிவண் டாற்றுதொடைப் புரிமென் கூந்தற் பொருகயற்கட்
டேசு திகழுந் திதலைமுலைச் செவ்வாய்ப் பசிய தேறலொடு
மாசில் வடிவேறு குமரனொடு மமர்ந்த வடிவ மமைத்தளிக்க. (கஉரு)

தையிற் பெரிதாஞ் சிவலிங்கந் தனிவெள் விடைமுன் னுறத்தந்து [ணை
பையிற் பொறிகொள் வெள்ளெயிற்றுப் பகுவாய்ப் பாந்தட் பள்ளிய
மையிற் சுடரு மணிவண்ணன் வனசப் பொகுட்டு மறைக்கிழவன்
மெய்யிற் கீழ்மே லெனமன மாகித் தேடல் விதித்தளிக்க. (கஉசா)

இன்ன முறையி னிந்நோன்பை யினிதி னிழைத்தோ ரிவ்வுலகிற்
றுன்னும் விசும்பிற் றொலைவிலாப் பலனை யடைவர் தூநிதியந்
தன்னிற் குறைவு வாராமற் றிங்க டோறுந் தனித்தனியே
மன்னு சிவலிங் கமும்பிறவு மொருங்கே வகுத்து வானமுறையால். ()

திங்க ளீரா றினும்பூசை செய்து சிவலிங் கமும்பிறவு
மங்கை பாகற் கினிதளித்தான் மற்றங் கவன்றன் வடிவாவன்
செங்கட் பசிய கடவுள்வெள்ளை யன்ன வூர்தி செழுங்குலிசத்
தங்கண் விசும்பி னரசிமையோ ரவனைப் பூசித் தாதரிப்பார். (கஉஅ)

புனிதன் மொழிந்த வாகமத்திற் புராண மவற்றிற் புகன்றமுறை
வினவி விரதந் தானங்கள் விசேடித் தீண்டுப் புரிந்திடுக
பனிவெண் டிங்கட் கொழுந்தணிந்த பரமன் றிருக்கா ளத்திநகர்க்
கினிய வுலக மூன்றுள்ளு மெங்கா லத்து மிணையின்றால். (கஉகூ)

இன்ன முறையா லித்தீர்த்த வளமை குறையா தியம்பினேந்
துன்னும் விழைவோ டிக்கதை துணிந்து கேட்டோ ரந்நிலையே
முன்ன மிசைத்த பூசனையின் பயன்கண் முழுது மடைந்திடுவர்
பொன்னங் கழற்கான் மழைத்தடக்கைப் பொருவே லரசர் போரேறே.

முந்தோர் காலத் தித்தலத்தின் முற்று முலையின் முகிழ்நகையிற்
பைந்தார் நறுமென் சுருளளகப் பவளக் கனிவா யுமைகேட்பக்
கொந்தா ரிதழித் தண்படலைப் பவளச் சடிலக் குழகனென்று
நந்தாப் பிறவி கடப்பதற்குப் பரம ஞான நவின்றனனால். (கஙக)

அன்ன காலை யனையதொரு பரம ஞானஞ் சனற்குமரன்
முன்னும் யோகர் தாமுமுடன் கேட்டார் முன்னைத் தவப்பயனாற்
பின்ன ரதனைச் சனற்குமா னுயர்நா ரதற்குப் பெரிதுரைத்தா
னன்னா ரதன்பா லங்கிரா வுணர்ந்தா னவன்பா னுமறிந்தேம். (௯௨)

என்று பரத்து வாசனினி தியம்ப வவனை யெதிர்நோக்கி
யன்று பரமன் மலைமகளுக் கருண்ஞா னத்தைக் கேட்பதற்கு
நன்றும் விழைந்த தென்னுள்ள மதனை யெனக்கு நவிற்றுகென்றான்
மன்றல் கமழ்தே னூற்றிருந்து வரிவண் டுழுத மலர்த்தாரான். (௯௩)

ஆகச்செய்யுள், ௩0௯.

எட்டாவது

# தீவுகளின் இயல்புகூறிய அத்தியாயம்.



வகுழைத்து வைந்நுதிய பகழி கோத்துத் தெவ்வேந்தர் கட ற்றானை சிதறி யோட, மலையுறழ்திண் டோள்வலியால் வாகை சூடு மறங்கெழுபோ ரருச்சுன னுண் மகிழ்ந்து கேட்ப, வுலகமெலா மீன் றளிக்குந் தாயாய் ஞான வொளிவடிவா முமையவளுக் குரவோன் சொற்ற, பலர்புகழு ஞானத்தை யியம்ப லுற்றான் பழமறைநூன் முழுதுணர்ந்த பரத்து வாசன். (௧)

மறிதிரைய கடலுலகின் மாந்தர் யாதோர் மாக்கதைகேட் டந் நிலையே மறுவின் ஞானம், பெறுகுவரக் கதையைநினக் கறைத லுற் றும் பிறைக்கொழுந்து தவழ்சடையெம் பிரானைமுன்னு, ணறுநுதன் மென் சுருளளகக் குவளை யுண்க ணகைமதிவாண் முகத்துமையா ணயர்ந்து வேண்ட, விறையவனங் கவளோடு மகிழ்தூங் குள்ளத் தினியவருள் பொழிந்துபுவிக் கெய்தி னுனல். (௨)

மலர்தலைய நிலவுலக மடைவே காண மலைமகட்கு வானுயர்மால் வரைகள் காட்டி, யலர்கமழ்ந்து தேன்றுளிக்கும் வனங்கள் காட்டி யலையெறிதண் புனற்கடவு ணதிகள் காட்டிப், பலவளஞ்சேர் தேயங்க ளினிது காட்டிப் பாவையொடுந் தவமுனிவர் பாங்குசூழ,விலகுதிருக் காளத்தித் தலத்தி லெய்தி யினிதமர்ந்து வீற்றிருந்தா னிறைவன் மாதோ. (௩)

செந்துகிரும் வெண்முத்தும் பசிய பொன்னுந் திரைகொழிக் கும் பொன்முகரித் தென்றல்வீசப், பைந்தொடியோ டுவந்திருந்த

வேலை தன்னிற் பரமனவண் முகநோக்கிப் பகரலுற்றான், சுந்தரஞ்சேர் கருணையுமெய்ஞ் ஞானந் தானுந் தூயதொரு வடிவாய தோகாயிங்கு, வந்துபுவி காண்பதற்கு விருப்ப மான மற்றுனக்குக் காண்பித்தே மாபின் யாவும். (௪)

எண்ணரிய.வுத்தமமாம் பூமி முற்று மிருவிசும்பு தொடுகுவட்டு வரைகள் யாவும், புண்ணியவா ரணியங்கள் பலவும் பொங்கிப் பொருதிரைத்தெண் கடல்பலவும் புனித மாகி, நண்ணியமா நதிகளுநற்றேயம் யாவு நலங்கொாிபுரஞ் சூழ்நகரப பதியு நாளும், பண்ணரிய பலதொழில்சேர் மாந்த ரோடு பசுமுதற்பல் விலங்கு புள்ளும் பார்த்தாய் மாதோ. (௫)

இனிநினக்குக் கேட்கவேண் டியதி யாதொன் றீங்கதனைக் கேண்மோவென் றிறைவன் கூறப், பனிமதிவா ணுதலங்கை கூப்பியன்பிற் பணிந்துளத்தி லற்புதமாப் பகரா நின்று, டனிமுதல்வ வித்தரணி யெவ்வா றுகுந் தரணியினு வலந்தீவின் றன்மை யேது, நனியதனில் வருடங்க ளனைய வங்க ணார்முயலுந் தொழில்யாவை நவிற்று கென்றாள். (௬)

என்னலுமே யுமைகேளா யுயிர்யா வைக்கு மினிதுநன்மை வேண்டுமென விச்சை கூர்ந்து, பன்னரிய வருளின்வடி வான நீதான் பரிந்துவினு யதுசொல்வாம் பரவு மிப்பார், துன்னுமெழு தீவுடனே கூடி யைந்து தொல்பூத குணங்கட்கு மிருபபா யெல்லா, மன்னுயிர்க்குத் தாரகமாய் நம்ம தாணை மற்றொன்று மேகளாக ளுகி வைகும். ()

உவரியொடு மினியகன்ன றேற னெய்யே யுறுசுவைவெண் டயிர்தீம்பா லுவந்த நன்னீ, ரிவையேழு கடல்சூழ்வ திப்பா ரேழுக் கிடையிடையோ ரொன்றாக வேழு தீவுண், டவைநாவ லிறலிசான் மலிதருப்பை கிரவுஞ்சஞ் சாகம்புட் கரமென் றாகுந், தவறும லெழுகடற்கு மப்பாற் பூமி தண்புனலின் வடிவமாய்த் தயங்கு மாதோ. (அ)

தண்புனலின் வடிவாய வெட்டாம் பூமி தன்னுழையே மன்னுயிர்மற் றில்லை யப்பா, லொண்புகழ்ச்சக் கரவாள சயிலஞ் சூழு மோராயுத யோசனைகா றகன்றே யோங்கி, வண்பரிதி மதிக்கிரகம் வானமீன்கண் மற்றிவற்றின் சோதிதன்னுள் வயங்க நிற்குந், திண்புறமற் றவ்வண்ண மிருளா மப்பாற் றிகழண்ட பித்திகைபார் பொதிந்து சேரும். (௯)

கருதினிதீ னுட்பட்ட பூமி யைம்பான் கோடியோ சனையண்ட கபாலத் தோடு, மருவுமிது மறிகடலும் வயங்குந் தீவு மால்வரையு

மாநதிபு முடைநதாய வைகுமெ, பெருகொளிய மணிகடகுக கருபபை
யாகிப பிறஙகுவசுந தரையெனனுமப பெபராற றுனனி, விரிசெடிக
கும பைமபயிரகளுங கொடிககு நீடி மிடைதருவுக குமபிறபபு விளை
க்கு மாதோ (கo)

இபபுவியி லேலகோனற விருததன மாயத லிலகுமுததி பெற
விலுறறு லிதனை யாருஞ, செபபுவாகனை மகியெனறு நாவறறீவு திகழி
லககயோசனையி னகலஞ சேரு, முபபுததி புமமனைய விரிவிற றுகு
முயாநாவற றீவுமுத லோரேழ தீவுந, தபபரிய வொனறுககொன
றிரடடி யாகித தாமவிரியுங கட லகளுமித தகைய வாமே (கக)

நனபுனலசே ராழிககும பாலா ழிககு நடுவேபுட காததீவு
நணணு மாஙகே, தனபெயாதான மானசோத தரமென றோது தடம
பொருபபு வடடமாயச சகடச காலபோல, வனபுவியைப பகுநது
கொடு நிறகு மனனீர மறிகடறகு மனையமால வரைககு மாபப, ணின
பமவளா மாவீர வருடம வைகு மினியபோ கநதருவ தததா னென
றுமம (கஉ)

மானசோத தரகிரிககுப பாலா ழிககு மததியததிற றுதகியாம
வருட மஙஙன, மேனிவநத வவவரைமே யனறிப பாரவியனகிரிகள
வேறிலலை வெறபிற றேறற, மானநதி தானுமினறு மறைமயோ ராதி
யாயவரு மமுமினறு கடவுட பூசை, தானுமினறு புடகாததீ வியலபு
சாறறிற றரைபுலகிற பொனனுலகாயத தயஙகு மனமேற (கா)

ஆயிடையின வதிகினமேற ராபுள சொலலி னயுநவரு டஞ
சுகமே யமாவ ரிபபாற, ாயபா லாழிககு தகிவே லைககு தூலஙகு
நடுச சாகததீ வதனைச சொலலின, மேயவெழு வருடமெழு வெறபு
மேவும வியனசலசங குமாரமொடு சுகுமா ரநதான, பாயமணி சகங
குசோத தரஞச மீகம படாதுரும மெழுவருடமய பகருங காலே (கச)

தனியுதயஞ சலதார மிசைவ தஞசீரச சாமமமபோ கிரியாமபி
கேயஞ சிஙக, மினியவெழு வருடதது மிலகும வெறபோ ரேழினை
யாஞ சுகுமாரி குமாரி யெனறும, புனிதமுறு நளினிவே ணுகைமே
யிககுப புகழதேனு கைகபததி புகனற வேழு, மனையவெழு வரு
டதது நதிக ளாகு மாஙக மருஞ சாதிவகை யறையக கேடடி (கரு)

மாசிலா மாயாமா கதமோ தூய மானதாமந தகாமறையோ ராதி
நால்வா, பூசையிழைப பாாபரிதிப புததேத டனனைப புகலவரு-
மொனபதிஞ யிரமா மாயுள, வீசியவெண டயிரககடறகு நெயயா

ழிக்கு மிகுநாப்பட் கிரவுஞ்சத் தீவு மேவும், பேசிலெழு வருடமிதிற் பிறங்கு ஞானப பேரொளியாந திருவுருவப பேதை கேளாய். (கசு)

தொல்குசல் மருணமவெமமை பீவ ரநதான றுன்னுமந்த கார முனி துந்து பிபபோ், வல்லவெழு வருடமிவை கிரவுஞ் சஞ்சேர் வாமனகம் வளருமந்த காரம வாய்த்த, வெல்லொளிய மணிவரையே திவாக ரத்தோ டெழிற்புண்ட ரீகநதுந தூபியிவ் வேழு, நல்லனவா மவ்வருட மேழி னுள்ளு ஞாங்கரோங் கியவரைக ளாகி நண்ணும்.()

இருங்கவுரி குமுத்துவதி சநதி யைமற் றிராத்திரியே மஞே செவையே யிசைக்கி யா தி, யருமபுண்ட ரீகைநதி யாக வேழா மந்த ணர்முன் னல்வரையு மறையச் கேளாய், தரும்புகழ்சேர் புட்கார்புட் கலர்களோடு தன்னியரே பாணவகர் சாதி நான்காம், விரும்பியவெண் ணாயிரமாம் வருட மாயுள் விளங்கிழாய் நமைப்பணிவர் விழைவுற் றின்னோர். (கஅ)

தத்துதிரை நெய்க்கடற்கு ம துவே லைக்குந் தயங்குநடுக் குசத் தீவத் தீவு கன்னிற், சு நத முறு முற்பிகமே வேனு மத்துத் துவிர தமே யிலம்பனமே திருதி காமே, வைத்தபிர பாகரமே கபில மேயேழ் வருடமிவை வித்துருமம் வயங்கு மேம, மெய்த்துதிமான் புட்பவான் குசேச யத்தோ டரிதகமந தரமிவையேழ் வெற்பு மோங் கும். (கக)

அருந்தூத பாபைசி வை பவித்தி ரைபபே ராறுமிகு சம்மதையே வித்துத் தம்பை, திருநதுமகி யிவையேழு கடவுள் யாறு தெமிக ரொடு சுண்மிகளே சிநேகா செல்வம், பொருநதியமந தேகரிவை சாதி நான்காம் புகலினிவர் திசைமுகனைப பூசை செய்வர், கருநதடங் கண் ஞானப்பூங் கோதை கேளாய் கணிததிடு லே ழாயிரம்யாண் டுவர்கள் காலம். (உ0)

செந்தேற லாழிக்குங் கன்னற் சாறுத திரைக்கடற்கு நடுவே சான் மலித்தீ வாகு, நநதாத சுவேதமரி தஞசீ மூத நண்ணுமுரோ கிதநலஞ்சேர் வயித்து தநதான், முநதாய மானசஞ்சுப பிரப மென்று மொழிவருட மேழ்குமுத முன்ப தஞ்சீர், வந்தேறு பலாககமே துரோணங் கங்க மகிடமொடு ககுததுமான் வரைக ளேழாம். (உக)

பாவுமதி தோயைவிதி ருணையே சநத்ரை பாங்குறுசுக் கிலைவி மோ சனியே பீரம், விரிதிரைசீ நிவிருததி மிருதி யேழும் வியன தியாங் கபிலாரு ணர்கள்விக் கியாதர், மருவுகண்ணர் மறையவர்முன்

வருண நான்கா மேற்றிவர்க்கா ருயிரமே வருடம் வாணாள், கருதினிவர்
வாயுவையே யாரா திப்பார் கருணையொரு வடிவான கயற்கண் மாதே.

இரைகருப்பங் கடலுக்கு முவரா ழிக்கு மிடையிறலித் தீவதிற்
சாந் தபய மின்ப, மருவுசிசி ரம்மகோ தயமா னந்த மகிழ்சிவங்கே
மகந்துருவம் வருட மேழு, விரிசுடர்க்கோ மேதகஞ்சாந் திரமே
லோங்கி விண்டொடரு நாரதந்துந் துபிமா மேன்மை, பொருவில்சோ
முகஞ்சுமனமு வைப்பிராசம் புகல்வருட மேழிலெழு பொருப்பு
மாதோ. (௨௩)

தெழித்தபுன லனுதத்தை சிகிவி பாபை திருதிவைசீ ரக்கிலமை
யமிர்தை செம்பொன், கொழித துவரு சுகிர்தைநதி யேழு சாதிகூறி
டின சாரியர்கள் குரவர் தூய்மை, யழுத்தியசீர் வித்தியர்பா விரா
மாயு ளாயாயி ரம்மதியை யாரா திப்பர், மழைக்குலஞ்சேர் பொலங்கு
வட்டு நறுந்தண் சாரன் மலையரச னினி துயிர்த்த மஞ்ஞை போல்வாய்.

இன்னமுறை யிபம்பிவந்த வாறு தீவு ளியம்பாத வகைமுழுது
மெடுத்துக் கூறிற், றுன்னுமலர்க் காவுகு முந்தண் சாரற் றாங்கருவி
வீங்குபுனற் சுனைப்பைங் காவி, மென்மலர்ச்செந் தேறல்பொழி சிறிய
வெற்பும் வெண்டிரையா நதியும்விரி புனலின் காலு, மன்னவையா
வையுமயுத முளவித் தீவு ளவைவோரு மொருவர்போ லமர்வர்
மாதோ. (௨௫)

ஆகச்செய்யுள், ௫௪௫.

---

ஒன்பதாவது

# சம்புத்தீவின் இயல்புரைத்த அத்தியாயம்.



கார்பூத்த சுருளளகக் கருந்தடங்கட் கனிவாயா
யோர்பூத்த வுவர்க்கடல்சூழ்ந் தித்தீவு சட்கிடையே
சீர்பூத்த நாவலந்தீ வுளதாலத் தீவினடு
நீர்பூத்த செழுங்கமலக் கண்ணிகைபோன் மேருநிற்கும். (௧)

பலவகைய வானவரு மருந்தவரும் பயில்வாதி
விலகுமெண்ணீ ராயிரயோ சனைநிலத்தி னிடைத்தாழு
நலமலியு முன்னதமெண் பத்துநா லாயிரமாந்
தலைவிரிவு முப்பத்தீ ராயிரந்தா ளதிற்பாதி. (௨)

தங்கத்தின் விரிசுடராற் றயங்குமணிச் சோதியா
லங்கண்விசும் பிணைவிளக்கு மறுபதினா யிரம் வரைக
ளிங்கிதனைச் சூழ்ந்துளவா விலகுமஞ்சு வான்கங்கம்
பொங்குகிரி கூடமுரு சகநான்கு பொலங்கிரியும். (௩)

குணதிசையே முதலாகக் குலவுதிசை நான்கினிற்குந்
தணிசுபக்கஞ் சிசிரமொடு சங்ககூ டம்விருட
மிணையிலா விந்நான்கு மீரிருகோ ணத்திலகு
மணிதிகழிவ் வரையெட்டு மழகியகே சரமாக. (௪)

வருடங்கள் புறவிதழா மாநிலந்தா மரைமலராப்
பொருவில்சுடர் மேருவரை பொற்பொகுட்டாப் பொலிந்திலங்கும்
பாவுறுகீழ்த் திசைமுதலாப் பைங்கடம்பு நன்னாவல்
விரைகமழ்தொன் மரம்போதி விதிமுறைநின் றிடுமாதோ. (௫)

மற்றிமுறை யருணமே மானதமே பத்திரமே
யெற்றுபுனற் றிரோதமே யெனுநான்கு தடஞ்சூழுஞ்
சொற்றமுறை சயித்ரரத கோடவிழ்பூ நந்தனஞ்சீ
ருற்றிடுசா வித்திரம்வைப் பிராசமென வுளபொழில்கள். (௬)

பக்கவரை நான்கினிற்கும் பைம்பொன்மே ருவின்வடபாற்
றிக்கினுயர் நீலகிரி சுவேதகிரி சிருங்கவா
னிக்கிரிகள் குணகடலும் குடகடலு மியைந்துநிற்குந்
தெக்கிணத்தம் முறைநிடத மேமமிம கிரிசேரும். (௭)

அம்பொன்மே ருவின்குணபான் மாலியவா னெனுமசல
மும்பருயர் நீலநிட தங்களைத்தொட் டோங்கிநிற்குஞ்
செம்பொன்வரை யதன்மேல்பாற் கந்தமா தனசிகாந்
தம்பமா யம்முறையே யிருபாலுந தழீஇநிற்கும். (௮)

இந்நிலைய வித்தீவி லெய்திடுமொன் பான்வருட
மன்னவற்றின் பாகங்க ளறைகின்றா மணங்கரசே
மின்னுசுடர்ச் சிருங்கவான் வெற்பினுக்கு முவர்க்கடற்குந்
துன்னுநடுக் குருவருட மெனுங்கண்டஞ் சுடருமால். (௯)

ஆங்கதனில் வதிவார்க்கு நீலநிற மவருணவு
பாங்குடைய தீஞ்சுவைப்பால் பதினா யிரம்வருட
மோங்குமவ ராயுளெமை யுவந்துபணி வாரணையோ
ரீங்கினிக்கேள் சிருங்கவான் சுவேதநடு விரணியவான். (௧௦)

அன்னதோர் *கண்டத்தி லமர்வார்நல் லுத்தமர்கண்
மின்னுறுசெம் பொன்னனைய மேனியராய் விளங்குறுவர்
மன்னுசம்பீ ரக்கனிகண் மாந்துவர்மற் றவராயுள்
பன்மூவா யிரத்திருநா றருச்சிப்பார் பகலோனை (கக)

நீடுசுவே தந்தனக்கு நீலநெடு வரைக்குநடு
நாடிவிர மியவருட நண்ணுமவர் நிறம்வெள்ளி
பீடுகெழு தண்சினையா லம்பழமூண் பெருங்கடவு
ளாடலழல் பதினொரா யிரத்தைஞ்ஞூ றவராயுள். (கஉ)

வேறு.

நிவப்பின்மா லியவான் கந்த மாதன நிடத நீலத்
திவற்றிடை மேருச் சூழ விளாவிர தங்கா ணங்க
ணுவப்புடன் வதிவார் நாவற் கனிதின்ப ருடலம் வெண்மை
யவர்க்குவெண் மதியே தெய்வம் பதின்மூவா யிரமாண் டாயுள்.(கங)

நிடதநீ லக்குன் றுக்கு நீடுமா லியவா னுக்கும்
படுகுண கடற்கு நாப்பண் பத்திரா சுவமாங் கண்ட
மடைபவர் படிக வண்ண மாங்கனி நுகர்வ ராயு
டொடர்வுறு மயுத மாகும் வாயுவைத் தொழுவ ரன்னோர். (கச)

மேல்கட றனக்கு நீல வெற்பொடு நிடதத் திற்கும்
வாலிதி னுயர்ந்த கந்த மாதன வரைக்கு நாப்ப
ணேலுறு கேது மாலங் கருமையாங் கிருப்போர் வண்ணஞ்
சாலவு மயுத மாயுள் வருணனே தலைவ னுமால். (கரு)

இலங்கொளி நிடத வெற்போ டேமகூ டத்தி னுப்பட்
டுலங்கரி வருடத் துள்ளோர் தூநிறம் பொன்மை யாகு
நலந்திகழ் கன்னற் சாறு நாடொறு முணவு தெய்வம்
வலம்புரித் தடக்கைப் புத்தேண் மற்றவர்க் கயுதம் வாணாள். (கசு)

இருவிசும் பகடு தோய்ந்த வேமவெற் பிமய நாப்பண்
மருவுகிம் புருட மாங்கு வதிபவர் வண்ணம் பொன்மை
யரியநல் லிறலி யந்தீங் கனியுண வயுதம் வாணாண்
முருகவிழ் கமல பீடப் பழமறை முதல்வன் றெய்வம். (கஎ)

பனிவரை வடபா லுள்ள பாங்குறு வருட மெட்டு
மினிதமர் தெய்வ பூமி யாங்கவற் றிடையே வாழ்வோர்
தனிவிசும் புலகில் வாழு மிமையவர் தம்மை யொப்பப்
புனிதவுள் ளத்த ராகி நன்மையிற் பொலிவர் யாரும். (கஅ)

இன்னன கண்ட மெட்டி னிருங்குல வரைக ளன்றி
மின்னவிர் குவட்டி னேங்கு வேறுபல வெற்பும் யாறு
மன்னிய சிறப்பின் மல்குந் தெய்விக வனங்க டாமும்
பன்னரும் புகழி னீடிப் பலபல வாகி மல்கும். (௧௯)

மற்றவண் வதிவார்க் கெல்லா மணவாழ்க்கை முயற்சி யாதி
யுற்றிடு கவலை யில்லை யொண்குல வொழுக்க மில்லை
யெற்றைஞான் றினும்பொ ருத குளிர்வெம்மை யிரண்டு மில்லை
பற்றிய தத்த மிச்சைப் படிபயன் றுய்ப்போ ராகி. (௨0)

மாந்தரு மகளிர் தாமு மனத்தினுக் கியைந்த வாறே
பூந்தரு நீழற் கண்ணும் பொலங்கிரி முழையி னூடு
மேந்தெழிற குவட்டின் மீது மிருள்படப் பொதுளுஞ் சோலை
வாய்ந்ததண் சாரற் கண்ணு முயங்கினர் வதிவர் மன்னோ. (௨௧)

இலங்கிழை மகளி ரென்று மெண்ணிரு பிராயம் புக்க
நலங்கெழு செவ்வி மிக்கோர் நவையறு சிறப்பின் மாந்தர்
வலந்திக ழிருபத் தைந்து பிராயம்புக் கவராய் வைகிக்
கலங்குத லின்றி யூக்கம் வலியுடன் களித்து வாழ்வார். (௨௨)

பொறியா வவமி ருத்துப் புன்கணோ யச்ச மில்லைத்
தெறுசின மழுக்கா றில்லைச் சிந்தையின் கலக்க மில்லை
மறுகுறு தீன மில்லை வலிவலி யின்மை யில்லைக்
குறைவதி கங்க ளாதி வேறுமோர் குறைபா டில்லை. (௨௩)

அவ்வவ வருடத் துள்ளோ ராருமோர் செயலு மின்றிச்
செவ்விதிங் கிருந்து தத்தங் காலங்கள் சிதையுங் காறு
மெவ்வமற் றியல்பின் வாழ்வ ரிமவரை வடபா லாய
வவ்வுறு வருடம் யாவும் வகுத்துரைத் தனங்காண் மாதே. (௨௪)

பாரத வருடத் துள்ள பரிசினைப் பகரக் கேட்டி
சீரிய விமவா னுக்குந் தென்கட றனக்கு நாப்ப
ணோர்பெற வதுதான் வைகு மியற்றுமெக் கருமங் கட்கு
மோரிருப் பிடமா மன்ன தொன்பது கண்ட மாகும். (௨௫)

வேறு.

அன்னவற்றோவ் வொன்றுக்குப் பதினெண் *தீவுண் டாய்விளங்கு மிடையிடையே யாழி மேவும், பன்னதிக ளங்கங்கே யுள்ள

*தீவென்பது தேயமென்னும் பொருளில்வந்தது.

வாகு மிந்திரமே கசேருகமே தாம்ப்ர பன்ன, மன்னியசீர்க் கபத்திமா ஞகம் வண்மை வாய்த்தசவு மியம்வளர்கந் தருவத் தோடு, துன்னுறு வா ருணமே *பாரதமோன் பானுஞ் சொற்றநவ கண்டத்தின் ஹெருகு தியாமே. (உகூ)

இங்கிவற்றுட் பாரதகண்டந் தன்னி னுளு மிலகுமல யஞ்சுத்தி மழுனே விந்தந், தங்கியசீர் மகேந்திரமே பாரி யாத்ரந் தகுமிருக்க வான்சைய மிவைதா மேழும், பொங்குமணி களுந்தாது மருந்தி யாவும் பூத்திடமற் றையடொருப்புப் பலவுஞ் சூழுங், கங்கைநதி யமுனைநதி யிரேவை யாறு கவுதமிபா ரதிகண்ண வேணி சிந்து. (உஎ)

எண்ணியவிந் நதியேழு மற்றி யாறு மெண்ணிலாப் புள்விலங் குக் கிடமே யாகித், தண்மலர்கள் பலவகையாய் மலர்ந்த தெய்வத தருமிடைந்த வாரணியம் பலவுஞ் சாரு, நண்ணியமால் வரைவனங்க ணதிகள் சால நடுநடுவே நகர்பலவு நண்ணி வைகு, மொண்ணுதலே பாரதகண்டத் துள்ள வாகி யோங்குசன பதங்கடமை யுரைப்பக் கேண்மோ. (உஅ)

வேறு.

கருதுறு மங்கம் வங்கங் கலிங்கமோ டிலாடங் காதன்
மருவுகூர்ச் சரங்கு ருச்சீர் வாய்ந்த மாளவந் தெலுங்கம்
திரவிடங் கருந டங்கோ சலந்திகழ் குந்தளத்தோ
டுரைசெய்த விவையு மன்றித் தேயங்கள் பிறவு மோங்கும். (உகூ)

பரம்புமித் தேயம் யாவும் பலபல பொருள்க ளோடு
நிரம்பிடு மறையோ ராதி நிகழ்த்துபல் வருணங் கட்கும்
விரும்பிடு வாச மாகி வேந்தராற் பரிப்ப வாகி
வரம்பில்பல் வளனுந் துன்னு மலையர சுயிர்த்த பாவாய். (௩0)

பழிப்பில்சீர்ப் பத்தி ராசு வத்தொடு பார தஞ்சீர்
விழுத்தகு கேது மாலங் குருவென விரிந்த கண்டத்
தழற்பொலி திகிரி மாய னடுபரி வதன மாமை
வழுத்திடு கேழன் மீன வடிவமாய் முறையின் வைகும். (௩க)

இலகுசீர்ப் பாத கண்டத தினிதமர் மாந்தர் மேனிப்
பலபல நிறத்தோ ராகிப் பலபல கடவுட் போற்று
நலமுறு மன்ப ராகிப் பலபல வுணவு நண்ணிப்
பலபல வருத்த முற்றுப் பல்பல செயலுஞ் செய்வார். (௩உ)

* பாரதமென்றது பாரதகண்டத்தை.

ஆயுளும் வருட நூறு யமர்வரிப் பார தந்தான்
மேயதோர் கரும பூமி யாமிதில் வினைக்கீ டாகக்
காயம தெடுப்போர் துய்ப்பர் சுபாசுப மவர்க ருத்துந்
தூயநல் லறம்பா வங்கட் கொத்ததாய்த் துணிவு சேரும். (௩௩)

ஆங்கவ ரினைய கண்டத் தப்பய னுகர்தற் காய
தீங்கிலாப் புந்தி யோடுஞ் சேர்க்கையாங் கிளைஞ ரோடும்
பாங்குறு தொழிலி னோடுங் கூடியக் கருமம் பற்றி
நீங்கிடா வனுப வத்தின் மகிழ்ச்சியை நெடிதும் வைப்பார். (௩௪)

இன்னணந் தொழிலே மேன்மே லீட்டியத் தொழிலுக் கேற்ற
பின்னமில் பயனைப் பெற்றுப் பிறந்துதுய்த் திறந்து பின்னு
மன்னவா றிறுதி தோற்ற மளவின்றித் தொன்று தொட்டுப்
பன்னருந் துயரு ளாழ்ந்து பவக்கடல் கடக்க மாட்டார். (௩௫)

இத்தடம் புவியிற் செய்தி யாவையும் விரித்திப் போது
மைத்தடங் கண்ணாய் சொற்றோ மற்றினி யாது கேட்கப்
புத்தியின் விழைந்தா யென்னப் பொருசுடர் மழுவ லாண்சீ
ருத்தமிக் கியம்ப வன்னோன் றனக்கிவை யுரைக்க லுற்றாள். (௩௬)

இங்கிவர் தொழில்கள் யாவை தொழில்களி னியற்கை யேது
சங்கையற் றுணரு மாறு சாற்றுதல் வேண்டு மென்னத்
திங்களங் கண்ணி வானோன் றிருவருள் பொழிந்து சாலப்
பொங்கிய வுவகை யெய்தி யாங்கவை புகல லுற்றான். (௩௭)

ஆகச்செய்யுள், ௩௮௨.

பத்தாவது

# கன்மநிரூபணமுரைத்த அத்தியாயம்.

தாமம் புனையு நறுங்கூந்தற் சாந்தம் புனையுந் தடங்கொங்கைத்
தேமென் கிளவிப் பசுங்கிளியே திரைநீர் ஞாலத் தின்னுயிர்க
டாமிங் கிழைக்குங் கருமங்க டருமம் பாவ மென்றிரண்டா
மாமென் றுணர வவையிரண்டு முள்ள முறையி னறைகுவாம். (௧)

கொல்லா மைமெய் கள்ளாமை பிரம சரியங் குலவுதெய்வ
நல்லா தாரநற் பூசையரு ணட்பின் விழைவு மனவடக்க
மல்லா லுவகை குலவொழுக்க மமராச் சிரம வடைவீகை
யொல்லா நிற்கும் பரலோகக் கருத்தைதம் பொறியு மொடுக்குறுதல். (

காமம் வெகுளி முதலியவை கடிதல் கருத வரியதவந்
தோமில் பிறர்க்கு நன்றிழைத்தல் பயனல் லவற்றைத் தொகுத்தறித
லாமிங் கிவற்றைப் புண்ணியமென் றருமா மறைவல் லவூரறைவர்
தூமென் சிறைவண் டறைநறவந் துளிக்குங் கமழ்பூஞ் சுரிகுழலாய்.()

கொலையும் பொய்யுங் கொடுங்களவும் பிறரை வருத்துங் குணக்கேடு
மிலகுங் கடவுட் பழிப்பதுவு மியார்க்கு மிடும்பை யெண்ணுவது
முலைவில் பிறனில் விழைவதுவு மொன்று முதவா திவறுதலுங்
குலநல் லொழுக்கந் தவறுதலு மறுமை யின்மை கூறுதலும். (௪)

பொறிகண் முழுது மைம்புலனிற் போக விடுக்கும் புல்லறிவுஞ்
சிறிதென் றறத்தை யெள்ளுவதுஞ் செய்யா வொழுக்கஞ் செய்வதுவு
மறையின் வரம்பு கண்டவர்க ளிவற்றைப் பாவ மெனவகுப்பர்
நறவு பொழிந்து நனையவிழ்பூந் தாமக் கூந்த லன்னுதலே. (௫)

தீய செயலைத் துணையிழைத்தான் சேரும் பழங்க ணத்துணையுந்
தூய செயலைத் துணையிழைத்தா னெருட ரு மின்ப மத்துணையு
மாய வழிச்செல் பவர்தமக்குக் கள்வ ருழுவை யாதியச்ச
மேயு முறைபோற் பாவி கட்கு மெய்து மிழைத்த பவப்பயனே. (௬)

அறத்தை யாற்றி னவர்தமக்கு மவ்வா றடையு மதன்பயனென்
றெறிக்குஞ் சுடர்வெண் குழவிமதி தவழுஞ் சடில னியம்புதலுங்
கறுக்குங் கமஞ்சூற் கொண்டல்புரை நறுமென் கூந்தற் கருந்தடங்க
ணறைக்குங் குமத்தண் களபமுலை ஞானக் கொழுந்து நவின்றிடுமால்.

வையத் தெனினுஞ் சேண்விளங்கு வானத் தெனினு மற்றினிமே
லெய்தக் கடவ பவத்தெனினு மிழைத்த வினையின் பயனையுயி
ரையப் படாம லடையுமென வருள்செய் தனையாங் கதுதன்னைச்
செய்திப் படுத்தித் தெளித்திடுயென்று டேவர் பெருமா னருள்செய்வான்.

மழலைக் குழவி வேட்பவாம் மகத்தை யாற்றி யுயிர்ப்பதுபோல்
விழையப் பட்ட பொருளனைத்துந் தவங்க ளிழைத்து மேவுதல்போற்
பழுதி லுயிர்தம் வினைப்பயனிப் பவத்தி லெனினும் பனிவிசும்பிற்
றழுவு முடம்பி லெனினும்வரு பிறப்பி லெனினுந் தாமடையும். (௯)

போகம் பலவுஞ் சிலர்வெறுத்துத் தானமுதல புண்ணியஞ்செய்
தாகும் பயனை வருபிறப்பி லடைவ ரதுபோற் றீவினைகண்
மோகந் தன்னு லிழைத்தவரு மவற்றின் பயனை முயங்குவர்கா
ணேகுந் தகைத்தோ புசித்தன்றி வினையின் பயன்றான் யாவர்க்கும்.()

வேறு.

யாவர் தாஞ்சிலர் வைகலு மன்னையை யீன்றதா தையைத்தம்முன்
மேவி னோன்றனைத் தேசிகர் தங்களை விழைவொடும் வழிபட்டார்
பூவர் கற்பகக் காவுசூழ் பொன்னகர்ப் பொலஞ்சுடர் விமானத்திற்
றேவர் பூசனை யாற்றிடச் சென்றுநற் செல்வமுற் றிருப்பாரே. (க௯)

பிணியு மூப்பவ ருய்குவான் மருந்தினைப் பெட்பொடு மளித்தந்நோய்
தணிய வேபுரந் தளிப்பவ ரெவரவர் தடங்கடன் முகட்டிற்போந்
திணையில் செங்கதிர் பரப்பிய வோருரு ளெழுபரித் தேரேறி
நணுகு வானவ னுலகிடை வேண்டிய திருவொடு நனிவாழ்வார். ()

பிறர்ப ழங்கணை யாவர்நீக் குநரவர் பெரிதுள மகிழ்தூங்க
வெறிசு டர்ப்படைக் குலிசவேந் துலகிடை யினிதுவீற் றிருப்பார்கள்
வறிய வேதியர்க் கிருநிதி தானியம் வழங்குபு மகிழ்வித்தோர்
குறைவில் பன்னெடுங் காலமேழ் முனிவா ருலகினிற் குடியாவார். ()

நாளும் வெந்தழல் வேள்வியை யினிதுற நடாத்தலுற் றிடுநல்லோர்
மூளு மன்பினின் மூவெழு சுற்றமு மெழுவகை முனிவோர்க
ளாளு நல்லுல கத்தினி லேற்றியே யன்னவர் தாமும்போய்
நீளு மிந்திர பதமுதற் பதங்களி னெடிதுவாழ் குவர்மாதோ. (உஉ)

பைம்பொ னல்குவோர் திலத்தினை யளிப்பவர் பசுவினை வழங்குற்றோர்
தம்ப மாம்புவி யுதவின ரிவைமுதற் றானங்கள் பலசெய்தோர்
கம்ப மும்மதக் கலுழிநால் வாயுயர் களிநல்யா னையிற்போது
மும்பர் வேந்தென வும்பர்வாழ்த் துறவம ருலகினி லுறைவாரால். ()

இனைய பண்பினால் வைகலு நல்லறத் திச்சையா லொழுகுற்றோ
ரனைய புண்ணியப் பேற்றினா லடைந்திடு மரும்பெறற் றிருவோடு
நினைவ ரும்பெருங் களிசிறந் தெங்கணு நிலவிநா டொறும்வாழ்வார்
புனித நல்லறம் யாவையு மிழைத்துள புண்ணிய வடிவொப்பாய். (உ௪)

ஈண்டு ரைத்தவிம் முறைகளிற் றவறியே மறுமைவே றிலையென்று
வேண்டு காமமே முதலிய குணங்களில் வீழ்ந்தவர் மிகுதுன்பம்
பூண்ட மாரவு ரவமுத னரகிடைப் புழுங்குவர் பிறர்கட்கு „ [வர்.
மூண்டி டுந்துயர் விளைத்தவர் கொதிக்கொளுந் தயிலமூழ் கினர்வே

அனைய ரின்னுயி ராற்றருந் துயரினா லகன்றிடும் பலகாலுந்
துனைய வந்திடு மிம்முறை துயர்வர்நற் றொன்மறை யிகழ்கின்றோ
ரெனைய ரன்னவர் நாவினைப் பன்முறை பிடுங்கியே யஃகுதர்.
நனிய ரிந்திடு வாரவர் படுதுயர் நவின்றிடு தகைமைத்தோ. (உ௬)

சாது வாமவர் தங்களை யார்சிலர் காரணந் தானின்றி
வாதை செய்குநர் வயிர்த்தவுள் ளத்தராய் மற்றவர் வானின்றும்
போத வேபொழி பொருபடை மழைகளாற் புலா லுடைத் தம்மேனி
நோதன் மீக்கொள வெள்ளளா யரிபட்டு நுண்டுக ளாவாரே. (உஎ)

உளங்க வர்ந்தமெய் வனப்பினு விளமையா லுண்மதர்ப் புடன்யாவர்
களங்க னிச்சுரு ளோதியிற் பிறர்மனைக் கலவிவேட் குநரன்னோர்
துளங்கு மாண்குறி யரிந்தரிந் தேயமா தூதராங் கவர்வாயில்
விளங்கி டும்படி பன்முறை கவ்வுவித திடுவர்வெஞ் சீற்றத்தால். (உஅ)

தந்தை யானவன் முனிவொடு நோக்குறிற் றானுமங் கஞ்சாமன்
மைந்த னுமவன் வெகுண்டெதிர் பார்த்திடின் மற்றவன் விழிதன்னில்
வெந்த நுண்மணல் சொரிந்திட வழங்குபு வெந்நர கினைப்பல்கா
லந்த மின்றிய துயரொடு மடைவனங் கவனிடர் சொலற்பாற்றோ. ()

யாவ னோரறி வில்லவன் றன்னொரு குரவனை யெண்ணுமற்
போவெ னுஞ்சொலாற் கடியினு நீயெனப் புன்மொழி புகன்றாலு
நாவை யந்தகன் றூ துவ ரென்னளா யரிகுவர் நாடோறும்
பாவ காரிக ளிம்முறை ரவுரவ மாதியிற் படிவாரே. (௩௦)

அந்த ணன்கொலை கள்ளுணல் பொற்கள வருளுடைக் குருதற்பஞ்
சிந்தை செய்வினை யிவற்றைமா பாதக மென்பர்சீ ரியமேலோர்
வந்து மற்றிவர் தம்மொடுங் கூடுபு மகிழ்ந் துண்டு துயில்கொண்டு
சந்த தம்மொராண் டிணங்குந மேலடுமா பாதகந் தாமைந்தாம். (௩௧)

ஈங்கி வற்றினை யிழைத்தவ ரிறந்தபி னெண்ணரு நெடுங்கால
மாங்கு வெந்நர கடைகுவ ரடைந்தபி னுண்புழ வவையாகி
யோங்கு பல்விலங் காதியா யுதிப்பர்கள் பின்னரு முலப்பெய்தி
நீங்க ருங்கொடுந் துயரினை நிறைதந்திடு நிரயம தடைவாரால். (௩௨)

ஈண்டி வர்க்கொரு பிரமகறு பத்தள வின்னண மிடரல்லால்
யாண்டு முப்வழி யில்லைமற் றிவற்றுட னெதிர்சொலத் தகுபாவ
மூண்டு ஞற்றிய விழுதையர் சாலவு முடிவில்லவா துயரெய்தி
யாண்ட தற்கதற் கியைந்தவெந் நிரயமே யருந்துவ ரெனச்சொற்றான்.

சொற்ற வாய்மொழி கேட்டவென் னழுமைதன் றுணைவனை யெதிர்நோக்கி, மற்றி வற்றினுண் மறையவன் கொலைக்குநேர் வருகின்றதொருபாவ, மெற்றெ னப்புகன் றிடுதலு மியம்புவா னிளநிலாத் தவழ்சோதிக், கற்றை வார்சடை நெற்றியங் கண்ணுடை யொற்றை வெண் குழைக்காதன். (௩௩)

அழிபெ ருபசி யந்தணர்க் கடிசில்யா னளிப்பனவா மெனச்
சொல்லி, மொழியை, நம்பியாங் கவன்செலச் சென்றபின் முனிநு
துணை விலையென்றேன், பழுதில் வேதியற் செகுத்தவ னிகர்தரு
பாதக னெனச்சொல்வ, ரழக னைத்துமொன் றுய்த்திரண் டனையதோ
ரமுதினு மினியாயே. (௩௫)

கல்வி யாவையுங் கற்றநுண் ணறிவுடைக் கருதரு மறையோன்றன்
செல்வம் யாவன்மற் றபகரித் தானவ னந்தணற் செகுத்தோனுஞ்
சொல்ல வேதுவொன் றின்றிய முனிவினாற் றேல்பு நகர்தூய
நல்வ னந்தழ லூட்டினோன் றனுமங் நலமிலிக் கொப்பாவான். (௩௬)

தாக மாகிவந் தானினந் தண்புனல் பருகுறிற் றகைதீர்முன்
னாகு லப்பட வவற்றினைத் துரந்தவன் றனுமங் கவன்போல்வான் [த
மோக நல்லெழில் விஞ்சைமெய் யிளமைமா முதுக்குறை வொழுக்கத்
னாகு நன்மறை யவன்றனக் களித்திடா தரும்பெறன் மகடன்னை. ()

குணமு மின்றிநல் லொழுக்கமு மின்றியே குலத்தினு மிழிந்தானா
யுணர்வி லாவொரு வன்றனக் கிச்சையி னுதவினோ னவற்கொப்பான்
றணிவில் கண்ணிலர் வெதிரர்கள் பங்கினர் தம்பொருள் விழைவுற்றுத்
துணிவொ டுங்கவர் கின்றவ னெவனவன் றனுமுற் சொற்றோனே ()

முறையி கந்ததோர் செயலினாற் பொய்மையான் மூதுணர் மறை
யோர்க்குப், பொறைய ருந்துய ரிழைப்பவ ரெவராவர் பூசுரற் செகுத
தார்தா, மறைய வன்கொலை நிகர்சில பாவங்கள் வகுத்தன மற்றின்னு,
மறைகு துஞ்சில பாவங்கள் வேறுள வாற்றரி தவைகேட்பின். (௩௧)

கொடிய பாதக மெவற்றுளு மந்தணன் கொலைகொடி ததுவேபோ
லொடிவி லாவற மெவற்றுளும் பரிமக முயர்ந்ததா முமையேகேள்
வடுவி னற்குல வொழுங்கினுக் குரியதா மரபுறு செயலாற்றி
னெடிது மன்னதே தானம்யா கந்தவ நிறைபயன் றருமாதோ. (௪0)

மன்னு யிர்த்துணை யாகிய வருணவாச் சிரமங்கள் வழுவுற்றோர்
துன்னு மெவ்வகைப் பாவமுந் தருபயன் றுய்ப்பர்தொல் லுலகத்தை
நன்ன லம்பெற வளித்திடச் சிருட்டியி னாதியி னுஞ்சொற்று
முன்னு நல்லொழுக் கந்தரு பத்ததி புந்தியி னுதித்தோற்கே. (௪௧)

உந்தி மாமல ருதித்தவ னுணர்த்துற நாரத னுயர்குற்சன்
செந்த மிழ்க்குறு முனிவரன் வசிட்டனத் திரிமனு முதலாய
வந்த மின்றிய பெரியவர் தாமுணர்ந் தந்நெறி நிலைநின்றோர்
முந்து மிவ்வரு ணாச்சிர மத்தொழின் முயன்றினி திழைத்தோர்தாம்.

இம்மை தன்னிலு மறுமைதன் னிலுமழி வின்றிய பேரின்ப,
மம்ம வெய்துவ ரிருவினை முறைமையை வினவினை யவைசொற்று,
நம்மை யிண்டினிக் கேட்பதி யாதனை நவிலென நவில்கின்றாள், கொ
ம்மை வெம்முலைக் கொடியிடைப் பிடிநடைக் குயின்மொழி மயில்
போல்வாள். (௪௩)

சங்க வெண்குழைக் காதுடை யிமையவர் தலைவவார் சடைமீது
திங்க ளங்கதிர்க் குழவியை யிலைத்தவ செப்பிய வருணத்தி
னங்க மாகிய வொழுக்கமு மாச்சிர மங்களு மவாவுற்றே
னிங்கி யம்புதி யென்றனள் யாவையு மீன்றவெம் பெருமாட்டி. (௪௪)

ஆகச்செய்யுள், ௯௨௯.

பதினொன்றாவது

# வருணாசாரமுரைத்த அத்தியாயம்.

பனிமால்வரை தருபைந்தொடி பதுமத்திரு வதனந்
தனிமான்மழ விடையூர்தரு தலைவன்னெதிர் நோக்கி
யினிதாகிய குலநான்கினுக் கியைவுற்றிடு மொழுக்கங்
கனிவாய்மலர்ந் துரைசெய்குவன் கருணைக்கடன் மன்னே. (௧)

வேறு.

அந்தணர் செய்தி வேள்வி யாற்றுத லாற்று வித்தல்
சந்தமா மறைக ளோத லோதுவித் திடுத றக்கார்
சிந்தனை யுவப்ப வீத லேற்றிட லாறுஞ் செப்பிற்
புந்தியின் மிக்கோ ரன்னோர் தொழிலெனப் புகன்றிட் டாரே. (௨)

முண்டகத் தவிசின் மேலோன் முழுதுல களித்து நாளுங்
கொண்டிடு மொழுக்கந் தன்னைத் தாபித்தல் குறித்துத் தூய
பண்டரு மறையைத் தந்து மறையினை நிலைமை பண்ண
மண்டலந் தன்னிற் றூய மறையவர் தமையுந் தந்தான். (௩)

மாமறை யவர்கள் யார்க்கு முய்வகை யுணர்த்த வல்லோர்
தோமில்சீ ரனையர் தம்மை நன்மையுஞ் சுகமு மற்றுங்
காமுறு பிறவும் வேட்டோ னெஞ்ஞான்றுங் கருத்தி னோடு
மேமுற வழிபா டாற்றி யினிதுவீற் றிருப்பன் மன்னே. (௪)

பெருந் துன்ப மெய்திக் கவலுநர் தமக்குஞ் சால
வொழிவரும் பிணியின் மூழ்கி யுழல்பவர் தமக்கு நீங்காப்
பழிபடு பாவஞ் செய்து பரிபவர் தமக்கும் பார்க்கிற்
செழுமறை யவரே. யுய்யுந் திறத்தினைத் தெரித்துக் காப்பார்.

புடகர மாதி யாய புனிதநற் றீர்த்தம் யாவுந்
துட்பமார் கடவுட் கங்கை முதலிய நதிக டாமு
நுட்பமெய் யுணர்வின் வேத நுவல்பவர் தோன்றாண் மண்ணு
மட்கலில் புனலி னுளு மருவுறு வைகு மாதோ. (௬)

பழமறை யவர்க்கொப் பாய பண்ணவ ரில்லைப் பாரில்
விழுமிய வவர்க்கு நேராய் விளங்குதே சிகரு மில்லை
வழிபடு மவரின் மிக்க துணையில்லை மனிதர் காறே
வழிவிலிந் திரன்முன் னோர்க்கு மருச்சித்தற் குரிய ரன்னோர். (௭)

முடியுடை வேந்தர் செய்தி முத்தழ லோம்ப லோதல்
கொடைபுரிந் திடுத றேயம் புரந்திடல் குறைக டற்பா
ரடையுமன் னுயிர்க ளுள்ள முவப்புற வரசு செய்த
றிடமுறு மனுநூ லாய்தல் செருவினிற் புறங்கொ டாமை. (௮)

மதித்திட வுயர்த னல்ல மந்திரச் சூழ்ச்சி மான
முதுக்குறை வினைபார் வேந்தர் முறையின்னு மொழியக் கேட்டு
விதிக்குமெக் கருமத் துள்ளு மடியின்றி மிகவும் புத்தி
யிதத்தநற் புரோகி தத்துக் கினியரைத் தமக்கொப் பாக்கி. (௯)

விளங்கிட வைத்து நன்மை வேண்டிய வேந்த னன்னோ
ருளங்குளிர்ந் துவப்ப யாவு முதவுக வனை யோர் தாமும்
வளங்கொள்சாந் திகமுன் னுய கருமத்தின் மனம்வைத் தோராய்க்
களங்கமின் மனத்தி னோராய்க் கடவுட்டன் மையர்க ளாகி. (௧0)

லாய கணக ளுடையாராய நினைகளற பாவம
யாதுமில் லவராய் நுண்மை யியலுணர்ச் சியுமுள் ளோராய்
மூதுணர் பழையோ ராகி யிருப்பினம் முதியோ ராய
வேதியர் தம்மை மந்த்ர விசாரத்தின் விடுக்க வேந்தன். (௧௧)

தூயரா யடங்கி னோராய் நிபுணராய்த் துணியு முள்ளத்
தாய்தலொத் துளரா யொத்த வமைச்சரை யடுபோர் தன்னி
லீகையிற் பொருள்க ளீட்டு மீட்டத்தி லிவைமுன் னுய
மேயபல் வினையி னுள்ளும விடுத்துச்சோ திக்க வேந்தன். (௧௨)

கள்ளுணல காமஞ் சூது கப
தள்ளிவிட் டொறுக்குந் தண்டஞ் சாற்றருங் கடுஞ்சொற் சாற்ற
றெள்ளிய நிதியந் தன்னை யளவின்றிச் செலவி னுய்த்த
லொள்ளிய ரிவையோ ரேழும் வியதன மெனவு ரைப்பர். (கரு)

மாற்றுக விவற்றை வேந்தன் மாநில வரைப்பி னீதி
யாற்றிடி னுயிரை யெல்லாம் வளர்ப்பிக்கு மதுவே யன்றி
யேற்றதோர் செல்வத் துக்கு மேதுவா மிதனு னீதி
போற்றுக புகழும் வாழ்வும் பொலிவும்பெற் றுயர்தல் வேண்டின. ()

அறத்தினிற் றிறம்பா வேந்தன் வழக்கினை யாராய் போது
திறத்தினைத் தெரிவோ னுகித் தெளிதரு மமைச்ச ரோடு
மறைக்குலத் தவர்க ளோடு மாராய்க வடுச்செய் தோனை [ன்.
யொறுத்திடா ததுஞ்செய் யானை யொறுப்பதுஞ் செய்வா னென்னி

பழிமொழி யிம்மைக் கெய்தி மறுமைக்கும் பழங்கண் டீரா
விழுநரா கடைவன் வேந்தன் விழைவினு லச்சந் தன்னுல்
வழுவுறு மிவற றன்னுன் மற்றிவற் றென்று மேலனு
மொழிவிலா வறங்க ளுக்கு மாறதா யுயிர்க டம்மை. (கசு)

ஒறுத்தவ னதற்கி ரட்டி யுறுகணுற் றிடுவ னெத்த
திறத்தினு னிகழ்கா லத்துச் செய்தியுந் தெரிந்து கண்டு
மறப்பிலா நண்பர் கண்ணு மாற்றமா யுள்ளோர கண்ணும
வெறுத்திடுங் கொடியோர் கண்ணும் விழுத்தகு நல்லோர் கண்ணும்.

சிறந்துள பெரியோர் கண்ணுஞ் சிறியவர் கண்ணுஞ் செல்வ
நிறைந்திடு தனத்தோர் கண்ணு நிலையிலா வறியோர் கண்ணு
மறந்திகழ் சோரர்கண்ணும் வழாமலா ராய்ந்து பின்ன
ரறந்தவா தொறுத்தல் செய்க வறனழித் தொறுப்ப னுயின். (கஅ)

அறிவிலா தவனு மாகிப் பாவியு மாவன் வேந்தன்
மறுவில்கா ரியம்யா வைக்கு மந்திர மூல மென்னு
முறுதியால் வருத்த முற்று மமைச்சரை யோம்பல் வேண்டு
நிறையுடை மனத்தி னென்றைத் தமியனுய் நினைந்தா னேனும். (கக)

பின்னரு மொருவன் றன்னே டுசாவுக பிறரோ ருத்த
ருன்னருஞ் சூழ்ச்சி தன்னை யறிவுறு துசாவல் வேண்டு
மன்னிய ராய வேந்தர் செய்தியு மாராய் விக்க
நன்னினை வொருத்தர் காணு வொற்றினை விடுத்து நாளும். (உo)

நாளினைக் கடிகை யாக்கி யவ்வந்நா ழிகைத னக்கா
மாள்வினை யோடு மாற்றுஞ் செயலினை யசாவா னாகி
நீளுறு முசித மாக நெறிவழா தியற்றல் வேண்டும்
வாளொளித் துறக்கம் பூமி பாதல மதிக்க வேண்டின். (உக)

கரைகனிப் பொருளுந் தன்றே யத்துள கமழுங் காதல்
விரவுபவ் வியமா யுள்ள விற்பதுங் கொளலு மாய
விருநிதிக் குவையுங் காவி லிருங்குல வரையிற் காட்டிற்
றிரைகடன் முதல வாய தலங்களிற் சேர்ந்த பொன்னும். (உஉ)

தேயதே யத்து வேந்தர் செலுத்திடுந் திறையுந தெண்ணீ
ராயதி னிலத்தி லுள்ள கனகமு மழகார்ந் தோங்குஞ்
சேயிழை யாடை நல்குஞ் சுற்கத்தில் வருசெம் பொன்னுந்
தூயதா னியவ கைக்கண் வருவதுந் தொகுத்துக் கண்டு. (உங)

அப்பொரு ளாற்கூ றுக்கி யாங்கவற் றொருகூ றேனு
மொப்புறு பாதி யேனு மூன்றுகூற் றொருகூ றேனு
மெய்ப்பொருள் பகிர்ந்து நன்கு மதிப்பதாய் விடப்ப டாதாய்ச்
செப்புதற் கினிய தாய செலவினிற் செலுத்தல் செய்க. (உச)

பெருங்கொடை யுடைய னாயி னிருநிதிப் பெருக்க மின்றிச்
சுருங்குவன் மறத்தல் சோம்பன் முதலாகத் தொடர்ந்த குற்றம்
வருந்துவ பிறவு முள்ள வெவ்வையவை தவிர்க மன்னன்
றிருந்துநால் வருணத் துள்ளோ ரொழுக்கமுங் காத்தல் செய்வோன.

மல்லலஞ் சிறப்பி னோங்கு மன்னவ னாத லாலே
நல்லவை தமக்கெஞ் ஞான்றும் வேண்டினோர் நனியு மஞ்சி
வெல்லருந் தானை வேந்த னானையுண் மிகந டக்க
வல்லது செய்யிற் றங்கட் கழிதுயர் விளைத்துக் கொண்டோர். (உசு)

நரபதி யுலகுக் கெல்லா நாதனு நார ணன்றன்
றிருவுரு வெனவே யாரு மனையவற் சேவை செய்க
விரவுறு கீர்த்தி செல்வம் வேண்டிய வேந்தன் றானு
மருமறை யவரே யெல்லாத் தேவுமென் றாரா திக்க. (உஎ)

இன்னவா றரச நீதி யெழுதரு மறையி னோடு
பன்னரு மிருதி தானும் பகருமிப் பகர்ந்த பண்பி
னந்நெறி யொழுகும் வேந்த னிம்மையி னதிக நன்மை
துன்னுவன் மறுமைக் கண்ணுந் தொலைவிலா வின்பந் துய்ப்பன்.

வணிகர்தஞ் செய்தி கூறின் மகவினை யாற்ற லோத
லுணர்வுடை யவர்க்குத் தான முதவல்லே வளாண்மை யோம்ப
றணிவில்வா ணிகத்தா லீட்ட லாணினந் தழையக் காத்த
றுணிவுறு மிவைமற் றன்னோர் செய்தொழி றோகை யன்னாய். (உகூ)

கொள்வன கொடுப்ப வாய செயல்களிற் கொண்டு வில்லா
ரெள்ளொடு கந்த மும்பா னெய்முன்னு மிரதந் தாமுந்
தள்ளொணு வுழவிற் செட்டிற் றுனியந் தனங்க ளீட்டும்
வள்ளியோன் றன்னை நன்கு மதிப்பர்கண் மற்றி யாரும். (௩௦)

பின்னவர் செய்தி பேசிற் பிடிசொன் மறையோ ராதி
முன்னவர் மூவர் தம்மை முறையினு தரித்தன் மூவர்
சொன்னவை முடித்த லென்றுந் தூநிதி விதியி னீட்டி
யன்னதை யறத்தி னீத லவர்க்குமுத் தொழிலா மன்றே (௩க)

வேதிய ராதி யானோர் யாதொன்று விதித்தா ராங்கு
நீதியி னதுவ முமவ் விழைக்கவந் நிலைமை தன்னு
லாதரித் திடுவ ரன்னோ ரவர்தமை யடைவே நான்கு
சாதியி னொழுக்கஞ் சொற்றுந் தனித்தனி பிரித்துச் சால. (௩உ)

ஈண்டினி தியம்பக் கேட்டி யினியநால் வர்க்கு மொப்பாய்
வேண்டிய பொதுவொ ழுக்கம் விளம்புறின் மெய்யின் றூய்மை
மாண்டதோர் பொறைமை யாதி *வருணியின் முறைமை வாய்மை
காண்டகு விழைவி னோடும் விருந்தெதிர் கொண்டு காத்தல். (௩௩)

விழுத்தகு பருவ மாதி காலங்கள் விடுத்துப் போக்கி
யொழித்துள காலந் தன்னின் மனைவியோ டுறுத லாய
பழிப்பிலா விவையா வர்க்கு மிசைவன பாவை நல்லாய்
வழுக்குறு தினிமே லொன்கு வருணவாச் சிரமஞ் சொல்வாம். (௩௪)

என்றிவை யிசைத்தான் மன்னே வெறிசுடர்க் கயிலை போன்ற
மின்றிகழ் பிறைவெண் கோட்டு வெள்விடைப் பாகன் மேருக்
குன்றுறழ் குவவுக் கொங்கைக் கொடிபுரை நுசுப்பிற் றீஞ்சொன்
மன்றலங் கருமென் கூந்தன் மலைமக டனக்கு வாய்ப்ப. (௩௫)

ஆகச்செய்யுள், ௩௩க.

*வருணி - பிரமசாரி.

பன்னிரண்டாவது

# நால்வகையாச்சிரமமுறைத்த அத்தியாயம்.



மழைமதர்த்த தடங்கண் வானுத லுமைகேள் வருணவாசிர மத்து மாபைப, பழுதிலசீாச சாத கருமமுன் னுய பலவகைக கருமமு மறையோர், விழைவொடு மிழைபபா வெமபிணி வரினும வேறிடை யூறுவந துறினு, மொழிவுறுங கருமம பின்னாற றுவதோ டொருங குற வுஞற்றுதல வேணடும. (க)

என்றவ னுதாத திருநதயாண் டாதி யாயினு மீங்கிவ னுயிாபபத, தோன்றிய யாண்டு தொடஙகியே யெனினுந தொழுகுலத் தவா தமக் கிருநான், கான்றநற பிராயத கரியதன் சாகைக் கமைநதவா றவி ரொளி முநநூா, ருன்றரித திடுக விமமுறை யேவநதா தரிபபராண டொருபதி னென்றில (உ)

இநநிலை வணிகன் றரிக்கவீ ராறி லிசசெய விழைததபின் வருணி |ங தன்னருட் குரவன் றனையடைந தனனுன் சார்வுழி வைகலுஞ சாாநத கன்னவ னேவ விழைததரு மறையு மங்கமு மதிகரித திடுக பன்னருங் கலைமா னுரிவையுந தரிகக பலாசயா தணடமும பரிகக()

முறையினிற சவுச முயலுமா சமன முதலிய கருமஙகளை முடிதது நெறியின்வை கறைமுன் னுகிய பொழுது மூன்றினு நீரினிற படிாது மறைவழிச் சநதி வநதனை புரிநது மாலையுங காலையும வழாது பொறியழல் வேள்வி சமிதையி னுறறிப புகன்மறை நாததழும பேற

பயிலுதல் புனிதஞ் செய்வன வுணர்தல பகாநதிடு மளவினிற றுய்கதல செயிரிலா வடக்க முடைமைகே மலர்க டிகழுமேற பூச்சொடு தீர்த லயிலுறு மிலைபா கொழிநதிடல் காம மகன்றிட லுரத்தசொ லினமை நயனிலா மூர்க்கத துவநதணாந திடுத னறபய னிலலன தவிாதல (ரு)

குரவனுக் கென்றுஞ சமிதையு மலருங் குசையொடு கொணா ந்துவந தளித்த, லருளுடை யன்னுன் மொழிவன வாற்ற லன்ன வன் புறப்படி னவன்பின், மருவலுற் றேக லாஙகவ னிற்பின் வணங குபு நிற்றன்மற் றவன்முன், னுரியவா தனததி லிராமையன் னவ ன்யா துரைப்பினு முரைகட வாமை. (சு)

வேதமோ டங்கம் விழுத்தகு புராணம் விதிவழிக் கேட்டுணர்ந் ததற்
றீதறு விரதந் திடமுடை யவனாய்த் தேசிகன் றிருவரு ளதனா [பின்
லேதமி றீர்த்த யாத்திரை யாக வேதுக தருமமற் றெவைக்கு
மாதியிப் பிரம சரியமா தலினு லறிவுளோ ராற்றுக விதனை. (எ)

இனையவாச் சிரம மினிதுள மடங்கி யாவன்மற் றிழைப்பனங்
கவனேழ், முனிவர ருலக மடைந்துவாழ் குவனிம் முறையினிவ்
வொழுங்கினை முடித்து, மனையினில் வாழ்க்கை யியற்றுதல் வேண்டு
மாசிலா மதியுடை யவனே, யனையதை யுஞற்றி னழிவில்பொன் னுலக
மாங்கவற் கடையலா மதுகேள். (அ)

தருசிராத் தத்தாற் றென்புலத் தவருந் தயங்குமுத் தழலின்வா
னவரு, மருமறைப் பயிற்சி யாலருந் தவரு மடிசிலால் விருந்தினர்
தாமும், பரிவுறு பலியாற் பல்லுயிர்க் குழாமும் பகர்வுறு மின்சொலா
லெவருங், கருதுசீர் மகவாற் கமலமே லவனுங் கருணையாற் கணிப்பி
லெவ் வுலகும். (கூ)

இனிதுவப் புறவில் வாழ்பவ னியற்றல் வேண்டுமெய் பொழு
தினு மொழுக்கம், புனிதமா முள்ளத் தன்புட னிலைமை பூண்டுசெய்
கின்றவ னாகி, நனிமிக வவன்றன் வைகலு மிழைக்கு நற்கரு மங்களை
நவிலிற், றுனையவை கறைக்க ணெழுந்துமற் றெமையு மேனைவா
னவரையுந் தொழுது. (க0)

காசியம் பதிமுன் னாகிய தலங்கள் கங்கைமுற் கடவுண்மா நதிக
ளாசற நினைந்து விழைவொடும் வழுத்தி யமைத்திடு நகர்ப்புறத் தேகி
மாசறு முடம்பு தூய்மைசெய் ததறபின் மாநதி தன்னில்வார் தடத்தி
லேசறு தந்த சுத்திசை யியற்றி யிருள்புலர் புலரிநீ ராடி. (கக)

சந்திவந் தனையை மரபுளி யியற்றித் தயங்குகா யத்திரி மனு
வைச்,சிந்தையுட் செபத்தாற் செஞ்சுடர்ப பரிதிச் செல்வனைச் சேவை
செய் தொளிசேர், வெந்தழல் வேள்வி யியற்றுபு கடவு ளருச்சனை
விழைவுடன் முடித்துச், சந்தமா மறைகண் மிருதிநூல் புராணஞ்
சாலவும் பயின்றுநண் பகலில். (கஉ)

தண்ணறல் படிவுற் றந்நிலைச் சந்தி தகமுடித் தைவகை வேள்வி,
பண்ணிய பின்றைத் தனக்கியன் றுள்ள பரிசினின் வைகலும் பரிந்து,
நண்ணுறு விருந்தோ டருந்துதல் வேண்டு நலனிலா யாவனோ ரிழு
தை, யண்ணுறு விருந்தை யெள்ளுவ னவன்முன் னறங்களு மிழந்
தழிகுவனால். (கங)

விருந்தினர் விழைவோ டடுத்தவர் கிளைஞர் மிசைந்திடு மேல் வையின் மேவி, னருந்திடு மடிசில் பகிர்ந்தனை வர்க்கு மளித்துப்பின் றுனுமார்ந் திடுக, பரிந்துபின் றரும கதைகள்பா ராட்டிப் பகற்குறைப் பொழுதினைக் கழிக்க, விரைந்தமேல் கடலிற் பரிதியஞ் செல்வ னிழி வுறிற் சந்திசெய் திடுக (கச)

ஆங்கதற் பின்ன ரங்கியின் கரும மாற்றுக வதன்பின்ன ரடிசில் பாங்குட னயின்று பஞ்சணை படுத்த பள்ளியி லினிதுகண் படுக்க தூங்கிரு ளுவாவிற் றருப்பையெள் ளுடனே தூயதென் புலத்தவர் பிண்ட மீங்குநன் களிக்க வட்டகை யாய காலங்க ளியல்வெதி பாதம். (கரு)

திங்களின் முதனு டிகழுய னங்கண் மற்றைய புண்ணிய திவச, மிங்கிவை வரினே தென்புல வாணர்க் கினியபூ சனையிழைத் திடுக, பொங்கொளி மிகுத்து விளங்குறு தேவர் போற்றரு முனிவர்தென் புலத்தோர், தங்கரு மங்கண் மூன்றினு முந்நூல் வலமிட நடுவுறத் தரிக்க. (கசு)

வாய்ந்தசீர் வதுவை முதலிய கரும மாபினி லிழைத்திடின் முன்னஞ், சாந்திக மோடு பவுட்டிக நாந்திச் சிராத்தமா மிவறறி னைத் தந்து, போந்தநற் கருமம் பண்ணுக வறிவில் புல்லியர் மயககமுற் றெனினு, மாய்ந்திடா தயர்வுற் றென்னினு மகிழ்வுற் றுயினு தென்புலத் தவர்க்கு. (கஎ)

சொல்லிய கரும மிழைப்பதன் முன்னந் தூயநற் கருமங்க டொடங்கி னல்லலி னுயர்ந்த வருநர கதனை யளப்பறு காலமாங் கடைவர் [யனு செல்லுறத் தினமு மிழைத்திடு செயலும விசேடமாச் செய்திடுஞ் செ நல்லவக் காலங் காலம்யார் செய்வர் நான்முக னுள்வரை யனையோர் ()

விண்ணவர் வழுத்தப் பண்ணவ ராகி விளங்குவர் யார்க்கும வேண் டுதவி, பண்ணுமில் லொழுக்கம் பகர்ந்தனம் வனத்தன் பரிசி னிப் புகன்றிடக் கேண்மோ, திண்ணிய வுணர்வின் மைந்தர்பான மனையின் வாழ்க்கையைப் பரித்திடச் செலுத்திப், புண்ணிய மனைவி யருங்கிளை யிவர்பாற் பொருந்துறு விடைகொடு போகி. (கசு)

வனத்திடைப் புகுந்து வார்சடை கட்டி வற்கலை தரித்துமுப பொழுதும், புனற்படிந் தடகு கிழங்குநன் பழங்கள் புசித்துள பொழு தினைக் கழிக்க, நினைத்தினி தொருவ 'ருழுதுவித் தாதங் குரித்துள நெல்லினை யுகிராற், றனித்தனி பொறுக்கி யாறிலொன் றரசன் றனக குவிட் டொழிந்ததா னியத்தை. (உ0)

ஓதன மாக்கி யும்பர்தென் புலத்தோ ருணவொடு விருந்தையு மோம்பித், தீதறு சேட மருந்துக கடவு ளருச்சனை செந்தழல் வேள்வி, யாதரித் துதவு பலியுட னைய மதிதியூ ணளித்தடைந் தவரைப், போதவு முவப்புற் றீண்டையி னீவிர் போதுதி ரென்றுபூண் டழைத்து. (உக)

இருப்பிட மளித்தல் வனத்துள தைல மிடுதல்சீ தளமொடு வெம்மை, வருத்துதல் பொறுத்த லொருபொழு துண்டல் பகலினிற் கண்படை மாற்றல், கருத்துற வுணருந் தத்துவ சிந்தை மறப்பினை மடியினைக் களைத, றிரப்படு பிரம சரியமோ டிருத்தல் செபித்திடல் பார்மிசைத் துயிறல். (உஉ)

மேவுமிவ் வொழுக்கம் வழுவிடா தியற்றி விழைவொடும் வனத்திடை வதியின், யாவர்க டமக்கும் பெறலரு நன்மை யேய்க்குமவ் வனத்தலுக் கென்று, மோவிலா விழுப்பம் பெற்றநான் முகத்தி னொருதனிக் கடவுள்பே ருலக, மாவது பயன்மற் றவ்வகை யுள்ள மடங்கியைம் பொறிகளு மவித்து. (உங)

பாபதம் விழைவோன் முழுவதுந் துறக்குந துறவினைப் பற்றுக பற்றிற், கருமகற் பிதமு மொருவிமெய்க் குரவன் கற்பனை யாயமார்க் கத்தான், மருவுதத் துவவாக் கியப்பொரு ளுணர்ந்து மழித்தலுஞ் செய்துமா தண்டந், தெரிவுறு குறியாத் தரித்துமுப் பொழுதுந் தெண்புனன் மூழ்குதல் செய்து. (உச)

ஒழிவறு தியான யோகநன் னிலைபெற் றுலப்பிலாப் பாராயணனெனவே, முழுதொருங் குணர்ந்த முதல்வனை யடைக மொழிதருங் குடிலையெப் பொழுதும், பழகினன செபிக்க மடிதவிர்ந் திடுக பலகருமங்களின் பயனை, விழைவது விடுக கடினம்விட் டிடுக விழாவுடன் றீர்த்தமும் வேறும். (உரு)

காண்பது தவிர்க நண்பகற் பொழுது கழிந்தபி னில்லொழுக் கத்திற் பூண்பவர் முதலோ ரயின்றபின் சாந்தம் பொருந்துமா மறையவர் புக்கி லாண்பலி வாங்கி யுண்கவா லயமும் வனமும்வின் னுறுதரு நிழலு மாண்புறு நதியின் கரையுமென் றிவற்றுண் மனிதரின் றியதல மருவி.

கலங்குறு வுளத்த னகியா ருடனுங் கலத்தலற் றொருதமி யாகிப் [து பொலஞ்சிலை யோரடு பொருவுசிந் தையனுப் புலப்படு சகமுத லனைத் மிலங்கிய பரம சிவவடி வெனவே யெண்ணியுள் ளுவப்பொடு மிதயம் விலங்குறு திரிவில் புந்திய னகிமெய்ப்பொரு ளினைமிக நினைந்து.(உஎ)

சாலவெப் பொழுதுந் தாரக மனுவே தனிச்செபித் திடுகசந் ததமும், வாலிய பரம சிவன்றனை வழுத்தி மனத்திடை யவன்றனை வைக்க, வேலவு மவனைக் கணப்பொழு தெனினு மிடையறு தெண்ணுக வெதிர்ந்து, மேல்வரு மாகா மியமுநா டாமற் கழிந்தது மீளவெண் ணுமல். (உ௮)

ஒருபொரு டனையும் பிரார்த்தனை பண்ணு தூழ்முறை கிடைத்ததி லுள்ளம், பரிவுற நிறைவு பண்ணுக வுண்மைப் பரமவா னந்தமே யாகிப், பொருவிலா துயர்ந்த தற்பர மாகிப் பொலிவுள பரசிவப பொருளைப், பெரிதுமொற் றுமையா லிரண்டற நினைந்து பிரிவரும் பெற்றிய னுகி. (உ௯)

எண்ணிலா வுலகம் யாவையு மாயை யியற்றுகா ரியமென விகழ்ந்து, நண்ணிய வுடம்பு பொறிமுத லெவையு நானலே னெனமிக நாடி, யுண்மைகொ ளெதிதான் சாந்தமா மொழிவில் பேரின்ப மேதனதுருவா, யண்ணுறு மகமென் றுரைத்தசொற் பொருளா யமர்சிவ மினிதடை குவனல். (௩0)

வருணவாச் சிரம மரபுளி யுரைத்தா மற்றினி யாதுகேட் பதுவென், றிருண்மணி மிடற்றுச் செய்யமெய் வெண்ணீற் றெறுழ்வலி நாற்றடம் புயத்துத், தருணவெண் பிறைதோய் பவளவார் சடிலத் தறுகண்வெம் புலியத ளாடைக், கருணையங் கடன்மற் றியம்பின னிமயக் கனவரை யுயிர்த்தகா ரிகைக்கே. (௩௧)

ஆகச்செய்யுள், ௬௬உ.

பதின்மூன்றுவது

# பொதுவொழுக்கங்கூறிய அத்தியாயம்.

துவளு நூலிடைத் தோகையஞ் சாயன்மைக்
குவளை யுண்கட் குலவரை மாமக
டவள நீற்றொளி தான்பழுத் துள்ளதோர்
பவள மேனிப் பரமனை நோக்குறு. (௧)

மூன்று போது முயன்றிடு நற்றொழி
லான்ற நால்வகை யாச்சிர மங்களுக்
கேன்றி டும்பொது வாயெவர்க் குஞ்செயத்
தோன்றி டுந்தரு மம்மெது சொல்லென்றாள். (உ)

வள்ளை வார்குழை மாழையொண் கண்ணுடை
கிள்ளை மென்மொழிக் கிஞ்சுக வாய்மதிப்
பிள்ளை வாணுதற் பெண்ணமிர் தேபொது
வுள்ள வான வொழுக்க முரைசெய்வாம். (௩)

நலந்த ருந்தகைத் தாகிநன் னீதியி
னிலங்க லூற்றிரு மைக்கு மிதத்ததாய்ப்
பொலிந்த நல்லுல குக்குப் பொருத்தமாய்
விலங்கு றுமறை நூலின் விதித்ததாய். (௪)

எவ்வெ வர்க்கும் பொதுவா யிணங்கிய
வவ்வ றத்தை யறிதி கடவுளை
வவ்வ லூற்ற பசுவை மறைபயி
றெய்வ வந்தண ரைத்தே சிகர்தமை. (௫)

ஆத ரித்து வலஞ்செய் தகலுக
யாதுந் தன்னைப் புகழா திருக்கமற்
றேதி லாரை யிகழ்ந்துரை செய்யற்க
பாத கங்காண் பழிமொழி சொல்லுறின். (௬)

உள்ள மான தடக்க முடையனாய்
வெள்ளைப் போது புனைந்துதன் மேனியில்
வெள்ளைப் பூச்சின னாகி விளங்குக
வள்ளி தான மருந்து மணிகளும். (௭)

ஆதி யாய பிறவு மனுதினங்
காத லோடுவைத் தோம்புக கையுகிர்
சேத னப்படச் செய்யற்க மீசையை
மீது கொய்யற்க வெண்ப லராவற்க. (௮)

ஆரப்ப ரித்து நகுத லறிவிலா
மூர்க்க ரோடு மருவுதன் மொய்பிணி
தீர்க்க மானவர் தம்மொடுஞ் சேர்ந்திடல்
யார்க்கு நீதியன் றங்கொழுக் கங்கெடும். (௯)

உண்மை யாகி யுவப்பா யிதத்ததாய்
வண்மை யார்மொழி சால வகையறிந்
தொண்மை யாக வுரைசெய்க கேட்பவன்
வெண்மை யன்றி விளங்கு மறிவனேல். (௧௦)

அல்ல னேயெனின் மோன மடைகமற்
றொல்வ தாம்வினை யோர்ந்துசெய் யாதவ
னல்லல் பின்ன ரடைகுவ னாதலின்
வல்ல வன்மதி யாதுசெய் யானரோ. (கக)

குலத்தி னல்விஞ்சை யானிதிக் குப்பையால்
வலத்தி னற்பிறர் மாட்டுச் சிறிதுமோ
ரலக்கண் செய்யற்க வாங்கது செய்வனேற்
றொலைக்கு மேபொருள் யாவுந் துகள்பட. (கஉ)

கடவுள பாலற கனதனைக் கட
றிடைவி டாது முயற்சிகொ டெய்துக
வடையுங் கங்குலுக் காவ பகற்கணே
கடிது தேடிச் சுகிக்கநற் கங்குலின். (கங)

மாரி நாளைக்கு வேண்டுவ மற்றெலாஞ்
சீரி தாகிய வேனிலிற் றேடியே
மாரி நாளிற் சுகத்தொடும் வைகுக
வோரு முள்ளத் துணர்வுடை யோர்கடாம். (கச)

இளமை யாய பருவத் திருநிதி
வளமை யாவினி தீட்டிவைத் தேமிக
வுளமெ லிந்த முதுமைக்க ணேம்பியோர்
தளர்வு மின்றித் தழைக மகிழ்வொடும். (கரு)

இம்மை தன்னி லறத்தை
தம்மை தன்னி லடைகவின் பத்தினைத்
தம்ம னத்தி லெவைக்குமித் தன்மைபோற்
செம்மை நல்லறி வோர்தேர்ந்து கொள்வரால். (கசு)

மனைவி தன்னொடு மைந்தர்க டம்மொடு
மினிது சேர்ந்தொரு தோணியி னேறற்க
நினையின் மாநதி நீந்தற்க தேவெதிர்
வினவி வேறொரு தேவை வியவற்க. (கஎ)

கறங்கு தெண்டிரை மாநதிக் கண்ணெதிர்
பிறங்கு வேறொரு தீர்த்தமும் பேசற்க
வறங்க ரைந்த வருமறை யெள்ளற்க
துறந்து டன்பிறந் தோர்தூரம் போய்விடின். (கஅ)

தேடி யேகுதல் செய்யல் செழுங்குல
நீடு மாதினை நிந்தை யுருவகை
நாடொ றுந்தன் னுயிரினு நன்றிழைத்
தூட றீர்த்திட் டுவந்தினி தோம்புக. (௧௯)

மின்னெ ன்த்தகு செல்வமு மெய்யல
துன்னு மிவ்வுட றுன்ப நிமித்தமா
முன்னம் போயதை மீட்டு முயன்றிடல்
பின்ன ரேவரு கின்றதும் பேசிடல். (௨0)

நலம தேனு நலமில தேனுமிவ்
வுலகி னிற்பலர் செய்வ துஞற்றுக
பலரொ டும்பகை கொள்ளல் பகைகொளின்
வலியி ழப்ப வருத்துமவ் வான்பகை. (௨௧)

பழுத ளித்திடு காலத்தி னும்பல
னொழியுங் காலத்து ஊக்கத்தைக் கைவிடல்
முழுது ஊக்க முறுத முழுமக
ணழிவ தாவ தளந்தறி யானரோ. (௨௨)

பொருப்பிற் றோன்றும் பொருதிரை மாநதி
யரைக்கு ரோசத் தகனக ரில்லெடுத்
திருக்க தீமை யெழுவற் கடத்தினுஞ்
சுருக்க மாகிய துன்பந் தவிர்க்குமால். (௨௩)

இனிய நீரு மெரிசுட ரங்கியு
நனியு மில்லில்வைத் தோம்புக நாடொறு
மெனைய தோரிடத் தேவெயி லில்லதா
மனைய தோர்பா லமர்ந்து துயில்கவே. (௨௪)

ஓத னத்துக் குரிய தொருபொருள்
யாதுண் டன்னதை யித்துணை நாளைக்குப்
போது மீதென் றளந்து பொருத்துக
தீதி ருனிய மோம்புக சீர்பெற. (௨௫)

உலக்கை தன்னொ டுலூகல மென்றதைக
கலக்க வோருழைக் கங்குலில் வைத்திட
னலத்த மில்லிற் றிரண நனியெரித்
திலக்கு மவ்வொளி தன்னி லிருந்துணல். (௨௬)

ஓதின் மற்று மொழிந்தநற் காரியம்
யாதுஞ் செய்ய விருகாத் தாற்றலை
மீதி னிற்சொறி யன்மென் றுகிலிலா
தேத மில்புன. லூடே யிழிந்திடல். (௨௭)

துரும்பு கிள்ளுற றாவெள் ளுகிரினு
லரும்பு வித்தலங் கீற லழுக்கடைந்
திருந்தி டன்மற்றி யாரு மிகழ்வுறப்
பெரும்ப கற்கண் டுயில்வது பெற்றிடல்! (௨௮)

கரைக்குஞ் சொல்விற் களிப்புறு சேட்டையிற்
சிரிப்ப தாய கருமங்கள் செய்திட
றரைக்கு ளெவ்வகை யாற்பிறர் தற்புகழ்ந்
துரைப்ப ரவ்வகை யாற்றி யுயர்கலே. (௨௯)

வாழ்வு வேட்டவ னைந்து மயிடமுந்
தாழ்வில் பெற்றமோர் மூன்றுந் தயங்கு*குண்
டேழுங் †கோளியோ ராறு மிரண்டுசெம்
மேழ கங்கள்வெள் ளாடொன்றும் வேண்டிடல். (௩0)

ாய வாககு மனைததவாக குமட்
விளைஞ ருக்கும் விருத்தருக் கும்மறை
யளைப வர்க்கு மரசருக் குஞ்சுமை
யுளவ வர்க்கும் வழிவிட் டொதுங்குக. (௩௧)

ஈத லெவ்வகை வாழ்வுக்கு மேதுவா
மாத லாற்றனக் காம்வகை யாற்றின
மோது முள்ள மடக்கி யுவப்பொடும்
போத முள்ளவன் றானம் புரிகவே. (௩௨)

நல்லொ ழுக்கமெஞ் ஞான்று நடாத்துவோ
னெல்லு மாறுவந் தீத லுளனெனிற்
செல்லுந் தீர்த்தந் திகழ்வி ரதந்தவம்
வெல்ல ருந்தழல் வேள்விகொண் டென்பயன். (௩௩)

யாவ ருக்கு மியைந்த வொழுக்கத்தைக்
காவி யந்தடங் கண்ணி கழறினும்
நீவி ளைந்துள தேது நிகழ்த்தெனத்
தேவ தேவனைத் தேவி வினவுவாள். (௩௪)

---

* ஆண்குதிரை. † பெண்குதிரை.

தருமம் யாவுளுந் தான முயர்ந்ததென்
றுரிமை யாக வுரைத்தா யவற்றினுட்
பெருமை யாகிய தானம் பிரித்தவற்
றருமை காண வறைகுதி யென்றனள். (௩௫)

ஆகச்செய்யுள், எஉஎ.

---

பதினான்காவது

# தானமகிமையுரைத்த அத்தியாயம்.

சேட்டிள மதிதவழ் செய்ய புன்சடை
நாட்டமோர் மூன்றுடை ஞான நாயகன்
மோட்டிளங் கதிர்முலை முத்த வாணகை
வாட்டடங் கண்ணியின் வதன நோக்குறா. (க)

தேனினு மினியசொற் றேவி கேளினித்
தானமென் றுள்ளது சாற்றற் பாலதோ
மாநல மளித்திடு மனமுந் தூயதா
மானவுத் தமகதி யதுவு மாகுமால். (உ)

ஆதலி னன்னதை யறங்கள் யாவுளு
மீதுய ருத்தம மெனவி ளம்பலாம்
பேதைகேண் மானிடப் பிறப்பும் பெற்றுநற்
போதமு முடையனாய்ப் பொருளு மேவியே. (௩)

ஈதலில் லவனெனி னுயிரோ டெய்தினான்,
சாதலுற் றவனவன் றனம் யாவுளு
மேதக வுயர்ந்தவை விளம்பக் கேளினித்
தாதவிழ் நறுமலர்த் தாமக் கூந்தலாய். (௪)

தொல்லைய நூல்களிற் றுதிப்ப தாய்மிகப்
பல்பலர் விழைவுறப் பட்டுச் சேடமற்
றெல்லையி னற்பொருள் யாவு மீபல
னல்லகா ணத்தினா னண்ணு வானரோ (௫)

இருநிதி யளித்திடிற் பலன்கள் யாவையுந்
தருமது வாய்மையே யாயு ளுந்தருங்
கருதுதூய் மையுந்தருங் கரண சுத்தியு
மருவுவித் திடுமதன் மாட்சி யார்சொல்வார். (௬)

எண்ணில்லா வினைகமற் றெவற்று ளுஞ்சுவைத்
தண்ணற வினைகயே சால நன்றென
நண்ணிய வுணர்வுளோர் நாளு நன்புன
லுண்ணென வேட்டவற் குதவ வேண்டுமால். (எ)

மேனுல கின்பமே யெய்த வேண்டினேன்
சாலவு நிரந்தரந் தடாகங் கூவல்கள்
பால்புரை வாவிகள் சரசு பாரினி
லேலவும் வருந்தியு மியற்றல் வேண்டுமால். (அ)

யாவன்மற் றொருத்தனிங் கிழைத்த வாவிகள்
கூவலா தியினிடைக் கூர்ந்த தாகமுற்
றுவின முதலபல் லுயிரு மண்ணுநீ இத்
தாவறல் பருகினத் தருமம் யார்சொல்வார். (கூ)

அன்னதோர் புண்ணிய மவன்றன் சுற்றமாய்த்
துன்னிய யாரையுந் துகளில் சீருடைப்
பொன்னுல கேற்றுமிப் புவியில் யாவனோர்
தன்னுடைப் புனற்கரை தன்னிற் பல்லுயிர். (கO)

அடைந்துகா படிந்துடல பருக லாதியா
லுடம்பொடு முளங்குளிர்ந் துவகை பூத்திடத்
தடம்புனல் வேனிலிற் றருவித் தானவன்
மடங்கியோர் ஞான்றினும் வருந்து றனரோ. (கக)

நறியநீர்ப் பந்தர்முன் னுன நல்லறந்
தெறுதரு கோடைநாள் விசேடித் துச்செயி
னிறைபய னளித்திடு நெய்வ மூங்குறி
னெறிசுடர்த் தழலினுக் கமரர்க் கின்பமாம். (கஉ)

சீதமென் புனல்கொளச் சிரகஞ் சிந்தையி
னுதரித் தளித்திடி னனைய நீரினால்
வேதியர் தூய்மையை மேவிச் செய்யற
மேதகு மாறிலொன் றிவனை மேவுமால். (கஙு)

நிறைதரு குளிரினை நீக்க வாயினு
முறுபசிக் கடிசின்மற் றுஞற்ற வாயினுங்
குறைவுறு திந்தனங் கொடுக்கி னிம்மையு
மறுமையு மகிழ்சிறந் திருப்பன் மற்றவன். (கச)

தானமிங் கெவற்றுளு மன்ன தானமே
மேன்மைய ததனையீண் டிழைதத வித்தகன்
வானவர் வளாநகர் வாழ்வெஞ் ஞான்றினு
மானவ னவன்பெறு மின்ப மார்சொல்வார். (கரு)

அழிபசி தாகமோ டதிதி யண்ணுறின்
விழைவொடு மவன்றனை யாவன் வெம்பசி
யொழிவுறு வித்தவ னவனு றும்பலன்
றழுவியித் துணையெனுஞ் சங்கை யில்லையே. (கசு)

விருந்தினர் தென்புல வாணர் விண்ணவ
ரொருங்குள மூவப்புற வொருத்தன் றான்மிக
வருநதியீட் டியநிதி வகைவ கைப்படத
திருந்திடப் பகுந்தனன் செலுதத வேண்டுமால். (கஎ)

தென்புலத் தவருளங் களிசி றந்திட
வன்புடன் றிலத்தினை யளிக்க வன்னதால்
வன்பெரும் பாதக முதல வான்றுயர்
தன்புடை யணுகுறு வகைத டுப்பனால். (கஅ)

புனிதமா மறையவன் றனக்குப் பொற்புற
வினியதண் கவிகையை நிழலுக் கீவனே
லனையவ னிம்மையிற் செல்வ னாகிமேற
பனிவிசும் புலகினும் பயில்வ னின்பமே. (ககூ)

வேதியன் றாளிணை தொடவி ருப்பினுற
பாதுகை யளிப்பவன் பாரி லிம்மையின்
மோதுவெம் பகையெலா முருக்கி யம்மையி
லோதருஞ் செல்வம்வா னுலகி லெய்துவான். (உ0)

விழுமிய தானமற் றெவைக்கு மேலதா
மழவிடைச் சகடமா தான நெய்யினுற்
றொழுதகு கடவுண்முன் சுடர்வி ளக்கிடா
முழுதிரு ளகற்றின்வேண் டியமு டிப்பனால். (உக)

உய்ந்திடு தானமற் றெவற்று ளும்முவந்
தநதுகி லளிப்பதே யதிக மந்தணர்
முந்துவா னவர்தென் புலத்தர் மூவர்கள்
சந்தத முவப்பாத் தானஞ் செய்திடின், (உஉ)

நன்னில மளித்திடல் விஞ்சை நல்குதல்
பன்னருஞ் சிறப்புடைப் பசுவ மூங்குதல்
கன்னிகை யுதவிடல் கவிகை யாவுளு
மின்னவை யுயர்ந்தவென் றிசைப்பர் மேலையோர். (உரு)

இன்சுவைத் தீங்கனி யினிது நல்குறிற்
றென்புலத் தவர்மகிழ் சிறப்பர் தேமலர்
நன்கொடை பண்ணவர் நயப்பர் நீழலா
லன்புறு வழிச்செல்வோ ருவகை யாவரால். (உச)

முதுவழி முதலிய தலத்தின் மொய்த்தொளிர்
மதுமலர் பொதுளியே மதுர மென்கனி
யுதவுறு பலதரு வொழுங்கின் வைத்திடி
னதிகநல் லறங்களு ளதிக மாமது. (உரு)

ஈங்கிவை யாவரு மியைந்தி ழைத்திடப்
பாங்கினிற் பொதுப்படப் பகர்ந்த தானமாம்
வாங்குத லரியமா தானம் வேறுள
வாங்கவை சொல்லுது மமர்ந்து கேட்டியால். (உசு)

வேறு.

மாற்ற ரும்பிர மாண்டதா னத்தினை வழுவா
தாற்றி னுத்தம முன்னையா யிரம்பிறப் பளவு
மேற்றி யீட்டுபா வத்திர ளனைத்தையு மிகப்பன்
சாற்றி டும்படி யெளியதோ வன்னதோ தானம். (உஎ)

நெளிதி ரைக்கண கடல்களு நிகழ்பல தீவும்
வளைவு பெற்றுள வனப்புடன் வயங்குபல் லுலகு
மொளித ழைக்கவுள் ளுடையதா யுயர்பிர மாண்ட
மளவில் காஞ்சனத் தாலினி தியற்றியாங் கதனை. (உஅ)

மரபி னுல்வரு மறையவர்க் குவப்புடன் வழங்கு
நரரு ளுத்தம னளப்பிலாப் பவந்தொறு நாளும்
விரவு மெவ்வகைப் பாவமுந் தணந்துவெண் மதியம்
பரிதி தாரகை நாள்வரைப் பொன்னகர் பதிவான். (உக)

ஏத்த ரும்புகழ்ப் பிருதிவி தானமற் றெளிதோ
வாய்த்த தீவொடு மால்வரை பலவொடு மருவிச்
சேர்த்த பொன்வரை திகழ்வதாய் மரபினிற் சிறப்பத
தாத்தி ரிப்பெரு வடிவினைப் பைம்பொனாற் சமைத்து. (௩0)

தூய வேதியர்க் களித்திடு முத்தமன் றென்னுண்
மேய பல்பவத் தீட்டிய வினையெலாம் வீட்டி
யாயு நுண்மறைத் திசைமுகன் கற்பநா ளளவுஞ்
சேய மெய்யொளி திகழ்வுறப் பொன்னகர் சேர்வான். (௬௧)

தான மும்பல விரதமுஞ் செயற்கருந் தவமுந்
தூநல் வேள்வியுந் தருபயன் யாவையுந் தொகுத்து
மாந லந்திகழ் பிருதிவி தானமே வழங்குந்
தேன லம்புதண் மலர்க்குழற் செந்துவர் வாயாய். (௬௨)

ஆயி ரம்பசு விதியினி லளித்தவ னனைய
மாயி ரும்புவி யருள்பய னிற்பதின் மடங்கு
தூய நன்பயன் பெறுவனெப் பொருள்களுந் துவன்ற
மேய சீர்கெழு மாளிகை வேய்ந்துவே தியர்க்கு. (௬௩)

உவந்து பொனனுட னளித்த துளளவ னுமபா
நிவந்த பொன்னுல கடைந்தர மகளிர்நின் றேத்தக்
கவின்கொள் பேரொளி நவமணி குயிற்றுபு கனகங்
குவிந்த மாளிகை தனிலொரு கற்பமவை குவனால். (௬௪)

சேய பொன்னினாற் றிலத்தினாற் றிகழ்ந்தகார்ப் பாச
மாய தாற்குளிர் சந்தன மாதிய வவற்றாற்
றாய தேனுவின் வடிவம திழைத்தருட் சுருதி
மேய சீர்கெழு விழுப்பமார் விபபிரர்க் களித்தோன். (௬௫)

பல்ப வத்தினு மீட்டிய பாவசஞ் சிதத்தை
யொல்லை நீக்கியோர் கற்பநாள் வரைவிழை வுற்ற
வெல்லை யில்வள மினிதுபெற் றின்பமுற் றிருப்பன்
மல்ல லஞ்செழும் பொன்னகர் தன்னிடை மருவி. (௬௬)

எவனொ ருத்தன்மற் றேதொரு பொருளினை விழைவ
னவன்வி ழைந்துள வப்பொரு ளவன்றனக் களித்தோன்
புவனி யெங்கணும் வென்றிடு விறல்கெழு புயத்தாற்
கவன வெம்பரி மகம்புரி பயனுறுங் கடிதின். (௬௭)

அளப்பி றானமற் றெவற்றுள மபயமா தானங்
கிளப்பி னன்னது நாவினாற் கீர்த்திப்ப தரிதால்
விளக்கும் வேள்வியுந் தானமுந் தீர்த்தமு மிகவுங்
கொளத்த கும்பயன் முழுவது மினையதாற் கொள்வன். (௬௮)

சீத மென்றுழாய்ப் படலையந் திருமறு மார்பற்
காத ரத்தொடு சினகர மழகுற வமைத்துப்
போத வெங்கணுந் தவளநுண் களபமேற் பூசித்
தாத விழ்ந்தநந் தனம்பொழி றடத்தொடுஞ் சார. (௩௯)

யாவ னல்குவ னன்னவ னினியவெப் பொருளு
மேவி மல்கியே திவ்விய மாய்விழை வனவாய்க்
கோவை வாயர மங்கையர் குழாங்கொளக் குலாவு
தூவி யன்னமா மயின்முதற் சுமப்பன வாகி. (௪0)

இழைத்த பன்மணிப் பாயொளி பரந்திள வெயிலை
யொழிக்க வல்லவாய்ச் சித்தர்சா ரணர்கள்யா ழுடையோர்
வழுத்து நாதகீ தந்தெழிக் கின்றவாய் வயங்கும்
விழுத்த குஞ்சுடர்ப் பலவிமா னத்திடை விளங்கி. (௪௧)

உலகம் யாவுளு மினிதுலாய்த் தன்னுயர் கிளையா
விலகு மூவெழு சுற்றமு மொருங்குகொண் டேகி
யலகில் வைபவ முடையநம் முலகினை யடைவன்
கலவ மஞ்ஞையஞ் சாயலிற் கடலமிர் தனையாய். (௪௨)

தயங்கு பேரொளி தழைத்தசா ளக்கிரா மந்தான்
வயங்கு சீர்கெழு துவாரகைச் சக்கர வகைதா
னியைந்த ஞானமா யிலங்கொளிச் சிவலிங்க மென்றுன்
பயன்கொ ளெவ்வகை யுபகர ணத்தொடும பரிந்து. (௪௩)

விதிவ ழாவகைச் சாந்தரா யுயர்ந்தவே தியர்க்கு
முதிய செய்யபொன் றன்னொடு முகனமர்ந் தளித்தோன்
றுதிகொ ணூல்பகர் தானம்யா வுந்தருந் தூய
வதிக நன்பலன் றம்மினுஞ் சதமடங் காய. (௪௪)

பலனை யெய்துவ னிற்பன நடப்பன பலவு
மிலகு சீர்ப்பிர மாண்டமோ டெவையுநம் மிருவர்
மலரு நல்லித யத்தினு ளடங்கியே வைகு
மலகி லாதநா மிருவரு மவற்றடங் குவமால். (௪௫)

இனைய வற்றினை யளித்ததா னத்திற னிசைத்த
வனைய தாபர மாதிய வளப்பிலெவ் வுயிரு
நினைவ ரும்பிர மாண்டமு மளித்தநீள் பலன்கள்
வினவி னெத்துணை யத்துணைப் பலனுமே விடுமால். (௪௬)

இங்கிம் மூன்றுதா னங்களுந் தருபய னிமய
மங்கை கேளுனக் குண்மையாய் மொழிந்தன மற்றோர்
சங்கை வேறிலைச் சதுமுக னுலகமுன் னுய
பொங்கு பல்லுல கத்தினும் விழைந்துள போகம். (சஎ)

தழையு மேழெழு குலமுறை யோடுதான் றுய்த்து
விழுமி தெங்கணுஞ் செல்விமா னத்தின்மேற் கொண்டு
கழிபெ ருங்கிளைக் குழாத்தொடுங் கற்பகான் முடிவி
லழிவி லாதள விறந்தவா னந்தம தடைந்து. (சஅ)

நலந்தி கழ்ந்திடு நம்பர முத்தியு நாளுந்
துலங்கு சீர்நெடு மால்பர முத்தியுந் தோய்வ
னிலங்கொ ளிச்சிவ லிங்கதா னத்துட னிணையாய்ப்
பலன்கொ டுத்திடு தானம்வே றொன்றிலை பகரின். (சகூ)

அறிவ ருஞ்சிவ லிங்கபூ சனைக்கிணை யாகப்
பிறிது பூசையு மில்லைகாண் பெட்புற விழைத்த
வெறிசு டர்ச்சிவ லிங்கநற் பதிட்டையோ டிணையா
வறைய வல்லதோர் பதிட்டையும வேறிலை யணங்கே. (ருO)

உள்ள மெண்ணிய தெவ்வுரு வவ்வுரு வுஞற்றித்
தெள்ளி திற்புரி பூசனையி னுஞ்சிவ லிங்கத்
தெள்ள லின்றிய பூசனை யேயெமக் கினிது
தள்ள ருஞ்சிவ லிங்கபூ சனைதரு பயனே. (ருக)

பிறிது வேறுபா யத்தினாற் பெறுவதிங் கரிதா
னறைத ளித்ததண் மலரய னாரணன் மகவா
னெறிசு டர்க்கதிர் வெண்மதி யிவர்முத லாய
மறுவில் வானவர்க் கதிபரு மற்றையர் யாரும். (ருஉ)

சாற்ற ருஞ்சிவ லிங்கபூ சனையினாற் றமே
யாற்றல் சான்றுள வழிவிலாப பதவிக ளடைந்தார்
தேற்று மன்புடன் சிவலிங்க தாபனஞ் செய்யி
னேற்ற முப்புவ னங்களுந் தாபித்த தெனலாம். (ருங)

இனிது தாபன மானவவ் வருட்சிவ லிங்கந்
தனின்ம கிழ்ச்சியை நிறைக்கின்முப் புவனங்க டமக்கு
நனிநி றைத்ததா நற்சிவ லிங்கமு நல்கிக்
கனியு மன்புடைப் பூசுரர் தமக்குப கரித்தால், (ருச

அன்ன தாகிய தானமிங் களித்திடும் பயனை
யின்ன தென்றளந் தியம்பிட வொண்ணுமோ வெவர்க்கு
நன்னர் சாலவு மிருமையு நண்ணுற வேண்டின்
மன்னு சீர்ச்சிவ லிங்கதா னஞ்செய்க வல்லோர். (ருரு)

தான மொன்றினாற் பெற்றிடாப் பேறுதா னுளதோ
வான புண்ணிய காலமே யரியநற் றலமே
மான லப்படு பாத்திர மேயெனும் வகையு
மீன மின்றிவந் தொன்றுநேர் படினுமாங் கீக. (ருசு)

ஈதல வேண்டிய நல்குமா தானஞ்செய வீடதனூ
தீதி றென்புலத் தவர்கடன் றீர்த்தல்செய் யுழியும்
வேதம் வல்லவை மிகவுமா ராய்ந்திடல் வேண்டு
மாத ரத்தினு லதற்கியைந் தாரெனி னளிக்க. (ருஎ)

மறுவில் பண்ணவர் தங்களை வழிபட லுறினு
மறுசு வைப்படு மன்னதா னத்தினு மடைவோர்
முறைமை யாதெனச் சோதனை செய்திடார் முதியோர்
பெறல ரும்பயன் பெற்றெனப் பேணியேற் றிடுப. (ருஅ)

வேதி யன்குலத் துயர்ந்தவ னென்னினு மேன்மைச்
சாதி யல்லவ னென்னினுந் தன்றொழுக் கத்தி
னீதி யில்லவ னென்னினு மையுற னீங்கி
யாத ரிக்கமற் றன்னதா னத்தினி லவனை. (ருகூ)

தனது தேயமும் புண்ணிய காலமுஞ் சால
வினிய பாத்திரந் தானுமங் கொருங்குவந் தெய்தி
னனைய போதிலே வளம்பட விழைவுறி னறிந்த
மனித னுனவன் செய்கதா னங்களை வல்லே. (சுo)

ஈதல் செய்திடி னமருல கின்பமு மெய்து
மீதல் செய்திடி னிழைத்தநல் வினைப்பய னியையு
மீதல் செய்திடின் யாவையுந் தன்வய மாகு
மீதல் செய்திடி னெப்பகை ஞரையும்வென் றிடலாம். (சுக)

ஈத லேற்றுள மறையவ ரேத்திடப் பெற்றோன்
மேதகு வெய்யபா வத்திரண் முழுவது முருக்கிப்
பூத லத்தொடும் பொன்னுல கிற்புகழ் நிறைவன்
யாதி னும்மவ னிறையுமோ ரார்த்தையெய் திலனல். (சுஉ)

ஈய்கை யீலலவன் பழிமொழி தன்னையு மெய்தி
மாயி ரும்புவி தன்னிலும் விசும்பிலும் வருந்து
மேய வீகையே.புண்ணிய கதியினை விளைக்கு
மாய வன்பினிற் காத்திடு மன்னனே போ லவனே. (கூங)

மனித ருக்குநற் புகலிடம் வயங்குசீர்ப் புகழே
யினிய செல்வமுந் தெய்துதற் கேதுவு மிதுவே
யனைய தன்மையா லீதலே யனைத்திற்கு மூலம்
வினவி னன்னதாற் பெறுதன்மற் றென்றினுன் மேவா. (கூச)

மாந்தர் தங்களி லுத்தமன் மரபினி னீட்டி
யேய்ந்த வந்நிதி யினியநல் லறத்தினி லீந்து
வீய்ந்தி டாதவெப் பாவமும் வேறற வீட்டிப்
போந்து பொன்னக ரழிவிலின் பத்தொடு பொலிவன். (கூரு)

ஈயு முத்தமன் பெருமையு மினியநல் வளனு
நோயில் யாக்கையு மருத்தசித் தியுநுவ லருஞ்சீ
ராயு ணீடிய மைந்தரு நற்கதி யாகி
மேய யாவையு மெய்தியே விளங்கியீற் றிருப்பன். (கூசு)

நல்ல றத்ததா னங்களை நவின்றனஞ் சிறிது
சொல்ல வேண்டுறின் யாதினித் தோகைகே ளென்ன
வெல்லை யின்றிய பரம்பொரு ளியம்பலு மியைய
வல்லி யாயவென் னம்மைமற் றிம்மொழி வழங்கும். (கூஎ)

மாற்ற ருஞ்சிறப் புடையதோர் மாசிவ லிங்கத்
தேற்ற பூசனை யதிகமென் றியம்பினை யிறைவ
சாற்றி னன்னதன் றோற்றமுந் தன்மையும் பிறவுந்
தேற்ற மாகவிங் குணர்த்துதி யென்றுசெப் பினளால். (கூஅ)

ஆகச்செய்யுள், எகூரு.

---

பதினைந்தாவது

# சிவலிங்கத்தோற்றமுரைத்த அத்தியாயம்.

ஆதி கற்ப முடிந்த வெல்லையி லவிர்சு டர்ப்படை யாழியா
னோது மூன்றுல கங்க ளுந்த னிடத்த டங்க வொடுக்குறுப்
போத வெங்கணு நீத்தம் வந்து புகுந்து யாவு மறைத்திட
மோது வெஞ்சின வாள ராவணை மீது செங்கண் முகிழ்த்தனன். (க)

அங்க தற்பி னாப்பில் கால மகன்றி டக்களி யளிகள்சூழ்
பங்க யத்தன் மனச்செ ருக்கொ டெழுந்து பாம்பணை மீமிசைப்
பொங்கு வெள்ள நடுத்து யின்றிடு பூவை வண்ணனை நோக்குறு
மிங்கெ வன்னிறு மாப்பி னோடு படுத்தி ருப்பவ னென்றுடன். (உ)

அருக ணைந்து விரித்த கைகொ டவன்றொ டைக்க ணடித்தனன்
விரைய வங்கன் விழித்து ளான்றனை வெங்க னற்பொறி சிந்திடப்
பெரிது நோக்கி மதர்ப்பி னோடு பொருமை வந்து பெருத்துற [ன்.
மருவி மூண்டெழு வெஞ்சி னத்தொடு மற்றிவ் வாய்மொழி சொற்றன

யாவ னீபெயர் யாது நின்செயல் யாதி யம்புதி யாவையும்
மீவ வாகவு நீயொ ருத்த னிருந்த வாறெவன் மிக்கநா
ளுவி யாய வெவைக்கு மூலம தாபு திப்பது மழிவது
மோவி யேதுவு மின்றி வைகின னென்னை நோக்கியு மொருவனீ. (ச)

மனச்செ ருக்கு விடாதி ருத்திநின் வன்மை யாதுகொன் மற்றிது
நினக்கு வந்த மருட்சி யோவென நீனி றத்த னிகழ்த்துவா
னனைத்து யிர்க்கு மியான்க ருத்த னனைத்து மென்னுடை மாயையிற்
சனித்த வெவ்வுல கும்ப டைத்தவை காத்த ழித்திடு தலைவன்யான்.

வேறு.

யாரு மெனது பெருமைசிறி துணரா ரினிய நாருடைய
நார மதனி லயனமுற்ற வென்னை நாரா யணனென்றே
யோரு மறைகள் யாவுமிக வழுத்தா நிற்கு முவந்துநா
ளூரும் விழையக் குணத்தையுறி னெனக்குப் பெயர்க ளளப்பிலவாம்.

அனைய வாய பெயர்பலவு மருமா மறையின் முடிவுணர்ந்தோ
ரினிதி னுணர்வர் யான்பிறர்மற் றறியா மகிமை யினையந்துள்ளேன்
வினவின் முதலு மீறுமிலேன் யானே கருத்தன் மிகவெவைக்கும்
புனித மாமென் னியற்கைவடி வரிய மறைக்கும் புகலரிதால். (எ)

என்னு விறுதி யாமுலகோ டொருங்கே யிறவா தெவ்வண்ணந்
தன்னு ளுய்ந்து நீயிருத்தி யாதுன் னுமைஞ் சாற்றுதியா [ன்
னின்னு ளுனற்றுஞ் செயல்யாது நின்னை யுணர்வான் விழைந்தேனெ
றந்நா ரணன்மற் றிவையுரைப்பக் கமலப் புத்தே ளறைகுற்றுன். (அ)

மற்றென் பெருமை யுணர்தற்கு நீயார் மனமும் வாய்மொழியு
மிற்றென் றென்னை யுணராவா லெனது படைப்பிற் சகமண்ட
முற்றுந் தோற்ற மாயினகாண் முதிய சனகன் முதல்யோக
ருற்றிங் கென்னை யேயொருவா றுணர்வார் பிறருக் கொண்ணுமே. ()

மகதத் துவத்தின் வருவிக்க வருதத் துவங்கள் யாவையினு
மிகவும் பூரி விபவமா விளங்கு வேலைச் சிவமெனவே
பகர்வுற் றனர்மா யோகிகள்யான் பணிப்பக் கலக்கு மாயைதனிற்
றுகளற் றிலகு மகங்கார மூன்று விதமாய்த் தோன்றிற்றால். (க0)

மற்றிங் கதுபூ தாதியென்று வளர்தை சதம்வை காரிகமென்
றுற்றிங் கடைவே யுளவாகி யுளவா யவற்றி னோர்முறையே
பற்றிந் திரிய மீரைந்தும் பதிந்து நிலைமைப் படாமனமுந்
துற்றுந் தன்மாத் திரைகளும்வந் தவற்றைம் பூதந் தோன்றுறுமால்.()

தோன்று மவற்றி லனைத்துலகுந் தோன்று முயிர்தம் வினைக்கீடா
யான்ற விமையோர் கந்தருவ ரவுண ரரக்கர் பிதிரரொடு
மேன்ற மனித ரெனவுமுட லெடுத்தவ் வுலகந் தொறுமியங்கி
மான்ற மலத்தா லிவ்வகையே தோற்ற மீறு மாறுவே. (கஉ)

அனைய வகைக்குக் காரணமா யழிவற் றிருத்த லாலென்னை
வினையி னீங்கு மயனென்று மநந்த னென்றும் வியாபியென்று
நினைத லரிய வீசனென்று நினைவுற் றினிது நீயுணர்தி
துனைய வினியுன் ஞணவத்தை யெல்லாம் விடுத்துத் தொழுதேத்தி.

பயந்தேன் ஞணை யுண்ணடத்தி யெனவே பதுமத் தயன்பகர
வியந்து நகைத்து மணிவண்ண னீயார் மேலா னவன்யானே
யுயர்ந்த வுலகுக் கிறைவனும்யா னுனக்கு மிறைவன் யான்றனே
நயந்தி டென்னி னுயர்ந்தோர்மற் றில்லை யெவைக்கு நான்முதல்வன்.

என்றிம் முறையே பலபலசொற் றிகலி யொருவர்க் கொருவர்தம்மின்
மன்ற மதித்துத் தஞ்செல்வ வளமைப் பெருக்கான் மருள்வார்க்குச்
சென்று நாப்ப ணுலகெவைக்குந் திகழோ ரொளியா யிரகோடி
துன்று பரிதி மதியங்கி யொன்றாய்த் திரண்டு சுடர்வனபோல். (க௫)

புக்க தொருபே ரொளியாகிப் பொருவில் சிவலிங் கத்துருவாய்
மிக்க வெம்மை குளிர்மையன்றி வெண்மை கருமை பொன்மையன்றித்
திக்கும் புவியுஞ் சேண்விசும்பும் யாண்டு நிமிர்ந்து தெரிப்பரிதாய்த்
தக்க வேலை யொளிமுழுதுந் தள்ளித் தானே தனிவிளங்க. (கசு)

இருவர் தாமு மதனையெதிர் நோக்கி யிறும்பூ தெய்தினரா
யொருவர்க் கொருவர் தாந்தம்மி லுரையா நிற்ப வீதென்று
பெரிது நமது நடுத்தோன்றிப் பேச வரிய விம்மிதத்தைத்
தருவ தாயிற் றிதன்வடிவு தனைநா முணரா திருந்தக்கால். (கஎ)

நமக்குப் பெருமை யெவ்வாற்று னுளதாம் வாளா நாமிருவே
மமைத்தற் கரிய விகலெய்தி யாவ தென்னே யளப்பரிதா
யிமைக்கு மிதற்கு முதலெனினு மிறுதி யெனினு மெவர்காண்பர்
தமக்கு நிகர்வே றொருவரில்லாத் தலைவ ரவரே சாதமிது. (௧அ)

என்று மொழிந்து முதலளப்ப வியைந்து மாயோ னேகினு
னன்று முடிவு காண்பனென நளினப் பொருட்டு நான்முகத்தோன்
சென்று வருந்தி ஞனளப்பி னுகங்க ளிருவர் தேடலுற்று
மொன்று மதற்கு முதலிறுதி யுணரார் மிகவு முளம்வியந்து. (௧௯)

மீளுற் றவர்பே ரொளியாகி விளங்கா நின்ற வதையுணர்வான்
மூளுற் றிடுவேட் கையராகித் தம்மி லிதனை மொழிகுவார்
நீளுற் றிடுமிவ் வொளியினைநா முன்கண் டறியே நெடுவிசும்பில்
வாள்விட் டிலகி யளப்பரிதா யாண்டு மாகி வயங்கியதால். (௨0)

நோக்குந் தோறும் பயமளித்து நோன்மை நமக்கில் லாதபடி
யாக்கு மிதனு னம்வயத்த ரல்லே மானே மாதலாற்
காக்குந் தலைவ னொருவனைநா முடையே மானேங் கருதின்மெய்யாய்
மேக்குங் கீழுந் தொடர்ந்தவிது நம்மாற் பணிதல் வேண்டுமால். (௨௧)

இதுதா னமக்குக் கருணைசெய்யா திருந்தாற் பயத்துக் கேதுவென
வதுதா முணர்ந்து விழைவுற்ற கருமநன்மை யாவேண்டின்
மதியா லறியப் படுபொருளும் வணங்கும் பொருளு மிதுவேயென்
றுதியா நின்ற கருத்தினராய்த் துணிந்து நமதோ ரொளிவடிவை. ()

பாரின் கண்ணே முடிதாழ்ந்து பரிவுற் றுள்ள மொன்றுகிச்
சேருங் களிப்பை யளிப்பதாய்த் திரையி னமிர்திற் றீஞ்சுவைத்தாய்க்
கூறும் புகழ்ச்சி யினிதெடுத்துக் கூறு நிற்பா ராயினுர்
காருங் கடலு நிகர்ப்பானும் விசும்பு நிலனுங் கண்டானும். (௨௩)

வேறு.

நின்னுட னிருவ ராக நிகழ்த்தவே றொருவ ரில்லா
முன்னவ போற்றி யீறு முதனடு வில்லாய் போற்றி
யுன்னருஞ் சிவாய போற்றி யொழிவினி லடைவாய் போற்றி
மன்னுசீர்ப் பரம போற்றி சிவலிங்க வடிவே போற்றி. (௨௪)

அருந்தனை யீறாய் நாத மாதியா யளவி லண்டம்
விரிந்தவை விழுங்கு நீத்த மீதுவிற் றிருப்பாய் போற்றி
பரந்திடும் வேட்கை நீங்கி னடைந்தருள் பரம போற்றி
திருந்துசீர்ச் சிவாய போற்றி சிவலிங்க வடிவே போற்றி.

அற்றமில் பிறவி யாய வழிதுயர்ப் பிணிதீர்ந் துய்ய
வுற்றதோர் மருந்தாய் நாளு முதவுறு மொன்றே போற்றி
பற்றறு திக்கட் கோன்றும் பரமமே சிவமே போற்றி
தெற்றென வறித றேற்றுச் சிவலிங்க வடிவே போற்றி. (உசு)

யாவனென் பவனே போற்றி யாதேயென் பவனே போற்றி
யோவிலா வொருவ போற்றி யுயர்பரப் பிரமம் போற்றி
மேவுபற் றறுதி தன்னில் வெளிவருஞ் சிவமே போற்றி
சேவைதந் தருளு போற்றி சிவலிங்க வடிவே போற்றி. (உஎ)

கொழுஞ்சுடர்க் கொழுந்து கோடி கோடியாய்த் திசைக ளெல்லாம்
விழுங்குபு நிறையா நின்ற வெவ்வழற் றம்ப மாகி
யெழுந்துயர் சிவமே போற்றி யாவும்விட் டொழிந்தா லெய்துஞ்
செழும்பரம் பொருளே போற்றி சிவலிங்க வடிவே போற்றி. (உஅ)

அவனெனப் பாவித் தாலு மெதுவெனப் பாவித் தாலு
மவனுமா யதுவு மாகி யன்பரைப் புரப்பாய் போற்றி
யவனெனா வெனப்பா விக்கி னவ்வணா மாவாய் போற்றி
யுவமம்வே றொன்று மின்றி யுயர்பரப் பிரமம் போற்றி. (உகூ)

சிறிதுமோர் விகார மின்றி நித்தமாய்ச் சிதானந் தத்தின்
மறுவிலா வடிவ மாகி விழைவுறின் வருவா யாகி
நிறையுநன் மைகள்யா வைக்கு நிலைமையாய் வணங்கு தற்கோ
ருறையுளாய்ச் சிவமா யோங்குஞ் சிவலிங்க வுருவே போற்றி. (௩0)

இனிதுவாழ் வளிப்போ னாகி யேலவு நல்லோ னாகிக்
கனியுமன் பர்க்கு முத்தி கருணையா லருள்வோ னாகி
நனிதவச் சிவமே யாகிப் பற்றறு திக்க ணண்ணுந்
தனிமுதல் போற்றி போற்றி சம்புவே போற்றி போற்றி. (௩௧)

வேறு.

என்றிவை வழுத்திக் காமுகிழ்த் திறைஞ்சி யிலிங்கமுன் னெய்திநின் றினிதா, யொன்றுரை செய்வ ரிறைவகேள் யாங்க ளிருவரு மெவ்வகை யுலகு, நன்றுற நடாத்த லுற்றதி காரந் தன்னிலே நின்றன நாளு, நின்றதா லெல்லாப் பெருமைக ளுக்கு நிலைபெறு மிருப்பிட மானேம். (௩உ)

நினதுமா யையிலே மயங்கினே மதனு னின்னையா முணர்கிலே மீயா, ருனதுபே ரொன்னை சோதியாய்த் திகழ்தி யுன்னுடைச் சுய்

தமே துணாதெதென், றனையவா வினவ நாமிலிங கததி லிருநதுமாங கவரெதிா தோன்றி, யினிதுற நனகு மதிததுவப புடனே யாமிரு வாககுமொன றிசைபபேம. (௩௩)

யாமொரு வேமே யுலகினுக கெலலா மிறைமையுற றெனறை க்கு மழியாக், காமரு செலவ முடையமா யெனறுங கருதினைம வயத தமாய் வதிவேந, தாமெவா களூாதம வயததால லாமற றுஙகண மாயைபான் மருளவா, நாமமிங கெமககுப பலபல வுளள வவறறி னிற சிலசில நவிலவாம (௩௪)

உருததிரன வீமன பசுபதி யீச னுககிரன சருவனமா தேவன், பரிததிடு பவனென றெமபெப ரிவையா திறபண நடபபன பலவாயப, பெருததிடு முயிருட டிககினுள விசுமபு ளெஙகணுங குறைவினற் நிறைவேங, கருததையுங கடநது திலததினுட டயிலங கலததலபோ லெஙகணுங கலபபோம. (௩௫)

முதனடு விறுதி யினறிய நாநம மிசசையின முழுதொருங குணாவேம, பதிவுறு முலக முழுதுநாம விதிககப பரிததிடப படு வன பினனா, விதிமுறை நமமா லழிககவும படுவ தீயிமற றிருவரும விரிநது, தநைவுறு முலக மெமவைககுநற றலைவா நுமமிரு வருககு நாந தலைமை (௩௬)

நமககுநா மொபப தனறிமற றெருவா நமககெதி ராயினோ ரிலலை நமககுயாந தவரு மிலலைநந தமககு நாமுயிா நமதெறு ழ வலியா | னுமைபபுரந திடுவே முலகெலாம வேத நூலவழி நாமபடைத திடக கெமககுள காண தீயிரிவ விலிஙகத திபலபிணை யறிநதிடலவேணடின

சாறறுது முலகைத தனனுளே காநது சநததந தானவிளங குற றுப, பாறபட வெமது வாழவினுக கெலலாம பதிவுறு மொருநிலை மைததா, யேறறுள விதுதா னிலிஙகமென றுரகு மெமமெதாளிக கேலவு முரிததாயப, போறறுநங குறிமெய யுளளதா யிலய வுறபவங கடகொரு பொருடடாய் (௩௮)

இருததலி னிலிஙக மெனபபெயா பெறற திருவரு மிதனியல புணா, வருததினே முஙகட குணாசசிலை தீவிா மறறிதை நோக குமி னெனறேங, கருததினி லுவநது வழுததியாங கதனைக கண ணுற்று நினறவக காலைப, பரிததிடு மதனு ளனனவா விழிககுப புலப படு பொருளெலாம பகரின. (௩௯)

அளப்பிலா வீண்ட மமுதவெண் கதிரோ னவிரொளிப் பரிதியங் கடவு
ளுளக்குறு செந்தீச் சுடர்விடு முடுக்கள் சூழ்வுறு மிருந்திசை காலம்
விளக்குறும் வேத மந்திரங் கிரியை சங்கற்ப விகற்பமே யுயிர்கள்
வளப்படு மசத்துச் சத்துட னுத்த மனுத்தமற் றெவற்றையுங் கண்டார்.

கண்டவர்க் கதன்பி னுலகமுய்ந் திடுதல் காரண மாகமுன் காணா
விண்டொடர் பூடி தாள் விழிப்புல னாகி வெளிப்பட மிகக்களி சிறந்து
புண்டரீ கத்துக் கடவுளுந் தடக்கைத் திகிரியைப் பரித்தபுத் தேளு
மண்டுற நம்மைவணங்குபு சொல்வா ரண்ணலின் னருளினால் யாங்கள்.

பெறலரும் பயனைப் பெற்றன மினிமேற் பெருமயா மிழைத்திடு கரும, முறையினைக் கற்பித் தருளெமக் கென்ன மொழிந்தன ரவர்க் கிது மொழிவா, மெரிசுட ரிலிங்க மெமதித யத்தி லியன்றுள திதனில்யா மிருத்தும், பிறிதுவிக் கிரக பூசைக ளுள்ளு மிலிங்கபூ சனை பெரி துவப்பேம். (௪௨)

யார்சில ரிலிங்கத் தினியநூல் வழியே யெமையருச் சிப்பராங் கவர்கள்
சீரிய பூசை யாலிரண் டறவே சேர்வர்நம் முடனெனச் செப்ப
வோருரை பின்னு முரைப்பாபூ சனையி னுறுசெய லுபகர ணங்க
ணோர்பட வினவக் காமிக மாதி யாகம விதிநிகழ்த் தினமால். (௪௩)

நிகழ்த்திய பின்றை வேண்டிய தேண்மி னீயிரொன் றேமவர் சொல்வார், மகிழ்ச்சியை யெம்பால் வைத்தனை யெங்கண் மனததிரு டுரந்துவாழ் விக்காய், புகழ்ச்சியா லின்னும் பெறுவாம் யாதே பொழி பெருங் கருணையங் கடலே, யிகழ்ச்சியற் றெமக்கு வரந்தரு குதி யேல் யாங்களொன் றியம்புறக் கேண்மோ. (௪௪)

பல்வகை யுலகும் விதித்திடு காலைப் பரமநின் னிலிங்கத்தின் பரிசை, மெல்லவே யெவர்க்கும் விளங்கிட வுணர்த்தி விழைந்துகாத் தருளுதி யென்று, சொல்லினர் நாமுன் சொற்றவா கமத்தின் றாய பத் ததிதனைப் படைப்பி, னெல்லையில் நீவிர் விளக்குமி னென்றே யாமிலிங் கத்தினின் மறைந்தேம். (௪௫)

அன்னவர் பின்னர் தங்களில் விடைகொண் டகன்றனர் தம்முல கடைந்தா, ருன்னருஞ் சிவலிங் கத்திலுற் பவமா மொண்கதை யாவ னோ துற்றான், பின்னவன் ஞான சம்பன னாகிப் பெறலரு நம்முல கடைவ, னின்னதென் றினைய மகிமையை யுரைத்தற் கெளியதோ வேடவிழ் குழலாய். (௪௬)

உலகினிற் படைப்புப் பிற்றைவந் தெய்த வுயர்மறைக் கிழவன்யா முணர்த்து, மலகிலா கமத்துப் பத்ததி தன்னை யருந்தவ முனிவ

ரமரர், தொலேவிலா வவுணர்க் கிலிங்கபூ சனையைத் துகளற வுணர்த் தின னதன்பின், மலரவன் ருனு மாகம விதியா லனையபூ சனைமகிழ்ந் திழைத்தான். (சஎ)

அண்டர்கந் தருவர் கருடர்க ளியக்க ரரக்கர்தா னவருந் தவத் தோர், மண்டலத் தவர்மற் றெனைவரு முவந்து மாசில லிங்கபூ சனை மேற், கொண்டுநன் கிழைத்து வாழுமக் காலங் குவலயத் தருந்தவர் சில்லோர், தண்டருந் தாரு வனத்திலப் பூசை தனைச்செயா தருந் தவஞ் செய்தார். (சஅ)

செய்தவர் தம்மைப் பின்னர்நாஞ் சென்று சிந்தையை மருட்டி யங் கதற்பி, னுய்வதற் கிலிங்க மகிமையை யுணர்த்த வுணர்ந்தன' சென்றிவை யுரைப்ப, வையனை நோக்கி யெம்பெரு மாட்டி யறைகுவ ளருந்தவ ரெவ்வா, றெய்தினர் மயக்க மிலிங்கமான் மியத்தை யெம் முறை யுணர்த்தினை யென்றாள். (சகூ)

ஆகச்செய்யுள், அ௬௪.

---

பதினாறாவது

# தாருகாவன விகாரமுணர்த்திய அத்தியாயம்.

---

அருந்த வத்துப் பிருகுவொ டங்கிரா
வருந்தி நோற்கு மரீசி புலத்தியன்
பொருந்து தக்கன் புலகன் கவுதமன்
றிருந்து மத்திரி செம்மை வசிட்டனே. (க)

கடன்க பாலன் கபிலன் கிருதுவென்
றடங்கி னேரும் பிறரு மநேகராய்
நுடங்கும் வெண்புரி நூலணி மார்பினர்
கடிந்தி லிங்க வருச்சனை காமுறார். (உ)

மாற்ற மின்றிய் மாதவம் பறபல
வீற்று வீற்று விதிவழி வைகலு
நோற்றன் மேயினர் நோற்பவ ருட்சிலர்
தோற்றஞ் சான்ற கதிரோற் றொழுபவர். (ரூ)

எரிசு டர்த்தழ லேந்துகின் றோர்சிலர்
பாவி மறறை யரைபபணி வோர்சில
ரரிய மாமறை யாய்ந்துணர் வோர்சிலர்
தெரிவ ருஞ்செபஞ் செய்பவர் தாஞ்சிலர். (௪)

சிந்தை தன்னிற் றியானமுற் றோர்சிலர்
முந்தை யோக முயலபவர் தாஞ்சிலர்
நந்தி டாதமெய்ஞ் ஞானமுற் றோர்சில
ரந்த மிலகரு மமியிழைப பார்சிலர் (௫)

வெய்ய சோதி வெயிலுண் பவர்சிலர்
நொய்ய காற்று நுகர்கின் றவர்சில
ருய்ய மென்சரு குணபவர் தாஞ்சிலர்
பைய நீரைப பருகலுற் றோர்சிலர் (௬)

சுவையி லாதன துய்பபவர் தாஞ்சிலர்
நவையில கந்த நயாதுதின பார்சிலர்
சிவை யகழ்ந்து சிறிதயில வார்சிலர்
தவறில பாசடை தாமிசை வார்சிலர் (௭)

இனைய வற்றினை யென்று மருந்துரு
வினையி னீங்கும விரதிய ராயிர
ரனைய ரற்று மருந்தவத் தாலுட
றுனியு ருதவ ராகித் துவனறியே (௮)

தேவ தாரு வனத்திடைச் சோர்ந்தனர்
யாவர் தாமு மினைய தவமலா
லாவ தாஞ்சிவ லிங்க வருச்சனை
மேவு றாது விடுதத தவறறினால (௯)

மறறன் னோரை மருட்டும பொருட்டவ
ருற்ற சூழ லுழிச்சென றிளவெயி
லுற்ற பானுவிற் றோன்றித் தூறவிகள
முற்று மோகிகக மோக வடிவினயா (௧௦)

அளந்தி டற்கரி தாய வழுகொடும
விளங்கி லக்கணம யாவு மிகுந்துளங
குளிர்ந்த வின்னிசை ராதமுங கூத்துமுட்
டெளிந்து வலலுந மாகிச சிறபபொடும. (௧௧)

வீணை யங்கையின் மென்மெலத் தைவராக்
காணி லையம் பிராயங் கணித்திடு
மாண லத்தொடு மாதவர் மல்கிய
சேணு யர்ந்த வனத்திடைச் சேர்கையில். (கஉ)

வீக்கு மந்துகில் விட்டு விடனென
நோக்கு வார்நுண் ணறிவைக் கவருநல்
யாக்கை தன்னொ டெதிர்ந்தன மெம்முடன்
றேக்கெ றிந்த துழாய்முடிச் செங்கண்மால். (கங)

அம்பொன் வண்ணத் தவிரொளி மேனியுங்
கம்பிக் குண்டலக் காதழ குங்கனச்
செம்பொற் சோதித் திதலை பொதிந்தொளிர்
பைம்பொற் கும்பப் பணைமுலைப் பாரமும். (கச)

மட்டு வார்குழ லும்மதி போன்றொளி
விட்டி லங்கு முகமும் விகாசமு
நெட்டி லைப்பசுங் கதலி நிகர்த்துள
கட்டெ ழிற்குறங் குங்கண் கவற்றிய. (கரு)

நீடு பொற்பட் டுடையு நிறைசுடர்ப்
பாட கப்பத மும்பதி னொறென
நாட லுற்ற பிராயமு நன்குறக்
கூட நம்மொடு மங்கன் குலாவினன். (கசு)

வேறு.

மெல்ல நடந்து விநோதித்து நோக்கிச் சிறிது நகைவிளைத்துக்
கல்லுங் கனிய விதம்விதமாக் கான மெழுப்பிக் களிசிறந்த
நல்ல நடமோ டொருங்கினிது பாடி யுலாவி நற்றவத்தோர்
மல்குஞ் சூழ லிடையடைந்தே மற்றி யாரு மருங்கணைந்தார். (கஎ)

அங்கை கூப்பி நாமடங்கி யஞ்சி யெளிய ராகியவர்
தங்கட் கியையச் சிலசொல்வோந் தவத்தா லுயர்ந்தீர் தமியேனுக்
கிங்கு மாதா பிதாவிலையென் னுடனே பிறந்தார் யாருமிலைப்
பொங்கு கிளைஞ ரெவருமிலைப் போந்தேன் யானிங் கொருவனுமே.()

என்னோ டுரைக்க விரண்டாவ தொருவ ரில்லை யதனால்யா
னின்னே நும்மை வந்தடைந்தே னெளியே னுடைய பிரகிருதி
தன்னை யறிந்தே யாவர்சிலர் தமிய னேனை யுபசரிப்பா
ரன்னோர் தாமே தாய்தந்தை யவரே கிளையு மெனக்கவரே. (கசூ)

நம்மோ டொருங்கு வந்தணைந்த வஞ்ச மடந்தை நலநோக்கி
யம்மா தவர்க்குக் குலமைந்த ராற்றுந் தவம்விட் டவளழகிற்
செம்மாந் தடங்காக் காமுகராய்ச் சிந்தை கலங்கித் தெருமந்தா
ரம்மா ணிழையா ரழிந்ததுவு மைந்தர் குறையுந் தானோக்கி. (௨௮)

ஆசி றவத்தின் றுறைபோய வந்த ணாள ரெமையீங்கு
வாசம் வேண்டா போதிரென வரைந்தார் வரைந்த வரைநோக்கிப்
பேசி னேம்யா மிருந்தவத்தீர் நுமக்கொன் றுரைக்கேம் பேதமின்றி
நேசித் தினிது கேண்மின்கள் வெகுளா தமைந்து நீவிர்தாம். (௨௯)

வேறு.

நும்மை யொத்துள நுண்ணுணர் வுள்ளவர்
செம்மை யிற்குணங் குற்றந் தெரிகுவா
ரெம்மொ ழுக்கமெஞ் ஞான்றினு மெண்ணுறி
னம்ம வற்பமுங் குற்ற மணுகுறா. (௩0)

எங்கள் பாற்பிறர் கேட்ட வினியசொ
லங்க வர்க்கின் றளவும் பயன்படப்
பங்க மற்றிப் படியே பலிக்கவு
நங்கள் பாற்குறை யுண்டென நாடினீர். (௩௧)

பழுதி னும்முடைப் பன்னிக ளாணையின்
வழிநின் றேனவர் தங்கண் மனத்திடை
விழையுங் காதலி னலிங்ஙன் மேவினேன்
பிழைசெய் தேனோ வலிதிற் பிடித்துநான். (௩௨)

வரம்பி லாதநும் மைந்த ரிவடனை
விரும்பி யேவ லிதிற்பிடித் தார்மிக
வருடம்பின் வெண்ணகை யாளுமற் றென்செய்வா
ணிரம்ப வாங்கவ ராணையி னின்றனள். (௩௩)

வலிதிற் பற்றிடி னாணை வழீஇயிவ
ணிலைநிற் கின்றதே யன்றிநெஞ் சிற்பய
மலிவுற் றாள்பின் மறுக்கவும் வல்லளோ
கலைமுற் றுந்தெரி காட்சியின் மிக்குளீர். (௩௪)

ஈண்டி யாமிருந் தின்னு மிழைத்திட
வேண்டி டுங்குறை யுண்டு விதியினிற்
பூண்ட வற்றை முடித்தபின் போகுதுங்
காண்ட கும்மொரு திங்கள் கழிந்தபின். (௩௫)

என்று சொல்லவு மீங்குவிட் டேகெனக்
கன்று முள்ளத் தவர்கள் கழறலு
நன்று பின்னுமஞ் சாது நனுகுரு
வொன்று மன்பி னுறைந்தன மாயிடை. (௩௬)

யாமி ருந்தங் கிழைக்கும் வினைதத்தைக்
காம மின்றிய மாதவர் கண்டனர்
நாமி ருந்தது நன்றெஎன நன்றெனத்
தீமு னிங்கெனச் சீறித் துயர்செய்தார். (௩௭)

காண ருந்துயர் கண்ட வருந்ததி
நாணு முள்ளத்த னூட்டம் புதைத்தனள்
வேண வாவினள் வீசிமுன் றனையாற்
பேணி யாம்படு பீடையை யாற்றினாள். (௩௮)

அனைய காலையி லாங்கவ டன்னையா
மினிது வந்தன மீன்றவ ளென்னவே
நனிமி குந்துய ராற்றிய நங்கையு
மனையி லேக மறைந்தனம் யாங்களே. (௩௯)

மறைந்த காலையின மாதவா வைகிய
சிறந்த வாச்சிர மங்க டிசைதொறுங்
கறங்கு காலொ டெரியெழக் காண்பது
மறைந்தி டற்கரி தாமஃ தாதிய. (௪0)

அளவி லாதவுற் பாதமுண் டாயின
கிளர ருந்தவர் போதமுங் கெட்டன
தெளிய வின்னது செய்குவ மென்றுண
ருளமு மற்றன ரூமர்க ளொத்தனர். (௪௧)

அன்ன காலை யனையரை யத்திரி
பன்னி யாமந சூயை பகுத்துள
முன்னி யாவு முணர்ந்தவ னோக்கிமற்
றின்ன தோர்சொல் லியம்பின ளென்பவே. (௪௨)

ஊன மின்றி யுயர்தவத் தீர்பழு
தான செய்தியொன் றுற்றினிர் நீவிரப்
பான்மை யாலிப் பயமுள தாயது
யானு ரைத்த விதுதிட மாகுமால். (௪௩)

பெரியனாகி யொருவர் பிரிவுறு
வரிய காதலி யோடிங் கணைந்துறும்
முரிய வேவலி னேருழி வைகிநற்
பரிவி னுற்பலி வாங்கிப் பசியினில். (சச)

அருந்தி நாளு மருந்தவன் றாமிழைத்
திருந்து ளாரைய மேற்க வருகையிற்
றிருந்து காதலர் தம்மொடுஞ் சேர்ந்துறை
யருந்த திக்கு மெனக்கு மவர்தமை. (சரு)

இங்கு ருத்திர னென்றுமிவ் வேந்திழை
செங்கண் மாயவ னென்றுந் தெரிவுற
வங்கு ணர்ச்சியுண் டாய தவர்களைத்
தங்கு காரணந் தானென் றுமின்றியே. (சசா)

சீற்ற மேல்கொடு தீங்கு விளைத்துநீர்
மாற்ற மாக்கிக்கொண் டீர்மற் றதுதனு
லாற்றொ ணுப்பய மாய ததற்கினி
யேற்ற செய்ம்மின்க ளென்சொலை மெய்க்கொடு. (சஎ)

என்றி தம்பெற விம்மொழி சொற்றபின்
மன்ற லோதி மனையிடைப் போயினள்
பின்றை மாமுனி வோர்பிர மன்னுழைச்
சென்றி றைஞ்சினர் தங்குறை செப்புவார். (சஅ)

தேவ தாரு வனத்துழைச் செய்திக
ளியாவு மோதின ரேடவிழ் தாமரைப்
பூவின் மேலவன் கேட்டற் புதத்தொடு
மாவெ னுநொந் தரந்தையுற் றுனரோ. (சகூ)

நீடித் துள்ளத் தியான நிலைபெற
நாடிக் கண்டனன் யாவையு நான்முகன்
றேடிச் சென்ற செழுந்தவர்க் கோதுவான்
வாடிக் கொண்டு வளர்நெட் டுயிர்ப்புடன். (ரு௦)

ஈண்டு சூரிய ரெண்ணிலர் காலையிற்
கூண்டெ ழுந்தன கோலத் திளமையோ
டாண்ட ணைந்தவ னுல மிடற்றினன்
பூண்ட காதலி யும்புயல் வண்ணனே. (ருக)

னியர் தாம்வந் தடுத்தனர் நுங்களை
நினைவ ரும்பழி நீவிர் விளைத்ததா
முனிவ ரேயவர் முன்னிற்ப ரோநுமக்
கினைய காரியம் யார்செய்வ ரிப்படி. (ருஉ)

வேறு.

அன்றோ வன்றோ வுடல்வருந்தி யளப்பில் காலந் தவமிழைத்து
மென்னே சிறிதும் பயன்படா திழந்தீர் நும்பா லிறைவாவுங்
கொன்னே பழித்துத் தள்ளியதா லுங்க ளாிலையுங் குலத்தொழுங்கு
மின்று வாகிக் கெட்டனவே யினியோர் சூழ்ச்சி சொலக்கேண்மின்.()

நுங்கட் கிறையைக் கண்ணுறுதல் வேண்டின் யான்று னுவல்வதனைச்
சங்கைப் படாமற் செவிமடுத்து நீரம் முறையே தாஞ்செய்ம்மின்
செங்கட் டிமில்வெள் ளேறுயர்த்த தேவர் பெருமா னுளமுவப்புற்
றங்கட் படவே மணியினு லவிர்செஞ் சுடரா டகந்தன்னால். (ருச)

மண்ணாற் றருவாற் றத்தமக்கு மனத்துக் கிசைந்த சிவலிங்கம்
பண்ணிப் பரமன் றனையவற்றிற் றியானித் தினிய பரிவினொடு
மெண்ணற் கரிய விதியினொடு மலர்தூ யிறைஞ்சி யேத்துமின்கள்
தண்மைப் படுமா றங்கவரா லடைந்த கலக்கந் தவிர்மின்கள். (ருரு)

ஆதி கற்பந் தொடங்குகையி லாழி நாப்பட் டுயில்வோனு
மோது மறையின் யான்று மொருவர்க் கொருவ ருயர்ச்சியெண்ணி
மோது சினத்தாற் கலாமுற்றே மப்போ தெங்கண் முரண்டீர்ப்பான்
சோதி யாய சிவலிங்க மெமது நடுவே தோன்றியதால். (ருசு)

கண்ட போதே யாங்கள்செற்றங் கைவிட் டுளத்தி லிறும்பூது
கொண்டு வெருவி யிவ்விலிங்க வடிவி னளவைக் குனிப்பமென
வண்ட முழுது மூடுருவு மதன்றன் முடியை யளந்திடநான்
மண்டு முகங்கள் பலதேடி வருந்திக் காணு ததிசயித்து. (ருஎ)

பின்னு மதன்பாற் பெயர்ந்துநான் சரணென் றடைந்தேன் பின்னரதிற்
றன்னே ரில்லாத் தனிமுதல்வன் றானே யெனது முற்றோன்றி
யுன்னற் கரிய சிவலிங்கத் தியல்பை யுள்ள முறையுணர்த்தி
மின்னுந் திகிரிப் படைவேந்தன் றனக்கு மெனக்கு மிகத்தெளித்தான்.

அதன்பின் னவன்ற னின்னருளா லதனை யாங்கள் கண்ணுற்றேந்
ததைந்தங் கதனி லெப்பொருளுந் தோற்ற மாகித் துலங்கலுற்ற
ததைந்த வண்டஞ் சகங்கால ருத்தி ராதி தம் வடிவு
மிதங்கொள் சம்பு வுடன்விட்டுப் பெருமை முழுது மிகக்கண்டேம்.()

எம்மி னுயர்ந்த் வெறும்வலியும் வடிவு முளவா யெண்ணில்பொரு
ளம்ம வதனில் வதிந்திலகக் கண்டே மதன்பி னெமக்கருளாற்
செம்மல் சிலசொற் றனனெமது சின்ன மாகிச் சிதைவின்றி
மெய்ம்மை பெறுமிவ் விலிங்கநம்மா லன்றிக் காணார் விரகில்லார்.(கூ0)

இருமைப் பயனு மெய்திடலா மிதனி லிழைத்த வருச்சனையா
லருமை யாமவ் விருபயனு மிதனு லன்றி யடையாவா
முரிமை யிதுவென் றெஞ்ஞான்று மிதனிற் றுணிவுற் றெழுந்துள்ள
கரும மெவையு மகன்றடங்கி யிப்பூ சனையே கைக்கொண்மின். (கூக)

பழிப்பில் விரதந் தவந்தீர்த்தம் வேள்வி முதலாற் பயனென்னே
யிழைக்கின் றனவா மவைமுழுது மிலிங்க பூசை யில்லார்க்கு
வழுக்குஞ் செயல்க ளாய்ப்பலிக்கு மிதனே டவையும் வந்தக்கால்
விழுப்பம் பெரிதும் விளைந்தளிக்கு மிதனிற் பணிவோர் மிகச்சதுரர்.

யாவர் சிலர்தாந் தோன்றியிறந் திளைக்குங் கவலை யறநினைவார்
யாவர் சிலர்தாம் பரமசிவத் தெய்த விழைவா ரங்கவர்கள்
மேவும் வருத்தந் தவப்பெற்று மெய்யே யிதனைச் செயல்வேண்டு
மாவ துணர்ந்திங் கிதைச்செய்யா தும்மை மருள்வித் தானமலன். ()

பெரிதும் விழுப்பஞ் சிவலிங்கத் தருச்சி யார்க்குப் பெறலரிதா
முரிய துணரா தும்முள்ள மயக்க முறுதற் பொருட்டிறைவன்
கருத லரிய விந்திரசா லம்போன் மயக்கங் காட்டினன்
பரிவி னுமக்கு மெய்யேநாம் பகர்ந்தே மின்னும் பகர்கிற்பாம். (கூச)

ஆசின் றுயர்ந்த வக்கடவுண் மாயை கடந்தோ னருள்ஞானத்
தேசு திகழும் வடிவனவன் றனதோ ரருளாற் சிருட்டித்த
மாசி லாத வெவற்றையுந்தன் மாயை யாலே மருட்டுவனு
லீசன் செய்தி யறந்தன்னைக் காக்கும் பொருட்டா லிருக்குமால்.(கூ௫)

அவ்வா றறத்தைக் காக்கின்றே னெவ்வா றறத்தை யழிப்பனவன்
செவ்வா காத விடவேட மான மாயைச் செயலுமுங்கண்
மைவார் கூந்தன் மனைவியரை மைந்தர் தம்மை மருட்டியது
மொவ்வா நின்ற விந்திரசா லந்தா னுண்மை யுரைத்தேமால். (கூகூ)

கற்பி னுயர்ந்த பன்னியருங் காதற் புதல்வர் தாங்களுந்தம்
பொற்பின் மிகுந்த நிலைமைவழீஇப் போனு ரில்லைப் புண்ணியத்தி
னிற்கின் றவர்க ளன்னவரை நீவிர் விழைந்து வாவழைத்து
நற்சிந் தனைவைத் தவரோடு நாளும் புரிமின் சிவபூசை. (கூஎ)

தனது வயததன் ருணுகி யன்பிற் றேன்றுஞ் சங்கானைத்
தினமு நீவிர் சிவக்குறியிற் சிந்தைக் கலக்கக்.தனையொரீஇ
மனமன் புறவே வழிபடுமின் வழிபட் டிறைஞ்சி வருகைக்கே
கனியு மருளா லவனும்மைக் காப்பன் சிலகா லங்கழிந்தால். (கூஅ)

யாதோர் வடிவா யவன்வரினுந் தர்க்க மிடாம லெதிர்கொண்டு
மாதோர் பாகற் ஜெழுமின்கண் மற்றங் கவன்ற னெவாரனுஞ்
சாதித் துணர்தற் கெளியனலன் றனெவ் வுருவாய்ச் சார்ந்திடினுங்
காதல் பெருகி யிறைவனெனக் கருதி வழிபட் டுய்ம்மின்கள். (கூகூ)

என்று பதும மாளிகையி லிருந்தோ னியம்ப வெதிர்தாழ்ந்து
நின்ற முனிவர் தங்களுழை யடைந்து நேய மகளிரொடுங்
கன்றும் புதல்வ ரொடுங்கலந்து களிக்கு முளத்தாற் றத்தமக்கு
நன்று மியைந்த சிவலிங்க மியற்றி நாளு விதமாக. (எ0)

பூசை யுவப்போ டெப்போதும் புரிந்தா ரிறையு மையமின்றி
மாசி றவத்தோ ரவ்வாறு வருகைக் கேயுன் மத்தனெனப்
பேசும் வடிவம் யாங்கொண்டு மற்றங் கவர்பாற் பெரிதடைந்தேங்
கூசும் படிக்குத் தண்மையா மெமதோர் கோல மவர்கண்டார். (எக)

கண்டு கமலக் கடவுள்சொற்ற வொருகட் டுரையைக் கருத்திலுறக்
கொண்ட குறிப்போ டிருந்திறைவ னெக்கோ லமுநதான் கொள்வ
மண்டு திடத்தால் விடமவடி வாகச் செலவும் வார்சடைமேற் [னென
றுண்ட மதியைச் சூடியெனத் துணிநதார் பணிந்தார் தொழுதாரால்.

பின்ன ரனையோர் பிடித்தநிலை பெட்புற் றெமது மெய்காட்ட
வன்னர் நம்மை நோக்கியுவந் துருகு முளத்த ராய்ப்பனுவல்
சொன்ன விதியி னருச்சித்துப் பலவாய் வழுத்தித் தொண்டிழைத்தா
ரின்ன வணக்க மகிழ்ந்துநா மினிய ஞான முதலாக (எஉ)

வேண்டும் பொருள்கள் வேண்டியவா றளித்தாங் கவரை மிகநோக்கி
யாண்டு நுங்கட் கயன்சொற்ற விதிவ ழாமை லாசைநமபாற்
பூண்டு நீவிர் சிவலிங்க பூசை யாற்றிப் பூசையா
லீண்டு பிறவி கடப்பதாஞ் சித்தி யடைந்தீ ரெல்லீரும். (எச)

வேறு.

பண்டை ஞான்றெமைப் பாட்டளி முரன்றபா சடைசூழ்
புண்ட ரீகமென் பொகுட்டுறை திசைமுகப் புத்தேள்
கண்டு நீசிவ லிங்கத்திற் கலந்தினி தென்று
மண்டு மின்னரு ளோடுவை குதியென வணங்க. (எரு)

அம்மொ ழிப்படிப் பின்னர்யா பெங்கணு மமைந்த
செம்மை நற்சிவக் குறியிடைத் திகழ்வுறறு விளங்கி
யெம்மை யேத்துந ரிழைத்திடு பூசனை யாவு
மம்மர் தீர்ந்தவ ருவப்புற மகிழ்ந்துகைக் கொள்வேம். (எசு)

நீடு வானவர் தானவர் தம்மொடு நீவிர்
கூடி நந்தமைச் சிவக்குறி குயிற்றியங் கவற்றி
லேட விழ்ந்ததண் மலர்சொரிந் தேத்துமி னெம்மை
நாடு கட்புல னுகவே நவிற்றுபூ சனையின். (எஎ)

புகல ருஞ்சிவக் குறியினி லருச்சனை புரிதல்
பகர்வு றிற்பதி னுயிர மடங்குள பயனு
நிகரி னும்முளம் விழைவன முழுவது நீவிர்
தகுதி யிற்பெற வணங்குமின் சிவக்குறி தன்னில். (எஅ)

ஈங்கி தன்றியே யின்பமும் வீடுமீந் திடுதற
கூங்கு வேறொரு கருமமு மிலைநம் முருவா
யாங்கெ ழுந்தநல் வடிவமாங் காமிக மாதி
யோங்கு மாகமத் தொழிவிலா நியமநல் லொழுக்கம். (எகூ)

மற்றி யாவையும் வைத்தன னெழுத்தின்மாண் பிறப்பும்
பற்று மாங்கதன் றெய்வமு மவற்றுடைப் பயனுங்
குற்ற மின்றிய வைம்பெரும் பூதத்தின் குணமுஞ்
சொற்ற வவ்வெழுத் தான்வரு மந்திரத் தொகையும். (அ0)

துன்னு சந்தமு மிருடிக ளுந்தொட லுற்ற
நன்னி யாதமு நவில்புரச் சரணையு நியாத
மன்னு மந்திரக் கடவுள்பூ சனையுமந் திரத்தா
லுன்னு மூவிரண் டாம்பிர யோகத்த வொழுங்கும். (அக)

திகழ்சி வக்குறி வடிவமுந் தேவபன் மத்தி
னிகழுந் தோற்றத்தி னெடுநிறை தேசகா லத்தின்
பகுதி யும்பயில் குண்டமண் டபமுறு பாங்குந
தகுசி வக்குறிப் பதிட்டையி னியற்றுதந் திரமும். (அஉ)

அருச்ச னைக்குறு முபகர ணங்களி னடைவுந்
தரித்தி டக்கமா மணிகளுந் தவளநீற் றியல்பும்
பரித்த சந்தியு மோமமும் பத்தர்தம் பரிசும்
விரித்த பாசுப தாதிய சமயவேற் றுமையும். (அரு)

குரவன் பணிபுமா ணுக்கள தொழுக்கமுங் குரவன்
விரவுந தீக்கையின் விதிகளு நநதமை விழைநது
பரிவி னலகுதா னங்களின் முறையுநம பததா
விரத மாதிய வீறறுள கருமததின விதியும் (அச)

நிததி யத்தொடு நிகழ்ததுநை மிததிக நெறியும
வைதத காமிய வகையுநம யோகததின பரபும
புததி முததிகள வழஙகுறு திருவிழாப பொலிவு
மொய்தத தேமலா தீஙகனி முதலபூ சனையும (அரு)

அமபொ னலய மமைததிடு தனமையு மதன்முன
வமபு லாமலர் வாவிக ளகழ் திடு முறையு
மிமபா மறறிவை முதலநந கருமஙகள யாவும
பைமபொ னினபொறிச சுணஙகிளங கொஙகையாய் பகாநதேம ()

பகரு மாகம வொழுங்குடைப பததி கனனைத
தகுதி யாலுணாந ததன்வழிச சிவலிஙகந தனனிற
றிகழ ருசசனை செய்பமினவ வாகமச செய்தி
முகைய விழநதலர் முணடக முதல்வன்முன் னுளில (அஎ)

எம்மி டததினி லுணாநதன னவனிட்டத தெய்தி
நமமு டைக்குறிப பதிட்டையும பூசையு நாளுஞ
செமமை யிலவிழைந தாறறுமி னெனறவை தெருட்டி
யமமு னிககண மிறைஞசநா மறைநதன மஙகண. (அஅ)

மறைநத பின்றையம மாதவா மன்றலங கமலக
துறைநத பண்ணவற குறுகிநம மாகம முணாநதாங
கறைநத வவ்வழி யடஙகிய வுளததொடு மழகு
சிறநத நஙகுறிப் பதிட்டையும பூசையுஞ செய்தா. (அகூ)

அறறை நாண்முத லிமையவ ருநதவ ரவுண
ரெற்று தெண்டிரை யிருநில மாநதாயா வருநாஞ
சொற்ற பூசனை யிழைததனா வளமபல தோய்நதாா
மறறி தனசரி ததத்தினைக் கேட்குமாண புடையோா. (கூ0)

ஒல்லை வல்வினை யொருவிநற செலவரா யுயர்ந்து
தொல்லை வானவர் தானவா கணநதமைத துதிபப
வெல்லை யில்சிறப் பெய்திநம முலகினி லிருபபா
முல்லை வெண்ணகைச செய்யவாய் முகிழிள முலையாய். (கூக)

நஞ்சி வக்குறி நால்வகை வருணமுன் ளுனோர்
விஞ்சு பூசனை செய்யவும் வழுத்தவும் விதிததே
மெஞ்ச வில்புக ழிநதிர னிமையவர் குழாங்க
டஞ்ச மெய்த்தவச் சனகன்முன் யோகிக டாங்கள். (கூஉ)

பாவ கஞ்செயும் பண்பதாய்ப் பதுமமே லவறகும்
பூவை வண்ணனுக் குமவளந தருவதாய்ப புன்மைப
பாவ வெவவனத துக்கொரு படர்சிகைக் கனலாய்
மேவு றுமமறி வின்மையா மிருட்குவெங் கதிராய். (கூங)

முத்தி யேறிடு படியொழுங் காய்மொழி வுற்ற
வுத்த மச்சிவ லிங்கதா னமமுளைக் கையிலே
பதத யாகநீ நநதமை வேண்டிய பரிசா
விதத கைதநென வாஙகதன் றேறறமிங் கிசைததாப. (கூச)

யாது கேட்டிடல் வேண்டுவ தினி நீனக கென்னப
பாதி வெண்மதிப படர்சடைப பண்ணவன் பகரந கான்
சோதி வானுதற றெண்டைவாய்க் கெண்டையந தடஙகட்
கோதி லாபபசுந தேன்மொழிக் குலவரைக கொடிக்கே. (கூரு)

ஆகசசெயயுள், கஙக

பதினேழாவது

# கருமகாரணங்கூறிய அத்தியாயம்.

அறமொரு நாலெட்டு மடைவினி லினிதாறறும
பிறைதவ ழிமயத்துப பெண்கொடி வினவுறறுள்
கறைமிட றுடையானைக கண்ணுதல வானவனை
மறையுணா வரியானை வானவா பெருமானை. (க)

எமபெரு மான்கேண்மோ மாந்தாகள் யாவர்க்கு
மமபுவி மேறறோறற மொததுள தானலு
மும்பர்கள போறசிலர்தா முற்றனர் மிகவின்பங்
கமபலை கைமிக்குக் கவலுநர் சிலர்தாமே. (உ)

இருநிதி சிலரெய்த யாதுமி லார்சிலர்தாந
தெருளுநர் சிலராக வறிவிலர் சிலராறா
பாவுநா சிலராகச சிலர்பா வபபடுவோர்
திரமொடு சிலர்வைகச சிலர்சில நாள்வதிவோர். (ங)

ஒன்றையு முயலாதே யுறுபொருள் சிலர்பெறுவா
ரென்றுமு ழைப்புற்று மெய்திலர் சிலர்யாரும்
மன்றவு நோய்மிக்கு வாடுநர் சிலர்தாங்க
ளொன்றொரு பிணியுமிலா துடல்சுக மாவர்சிலர். (௪)

பல்வள மிகவெய்திப் பல்பகன் மகிழ்வர்சிலர்
சொல்லுறி னொருவளமுந தோய்கிலர் துயர்வாசில
ரலலையில் விதம்விதமா மிவையிவை பலவுங்கண்
டொல்குவ தெனதுள்ள மையுற லுற்றிங்கே. (௫)

ஐயுற வினிநீக்கி யருள்செயல் வேண்டுமென
மையுறழ் மணிகண்ட மதிதவழ் சடையோன்றான்
றையலொ டுரைசெய்வான் றரணியில் வாழ்மாந்தர்
செய்திகள் யாவுங்கேள் செப்புது மவையெல்லாம். (௬)

தாங்கள்செய் வினையாலே தவழ்திரை மாஞாலத்
தோங்குறு மனைவோரு மின்பமு முறுதுயரு
நீங்கரு நல்வாழ்வு நீடிய நல்குரவு
மேங்குறு மிடையூறுந் தளர்ச்சியு மெய்துவரால். (௭)

உண்கல மிசையிட்ட வடிசிலை யுண்பதெனப்
பண்புறு மக்காலத் தவ்வவ வினைப்பயனைத்
தண்கடன் மாஞாலத தவரவர் தாந்துய்ப்ப
ரொண்சுடர் மதியம்போ லொளியுமிழ் வதனததாய். (௮)

முந்துப வத்தொருவன் றெய்வ முயற்சியினாற்
றந்துள தொருசெய்தி நல்லது தானெனினு
நந்திடு தீதெனினு மாங்கது நல்குபலன்
வந்துற விம்மையிலே யாங்கவன் மாந்துவனால். (௯)

தெய்வத மியாவர்க்கு நடுநிலை யேசெய்யு
மவ்வகை யல்லதுதா னின்பமொ டாழ்துயரொன்
றிவ்வகை யொருவர்க்குஞ் செயவது வேயின்றா
லவ்வவர் கருமபல னவரவர் துய்ப்பர்கள்காண். (௧௦)

தொல்லைவினைப்பயனைத் துய்த்திடு காலமவரு
மெல்லையி லெப்படியு மெய்துவ ரீதுணராப்
புல்லியர் புன்கணுறும் போழ்துபொ றுக்கரியார்
சொல்லுவர் தெய்வமிது செய்ததெ னத்துயரால். (௧௧)

இழிகுல முயர்குலமு மேத்துறு மேம்பாடும்
பழிபடு மிளிவரவும் பாங்கின் வருஞ்சுகமு
மழிதுய ரும்பெறுத லாங்கவர் செய்வினையின்,
வழிவரு பயனல்ல வென்பது மற்றென்னே. (கஉ)

ஈங்கிவை விரிவாகச் சொல்ல வினிக்கேளாய்
பாங்குடன் யாதொன்று பற்றி யறிந்தளவி
லோங்குறு மறிவாகு மன்ன துணர்ந்துதும்யாங்
கோங்குறழ் மென்கொங்கைக் குயின்மொழி மயில்போல்வாய்.()

இம்மையி லேயொருவ னிருநிதி நிறைவுற்றுஞ்
செம்மையி னுகராமற் சிறிதும் வழங்காமல்
விம்மிய விவறுதலால் வைத்தன னவன் மெய்யே
யும்மையி னுவாந்தீயா னென்றினி துணர்குதியால். (கச)

இருநிதி யில்லவனு யிம்மையி லேயொருவ
னருநிதி பிறர்நல்க வதுகொடு தான்றுய்த்து
விரிவுறு சுகமின்றி மெலிகுவ னவன்மேனுட்
கருதிய தன்கையிற் கனபொருண் மிகவைத்தும். (கரு)

சுகமொடு வைகுற்றுந் துதிபெறு தானத்துக்
ககநெகிழ் வில்லவனென் றறிகுதி யாவர்சிலர்
தகமுய லாதிம்மை தனிநிதி யுறுகின்றார்
பகர்வுறி னவர்முன்னாட் பரிவுட னல்லோரை. (கசு)

வலிதி னழைத்தினிய தானம் வழங்கினர்கா
ணுலகினி லேசிலர்தா முடலம் வருந்திமிக
நலனுறு மிருநிதியை நண்ணின ரவர்முன்னாட்
பலபக லிரவலரை நடைகொடு பாலித்தோர். (கஎ)

யார்சில ரிம்மையிலே யேல வுழந்தாலு
மோர்பொரு டானுமுறா தொழிகுவ ருற்றாலுஞ்
சேர்பொருள் சிதைவாகிப் போவது செப்பினவர்
சார்தா முன்னாளிற் றனம தேற்போரை. (கஅ)

பலபல நன்மொழியாற் பலபக னடைகொள்வித்
தலையவ ருத்தியுமற் றென்றையு மீயாதார்
சிலர்சில ரிம்மையிலே திகழிள மையில்வறுமை
யலைவுசெய் திடமுதிய ராயபி னிதிபெற்றார். (ககூ)

அங்கவர் முன்னுளி விளமையி லளியாமற்
றங்கிய முதுமையிலே தானம ளித்தோர்கா
ணிங்கெவர் சிலர்நிதிய மெய்தி யிருந்தாலும்
பொங்கிய பிணிநலியப போகமு நுகராதார். (உ0)

முன்னவர் நோய்களினுன் முதுதுய ரிற்பட்டுப்
பின்னெடு நாட்சென்று பினைம னுர்பறறு
மந நிலை யிற்றுன மளித்தவ ரெனவறிவாய்
பொன்னவிர் திதலைமுலைப புரிகுழல் வரிவளையாய். (உக)

எவர்சில ரிம்மையிலே யாரினு மேலாய
நவையறு நல்வாழ்வு நண்ணினர் மகிழ்வுற்ரு
ரவர்சிலர் முன்னுளி லாருயிர பலகொல்லாச்
சுவைபடு மூன்றின்னுத் தூய ரெனத்தெளிவாய். (உஉ)

நற்புவி யிற்சிலர்தா மிம்மையி னல்லெழிலோ
ரற்பமு மில்லவராய் வைகுந ரவர்முன்னே
பொற்பின் மதித்தவராய்ப் போக மிகுத்தவராய்ப
பற்பலர் தமையிகழ்வு பண்ணரி நகைததோரே. (உந)

* இப்பொழு தெவர்காதி விடர்மிகு பிணியுற்ரு
ரப்பொழு தவர்பிறரைக் கடுமொழி யவைசொற்ருர்
செப்பரு மார்பினிநோய் சேர்நதவ ரெவரிங்கே
யொப்பினல் லோர்களுள முலைவுசெய் தவராங்கே. (உச)

ஈங்கெவர் கல்லெரிப்பு முதல விடர்ப்பிணியாற்
ருங்குத லரிதென்னத் தவிக்குந ராய்த்தளர்வா
ராங்கவர் பிறர்தங்கட் காருயி ரழிவாகத்
தீங்கு விளைத்துவிட மிட்டவர் சேயிழையே. (உரு)

ஈண்டையில் யாவர்சிலர் வெகுளியி னுலெனினு
மூண்டிடு பிணியாற்ரு முதுதுய ராலெனினு
மாண்டிடு வோர்விடாய்ப் பிறர்மனை விழையெனினுந்
தீண்டருங் கன்னிகையை யென்னினுஞ் சேர்வுற்ருேர். (உசு)

புள்ளிகள் பற்பலவாய்ப் புண்படு முடல்யாவர்
கொள்பவர் பிறர்துய்க்கக் கொண்ட புலையவர்த்
தள்ளுதல் செய்தெனினுந் தங்கள வாலெனினுந
தெள்ளிதி னபகாரஞ் செய்தெனி னுங்கவர்ந்தோர். (உஎ)

* இச்செய்யுள் முதலிய சிலவற்றின் பொருள்கள், இப்போது கிடைத்திருக்கும் முதனூற்கருத்திற்குச் சிறிதுசிறிது மாறுபட்டுள்ளன.

இங்கெவ ரங்கைபத மாதிய வெழிலுருவம்
பங்கமு றக்குறையாப் பையு ளுழக்கின்ற
ரங்கவர் பிறரையடித் தவருடல் சேதித்து
மங்குற வீக்கியவர் வடிவு கெடுத்தோரே. (உஅ)

அடியிணை பங்காங் யஙகை வழங்கார் முன
னிடருற நல்லவர்கட் கேக்கம் விளைத்தவர்காண்
கடியபி ணிப்பட்ட காலுடை யோராகிக்
கொடிய மருந்தினிலுங் குணமிலர் யாவர்சிலர். (உகூ)

அங்கவர் முன்னுளி லடியிணை மண்ணுதே
பொங்கொளி யாலயமுன் புக்க வருங்காலான்
மங்கல மானகுண மாட்சியி னல்லோரை
யங்குதை செய்தவரு மாகிய பாதகரே. (௩0)

வெம்பிட கப்பிணியான் மேனிவெ டிப்புண்டு
பம்புறு புண்பட்டுப் பையுளு ழந்திடுவோர்
கம்பலே மிக்கயாக் கைகளி னுற்புடையா
விம்பரி னல்லவரை யிடழி வித்தவர்காண். (௩க)

யார்சில ரீனத்தி லீனம தாம்பீடை
சார்பவ ராய்நிந்தை சாற்றிட வேயுலேவார்
தேர்வுறி னவர்முன்னே தீயத னிற்றீய
வாரஞர் தாம்பிறருக் கங்குவி ளைத்தவர்காண். (௩உ)

வேறு.

மூசிடும் வெப்பின் முடக்குகுன் மத்தின்
வீசதி சாரம தாலஷ்ர ணததான
மாசு வருத்து மகோதர ரோவாற்
காச மெனும்பிணி யாற்கய நோயால். (௩௩)

இன்னவை யாதிய வேனைய வற்றன்
முன்வளி யாதியின் முதிர்பிற வற்று
வின்ன லுழப்பவ ரேதிலர் மாட்டுத்
துன்னிய பற்பல துன்ப மிழைத்தோர். (௩௪)

எவர்க ளின்னுதன வின்ன லடைந்தா
ரவர்கண் முன்னுளரு ளில்லவ ராகி
நவையறு பல்லுயிர் நைய வினைதித்
துவகையி னேடு முறுங்கொலே செய்தோர். (௩௫)

மைந்தர்க ளற்றெவர் துன்ப மலிந்தார்
வெந்துயர் தேசிகர் பால்விளைத் தோரு
முய்ந்திட *மாய்ந்தவர்க் கூணளி யாருஞ்
சிந்தைசெய் பால கரைச்சிதைத் தாரும். (கசு)

பிணியறு நல்லுடல் பெற்றினி தென்று
மிணையறு செல்வமு மின்பமு மிக்கோ
ருணர்வரி தாய்ப்பிற ருற்றுள வெந்நோய்
தணியு மருந்தவை தந்துயிர் காத்தோர். (கஎ)

இங்கெவ ரேயபன் மார மியைந்திட்
டங்கம் வலிப்பவ ராங்கவர் நல்லோர்
தங்களை யின்சொலி னூற்றம ராக்கிச்
செங்கன கங்கவ டாற்கவர் தீயோர். (கஅ)

பேடி யெனப்பிறந் தார்பிழை செய்யா
வாட வரைத்திரி கத்தை யரிந்து
நாடிட பத்தின தண்ட நலிந்துங்
கூடிநர் கலவி குலைத்த வருங்காண். (கசு)

வேறு.

யாவண்மற் றொருத்தி யாழி னிசைசொல்லா ளெழுத வொண்ணு
வோவியம் வரைவா ளின்ப வுருவத்தி னமைந்தாள் செல்வ
மேவினள் விளங்கா நின்றுந் தனைக்கொண்கன் விழைவு றுது
பூவினு மழகு சாலப் பொலிவின்றி வாட லுற்றுள். (சo)

ஊங்கவள் கற்பின் மிக்க வாயிழை தனக்கு முன்னுட்
டீங்குறு மதிம யக்கஞ் செய்தவள் கொண்கற் சேர்ந்தா
ளீங்கெவள் கொழுநன் வாழ்வுற் றிருப்பவு மின்மை யுற்று
ணீங்கருங் கணவன் பொன்னை வஞ்சித்துக் கவர்ந்த நீராள். (சக)

இப்பவந் தன்னில் யாவ ரிருநிதி பல்காற் கேடாச்
செப்பரும் புன்கண் சேர்ந்தார் திடமாக நம்பி வைத்தோர்
கைப்பொருள் கவர்ந்து கொண்டு கவர்ந்தன மில்லை யென்று
தப்புரை யாணை கூறிச் சாதித்த வஞ்சர் தாங்காண். (சஉ)

ஈண்டெவன் குரவ னுள்ள முவப்புற வுணர்ச்சி யெய்திப்
பூண்டுணர் கல்வி மானுய் நிபுணனய்ப் பொலித லுற்றுன்
மாண்டநற் குணத்தி னன்னேன் மதியின லுணர்ந்த விஞ்சை
வேண்டிவந் தடைந்தோர் தங்கட் கீந்தவன் மேனுண் மாதோ. (சங)

* மாய்ந்தவர் - தாய்தந்தையர் முதலியோர்.

உணர்வது குறைந்து ளோர்க்கு முணர்வுறப் பலகாற் சொல்லி
யிணையிலா ஞானந் தன்னை யிம்மையி லளிப்பான் யாவன்
குணமுடை யவற்கெஞ் ஞான்று மறிவினிற் குறைவ ராது
மணமலி நறுமென் கூந்தன் மதிநுதல் வல்லி போல்வாய். (சசு)

இப்பிறப் பதனில் யாவ ரினியநல் லவைக்க ணேறிச்
செப்பும்விஞ் சையிற் செருக்கித் திகழ்வுறுங் கலைஞர் தம்மை
யொப்பில் பங்கப் படுத்தா வெல்குந ரவரே யோதிற்
றப்பின்மா ணுக்கர்க் கன்பாற் றவறின்றி நூல்போ தித்தோர். (சரு)

இந்நிலத் தெவர்மற் றில்லா ளுவப்பெய்த வினிய ராகிக்
கொன்னுறு நோயு மின்றி யின்புற்றுக் குலவி வாழ்வோ
ரன்னவர் முன்னே வாய்மை யழிவின்றி யருண்மிக் காராய்
நன்மறை யவரைத் தாமே யழைத்துநற் றானஞ் செய்தோர். (சசு)

இங்கியார் வேறு பட்ட வவயவ மியைந்த மைந்தர்
தங்களோ டழகில் பாரி தன்னொடு கவலை யெய்தி
யங்கொரு பொருளு மின்றி நோயுழந் தயர்வ ரன்னோர்
பொங்குவெஞ் சினமு லோபம் போதவுற் றின்மை கூறி. (சஎ)

செருக்கினுற் பிறரை நாளுந் தீங்கிழைத் தரந்தை செய்தோர்
தரைக்குளிங் கெவர்கள் செல்வர் வாய்தலிற் றடைப்பட் டுள்ள
முரைப்பருந் தைனி யத்தி னுறுகணுல் வதனம் வாடி
யிருக்குந ரனையர் முன்னு ளிரக்கமி லுளத்த ராகி. (சஅ)

களித்திடு செருக்கி னுலே கடியாய்க் களித்து நாளு
வளத்தினிற் பலபோ கத்தின் மனம்வைத்தா ராகி வந்தார்க்
களித்திடா துறையுள் வைகி யவகாச மில்லார் போல
விளைத்திடப் பன்னுள் போக்கி வறிதேக வியற்றி னோர்காண். (சகூ)

இருநில வேந்த னுலே யார்சில ரேது வின்றிப்
பெரிதுதண் டிக்கப் பீழை பெற்றலை வுற்று ரன்னோ
ரொருகுறை தானுஞ் செய்யா தவர்களை யொறுத்தல் செய்து
பருவரல் படவே செய்தார் பனிவரை யுயிர்த்த பாவாய். (ருo)

யாவனிங் கினிய செல்வந் தன்னொடு மின்ப முற்றான்
மேவுதன் மனைக்கி ழத்திக் குவப்பினை யிழைத்தோன் மேனுள்
யாவனிங் கில்லா ளுகி யக்கமு மீன முற்று
நோவன்மற் றவன்றன் பாரி நோதக வரந்தை செய்தோன். (ருக)

மைந்தரோ டிறவி னோடு மற்றெவ ரீண்டு மாய்வர்
முந்தவர் சிறிது தீங்கு முயன்றுள பிறரை யோதிச்
சந்ததி யாளு ரோடுங் கிளையொடு மடியச் சால
வந்தம திழைத்து ளோர்கா ணடங்கருங் கடுஞ்சீ றத்தால். (ருஉ)

நீசராய்த் தொழும்பு பட்டு நித்தமும் பழிப்புக் காளா
யேசல்பெற் றெற்றுண் டிங்கே பருவா லெய்தா நின்றோர்
பேசினன் னவர்கண் மேனாட் பிழையில்பல் லோரைப் பீடித்
தூசலி னுளந்தள் ளாடப் புடைத்தொறுத் தொதுக்கி னோர்காண். ()

நினக்கினிப் பலவுஞ் சொற்று நிறைவதென் யாவன மேனு
டனக்குளந் தோற்று மொன்றை யிழைத்தவ னதைத்தப் பாம
லனைத்துமக் காலந் தன்னி லடைகுவன் மெய்யே யாகத்
தனக்குவெம் பகையுந் தானே தனக்குநல் லுறவுந் தானே. (ருச)

தன்னுடை நலந்தீங் குக்குத் தானுடை யவனே யன்றி
யுன்னிடின் வீற்றொ ருத்த ருடையவ ரலரக் கால
மன்னிய வளவிற் றன்பால் வருமின்ப துன்பங் கட்குத்
துன்னுற வொருவ னேது வாய்வந்து தோன்று வன்காண். (ருரு)

ஆதலா லறிந்தோன் றீய செயலினை யஞ்சி நீங்கித்
தீதிலா தகனை யோர்ந்து தன்னுயிர்க் கின்பந் தேடிப்
போதமெய் வருத்த முற்றும் பிறர்க்கிதம் புரிதல் வேண்டு
மேதுவிங் கெவைக்குஞ் சொற்றும் யாதினிக் கேட்ப தென்றான். ()

ஆகச்செய்யுள், கூகூச.

பதினெட்டாவது

# ஞானயோகமுணர்த்திய அத்தியாயம்.



என்றிவற்றை வகுத்துரைத்த விறைவன் றன்னை யெவ்வுயிரு மினிதளித்த வெம்பி ராட்டி, மன்றல்கமழ் செழுங்கமல வதன நோக்கி மகிழ்தூங்கு முளத்தினொடு வழங்க லுற்றாள், கன்றிளமான் காதலத்துப் பவள மேனிக் கலையமுத மொழுகுநிலாக் கதிர்வெண் டிங்கட், பின்றிகழ்வார் சடையிமையோர் பெரும கேட்டி யிருவினை யின் காரணமும் பெரிது சொற்றாய். (க)

இனையபல கருமத்தை யிடைவி டாம லிழைத்தலா லிம்மை யினு மறுமைக் கண்ணு, நனிநுகரு மின்பதுன்ப மான வற்றை

நாடோறும் வந்துபோய் நரர்தாந் துய்ப்ப, ரனையதொரு பரிசாலிக் கரும மென்ற னுளத்துக்குச் சுவைப்பதிலை யாத லாலே, வினைமுழு தும் பிறவிக்கு நிமித்த மாகி மிக்கதுன்ப வேதுவாய் விளைவ தாகும்.

ஈங்கிதனு லிவ்வினையைக் கடப்ப தாகி யின்னுயிர்கட் கிதமாகி யெண்ணி றேற்ற, நீங்கரிய விறுதியெனு மிரண்டு நீங்கி நித்திபவா னந்தமாய் நல்லதாகி, யோங்கியமெய்ஞ் ஞானத்தை யுணர வுள்ள முற்றதுபெட் பெனக்கதனை யுரைத்தி யென்று, டேங்கனியு மமுது முற ழிறைவி தீஞ்சொற் செவிமடுத்த விறைவனிவை செப்ப லுற்றான்.

கருமமெனும் பாசத்தைத் துணித்து நீக்கிக் கணிப்பில்பிறப் பிணைக்கடத்திக் கனிந்து நாளும், பெருகியவா னந்தபர ஞானங் கேட்டி பேதமுறு கருமத்தின் பெற்றி யென்று, முரிமைதரு கற்பு மிக்காள் கணவன் றன்னை யொருவுறு ததுபோன்று நீழல் போன்றும், பிரிவரிதாய்ப் பல்லுயிரைப் பிறவி தோறும் பின்றொடரு மொன்று கிப் பிணிப்புண் டம்மா. (ச)

இன்னுயிர்தேர்ப் பாகனென வுடறே ராக விந்திரியம் புரவியா விழையா நின்ற, தொன்மைவினை வழியாய்த்தன் னிச்சை தன்னிற றுணையவே யோடுமதை நிறுத்த மாட்டா, ரன்னவர்வெம் பிறவியிலே யேலத் துன்ப மடைவராக ளல்வினையை யகன்று ளாரைச், சொன்ன வினை தாமேவிட் டகன்று போகுந் துணிந்தடயோ கத்ததினல்

பற்றறினே பிறவிதனை யறுக்க லாகும் பயில்கின்ற யோகவழல் பாவக் கூட்டை, முற்றும்விரைந் தெரித்துவிடும் யோகா னந்த முதி ருமனு போகத்தான் முடிவி லாம, லுற்றிடுபுண் ணியக்கூட்டந் தானு மாளு முளுற்றுகரு மப்பயனை யுள்ளத் தோர்ந்து, மற்றதன்சா ரமு மசா ரமுமாமின்ன வகுத்துணரின் வினையறுக்க வல்ல தாகி. (ரு)

பற்றறுதி வரும்வந்த பருவந் தன்னிற் பகாரிய புறப்பாசப் பழங்கண் போகு, மற்றதுபோ னுலுள்ளிற் கவலை தீர்ந்து மன்னுயி ரைச் சிந்திக்குஞ் சிந்தை வாய்க்கும், பெற்றிதிகழ் பரமசிவந் தன் னைத் தன்னிற் பேதமறக் காண்பதுபே சரிய ஞான, முற்றவது சாத கஞ்சா தனத்தி னேடு மோங்குசாத் தியமாகி யுள்ள மூன்றும். (எ)

இன்றியே முத்திக்கு நிமித்த மாகு மெண்ணிலா முற்பவங்க டோறு மீட்டு, நன்றியாற் கருமசோ தனைவந் துற்ற நற்காலத் தொரு ஞான முண்டாம், பின்னையதான் முன்னையவாம் பிறப்பி லுள்ள

பெரியவினைப் பயன்வருந்தி நுகர்ந்து நித்த, மொன்றியனை மித்தி யத்தை விழைவு றுஞ யுவர்த்திழைத்து ஞானவாழ் வுவந்தோ ருகி.

நாடோறும் யோகத்தி லொருமைப் பாடு நண்ணினவ னிரு வினையு நண்ணு ருகித், தேடரிய சித்தியடைந் திடுவன் றீராச் செருக்கிரண்டும் பந்தகா ரணமாய்ச் சேரு, நீடுமவற் றினைப்பரமா னந்தம் வேண்டி னீங்குதல்வேண் டுந்தன்பா னேயம் வைத்தோ, னேடவிழ்தண் பிணையலளி நறுமென் கூந்த லிலவவிதழ்க் கலவமயி லியலொப் பாய்கேள். (கூ)

இவ்வடயோ கந்தான்மற் றிராசயோகத் திறுக்கினிய சாதன மென் றியம்புவாரா, லவ்வடயோ கப்பெயரு மடாற்கா ரத்தா லரி தாகப் பயிலுதலி னறைவர் முன்னுட், செவ்வுடையோ ரினையதொரு யோகந் தன்னைத் தினம்வருந்திச் சாதித்துஞ் சேர்தல் வேண்டும், வவ்வுகின்ற யோகஞ்சா தித்தல் செய்யின் வாயுக்க ணிலைமையாய் வைகு மாதோ. (கo)

வேறு.

ஆதனப் பிராணு யாமம் பிரத்தியா கார மன்றித
தீதிறு ரணை தி யானஞ் சமா தியிவ் வாறுஞ் செப்பி
னேதமில் யோகத்துக்கா றங்கமா மிவற்று ளாதி
பூதசா திகளெ னைத்துண் டத்துணை யுண்டு போத. (கக)

அங்கவற் றதிக மாய வாதன மீரைந் தாகும்
பங்குறு மவற்று ளாதி பதுமவா தனம தன்பாற்
றங்கலுற் றியம மாதி சாற்றிய குணங்க ளெய்தி
யிங்கினி தாத னத்தே நிலைமைபெற் றிருந்த டங்கா. (கஉ)

வருத்துக பிராணு யாம மாங்கது வகுப்பி னுள்ளே
சரித்திடு வாயுத் தன்னைத் தடுப்பதாந் தடுக்கு மாறும்
பொருத்திரே சகத்தி னேடு பூரகங் கும்ப கம்மென்
றுரைக்கின்மூன் றவற்றை வல்லோ ருணர்த்திட வுணர்ந்து செய்க.()

மன்னிய ரேச கத்தின் மாத்திரை யீரா றுகும்
பின்னுள பூர கத்தின் பேறுமப் பெற்றித் தாகு
முன்னிய கும்ப கத்தி னளவையோர் முப்பத் தாறு
முன்னிய வினைய மூன்றின் றன்மையை யுணர்த்தக் கேண்மோ. (கச)

உள்ளுறு வாயுத் தன்னை யுரைத்தவவ் வளவை யாலே
மெள்ளவே புறத்தி லேக விடுப்பது ரேச கங்காண்
டெள்ளிதிற் புறமே வுற்ற வன்னதைத் திருப்பி யுள்ளே
தள்ளரி தாய்நி றைத்தல் பூரகத் தன்மை யாமே. (கரு)

நிறைத்ததைச் சமம தாக நிறுவல்கும் பகமா மிவ்வா
றுறைத்துள பிராணா யாம முறைத்திடிற் சகர்ப்ப மென்று
மறைத்திடா வகர்ப்ப மென்று மாயிரு வகைமைத் தாகுஞ்
சிறப்புடைச் செபத்தி னோடுந் திகழ்வது சகர்ப்ப மாமே. (கசு)

அன்னதை யின்றி யாற்ற லகர்ப்பமெவ் வளவு வாயுத்
தன்வயம் வருவ தாகு மவ்வள வுந்தா மூது
மன்னுறு கலக்கந் தீர்ந்த மனத்தையப் பிராண வாயுத்
தன்னைவா துவர்கள் யானை தடுத்தல்போற் றடுத்தல் வேண்டும். (கஎ)

மாருதந் திரிதல் செய்யின் மனந்திரிந் திடுந்தி ரிந்தாற்
சேருமைம் பொறிக டாமுந் திரிந்திடு மதனாற் சிக்கென
றாவே காலை வன்பிற் றடுத்திடிற் புடபா கத்திற்
சார்தரு முலோக மாசு தள்ளல்போற் றணக்கும் பாவம். (கஅ)

சொல்லினிப் பிராணா யாம சோதனை யொருமூன் றாகு
மெல்லவேர் வரும்புங் காறு மடக்குதல் கடையா மேனி
யொல்கிக் கம்பிக்குங் காறு மடக்குத லிடையு டம்பு
வல்லதாய்ப் பறக்குங் காறு மடக்குத றலையா மாதோ. (ககூ)

இயமமு நியமந் தானு மியற்றிக்கை வந்த பின்னர்
நயம்வரு மாத னத்தி னண்ணிநா டோறுமு னாற்றி
வயம்வா வாயுத் தன்னை வருத்தியே கொண்ட தற்பிற
பெயர்வற முயறல் வேண்டும் பிரத்தியா காரந் தன்னை. (உ௦)

பல்வகைப் புலனைப் பற்றிப் பாம்பியைம் பொறியும் பாழிற்
செல்பவை செல்லா வண்ண மனத்தினாற் றிருப்பிக் கோடல்
வல்லதாற் பிரத்தி யாகா ரப்பெயர் மருவிற் றானை
மெல்லுறுப் படக்கி யாங்குப் பொறிகளை யடக்கல் வேண்டும். (உக)

விழிகளிற் செவியிற் காட்சி கேள்வியா தியவி கார
வழிகளில் யாது யாதோர் குறிப்பாக வரும வற்றை
யழிதகத் திரித்துச் சுத்தி காதனத் தமர்ந்து நாளு
முழிதரு வாயு வைத்தன் வயமாக்கி யுறுதி யுற்றால். (உஉ)

மற்றதன் பின்னர்ச் செய்க தாரணை வல்லோன் கைகாற்
பற்றறு சேட்டை முற்று நிறுவியே பலபொ ருட்கட்
சுற்றுறு மனத்தைத் தூய புருவத்தி னடுவ ணாகி
யுற்றிடு தலங்க டம்மிற் றரித்ததா ரணையென் றோதும் (உங)

நன்னுத லண்ண மார்பு நாபியாண் குறியா தார
மென்னுமித் தலமோ ராறு முறையிலே யிதழி ரண்டு
மன்னுமீ ரெட்டுப் பத்துப் பன்னிரண் டாறு நான்கா
மன்னுதா மரைக்கண் வேறோர் பற்றின்றி மனத்தை வைக்க. (உச)

வேறு.

அன்னதற்குப் பின்னரொளிர் பாமவா காயமெனுஞ்
சென்னியுறை நூற்றுப்பத் தடுக்கியசே யிதழ்க்கமலத்
தெங்நெறியா னிலேபெறு மநநெறியா லினிதியற்றித்
தன்னுளாக் கலக்கமொன்று மற்றுறுதி யாய்த்தரிக்க. (உரு)

எங்கொருவன் சித்தத்தால் யாதொன்றை யினிதகன்று
ளுங்கதனைத் திரும்பப்பா வித்திடுத லடைவன்று
லோங்குசித்தத் தால்யாதொன் றுறவருந்தி நிலேபெறு
தாங்கினனன் னதிற்றனே திடமாகத் தரிக்கமனம். (உசா)

எவ்வகையா லுசிதம்வரு மவ்வகையா லினிதடைவே
யுவ்வகையாற் றினமுஞற்றத் தாரணைவா துறுதியாஞ்
செவ்விலது கைவந்தாற் றியானத்தின் மனமுய்க்க
கவ்வையாற் கலங்குமனஞ் சித்திபெறக் கடவதன்று. (உஎ)

பேருயிரின் றன்னுமையே பிறழா தீ பெரிதுமனஞ்
சாருமெனிற் றியானமது சகுணமொன்று நிர்க்குணமொன்
றேரிருபாற் றுஞ்சகுண முரைக்கினுரு வமுநிறமுஞ்
சீரியபல் கிரியைகளு நற்குணமுஞ் சேர்ந்திடுமே. (உஅ)

கேவலமாய்ச் சாந்தமாய்க் கெழுதகைய சோதிவடி
வாவதா யானந்த மாயாண்டு மமைந்துள்ள
பாவனநிர்க் குணமாகும் பரயோகி பரிந்துளத்தால்
யாவதையா வதைநினைவ னவ்வவசித் தியையியைவன். (உகூ)

ஆதனத்தா லேய்களறும் பிராணயா மந்தன்றாற்
பேதைமையாம் பாவமறும் பிரத்தியா காரத்தின்
சாதனையா லிந்திரிய விகாரமறுந் தாரணையான்
மேதகைய மனத்துக்கு நிலைபேறு மேவுமரோ. (௩0)

தரிக்கின்ற தியானத்தாற் றானவனுந் தன்மைவருங்
கருத்துறைந்த பரயோகி கைவல்லி யச்சுடரொன்
றிருப்பதொரு முத்திசமா தியைப்பெறுவ னினிதாக
வுரைத்தபிரா ணயாம முதலியன வோரொன்றும். (௩க)

ஆறிரண்டா றிரண்டளவே சமாதியுமற் றவ்வகையே
வேறுவே றொரொன்று மேவுமுப்பத் தாறளவே
தேறுகின்ற பிராணயா மம்முதல சித்தியாய்க்
கூறரிய தியானமொடு கூடுநேர்க்குச் சமாதியுறும். (௩௨)

உயர்சிவமுஞ் சிற்றுயிரும் பிரிவின்றி யொற்றுமையா
யியைவுபெறு மினிமையா லெப்பற்று மில்லதே
யயர்விலாச் சமாதியா மாங்கதுவே வந்தக்காற்
பெயர்வரிய சங்கற்ப விகற்பமெலாம் பின்னில்வாம். (௩௩)

பாவகத்தை விடுவித்தா னெவன்சிவ பாவயிக்க
மேவுற்ற சிவயோக மவனுளத்தி லுளதாகும்
யாவனே நடந்தாலு நின்றாலு மிருந்தாலு
மேவுதுயில் கொண்டாலும் விழித்தாலும் விழைந்தொன்றை. (௩௪)

இழைத்தாலுந் தவிர்ந்தாலு மெண்ணுவது மறப்புமின்றி
யழுத்தமுற லால்விகிர்தி யடையான்மற் றவனில்லி
னுழைப்பொருந்தி னும்வனத்தே யுறினுமவன் றனைக்கண்ட
தொழிற்செயல்வெம் பரிதிகண்ட தூங்கிருள்போற் றூரமாம். (௩௫)

இம்மொழிமற் றுண்மையே யிலங்கிழா யேலவுநீ
நம்மைவேண் டிக்கொளலா னவின்றேமிந் ஞானத்தைத்
தம்மைவிழைந் தவராகித் தாமுத்தி விழைந்துள்ளா
ரம்மவிதனைப்பயிறல் வேண்டுமா லசைவின்றி. (௩௬)

நினக்கின்னும் யாதுகேட் டிடல்வேண்டு நிகழ்த்துதிநின்
றனக்குள்ள முவப்புறவே நாம்விழைந்து சாற்றுகின்றே
முனக்குவேண் டியதேதென் றிறைவனிவை யுரைத்தருள
வனைத்துயிர்க்குந் தாயாமென் னன்னையிவை யறைகின்றாள். (௩௭)

கடவுளே யானிங்குக் காணவேண் டுவகண்டேன்
றிடமதா யுணரவேண் டியவெல்லாந் தெரிந்துணர்ந்தேன்
மடமையா லையுறலாஞ் சேதகத்தை மண்ணினேன்
புடவிமேல் வளம்பலவும் புலப்படுத்தப் புலப்பட்டேன். (௩௮)

உரைப்பரிய விருவினையி னுருவுகளு முணர்வுற்றேன்
றெரிப்பரிய ஞானயோ கத்துண்மை தெளிவுற்றேன்
கருத்துடனே விரதமுற்றுங் கைப்பலனும் படிகோற்றேன்
றிருத்தகுசி ரருந்தவங்கள் செய்யுமுறை களிற்செய்தேன். (௩௯)

அளப்பரிய நின்னருட்கு வைப்பிடமா னேனென்று
கிளத்தலுமாங் கவடன்னைக் கேடில்பாஞ் சுடர்நோக்கி
யுளத்திலமை யாவுவகை யுன்னுழைவைத் தேமுனக்கு
வளத்தகைய வரம்யாது கேட்டிடுதி வழங்குவாம். (சo)

ஐயுறு தேகேளென் றருட்கடலீ தியம்புதலு
மெய்தினே னெவ்வாமு மிவற்றினி வரம்யாது
செய்யசெழுந் திருமேனிச் செம்பாதி யிடமளித்தே
யுய்யும்வாழ் வொருங்கருள்செய் துபகரிக்கப பெற்றேனே. (சக)

என்னினுமோர் வரங்கேட்கே னிறைவகேள் யாமிருவர்
பன்னியவிக் கதைமுழுதுங் கேட்பவர்கள் பகல்கான்ற
மின்னவிர்செஞ் சுடர்ப்பரிதி வெண்மதிதா ரகைக்காலந்
தன்னளவும் பொன்னுலகிற் றுமிருத்தல் வேண்டுமால். (சஉ)

இத்தலமற் றெவற்றுள்ளு ம திகமா யேந்தெழிற்கோட்
டுத்தமத்தென் கயிலாய மொண்கயிலா யம்போல
நித்தியசா நித்தியமாய் நீயமர்ந்து னன்பர்க்குச்
சத்தியமாய் முத்தியினைத் தந்தருளல் வேண்டுமால். (சங)

திரைசுருட்டிக் கரைபொருத தேம்புனற்பொன் முகரியெனுந்
தரைவழுத்து மிந்நதியு மெந்நதிக்குந் தலைமையதாய்ப்
பரிவினொடுந் தரிசனத்திற் பரிசனத்தி னுனத்தின்
விரையவே யனைவர்க்கும் வினைகளகற் றிடல்வேண்டும். (சச)

வே று.

என்றிவை யுலகேழு மினிதரு ளென்னம்மை
நன்றிவை யுரைசெய்ய நாயக னவில்கின்று
னென்றிய பரிவுட னு முன்னொடு முரைசெய்த
மன்றவு மேலாமிக் காதையை மனம்வைத்து (சரு)

யாவர்கள் கேட்கின்று ராங்கவ ரெமதருளாற்
றேவர்கள் வாழுலகிற் சீரிய ராய்வைக
வேவரு மகிழ்வுற்ற வித்தலம் யாவுள்ளு
மேவரு முத்தமமாய் மிகவும் விளங்குகவே. (சசா)

மாமதி தவழ்கோட்டு வானுய ரிவ்வரையை
யாமொரு காலத்து மிடைவிடு வதுசெய்யேங்
காமரு கயிலாயம் போன்று களிப்பெய்தி
யேமுறுசிவலிங்க மாகி யிருக்கின்றேம். (சஎ)

யாரெமை வழிபடுவோ ரீங்கவர் பாவமெலாந்
தீர்தரு பவராகி நம்முல கஞ்சேர்வுற்
றேர்பெற வெக்காலந் தன்னினு மின்பவளஞ்
சார்தரு பவராகித் தழைகுந ராகுவரே. (௪௮)

விழுமிய செந்துகிரும் விரிசுடர் வெண்முத்துஞ்
செழுவிய மாமணியுந் திரையெறி பொன்முகரி
யொழுகிய வெந்நதிக டம்முளு முத்தமமாய்
முழுகுநர் யாவர்க்கு நல்குக முத்திநலன். (௪௯)

என்றிவை யினிதுமொழிந் தருளி யிருந்தவரா
யொன்றிய சனகன்முதல் யோகிக டமைநோக்கி
மன்ற னறுங்கொன்றை வார்சடை வானவன்மற்
றொன்றுரை செய்கின்ற னொழிவறு மின்னருளால். (௫0)

நுங்க டமக்கிவண்யா நுவலுறு ஞானத்தை
யங்க ணொருப்பட்ட வுள்ள மமைந்தோராய்த்
தங்கு தவத்தோர்க்குச் சாற்றுமி னுங்களைநாம்
பொங்கிய பத்தியினாற் போத வுவந்தனமால். (௫௧)

விழைவொ டுமக்குவரம் வேண்டுவ கேண்மினென
மழையுறழ் கண்டனையம் மாதவர் தாடொழுது
மொழிகுவ ரெம்பெருமா னின்னுழை முட்டாது
தழுவுறு மன்புநிலை பெறுவது தால்வேண்டும். (௫௨)

எங்க டமக்கிதுவே வேண்டுவ தென்னலுமே
யுங்கண் மொழிப்படியே யாக வுரைத்ததெனத்
திங்கண் முடித்திலகுஞ் செம்பவ ளச்சடையிற்
கங்கை மிலைந்தபிரான் கருணை பொழிந்தருளி. (௫௩)

## வேறு.

தலைமை யாஞ்சன காதியர் போற்றிட
வுலகெ லாமினி தீன்ற வுமையொடுங்
கலைவ லோர்புகழ் காளத்தி நாதனென்
றிலகு சீர்ச்சிவ லிங்கத்து ளெய்தினான். (௫௪)

மங்கை பாகன் மறைந்தபின் மாதவ
ரங்க வன்றரு ஞான மகமகிழ்ந்
தெங்கு மாமவன் றாள்பணிந் தேத்தினா
ரங்க ணிச்சைப் படிதனந் தாரரோ. (௫௫)

வீற்ற டகை விசயம்வெண் ணீற்றுமெய்க்
கற்றை வார்சடைக் கண்ணுத லோன்வரைப்
பெரீற்றெ டிக்குப் புகன்றருண் ஞானமிங்
கிற்றை வைக லிசைத்தே முனக்கியாம்.

கதித ருந்திருக் காளத்தி மால்வரைப்
பதியின் மேன்மையும் பைம்பொன் முகரிமா
நதியின் மேன்மையு நாத னுரைப்படி
விதிவ மூாம னுனக்கு விளம்பினேம். (௫௭)

ஆகச்செய்யுள், ௧0௫௧.

பத்தொன்பதாவது

# விசிட்டத்தலமுரைத்தஅத்தியாயம்.

ஆழி யம்பெயர் படைத்துள வகல்வனத் தருந்தவத் துறைபோய
வாழி யந்தணர் சூதமா முனிவனை மற்றிது வினவுற்றார் [றே
பூழி வெண்பொடி யொளிபழுத் திலகுமெய்ப் புரிசடைத் தவக்குன்
சூழு மெவ்வகைத் தத்துவ விசாரமுந் துகளற வுணர்ந்தோய்கேள்.(௧)

யாங்கண் முத்தியின் சாதனங் கேட்பதற் கினிதுளம் விழைகின்றே
மாங்க தற்குவே றளவிலா விதஞ்சொல்வ ரங்கண்மா ஞாலத்திற்
பாங்கி னுற்சிலர் கேவல ஞானமே பகருவர் சிலர்தாங்க
ளோங்கு முத்தம கருமத்தை யறிவுட னுஞற்றுகின் றதைச்சொல்வர்.

தான மென்பதைச் சாற்றுவர் சிலர்சிலர் விரதமே தருமென்ப
ரூன மில்சிறப் புடையவேள் வியைச்சில ருரைப்பர்கள் சிலர்தாங்கண்
மாந லந்திகழ் தவத்தினை யியம்புவர் மற்றுவே றுளசில்லோர்
மேன்மை தங்கிய வருணியின் முறையினை விளம்புவர் மேலாக. (௩)

இல்ல றத்தினைச் சிலரெடுத் தியம்புவர் வனத்தன தியறன்னைச்
சொல்ல லுற்றனர் சிலர்சிலர் முழுவதுந் துறப்பதைச் சொல்கிற்பா
ரெல்லை யில்சிறப் புடையதீர்த் தப்பய னிசைப்பவர் சிலர்தாங்கள்
சொல்ல ரும்பழ மறையினை யோதுதல் சொற்றனர் சிலரம்மா. (௪)

சிலரு யர்ந்துள சிவதலத் தமர்வதைச் செப்புவர் சிலரின்னும்
பலவி தப்பட முத்திசா தனத்தினைப் பன்னுவ ரிவற்றுள்ளு
முலகின் மன்னுயிர் யாவையு முஞற்றுதற் குரியதா யுயர்முத்தி
நலனு றத்தரு கின்றதா யுள்ளதை நவில்கென நவில்கின்றான். (௫)

வம்மின் மாதவக் கிழமையி னுயர்ந்துள மறையவ ரனைவிரு
நம்மு ளத்தினிற் றுணிவொடுங் கேண்மின்க ளுவலரு முத்திக்கு
மெய்ம்மை யாந்தனிச் சாதனம் விளம்புதும் வியாதமா முனிமேனாட்
கொம்மை வெம்முலைத் திருமகள் கொழுநனைக் குறுகிவை குண்டத்தில

வணங்கி மற்றிது வினவலு மாங்கவன் மனங்களி சிறந்தோங்கி
யிணங்கு மன்றலம் பதுமபீ டத்தம ரிலங்கிழை தன்னோடும்
பிணங்கு வெண்புரி நூலணி மார்புடைப் பிரமன்வின் னவரோடுங்
குணங்கொள் காட்சியின் வியாதமா முனியொடுங் கயிலையிற் குறுகுற்றான்.

புலிய தட்கலை புனைந்தருள் புனிதனை புனைகழு றாள்போற்றி
யுலகி னுக்கினி தாயமற ரிறுதனை யுசாவின னபபோதி
லலகில் சோதியாய் முழுதொருங் குணர்ந்தினி தறமுத லொருநானகு
மிலக நல்குவோ னுகியெவ் வீசர்க்கு மீசனே தானுகி. (அ)

பதிக ளுக்குமோர் பதியிவ னென்னலாய்ப் பழிப்பில்சீர்த் தேவுக்கு
மதிக மாகிய தேவென லாயருட் பரமனு யனைவோர்க்கு
மதிவி ழைந்துள யாவையும் வழங்கிட வல்லவன் றானுகி
யிதம னைததுயி ரும்பெற வளிப்பதி லினியனு யாவைக்கும். (கூ)

வல்ல னுகிமற் றுண்மையாய் ஞானமா யானந்த வாழ்வாகி
யெல்லை யின்றிய நிறைவுபெற றெனைவர்க்கு மினியசான் றெனநின்ற
தொல்லை வானவ னருள்செய லுற்றனன் றுழாய்நறுந் தொடையோய்க
ணல்ல வற்றுளு நல்லது நீயெமை வினையது நவில்கின்றும். (கo)

ஈது முன்னமு நம்மையித் தேவிமற் றென்னென வேகேட்டா
ளோதி னேமிவட் கனைய தோ ரிதனையிங் குனக்கியா முரைக்கின்றேம
யாது முத்தியின் சாதன மென்றிடின் ஞானமே யிதுசொல்லின்
வேத நன்சிரத் துள்ளதென் றென்மதி மிகத்தெளிந் ததுவாமால். ()

தொல்லை நான்மறை தம்மொடு மிருதிநூல் சொற்றதோர் வழிநின்று
நல்லொ ழுக்கமேல் கொண்டுபல் பவந்தொறு நன்கினி தொழுகுறறு
வல்ல சித்தியை யடைந்தவர்க் கெமதருள் வைப்பினுற் சிவஞான
மொல்வ தாகுமற் றல்லதிங் கெளிதினி லுறுவதோ வஃதம்மா. (கஉ)

இயற்றி டுங்கரு மங்களிற் றிரும்பிய வந்தண னிஞ்ஞானப்
பயிற்சிக் கிங்கதி காரியா குவன்மிக மற்றைய பார்ப்பாரு
மயர்ப்பில் வேந்தரும் வணிகருங் குறைவதி கங்களா லதிகாரி
வியக்கு மிக்குல யாதரு முரியவர் வேதநூ லினைக்கேட்க. (கங)

இனைய ரேவலை யியற்றுபின் னவர்களும் புராண நூ லினிற்கேள்வி
யினைய டைந்துஞா னத்தினை யெய்துவர் *விஞ்சையர் சிலர்தாங்கண்
முனமி யம்பிய வாதரும் பின்னவர்க் கொப்பென மொழிவார்கள்
வினவின் மற்றைய சாதியும் பாடைவேற் றுமையின்றே விடுஞானம்.

மேவு கின்றதுஞ் சிறிதுகா லஞ்செவி னெனவிதித் தனநூல்கள்
யாவ ரிம்மையிற் சாதன மின்றியு மினையஞா னம்பெற்றோ
ராவ ரன்னவர் தமக்குமுற் பவத்தினி லமைத்ததா மிம்மைக்கட்
டாவில் சீர்த்தவ மறையவர்க் குத்தடை யின்றியே வருஞானம். (கரு)

தடையுண் டேனையோர் தங்களுக் கிம்மையின் முத்தியைத் தரமாட்
தொடிவி லாவுளப் பற்றொடுங் கூடிய ஞானமா யுளதாலே [டா
முடிவி லாதவிப் பரமஞா னந்தனை மொழிவுறின் விசுத்தற்கே
யடையு மாதலா லனைவரும் வருந்திடா தடையமாட் டார்முத்தி. (கசு)

தானம் யாகமுன் னாகிய பலவகைத் தவங்களுந் தகுமுத்திக்
கான சாதன மன்றத னால்வருந் தாமமே லனைவர்க்கு [றே
றூன மின்றியெப் பொருட்டினான் முத்திவந் துறுமெனி னுரைக்கின்
மாநி லத்தெமக் குத்தம மாகிய மாதலம் பலவுள்ள. (கஎ)

இங்கி வற்றினு ளோருழி தனையடைந் தினிதமர்ந் திடன்முத்தி
யங்கண் மாநிலத் தளிப்பவா மத்தல மாங்கவை யெவையென்னிற்
கங்கை சூழ்தரு காசிமா நகரமக் களித்திடுங் களிப்பென்றுந்
தங்கி யன்னதின் முடிவுறு பல்லுயிர்க் கெமதரு டன்னாலே. (கஅ)

முத்தி யெய்துறத் தாரகப் பிரமம்யாந் தானமா முயன்றீவே
மத்த லத்திடை யாருயி ருலப்புறி னடைந்திட லாமுத்தி
சித்தி நல்குறு தென்கயி லாயம்யாந் தினங்களி சிறந்தோங்கித்
தத்து தெண்டிரை சுருட்டுபொன் முகரியெத் தலத்திலே சார்வாகி. ()

பாவ நாசமா மெவ்வகை யுலகினும் பயில்வுறு தீர்த்தங்கள்
யாவுந் தன்னிடை நித்தசா ணித்திய மெய்திமா தந்தோறு
மேவி டும்விதீ பாதத்தின் மகத்தினின் மிகுமக மாதத்திற்
றூவி லாதிவா ரத்தினிற் புதையிரு டன்னிலே நீராடி. (உ0)

ஆங்க மர்ந்தகா ளத்திநா தனையடைந் தாதரித் தருச்சிப்போர்
தாங்கள் யாவர்மற் றாயினும் யாண்டொன்று தினந்தினந் தயாவோடும்
பூங்க ழற்றுணை வணங்குபு புசிக்கமற் றன்னது புரியாரேற்
பாங்கி லையிரு திங்களே யெனினுமப் பண்பிலே பணிவுற்று. (உக)

*விஞ்சையர் - வித்துவான்கள்.

அருந்தல் செய்கமற் றன்னதான் முத்தியை யளிப்பதோ ர்ருண்ஞானம்
பொருந்து மாங்கவ ரிறுதியா மெல்லையிற் பொருந்திய ஞானத்தாற்
றிருந்து முத்தியைச் சேர்வர்மற் றியாவரே யாயினுந் தில்லைக்க
ணிருந்து வைகலு நியமமாய் மன்றினு ளிறைவனை யினிதேத்தி.(உஉ)

அடிப ணிந்திடி னன்னவர் முத்தியை யடைவரை யுறல்வேண்டா
மடிபு கழ்ந்திடு பழமலை யதனிடைப் பரிவொடு ராண்டெய்தி
முடிவி னித்தமு நியமமா யாவனே யெனினுமூ வலம்வந்து
கடவு ளைத்தொழி னன்னவன் முத்தியைக் கைப்பல னாச்சேர்வன். ()

அத்த லங்களில் வைகுறு மளவிலே தன்பிற விகட்கச்சம்
வைத்தி டானவை யெளிதினி னீங்குவன் மாயிரு ஞாலத்தின் [ப்
முத்தி வேட்பவன் மொழிந்தவிப் பதிகளி லொன்றினை முயன்றெய்தி
பத்தி யிற்பணிந் தமர்ந்திடக் கடவனென் றிறையவன் பகர்போதில்.()

அனைய வாய்மொழி செவிமடுத் துவப்புறு மாழியம் படைவேந்தன்
புனித நாண்மலர் முளரியந் தவிசினிற் பொருந்திய வயனோடும்
வினையி னீங்கிய விமையவர் குழாத்தொடும் வியாதமா முனியோடுந்
தனியி தழ்த்திரு மாதொடுங் கயிலையங் கடவுளைக் கழல்போற்றி.(உரு)

வேறு.

விடைகொடு புறமேகிச் செங்கால் வெள்ளன்னக்
கடவுளை யிமையோரை செல்க வெனக்கழறு
வுடைதிரை யாழிமிசை யறிதுயி லினிதுற்றோன்
படிபுகழ் காளத்திப் பதியினை மிகநாடி. (உசா)

உலக மெவற்றுள்ளு முத்தம வுத்தமமா
யிலகுற வைந்தாய யோசனை யெனுமகல
நிலைபெறு மீரைந்தா மோசனை யெனுநீள
மலைவறு புண்ணியமா யமர்வுறு தலமாகி. (உஎ)

முள்ளுடை மூலமெனு முண்டக மேலோனுந்
தெள்ளிய படிகநிறத் தேமொழி நாமாதுங்
கள்ளவிழ் கடிமலர்மென் கற்பக நறுநீழல்
வள்ளலு நீலையெனும் யோகினி மடவாலும். (உஅ)

படரொளி மணியுமிழும் பைவிரி பருவாயின்
விடமுறு நாகமெனுங் காளனும் வெண்பிறையின்
வடிவுற ழிருகோட்டு மழைமத வண்கலுழி
யுடைதிரை மாநதிபா யத்தியு மும்பர்களும். (உகூ)

கனிவுறும் யாழிசைய கந்தரு வர்கடாமும்
வினையகன் முனிவாரும் விழைவொடும் வழிபட்ட
புனிதநன் னகராகிப் புத்தியு முத்தியுமாங்
கினிதரு டலமாகி யிணையிலை யெனலாய. (௯0)

தென்காயி லாயமெனுஞ் சீரிய நன்னகரை
மென்கம லத்தவிசின் மெல்லிய லொடுமுற்று
மன்பதை மாசனனு நாமக டன்னொடு
மண்புறு பழமலையை மகிழ்வி னடைந்தனனால். (௯க)

வேத வியாதனுமா விழைவொடு காசியெனு
மாதி வளம்பதியை யணுகின னமரர்களு
மாதவர் தங்குழுவு மகிழ்வொடு தில்லைநகர்
காதலி னெய்தினராற் கடவுளு ரைப்படியே. (௯௨)

யாதொ ரிடந்தனிலே யிலகிய மணிமன்று
ளாதி நடம்புரிவ தாயிடை யருமுனிவர்
மூதுள பிறவிதொறு முற்று தவப்பயனாற்
போதவு மடைவுற்றுப் போற்றி வதிந்தார்கள். (௯௩)

சீர்பெறு நான்முகன் றென்கயி லாயமுறு
வோர்வரு டங்காறு முயருமெ வியாதமுனி
யோரு ளால்வைகிப் பெட்புறு தில்லையினுஞ்
சார்வுற வப்பரிசே தங்குபு வைகியபின். (௯௪)

பழமலை தன்னினுமப் பான்மையின் வைகியபின்
விழைதரு கங்கைநதி வெண்டிரை செம்பொன்னு
நிழறிகழ் பன்மணியு நித்தில முஞ்சொரியு
மழகிய காசியினு மம்முறை யேயமரா. (௯௫)

ஞான மடைந்தனமா ணிவிரு நன்குறவிம்
மாநக ரானவையு ளொன்றினை மருவுற்று
மேன்மைய முத்திபெற வேண்டுதல் செய்ம்மின்க
ளான விவற்றினிடை முத்தி யடைந்தவர்தாம். (௯௬)

எண்ணில ரென்றிதனை யெறிசுட ரடலாழி
நண்ணிய வாரணியத் துற்றுள நற்றவராம்
புண்ணிய மாமுனிவர்க் கினிது புகன்றனனு
ளுண்ணிறை கருணையொடு முயர்தரு சூதமுனி. (௯௭)

ஆகச்செய்யுள், க0அஅ.

இருபதாவது

# நாற்றுப்பன்னிருவர் முத்திசாதனம் பெற்றஅத்தியாயம்.



தொல்புராணவிதி யாவையு முணர்ந்துதுக ளற்றவுணர்வி
னெல்லையில்பெருமை பெற்றகருணைக்கட லெனத்திகழ்பவன்
மல்கு நீற்றொளி பழுத்திலகி யக்கமணி மாலைவனையுஞ்
செல்வ ஞானகுண சீலம்வளர் சூதமுனி செப்பலுறுவான். (க)

உன்ன ருந்தவ முனுற்றிமெய் யுணர்ந்துயரு முத்தமர்களே
யின்னு மோர்வகையின் முத்தியுறு நல்வழி யெடுத்துரைசெய்கே
மன்ன தோன்றரிய வேதமுடி விற்றெளிவ தாகுமதனைப்
பன்னு தும்முள மொருப்படுதல் பெற்றினிது கேட்கபரிவின். (உ)

அவாவ றுத்துமறை சொற்றவிதி யுற்றொழுகு மந்தணர்களிற்
சுவேத வச்சுவ தரப்பெயரி னுனிறுதி யாயதுறவோர்
தவாத நூற்றினொடு பன்னிருவர் வெண்பொடி தயங்குவடிவோர்
சிவாய வென்றுதிரி புண்டர மழுத்திலெழில் சேர்நுதலினர். (ங)

அக்க மாலிகை விழைந்துபுனை யாபரண மாமழகியோர்
முக்கண் ஞானபரி பூரண முதற்பொருளை முப்பொழுதினு
மிக்க பூசனை யிழைத்துவழி பட்டிடும் விழுப்பமுடையோ
ரொக்க யாவரு முனுற்றரிய நற்றவ முவப்பொடுசெய்தார். (ச)

யாதொர் சூழறெரி சித்தவள விற்கொடிய பாவமெவையு
மோது மெவ்வழலி விட்டதொரு பஞ்சென முடிந்திடுவவா
மோது மவ்வகை யெனப்பிறலி தாமுமொழி வுற்றிடுவவாம்
யாதோர் சூழலிடை வைகியிடு மாந்தர்க ளெவர்க்குமிறையோன். ()

ஆத ரித்துவினை வேரபா முத்தியை யளித்தருள்செய்வான்
யாதொர் சூழலிடை யந்தணர் தமக்கொருவன் யாண்டுதொறும்
யாதொர் தானம தியன்றதை யுவப்பினொடு மீந்தளவிலாத்
தீது மல்குபவ பந்தமுழு துங்கடிது தீர்வனெனிதா. (ரு)

யாதொர் சூழலி னிருந்துசிவ னன்பர்கையி லினிதுதினமு
மோது முட்டியள வாயினுமொர் பிச்சையிட லுற்றவுடனே
நோத ருங்கொடிய பாவமுழு துங்கடிது கொய்தினகல்வன்
யாதொர் சூழலிடை நல்லசிவ ஞானித னிடத்துமகிழ்வால். (எ)

ஓத னம்மெனினு மாடையெனி னும்முதவி செய்தவொருவன்
சாத ரேன்றுத றவிர்ந்திடுவன் யாதொரு தலத்தினிடையே
மாத வஞ்செப மகத்தொழி றியானமகிழ் தானமிவைதா
மேதி லர்க்கெனினும் வேதியர் தமக்கெனினு மீறில்பலனும். (அ)

வேறு.

அனைய தோர்திருக் காளத்தி யாகிய
வினிய நற்றலத் தன்னோ ரிழைத்திடு
புனித மாதவத் தாற்புக ழன்பினால்
வனிதை பாகன் மகிழ்ந்தெதிர் தோன்றினன். (கூ)

கண்டு மாதவ ருள்ளங் களிப்புற
மண்டு காதலின் வீழ்ந்து வணங்கினர்
தொண்டு செய்தனர் முத்தியின் சூழ்ச்சியை
யண்டர் நாயக னேயரு ளென்றலும். (க0)

பவள வார்சடைப் பான்மதி சூடிநுண்
டவள நீறு தயங்கத் தழைசெவிக்
கவள யானை யதள்பொதி கண்ணுத
றுவளு நூலணி மார்பர்க்குச் சொல்லுவான். (கக)

உத்த மத்தவ மேகொண் டொழுகுவீர்
முத்தி சாதன மீங்கு மொழிகுவாம்
பத்தி தன்னொடுங் கேண்மின் பரமமாய்ச்
சுத்த மாய்மறை வாமது சொல்லுறின். (கஉ)

மறுவி லாதி வருணர்முன் னுல்வர்க
ளுறுதி யாக வொழுகு மொழுக்கநான்
கறுதி யாக வவையடைந் தாலன்றிப்
பெறுவ தாமோ பெறலரு முத்தியே. (கங)

யாவன் றன்குலத் துக்கியை யுஞ்செய
லோவு றும லுஞற்றுவ னங்கவன்
காவ லாய கடவு ளருளினாற்
றூவில் வேதியன் றன்குலத் தெய்துவான். (கச)

அனையன் சாத கருமமுன் னாகிய
வினைக ளாற்றி விமல மடைந்துபின்
பனுவ லின்வழி முந்நூல் பரித்துநன்
கினியு னகிக் குரவனை யெய்தரு. (கரு)

மறைப் பின்று மணம்புணர் வெய்திரற
பொறிகொள் வெந்தழல் வேள்வி புரிந்துபின்
முறையி னற்பல தான முயன்றிழைத்
தறிவி னேடு மருந்தவ மாற்றுக. (கசு)

இழைக்கை யிற்பயன் யாதுமெண் ணதிழைத்
தழுக்க தாபவெம் பாவ மகன்றிடக்
கழித்து நான்கு காணமுந் தூயனாய்
விழுத்த கும்பர ஞான விழைவினல். (கஎ)

உலக வாழ்வினில் வேட்கை யொழிந்துபின்
பலவு கைப்படு தோடம் பகுத்துணர்
புலமை யாற்பரி பக்குவம் பூண்டுணர்
நிலைமை யெய்தி நியாத மடைகுவன். (கஅ)

முத்தி வேட்ட முறையான் முழுக்குவென்
றத்த னிப்பெய ரெய்துவ னன்னதோர்
வித்த கத்தின் விதிப்பட் டுறைத்தவன்
கொத்தை தீர்ந்த குடீசக னகியும். (கக)

தான்வெ கூதக னகியுஞ் சந்தத
மான பிக்குக னகியு மாங்கவன்
மேன்மை யஞ்ச விருத்திய னகியு
மீன மில்லா வெமதின் னருளினல். (உ0)

பரம வஞ்ச விருத்தியைப் பற்றுவன்
றரும சாந்திநற் றுந்தி திதிக்கதை
யருமை நானஞ் சவுசங்கொல் லாவற
முரிமை யன்றிய பொய்ம்மொழி யோவுதல். (உக)

மொழியு மந்திரத் தான்முழு நீறுடற்
பழைய நான்மறைப் பண்ணவன் பச்சைமான்
மழுவ லானெனு மூவர் வடிவுமாய்த்
தழைவு றுந்திரி புண்டா தாரணம். (உஉ)

அருட்சு டர்ச்சிவ லிங்கத் தருச்சனை
யுரைத்த விம்முறை[1] யாவு மொருதனிப்
பொருட்பெ றும்பழை யோர்கள் புரிந்திடு
சரித்தி ரங்க ளனச்சொ லுந் தன்மைய. (உங)

மறைச்சி ரப்பொருள் வாக்கியங் கேட்டவை
யுறத்த ரித்த லுவப்பொடுந் தேசிகன்
குறித்த வேவ லிழைத்தலிக் கூறிய
வறத்து றந்த வவன்புரி செய்திகள். (உச)

இன்ன பண்பி னொழுகு மிணையவன்
முன்னை நாளினின் முற்றிய நற்றவந்
தன்னி னுற்சிவன் றன்னரு ளால்விரை
துன்ன ரும்பர ஞான முறுவனால். (உரு)

உற்ற தாயவவ் வொண்மறை யின்சிரஞ்
சொற்ற ஞானத்தி னுன்முத்தி தோய்குவன்
பற்றி லாப்பர ஞானத்தி னலன்றி
மற்றொன் றுற்பர முத்தியும் வாய்க்குமோ. (உசா)

மொழிந்த னந்தொகுத தேமுத்தி சாதன
மழுந்தி ஞான மடைதற்கு நீருளந்
தழும்பி ருத்தல்செய் வீரெனத் தண்மதிக்
கொழுந்து சூடுங் குழகன் மறைந்தனன். (உஎ)

அறிவின் மேம்படு நீவிரு ன்னவா

ருறுதி யெண்ணி யுயர்தென் கயிலையிற்
பெறல ருஞ்சிவ ஞானம் பெறுகுதிர். (உஅ)

அந்த கர்க்க ணடைந்திடி னல்லதை
யுன்ன ரும்பவ மிங்கொழி யாதிது
தன்னை நம்புமின் சத்தியஞ் சத்தியஞ்
சொன்ன விம்முறை யாருந துணிமினே. (உகூ)

வழுவி லாமல் வருணி முதலியோ
ரொழுகு நான்கொழுக் கநதனை யுற்றலா
லழிவின் முத்தி யவாவுத லுற்றவன்
கழிபெ ரும்பவத் துன்பங் கடநதிடான். (௩0)

உரைத்த விம்மொழி யுண்மையி னுண்மையே
கருத்தி னையுற னீங்கக் கழறினே
மருத்து ழாய்கமழ் மார்பினன் றன்னினும்
விரித்த நான்மறை வேதியன் றன்னினும். (௩க)

நறிய கற்பக நன்னிழ லானினும்
பிறைகு லாஞ்சடைப் பெம்மா னதிகனென்
றறியுங் காலம் வாராத வளவும்மெம்
பிறவி கோடி பிறந்தும் பிறப்பறு. (௯௨)

தெளிவி னோர்ந்து சிவனே பிரமமென்
றளிய வுள்ளத் தறியு மறிவுறு
தெளிதின் முத்தி விரும்பினஃ தில்லையென்
றொளிய காட்சி மறைக ளுரைக்குமால். (௯௩)

முழுதொ ருங்குணர் முன்னவ ளுகியே
யொழிவில் போரு ளுத்தம ளுகியே
பழுதில் சீர்த்திய ளுைய பாசிவன்
மொழிவன் ஞானமின் றேன்முத்தி யின்றெனா. (௯௪)

வலம்பு ரித்தடக் கைச்செங்கண் மாயனும்
பொலஞ்சு டர்க்கம லத்திற் புனிதனு
மிலங்கி லைக்குலி சப்படை யேந்தியுந்
துலங்க யாவரு மம்முறை சொற்றனர். (௯௫)

அறிவின் மேலவ ராயைம் பொறியையுந்
தெறுத லுற்றவ ராயுண்மை செப்புறு
மறுவில் சாந்தர்க ளாயுள மாதவத்
துறவி னோருமவ் வாறுசொற் றாரோ. (௯௬)

மாசில் காட்சியின் மாதவத் தீர்பல
பேசி யென்னை பெருமறை யுச்சியி
னுசி லாவரு ஞானமில் லாமலே
யேசி லாப்பர முத்தியெய் தாதரோ. (௯௭)

மாந்தர் கட்கு மறைவழி ஞானமே
யேய்ந்த சோபன மாய்ப்பழு தில்லதாய்
வாய்ந்த தன்னிய ஞான மறைவழி
யாய்ந்த ஞான மடைவதற் கேதுவாம். (௯௮)

என்று சூத னியம்பின னேடவிழ்
கொன்றை வேணிக் குழகன் குலவரை
மன்றல் வார்குழன் மாதொடு முண்மகிழ்ந்
தொன்று சீர்த்திருக் காளத்தி யுண்மையை. (௯௯)

ஆகச்செய்யுள், ௧௧௨௭.

இருபத்தோன்றாவது

## காளத்திமகிமையுரைத்த அத்தியாயம்.

வேதமொர் நான்கும் வகுத்த வியாத
ஞுதா விற்சொல் புராண மனைத்து
மோதிய சூதமெ ருண்மை யுரைப்பான்
மாதவர் நேமி வினத்தவர் கேட்ப. (க)

முற்றிய நற்குண மூதுணர் காட்சி
பெற்றியின் மிக்க பெருந்தவர் நீவி
ருற்று வினைய வுரைப்படி யின்னு
மிற்றென வொன்றை யிசைக்குவல் கேண்மின். (உ)

எண்ணில வாகிய வெவ்வுயிர் கட்கு
நண்ணரு முத்தியை நல்குவ தாகி
யொண்மறை யின்முடி வாலுணர் கின்ற
வுண்மைய தாயுள தோர்தல மாதோ. (ங)

புத்தியு முத்தியு நன்கருள் பூவை
நித்திய மாகி நிறைந்தமெய்ஞ் ஞான
வித்தக மேனி விளங்கிழை வெற்பி
னுத்தமி யாமுமை யாடலை நாளில். (ச)

வேறு.

தேவ தேவனை யுலகநா தனைத்தெரிப் பில்லா
வோவி லெவ்வுயிர்க் குஞ்சம மாகியுள் ளானை
மேவு ஞானசம் பன்னனை மெய்யிலக் கணங்கள்
யாவும் வாய்த்தவன் றன்னையாண் டெஞ்செறி யிறையை. (ரு)

பொருவில் சோதியைத் தனக்கொரு குறியிலாப் பொருளைக்
கிருத காடினி யம்மெனக் கேவலங் கருணை
யுருவ னைப்பர மானந்த நடனவுத் தமனைக்
கருதொ ணாதவ னைக்குணங் கடந்துநின் றானை. (சு)

மறைந்து ளான்றனை மாகுண மூர்த்திகள் வழுத்த
நிறைந்து ளான்றனைக் குரவனை யெங்கணு நீங்கா
துறைந்து ளான்றனை யொருவருந் தன்னொடொப் பின்றிச்
சிறந்து ளான்றனைச் சிவனைமுன் வணங்குதல் செய்து. (எ)

வேண்டிக் கொள்பவ ளாயிது வினவுவள் விமல
வீண்டு யிர்க்குநன் முத்தியை யளிப்பதா யெளிதிற்
பூண்டி ழைத்திடத் தக்கதி யாதெனப் புகலக்
காண்ட குங்களி மயிலியற் கிறையவன் கழறும். (௮)

தேவி கேண்மதி யெம்மைநீ வினவுமிச் செய்தி
தாவில் சீருல குக்கித மாயது சால
வாய்வு றின்மிக நல்லது நல்லதா தரவா
லோவி லாவிது முன்னநாஞ் சொன்னதன் றுனக்கு. (௯)

இனியு ணர்த்துது மமைந்துகேண் மறையவ னெனினு
நனிமி கக்கடை யாயவ னென்னினு நாணின்
வனிதை யென்னினும் பேடிமற் றென்னினும் வறிய
தனிய னென்னினுஞ் செல்வனே யென்னினுஞ் சால. (௧0)

அபுத னென்னினு மூர்க்கனே யென்னினு மன்றி
விபுத னென்னினும் வித்தக னென்னினு மிகவுந்
தபுச முக்கனே யென்னினுந் தருணனே யெனினு
முபக ரித்திடு முதியவ னென்னினு முலகில். (௧௧)

இல்லை யென்பவ னென்னினு முண்டென்ப னெனினுஞ்
சொல்ல ருஞ்சிவ தலங்கண்மற் றெவற்றுளுந் தூய்தாய்
வல்லி நுண்ணிடை மடந்தைநின் னுனுநம் மாலு
நல்லு வப்பினி தளிக்குநம் மைந்தர்க ளாலும். (௧௨)

நந்தி யாலுநம் மழவிடை யாலுநம் பாலிற்
சிந்தை யன்பர்க ளாலுநற் றிசைமுக னுலும்
பைந்து ழாய்நறுந் தொடைபுனை பசியவ னுலு
மிந்தி ரன்முத லாகிய விண்ணவர்க ளாலும். (௧௩)

இருள்கி ழித்தெழு மெறிசுடர்ப் பரிதியி னுலுந்
திருளு மின்னமிர் தளித்திடு செழுமதி யாலு
மருள கற்றிடு கடவுளர் மற்றெவ ராலு
மருளி யக்கர்க ளாலும்வல் லரக்கர்க ளாலும். (௧௪)

இவர்க ளாதிய வெவ்வண்க யுயிர்களி னுலுங்
கவரு மெவ்வகைத் தவங்களுங் கைப்பல னுதற்
குவகை தூங்கிய வுளத்தொடு முறைந்திடு தலமாய்த்
தவள நித்திலங் கொழித்தபொன் முகரியந் தலமாய். (௧௫)

நந்த மக்கினீ துவப்பதாய் நானிலம் பரவு
மந்த மில்புகழ் வளர்திருக் காளத்தி யதனிற்
சிந்தை யன்பொடும் விரதமோர் யாண்டுசெய் தமரிற்
பந்த நீங்கிய முத்திசா தனமிகப் பலிக்கும். (கசு)

வேறு.

சித்தி ரைச்சித் திரைப்பொன் முகரியிற்
பத்தி யிற்புல ரிக்கட் படிந்தெழூந்
தொத்த தானஞ்செய் துன்னையு நம்மையு
மெய்த்த மிழ்த்திருக் காளத்தி வெற்பையும். (கஎ)

வல்ல வாறு வலஞ்செய்து மண்மிசை
மெல்லத் தாழ்ந்து விழைநதெதிர் போற்றுபு
நல்லு ணப்பக லின்றி நனியிருந்
தெல்லி யின்க ணினிது மிசைகவே. (கஅ)

புகழ்வை காசி விசாகம் புலரிபொன்
முகரி யம்புனன் மூழ்கி முடிவன
வகம கிழ்ந்தளித் தமமுறை நந்தமைத்
தகவ ணங்கி யயில்கவத் தன்மையின். (கசு)

ஆனி மூலத்து மங்நெறி நன்னதி
நானஞ் செய்து நலனே டியன்றன
தானஞ் செய்துநந் தம்மையு நின்னையு
மேன்மை யிற்பணிந் துண்கவவ் வெல்லையில். (உ0)

ஆடி யுத்தரா டத்தினு மம்முறை
நீடு மன்பினி னீர்படிந் தந்நெறி
கூட லுற்ற கொடுத்து வலங்கொடு
பாடி நம்மைப் பணிந்துண்க பண்டையின். (உக)

ஊன மில்சிறப் பாவணி யோணநா
டாலு மம்முறை தண்புன லிற்படிந்
தான தான மளித்து நமையுமப்
பான்மை யிற்பணிந் துண்கவப் பண்பினின். (உஉ)

போற்ற ரும்புரட் டாதிப் புரட்டையிற்
சாற்று மும்முறை நானமுந் தானமு
மேற்ற வாறுசெய் தின்புற நல்வல
மாற்றி நம்மைப் பணிந்துண்க வம்முறை. (உ௩)

அலகி லைப்பசி யச்சுவ திக்குமப்
புலரிக் காலையிற் பூப்புன லாடிநற்
றலைமை யோர்கையிற் றானமுஞ் செய்தெமை
வலமோ டேத்துபு மாந்துக வம்முறை. (உச)

கார்த்தி கைத்திருக் கார்த்திகை நாட்கதி
வாய்த்த வந்நதி வார்புனற் றோய்வுறு
வேத்து தானமும் யாதொன் றியன்றதைப்
பாத்து நம்மைப் பணிந்துண்க வப்படி. (உரு)

மார்க ழித்திரு வாதிரை வைகறை
நீர்ப டிந்துபின் னேர்படு தானமு
மாவ மாக வளித்து நமைப்பணிந்
தேர்பு வாழ்த்தி யியற்றுக விம்முறை. (உசு)

தையிற் பூசந் தனிலே புனல்படிந்
துய்யத் தான முதவி யுவந்தெமை
மெய்யிற் றாழ்ந்து விதிமுறை போற்றுபு
மையற் சிந்தையற் றம்முறை மாந்துக. (உஎ)

மாசி மாத மகத்துன்ன மாநதி
வீசு தெண்புன லாடிநல் வேதியர்க்
காசை யாவியன் றுள்ள தளித்தெமைப்
பூசை செய்து புசிக்கநற் கங்குலில். (உஅ)

உவந்த பங்குனி யுத்தர நாளினிற்
சிவந்த பொன்னும்வெண் முத்துந் திரையெறி
தவந்த ரும்பொன் முகரி தனிற்படிந்
திவர்ந்து தானமும் யாவு மியற்றுக. (உகூ)

வேறு.

இம்முறைமை திங்கடொறும் யாவனொரு வன்றான்
விம்முறு முவப்பினொடு மிவ்விரத நோற்கு
மம்மவன் மெய்யிறுதி யாமளவி லேநா
மெய்ம்மையொ டளிப்பம்விரை விற்பரம ஞானம். (௩௦)

இந்நிலையி னிவ்விரத ஞானமடை விக்கு
மந்நிலைய ஞானமுயர் முத்தியை யளிக்குஞ்
சொன்னவிது மெய்ம்மையிதை யிப்பொழுது சொற்றே
முன்னினவர் வர்க்குமெளி தாமிது வுணற்ற. (௩௧)

அணுவிலனு வாயபொரு ளீண்டையி னளிக்கி
னிணையரிய மேருவரை யாய்வளரு மென்று
துணிவினொடு சொல்வபல தொல்பனுவ லோரு
நணுகரிய விவ்வுழியி னண்ணிய நரர்க்கும். (கஉ)

போகமொடு முத்திதிட மிந்நகர் புகுந்தோர்
மாகடிய பாவவிற குக்கெரியும் வன்னி
தாகமுறு காமிக டமக்கரிய போக
மாகவிது காரண மருந்தவமு ளார்க்கு. (கங)

ஈங்குறைதல் கிட்டிடு மிருண்டிடு மனத்தோர்
தாங்களறி யாததிது தூயவினை தன்றோ
லாங்குநம தின்னரு ளடைந்தறிவர் பின்னைத்
தீங்குடைய னேனுமுணர் வில்சிறிய னேனும். (கச)

இன்றெனை வுரைக்குமவ னேனுமிவ ணெய்தி
நன்றுநமை யேத்தினவ னம்முலகு சேர்வ
னென்றவுடன் முத்திதிர மாயெவர்க ளுக்குந்
துன்றுசம மாயரிய தூயபய னல்கும். (கரு)

மற்றிதுநம் மாற்பிரம னற்கரிய மாலாற்
றுற்றவிமை யோர்குழுவி னற்சுகம தாகி
யுற்றுறைவ தாமறி வுளோன்மடி யிலாமற்
பெற்றிடுக வித்தல மெனச்சுருதி பேசும். (கசு)

என்றிறைவ னிந்நகர மான்மிய மியம்பி
மன்றல்கமழ் வார்குழன் மடந்தையுமை தன்னை
யொன்றெனு மயிக்கமத னுவினி துவப்பிற்
றன்றிரு மலர்க்கைகளி னற்றழுவி னனல். (கஎ)

அந்நிலையெ னம்மைதொழு தையனை வணங்கி
யுன்னரிய பூசனை யுவப்பொடு புரிந்தா
ளிந்நகரின் மேன்மையிறை யோனிறைவி கேட்பச்
சொன்னபடி நாமினிது சொற்றன முமக்கு. (கஅ)

நீவிரு மினிக்கருமம் யாவையு நிறுத்தி
யோவறு முவப்பொடுமெவ் வுத்தம நகர்க்கண்
மேவுதி ரிதேகருமம் வேறுகரு மங்கள்
யாவையு மிகப்பொழுது போக்குவன வென்றும். (கக)

என்னவுயர் சூதமுனி வேதமுனி யென்று
பன்னிய வியாதமுனி சொற்றபதி னெட்டுத்
தொன்மைய புராணமு முணர்ந்துதெளி தூயோ
னுன்னரிய தென்கயிலை மான்மிய முரைத்தான். (௪0)

ஆகச்செய்யுள், ௧௧௬௭.

இருபத்திரண்டாவது
# வசிட்டர்விருவிய அத்தியாயம்.



தொடையுறு மிணைய நாற்குத் தடையிரு டோப்ப வேண்டி
வடிவிறற் புருட ணுகி வதனத்தால் யானை யாகிக்
குடவயி றுடைத்தாய்ச் சாந்த குணத்ததாய்ப் புனித மாகி
நெடிதுளங் கடந்து நின்ற வொளியினை நினைதல் செய்வாம். (௧)

பண்டைநாள் வசிட்டன் வெள்ளிப் பணிவரை யடைந்து மோனங்
கொண்டுநற் செயலி ழைக்குந் துணிவொடைம் பொறியுங் கொன்று
மண்டுறு மருத்துணவா வைந்தழ னடுவண் வைகி
யண்டர்யாண் டரைஞ் ஞாற்றி னளவருந் தவம்பு ரிந்தான். (௨)

உளந்தனி லமைய வொண்சீ ருருத்திர நாப்ப ணுகித்
தெளிந்தருள் குடிலை யோடு மாறுகித் தீங்கு மாற்றி
விளங்குறு மெழுத்தோ ரைந்தும் விதியினின் வழாது வாய்பபக்
களங்கனி மிடற்றி னானைக் கண்ணுறச் செபஞ்செய் தானால். (௩)

இன்னவா றியற்று மெல்லை யன்னவ னெதிரே யேடார்
பொன்னிலா மிதழி சூடும் புரிசடைப் புராணன் போந்து
மன்னிய பீடத் தோடுஞ் சிவலிங்க வடிவ மாகு
னன்னமா முனிவ னோக்கி யற்புத மிகவு மெய்தி. (௪)

எனதுகட் புலன தாகத் தோன்றிய விதுமற் றேது
கனிதரு கருணை யாலே கடவுள்வந் தனனோ வென்று
மனமகிழ் சிறந்து தூய புனலாட்டி மலர்கள் வேய்ந்து
கனியினி தருத்திப் பூசை யிழைத்தனன் கழல்கள் போற்றி. (௫)

அந்நிலை யிலிங்கத் துண்ணின் றுதியம் பகவ னுலின்
மென்னிழ லுடைய னுகி வெம்புலி யதளோ னுகி
மன்னுபுத் தகமு மக்க மணிவடந் தானு ஞானம்
பன்னுமுத் திரையு மான்பாற் கும்பமும் பரிப்போ னுகி. (௬)

வெண்ணிலாக் குழமபு போன்று விளங்குநீற் ஞெளிப மூதத
வெண்ணிலாப் பணிகள் பூண்டங் கிலங்குபா னிறத்த மெய்யுங்
கண்ணொரு மூன்றுந தெய்வக் கங்கைநீா கலைவெண் டிங்க
ணண்ணுவார் சடையுஞ் சோதி நளிமதி வதனந தானும். (எ)

பைமமணிக் கவைநாத துத்திப பாநதண்முந நாலுமு பாநதட்
செம்மணிப பூணும யோக பட்டமுஞ் செஙகட சீறற
வெமமுய லகன்மேற ருளு மிகுவீரா சனபபொற ருளு
மம்மநீ டிலக்க ணங்கள் யாவையு மமைநதோ னுகி. (அ)

சகமுழு துக்குந தானே தலைவனு தகைமைப பாடு
மேகமகிழ் சனகன் முன்னோர் வழிபட வருளாற றென்பான்
முகமலர் நோக்கு மாகி முன்னாவந திருநதான கண்ட
புகரில்சீர் முனிவன் ருழ்நது போறறுபு தொழுது மாஙகு (கூ)

ஆதியு மவனை நோக்கி யமிர்தினு மினிய சொலலொன
ஞேதுவன் வாராய் வேத முணர்நதுளாா தமிலு யாநதோ
யாதுகா ரணமாச செய்தா யிததவ மேல நினபா
லாதர வானேங் கேட்டி வரமயாவு மளிதது மென்ருன். (க0)

என்றலும் பின்னுந தாமா விருநதவன் வழிபட் டேததி
நனறுளம விழைநத யாவுங கேட்கின்ருன் ஞான மாகி
மன்றவு நிறைநதா னநத மயமுறு வடிவ முற்ருேய்
துன்றுமெவ் வுலகி னுக்குஞ் சாமிநீ சொலலக கேண்மோ. (கக)

## வேறு.

எண்ணி லுலகம் யாவைக்கும் யாது நிமிதத மிவவுலகை
நண்ணி யென்று நடாததலுற ருயாவ ரவாககு முலகுக்கு
மண்ணு முறவே தசிததுமாய்ச சிததுமாய வனைததுலகும
பண்ணப் படுகின் றவையாகி யுண்டா கின்ற பரிசேது. (கஉ)

பலதத் துவங்க ளெவறறுளுநம பாதத துவமாப பரமசிவ [க்
முலகத் தினுக்குத தான்வேருே வன்ருே வுரைககி னெனையிலக்காய்
குலவுற திருபப தனையசிவங கூறி னதறகு வடிவேது
நிலவப படுமவ் வடிவாவ தேது முததிக் கெதுநிமிததம. (கங)

பநதம் யாதாற் பல்லு யிர்க்கும பகவன் றனக்குப பதிகளேவை
யுநத நடுவ ணுதியில்லோ னெவ்வா றருச்சிக் கபபடுவான்
சிந்தை விழைவெண் ணீறென்று செபபப படுவ தேதெதனுன்
முந்து பன்மமாயதுதுன் பொழிபப தேது மொழிதலுறின். (கச)

பன்ம விதப்பா டெத்துணைய பன்ம மெவர்க்குத் தரித்திடலாம
பன்மந் தரிப்ப தெம்மனுவாற் பன்மந தரித்த லெப்பரிசு
பன்மந் தரிக்கும் பாவகமென் பலனே தென்று பகருமறை
நன்மங் கலமா மக்கமணி நயந்து தரிப்ப தெவ்விடத்தே. (கரு)

தரிக்கின் றதுமெம மநதிரததாற றரிககி னதறகுப பாவனையென்
றரிக்க லாமிங் கெவர்கட்குத தரிததா லதறகுப பலனே தீங |தான
குரைககின் மறையோர் செவிபபமெவ னுருவேற றிடுமா றெபபடித
பாக்குஞ் செபமெப படிசசெய்தல பயிறசி செய்த லெவ்வண்ணம ()

மற்றிங் கதற்குப் பலனெது வருணி முதலோ ராசார
மெறறென் றுரைக்கு மினியமறை யுகததின் றரும மெவ்வண்ண
முற்றுந் தெளிநத முழுமுதலோன் முன்னுட டாரு வனமதனி
லுற்றங் கனையா னெனசெய்தா னுயர்மா தவததோ ரென்செயதார ()

பாமன் றனங் கெதுசெய்தான் பரமன் போய தேதுக்காப
பிரமன் பரம னருளாலே ரிபுவைப பெறற பேறென்னே
பிரமன் பயநத வபபுதல்வன் பின்னா நிதாகன் பெரிதுமுயயப
பிரமந தனையாங் கெவ்வண்ண முபதே சித்தான் பொருளால (கஅ)

தீய செயலாற் றிகழ்சதுததன் றேவர் கோன்வாழ் பொனனுலகிற
போய தெவ்வா றவனஞான மெவவா றடைநதான் புகன்றருளென
றூயு மறையின் றுறைபோய வருமா தவதது வசிட்டனெனுந [ன
தூய முனிவன் வினவினன் மழவெள் விடையோன் விடைசொலவா

ஆகசசெய்யுள, ககஅக.

இருபத்துமூன்றவது

# உலகின்றோற்றமுணர்த்திய அத்தியாயம்.



வினவி வந்த முறையே விளம்புது
முனிவ கேட்டி முழுதுல குற்பவ
மினிது ரைக்கி னிவற்றிற்கு மாயையே
நனியு மேதுவென் பார்மறை நாடினே

நண்ணு மாயை நமது வயத்ததா
மெண்ணி லாவுயி ரீட்டும் வினையினாற்
கண்ணி னுற்ற கருமபா கத்தினும்
பண்ணுங் கால பரிபக் குவத்தினும். (உ)

முக்கு ணத்தின் முழுவடி வாகியே
பக்கு வத்திற் பகுத்துப் பகர்ந்திடத்
தக்க தாகிச் சகதுக ளனைத்துமாய்
மிக்கு நின்று விதியி னொடுங்குமால் (௩)

இன்ன மாயையை யாமதிட் டிக்கவே
தன்ன தாய பெருமை தலைப்படா.
மன்னு மாங்கது மாமாயை யாமென
வன்ன காலையப் பேரை யடையுமால். (௪)

அனைய மாயை யிரண்டா மவற்றினு
லெனைய யாவு மியற்றுவிப் பேமியாம்
புனித மாயையி னுத முதற்புக
வினிய தத்துவ மைந்து மியற்றுறு. (௫)

மற்ற மாயை மருங்கிற் கர்
னுற்ற மாநிலங் காறு முதிப்பியாத்
துற்ற வன்னவற் றுள்ளே தொகுமுயிர்
பற்று டம்பும் பலகா ணங்களும். (௬)

மிக்க தம்வினைக் கேற்புற மேவியே
புக்கி ருப்பப் பொருந்து புவனமுந்
தக்க போகமுந் தங்குவித் திம்முறை
தொக்க நண்ணிய தோற்றம் வகுத்தபின். (எ)

தூல மானவைம் பூதமுந் தோற்றுவித்
தேல விம்முறை யாவு மியற்றுறு
மேலி வற்றை விரிவு படுத்தவும்
பால னஞ்செய்து பாங்கிற் புரக்கவும். (அ)

நரனெ னப்படு நாம்விட னுற்றதோ
ரிரத நண்ணிய நாரமென் றுயதி
லரியு திக்க வளித்தன மாங்கவன்
பெரிதுந் தோன்றி யயனம்பெற் றுனதில். (௯)

ஆன பண்பி னவனைநா ராயணன்
றானெ னும்பெயர் தொன்மறை சாற்றுமான்
மேன்மை யாகி விடப்படு நாரமு
மீன மின்றி யிரணிய வண்ணமாய். (௰)

பரிதி வானவன் போன்று படரொளி
விரிய வன்ன விரணிய மெய்யினைக்
கருவ தாம்படி கற்பித் தயன்றனை
யரிய ளித்தனன் பின்னரங் காதலால். (௧௧)

இருக்கு வல்லவன் றன்னை யிரணிய
கருப்ப னென்று கழறுவ ராங்கவன்
பெருத்த பூதமைந் தாற்பே ருலகெலாம்
விரிப்பன் மாயன் விரித்தவை காப்பனே. (௧௨)

அயன்ற னக்குமவ் வம்புயை கொண்களு
மியைந்த மாயன் றனக்கு மியையநாம்
பயின்று நல்லுயி ராகிப் பதிந்தவர்
முயன்றி ழைப்பவை யாவு முடித்துமால். (௧௩)

துற்ற வைம்பெருந் தூலபூ தங்களான்
மற்றிவ் வாறு மலரோன் வகுத்துள
பெற்றி யாற்பிர மாண்டப் பெயரினை
யுற்ற திவ்வண்ட மீரே ழுலகது. (௧௪)

இதனி டத்திலு மெண்ணில வின்னுயிர்
விதமி குத்த வினையின் பயன்களாற்
றுதைத லுற்றன சூக்கும வண்டமா
மதனி டத்திலு மவ்வா றடைவன. (௧௫)

சுருக்க மாம்படி சொற்றே நினக்கியாம்
வருக்க மாமுல கெல்லாநம் மாயையின்
பெருக்க மன்றிப் பிறிதில வின்னுமேல்
விரிக்கி னென்பயன் வேண்டா விவையெலாம். (௧௬)

மாயை யின்செய லென்று மறுத்தொழிந்
தாயு மின்னுயிர்க் காய பயன்றனை
நீயு ணர்ந்துகொ ளென்று நிகழ்த்தினன்
பாயி ரும்புனல் வேணிப் பாஞ்சுடர். (௧௭)

ஆகச்செய்யுள், ௧௨0௩.

இருபத்துநான்காவது

# தலவிசிட்டமுணர்த்திய அத்தியாயம்.



உலகுண் டாவதற் கேதுகா ரணமென வுரைத்தா
யலகி லாவுல கியாவையு மாயையி னென்
றிலகு காரணங் கூறினை யினிச்சிவ னியல்புந்
தலைமை யாயவ னினிதமர் தலங்களுஞ் சொல்வாம் (க)

அறிஞ கேள்சிவ னேபர தத்துவ மவனிற்
பிறிதொன் றில்லையப் பரமன திலக்கணம் பேசின்
மறைக டம்மிலெக் காலமுங் கேட்கலா மறுவற்
றுறைவ தாகிமெய்ஞ் ஞானவா னந்தமா யொளிரும். (உ)

உலகின் றோற்றமுன் னாகிய வெவைக்குமோ வின்றி
யிலகு மப்பர தத்துவ மேமிக வேது
மலைவி லாதவன் வடிவினை மறைகளே யுணரும்
புலன கன்றவவ் வடிவது புகலுதற் கெளிதோ. (ஙு)

நித்த மாயுமை தன்னொடு நிகழ்வதாய் நீலம்
வைத்த தோர்மணி மிடற்றதாய் முக்கண்வாய்த் துளதாய்ச்
சுத்த மாய்த்தன துண்மையைத் தோற்றுவிப் பதுவாய்
மெய்த்த தோருவப் புள்ளதாய்த் தாண்டவ விழைவாய். (ச)

முளரி வேதனு முகுந்தனுந் தினந்தொழு முதலா
யளவில் போகமும வீடுநல் லறனும்வந் தடைந்தார்க்
குளம கிழ்ந்தளிக் கின்றதாய் வதிந்தசீ ருருவங்
தெளிவி னென்றுநீ சேவைசெய் தேத்திடத் தகுமால். (ரு)

மாயை தீர்ப்பது மன்னதே யன்னதோர் வடிவை
யாய்வு றின்னவ னேயது வாவனஃ தறியான்
றீய தாகிய மாயையாற் சிக்கபாப் புறுவன்
றூய வீடில னவிச்சையாற் கட்டுண்ட தொடர்பால். (சு)

அவ்வு ருத்தனை யறியினப் பாசம்விட் டகலுஞ்
செவ்வி தானவவ் வறிவுநுண் மறைச்சிரந் திகழும்
வெவ்வ ழற்சுடர் வேள்வியே முதலிய வினைக
ளெவ்வ மின்றிய ஞானமுண் டாவதற் கேது. (எ)

ஏந்தெ ழிற்குவட் டெறிசுடர்க் கயிலைவெற் பெமக்கு
வாய்ந்த சீரிதா யாவரும் வணங்கமன் னுயிர்க
ளேய்ந்து சூழ்வதாய்ப் போகமும் வீடும்யா மீதற்
காய்ந்த வுத்தமத் தலமதா மெமதிட மதுவாம். (அ)

சுரித்து வார்ந்திரி தொழுகிவெண் முத்தமுந் துகிரும்
விரித்து வெண்டிரை விண்டொட நிவந்தெழ வீசிப்
பரித்தி டுங்கரை பொருபுனற் கங்கைசூழ் பதியாய்த்
தரித்த காசிமற் றெமக்குரித் தாகிய தலமால். (௯)

சுடிகை யொண்மணிக் கணபணத் துத்தியங் கவைநாப்
படிவ மாகிய பதஞ்சலி பாய்ந்தெழு பகுவாய்க்
கடிய வாளுகிர்க் கனல்விழிக் கொடுவரிக் காலோ
னடன மெவ்வுழிக் கண்டன ரந்நகர் நமதாம். (க0)

பிறந்து ளோர்க்குவீ டளிப்பதாய்ப் பிரளய தினத்து
நறுந்தண் சேயிதழ் நறைபொழி நளினபீ டத்தி
லுறைந்த செந்திரு வுவந்தெமை வழிபட லுனாற்றுஞ்
சிறந்த புற்றிடஞ் செறிநகர் தினமெமக் கினிதால். (கக)

கம்பை நன்னதிக் கரையினிற் காஞ்சியம் பதியி
லம்பை நாடொறு மமர்ந்தெமக் கருச்சனை யாற்ற
நம்பி வந்துமேகத் திரவுப வாசநண் ணினர்கட்
கிம்பர் முத்தியை யளிக்குமந் நகரெமக் கினிதால். (கஉ)

பருப்ப தஞ்சுட ரெறித்தெழு பாசிவ லிங்கத்
துருப்ப திந்துள தெமதிடங் கழுமல முயிர்கள்
விருப்பொ டுந்தொழ ஞானநன் களிப்பது வேதன்
பெருத்த பூசைகற் பந்தொறு மிழைப்பதெம் பேரூர். (கந)

பொன்னி மாநதி வடகரைப் புழைக்கைநாற் கோட்டுக்
கன்ன மாமதக் கலுழிநால் வாய்க்களி யானை
முன்ன ருச்சனை யிழைத்தது யாண்டுமுக் குளநீர்
தன்னின் மாகமா தத்திலா றுந்திதி சாரின். (கச)

இடபத் திங்களி லீரெழு திதிவரி னிருட்சி
யடையப் பட்டவெண் டிதிவரி னானிக்கு மவற்றிற்
கடவுட் கார்த்திகை யிற்பதி னான்கினிற் களிப்பிற்
படிகுற் றற்றைஞான் றுணவொரீஇப் பரிவொடு மடிசில். (கரு)

வுருத்தி யங்கியன் றுள்ளபா னங்களு மளித்தோர்
விருப்பின் வீட்டினை யாதொரு தலத்தின்மே வுறுவர்
பரித்த வீருவாத் தோறுமோர் யாண்டுநீர் படிந்து
கருத்தொ டுந்தவ ரெங்ஙனம் வாழ்வுகைக் கொள்வார். (கசு)

அன்ன தாயவெண் காடெமக் கினியதா மழகாய்
மன்னு காவிரித் தென்கரை மருவிடை மருத
நன்ன லத்ததாந் தீர்த்தநுங் கணபதி நம்மை
முன்ன ருச்சனை யாற்றினன் முயன்றுதைப் பூசம். (கஎ

ஆய வைகலி னரும்பெறற் பொன்னிநீ ராடித்
தூய வேதியர்க் கடிசிலங் கருத்துவோன் சுரையூண்
மாய வெவ்வழல் வைத்தல்வே தியன்வதை மற்றுந்
தீய பாதகந் தணந்தம ருலகினைச் சேர்வன். (கஅ)

பரிவின் மாதமா தத்தினும் பருவங்க டம்மி
விரைபு னற்படிந் திறையையூ வலமிழைத் திறைஞ்சி
யுருகி யேத்துவோ ரொருவரு டத்தினி லுள்ளங்
கருதும் யாவையு மடைவனம் ஈதெம்மிடங் கண்டாய். (கசு)

குடந்தை மாநகர் தீர்த்தநற் குரைபுனற் பொன்னி
யடைந்த தென்கரை யமர்வதங் களப்பில்வா னொரு
மிடைந்த பல்வகைத் தேயம்வாழ் மாந்தரும் விரவி
யிடங்கொ ளாதுசூழ்ந் தேத்துமா கந்தனி லெய்தி. (உ0)

எண்ணி தீர்த்தமற் றியாவையு மெறிதிரைப் பொன்னி
நண்ணி மூழ்கியாங் கிறைவனை நயந்துபூ சனைசெய்
தண்ண றென்புடை யமர்ந்ததோ ரலைபுனற் றடாகத்
துண்ணி றைந்தினி திருக்குமத் தீர்த்தங்க ளொருங்கு. (உக)

அதத டததின்ற கடவுண்மா த்ரததமதாடிக்
கைத்தி யன்றன யாவனே களிப்பொடு மீவன்
சுத்த ஞமவ னடைகுவன் றொல்சிவ லோக
மத்த லம்பெரி துவப்பினை யெமக்களிப் பதுவாம். (உஉ)

வேறு.

திகழை யாறெனுந் திப்பிய வெத்தல
மகிழும் பொன்னி வடகரை வாய்ந்தது
புகழு மாநதி யைந்து பொருந்துவ
தகழுந் துன்பத்தவ் வைந்து நதிகளும். (உங)

ஆதி தன்னை வழிபட லாற்றினா
யாதொர் சூழலி லெய்திச் சிலாதனன்
மாத வஞ்செய் திறையை மலர்கடேய்க்
காத லிற்றொழுக் கண்ணுத லோன்றுறா. (உச)

முந்து நல்வர் நல்க முடிவிலா
நந்தி யைப்பயந் தானெவ ளுடருஞ்
சுந்த ரத்தவே ழுன்னையர் தூமலர்
சிந்தி வாழ்வடைந் தார்சிவ னுலமோரா. (உரு)

யாண்டுப் புண்ணிய மெய்தி யிறைவனை
வேண்டிப் பூசனை யாற்றி விடையுருப்
பூண்டுற் றுள்ளது பொன்னிப் புனல்படிந்
தாண்டுத் தேவை வழிபட் டவனெவன். (உசு)

ஒல்லை யன்னான் சிவன்வடி வுற்றிட
வல்ல னுருவ னவ்வுழி வாழ்தும்யாம்
நல்ல சேது நடுக்கந்த மாதனத்
தெல்லை யெய்திமுன் னிந்திரை காதலன். (உஎ)

உலகி னுக்குப கார முறற்பொருட்
டிலகு தாச ரதியென் றினிதுதித்
தலைக டற்றென் னிலங்கை யரக்கனைக்
கொலையி ழைத்த கொடுவினை நீங்குற. (உஅ)

சிவனைத் தாபனஞ் செய்துதன் பேருற
வவனைப் போற்றின னாயிடை மீளவு
முவணப் புள்ளின னெண்புன றோய்ந்துவெங்
கவனப் பாய்விடை யூர்தியைக் கைதொழா. (உகூ)

உள்ளந் தன்னை யுவப்பித் தழகியு
கள்ள விழ்ந்த கருங்குழற் செய்யவாய்
வெள்வ ளைக்கைப் பசுமயின் மெல்லியல்
வள்ளை யங்குழைச் சானகி மாதொடும். (௩0)

ஆத ரத்தொ டமர்ந்தங் கடிசினும்
வேதி யர்க்கு விழைவோ டளித்தினி
தேத மற்ற விமையோர் குழாத்தையு
மாத வத்து மறைமுனி வோரையும். (௩க)

மாந்த ரோடு மகிழ்வித் தனையர்மாட்
டேய்ந்த தொன்றை விழைந்தங் கியம்புவா
ஞய்ந்த தையினி லாடிப் புரட்டையிற்
றேய்ந்த தோர்புனர் பூசத்திற் றாமதி. (௯௨)

நின்ற நாளி னிகரில் விடுக்களி
லன்றி மற்று மயனங் களிலொளி
துன்று சந்திர சூரியர் தோற்றத்தை
வென்றி நாகம் விழுங்குறு நாள்களில். (௯௩)

மற்றை யொண்கிரா ணத்தில் வறிதெனப்
பெற்றி டும்பரு வங்களிற் பேரொளி
யுற்றி டுங்கிர கங்க ளுதிக்கையி
லற்ற வாகி யவைதா மறைகையில். (௯௪)

ஈண்டி யாவ னெறிபுனன் மூழ்கியன்
றாண்ட விர்ந்தியன் றுள்ளத னுலருள்
பூண்ட வந்தணர்க் கூட்டிப் புனைகலை
காண்ட கும்பொருள் காசினி யாடைகள். (௯௫)

கன்னி தான மிழைத்துக் கடவுளைப்
பன்னி யேத்திப் பணிந்தன னேவவன்
றன்னு தீவினை முற்றுந் தூரந்துவிட்
டென்ன ருஞ்சிவன் றன்னொடு மொன்றுற. (௯௬)

நல்வ ரந்தர வேண்டு மெனநனி
மல்ல லோங்கு தயரதன் மைந்தன்முன்
சொல்ல வம்முறை யேசுரர் மாதவ
ரெல்லை யின்றிய யாரு மியைந்தனர். (௯௭)

இனைய நின்வர மீச னருளினு
லனைய தாகவென் றுங்கவர் நல்கினர்
முனிவ வற்றைஞான் றும்முத லாகவே
தனைநி கர்த்துள தாமத் தலத்தினில். (௯௮)

செய்த நன்றி செகுத்தல்சே தாவினை
யுய்த லுற்ற கருவை யுயிர்த்துள
தைய றன்னைத் தடிதல்கள் ளுண்டிட
லெய்த ருங்குரு நிந்தை யிழைத்திடல். (௯௯)

கடவு ணிந்தை பிறர்மனை காமுறல்
படரு மின்னவை யாதிய பற்பல
விடல ருங்கொடு வெவ்வினை யாவையு
முடன கன்றொழி வுற்றிடு மொல்லையின். (௪0)

ஆங்கி லக்குவன் றானு மதன்பினர்
தீங்கில் காட்சிச் சிவப்பிர திட்டையைப்
பாங்கி னோடுதன் பேரினிற் பண்ணியங்
கோங்கு தீர்த்தமொன் றுண்டாக் கினனரோ. (௪௧)

பழிப்பி றீர்த்தத்தின் பாங்கரிற் பங்கியை
மழித்து மூழ்கியவ் வைக லுணவையு
மொழித்துச் சேவை யுஞற்றிட லுற்றவன்
விழுத்த குஞ்சிவன் றொல்புர மேவுவான். (௪௨)

மக்க ணானுமக் ஞடஙகதன்
சுக்கி ரீவன்மற் றேனையர் சோதியை
யொக்கத் தாமும் பதிட்டை யுஞற்றினர்
மிக்க வத்தலம் யாம்விழை வுற்றதால். (௪௩)

சோம நாதஞ் சுடர்மதிப் பூசனை
யாம திற்பணிந் தார்பின் னவனியிற்
றாமு தித்திட லில்லைத் தவத்தினின்
மாம னத்தினை வைத்த வசிட்டகேள். (௪௪)

**வேறு.**

தீதில்கே தாரஞ் சிறந்தகே தாரன் சிவன்றனைத் தாபனஞ் செய்த, தாதியா மதனி லநாதியைக் கங்கை யணங்குமுன் வணங்கியா தரித்துத், தாதவிழ் மலர்தூய் வழிபட லாற்றித் தவழ்திரைத் தொடுகடறன்னைக், காதல னாக விழைந்துள மகிழ்ந்து கலந்தன ணம்மிட மதுகாண். (௪௫)

புகரில்சீர் தழைத்து விளங்குவீ மேசம் புண்ணியத் தலமிக வதுதா, னிகரில்போர் வீம னருச்சனை யிழைத்த நீணக ரதுதனி னிறைந்த, மகிழ்வினற் கோதா வரிநறு மலர்தூ யிறைவனை வணங்குபு வழுத்தித், தகைமைசால் வரங்க ளினிதுபெற் றனள்காண் சாலவு மெமக்கினி தததுவே. (௪௬)

பழமலை பகரிற் பாய்புனல் யாண்டும் பரந்தொரு பற்றிலா துலக, முழுவதுங் காக்கப் பெறுபிர ளயத்தின் முகட்டினின் முடிவிலா திரு

க்குஞ், செழுவிய வீனைய தொல்கிரி தெய்வத் திருமணி முத்தநன் னதியில், விழுமிய தென்பாற் றடங்கரை யமர்ந்து விளங்குவ தத னிடை மேனுள். (சஎ)

விண்டொட நிவந்த வேங்கெழிற் குடுமி விளங்குறு பொதிய மால் வரைவாழ், தண்டமிழ் முனிவன் றுதவிழ் மலர்தூய்த் தலே வனைத் தொழுதுபார் சமமாய்க், கொண்டனன் மகத்தின் மாகமா தத்திற் கோதில்சீர் வெள்ளிவா ரத்திற், றெண்டிரை மணிமுத் தாற் றினிற் படிந்து செயத்தகு தானமுஞ் செய்யின். (சஅ)

அழிவில்பே ரின்ப வீட்டினை யடைவ னதனிமேலார் பிடியள வேனும், விழைவொடு மன்ன தானம தியற்றின் விளங்குவ னிருமை யும் விருப்பம், பழகிய வதற்கு வடதிசைத் தனிற்கோ பருப்பதந் திக ழ்வதப் பதியின், மழைமதர்த் தடங்கட் கவுரிநம் முடனே மகிழ்வினெ யாட்டொடும் வதியும். (சகூ)

ஆதிவா ரத்திற் பருவமென் பவற்றில் விடுக்கவோ டயனமா மவற்றிற், றீதில்வே ளைகளிற் றிகழ்வலஞ் சூழ்ந்து சென்னிதாழ்ந் தினிதுசே வித்தோ, ரேதரு முத்தி யடைகுவ ரன்ன மொருபிடி யுதவினு மதிக, மீதுநம் மிடங்காண் முக்குறும் பெறிந்த விருந்தவக் கிழமையி னுயர்ந்தோய். (ருo)

இலகுகா ளத்தி யென்றொரு தான மெங்கணும் புகழ்பெருத் துளதா, மலைபுனற் செழும்பொன் முகரியங் கரைக்க ணமர்ந்துள தாங்கதி லடைந்து, மலர்மிசைப் புத்தேள் வார்புனற் றோய்ந்து வரு ந்திமுன் னருந்தவம் புரிந்தான், கலியுக மதனி னற்குலத் தவருங் கடியதீ வினையுளோ ராவர். (ருக)

ஆங்கவ ரெவ்வா றுய்குவ ரெனவே யன்னவ னிறைவனே யலர் தூய்ப், பூங்கழ றொழுதா னருநிலை நாமப் புங்கவன் றனக்கெதிர் தோ ன்ற, வீங்கிதற் கினியோர் சூழ்ச்சிசொல் லென்று பின்னரும் வழி பட விழைத்தான், றேங்கமழ் பதுமத் திசைமுகன் றனக்குச் செப் பின மங்கணோர் செய்தி. (ருஉ)

மார்கழித் திங்கட் புதைபிரு டன்னின் மறிதிரைப் பொன்முக ரிக்கட், சீர்கெழு நானஞ் செய்துநற் றானஞ் செய்துபின் சினகரந் தன்னைப், பார்கெழு வலமோர் மூன்றும்வந் தெம்மைப் பச்சிளங் கிள் ளைமென் குதலைக், கார்கெழு கூந்தற் கயல்புரை தடங்கட் கவிரித ழுமையொடும் பணிந்து. (ருங)

இம்முறை மையின்மார் கழிமுத லாக வீரறு திங்கடோ றியைந்த, பொம்மல்கூ ரிருளின் றிதிபதி னோந்திற் பூசனை யிழைத்திடல் வருடத், தம்முடி வினில்வந் தனதுளம் விழைவுற் றதனோ மளிக்குது மென்றேஞ், செம்மலர்த் தவிசின் மேயவன் மறித்துந் திரையெறி தண்புனன் மூழ்கி. (௫௪)

இன்னதோர் விரத முஞற்றலுற் றேனென் றியைந்துள கருத்தினை யியம்பி, யன்னவா றொழுகி மரபுளி வழாம லனைத்தையும் விழைவொடாற றினனுற், பின்னர்நா மவனுக் குமையொடு தோன்றிப் பிரமனீ பேசிய படியே, யுன்னருங் கலியி னற்குலத் தவருந் தீங்குறு மொழுக்கமுற றுயர்வார். (௫௫)

என்றிவை சொற்றே யுமையொடு மறைந்தே மாதலா லெறிதிரை சுருட்டித், துன்றுவெண் முத்தஞ் சிந்துமா நதியிற றாங்கிருள விடுவய னங்க, ளொன்றிய வெதிபா தந்தமின் மூழ்கி யுவந்துதானம்புரிந் துருகி, மன்றவுங் கடவுட் பாய்த்தொழு திறைஞ்சின வலியபா தகமெலாந் தீரும். (௫௬)

கேத்திர வுபவா சமபுரிந் தங்கே கிளர்ந்தெழு முவகையா லிறையை, யேத்துபு பணிந்தோ னாகிடை யெய்தா னிம்மொழி யுணமை காணின்னும், வாய்த்திடு தலங்கள் பறபல வுள்ள மறறவற றுள்ளெமக் கிதுவே, சீர்த்தது சால வெண்ணிலா ரிதனிற சோநதெமை யருச்சனை செய்து. (௫௭)

தள்ளரும் பிறவித தளைதனை யெளிதிற றணநதுவீ டெய்தினாதலைநா, ளள்ளிலைச் சூலத் தடுதிறல் வடுக னருச்சனை புரிநதளப பரிய, தெள்ளுசீர் வண்மை படைத்தனன் பெரிதுஞ் செங்கதிர்க் கடவுளும் வழிபட், டொள்ளிய வொளியை யடைந்தனன் மதியு முஞறறினன் சீதள முற்றான். (௫௮)

பலபல மீட்டு மீட்டுரைப் பதுவென் பழமறை நூறபறுமறை போகிக், கலைமுழு துணர்நது முக்குறும் பெறிந்தோய் காளத்தி நாதனுநம்மை, நிலைபெற நினைநது நிகரில்பொன் முகரி நீர்படிந தாலயஞ் சூழ்ந்து, தலையினற் றொழுதோன் யாவையும பெறுவன் சநதைபுற றிடேலிது தன்னில். (௫௯)

விஞ்சைதான் விழையின் விஞ்சையு மேலாம் வீட்டினை யின்மேல் வீடு, மஞ்சொலின் மகவை விழைவுறி னதுவுங் கன்னியை விழைவுறி னவளும், வஞ்சநோ யின்மை விழையினுங் கதுவும வல

னுற விழைபினவ் வலனுங், தஞ்சமாம் வசியம் விழைவுறி னதுவுர்
தனமெனிற் றனமுமங் கடைவன். (கூ0)

அந்தணர்ச் செகுத்தோர் கள்ளினை யுண்டோ ரவர்முத லளப்
பில்பா தகருஞ், சநதநங் திருக்கா ளத்திநா யகனைத் தாடொழின்
முத்தியை யடைவர், பைந்தொடி யுமைக்கு நமக்குமங் ககரம் பக
ரொணு வுவகைபா லிக்குஞ், சிநதையிற் றுணிந்து நீயுமங் கெம்மைச்
செய்குதி யருச்சனை யென்றான். (கூக)

ஆகச்செய்யுள், கஉகூச.

## இருபத்தைந்தாவது

# விசேடபூசையுணர்த்தியஅத்தியாயம்.



தூய மறைநூல் சொற்றதறஞ் சொற்ற வதுதான் பாஞானி
யாய நினக்கு வேற்றுமைகா ணறம்பா வங்க ளிரண்டற்கு
மேய மறையே பிரமாணம் விளங்கும் வருண நிலையினருக்
கேயு மவ்வ வாசாரத் திறைவற் பூசித் திடல்வேண்டும். (க)

முந்து திதியிற் புனன்மூழ்கி மோன மடைநது கோமயத்தாற்
சிந்தை யுவந்து தைவந்து திகழா தனத்தைக் கற்பித்துப்
பந்த மகற்றுஞ் சிவலிங்கத் தாவா கித்துப் பாசிவனைக்
கந்த நறும்பூம் புனலாட்டிக் கருதற் கரிய வைந்தெழுத்தால். (உ)

தருமா தனத்துப் பதிட்டித்துத் தூவெள் ளரிசி தனைச்சாத்தி
மருமா மலர்கள் பலவிதத்தால் வனைநது தூப மணித்தீபம்
பெருமாற் களித்தின் னமுதருத்தி முக்காற் சூழ்ந்து பெரிதேத்திக்
குருமா மலர்த்தா டாழ்ந்துபய ஞென்றுங் குறியா தேயளிப்பின்.(ந)

மறையோற் றடிந்த தீங்ககலு மற்றிம் முறையே திதியிரண்டி
லிறையோன் வழிபா டினிதியற்றி யெள்ளாற் றூவெள் ளரிசியினுன்
முறையால் வனைந்திட் டற்றைவைகன் முழுது முணவை நீத்திருப்பி
னறையே பருகுங் கரிசகலு நாதன் கருணை நலத்தினால். (ச)

மூன்றாந் திதியி லம்முறையே முதல்வற் பணிந்து முழுமறைதேர்
சான்றோர்க் கினிய பாலடிசில் சால்பி னளித்தாற் றமனியத்தை
மான்ற மனத்தாற் கவர்ந்தகுற்ற மடியா நிற்குந் திதிநான்கி
லீன்ற டனினு மினியானை யினிய வழிபா டிழைத்ததற்பின். (ரு)

ஒலலுமமைவகையா லீதல்புரிந் துளனேற் குருதற் பத்தீதும்
வல்லே பொருவுந் திதியைந்தின் மற்றிந நெறியே வழிபட்டான்
மெல்ல வுடம்பாட் டாலணைதத வினேபோ யகலுந் திதியாறிற்
சொல்ல வரிய பரம்பொருளைத் தூய்தா மிழுதாற் சந்தனத்தால். (௬)

அதிக மாக வபிடேக மாற்றி னுபபா தகமகல்வன்
றிதியோ ரேழி லதிகமாப் புனிதத் தெண்ணீ ரினிதாட்டின்
வதியு நொய்ய வினைதணப்பன் மற்றிப் பரிசே திதியெட்டில்
விதியா லானந் தாட்டனுறின் வினைகள் யாவும் விட்டகன்று. (எ)

ஈச னுலகிற் சிவனுவன்மற் றிவ்வா றென்பான் றிதிதன்னில்
வாச நறுந்தே னுவந்தாட்டின் வாழ்வன் மூவேழ் சுற்றமுட
ஞசில் சிறப்பிற் றிதிபத்திற் குசையு மலரு மவற்றொடுபா
ரேசு திகழ்மென் றாீருஞ் சேர்த்துச் சிவனுக் காட்டல்செயின்.(அ)

அரிய ஞான மினிதடைவன் பதினோர் திதியி லடிசிலகன்
றுரிய வழிபா டுஞற்றலுறி னிறைவனுலக முவநதடைவன்
கருது மீரா றெனுந்திதியிற் கமழ்குங் கிலிய நறிபபுகை
பரிவோ டளிக்கி ன்றவொழுகும் பதும மேலோன் பதியடைவன். ()

முறையே பதின்மூன் றுந்திதியின் முதல்வன் றிருமே னியைமுழுது
நறிதாஞ் சீதச் செழுஞ்சந்தக் குழம்பாற் பொதிந்து நனிவணங்கி
னுறுபா வங்கள் யாவையும்போ மீரேழ் திதியெள் ளுடனரிசி
வெறியார் கொழுந்தே மலர்வளைந்து விழைந்து வழிபா டாற்றியபின்.

குலபா மறையோர்க் கினிதருத்திற் கோவி னுலக மேவிடுவ
னலமாம் பதினைந் தினினறிய மலர்தூய்ப் பூசை நனியாற்றிப்
பலமா மறையின் றாயோரைப் பரிவி னூட்டி னிம்மையிலே
நிலமா தரிப்பச் செல்வ மெய்தி நிதிசே ருலக நண்ணிடுவன். (கக)

வேறு.

தலைநாளிற் சங்கரற்கு வழிபா டாற்றித் தகுமறையோர்க் கருத்தின்மருத் துவர்க டம்மூர், பலஞுகும் பாணியிலே யவ்வி ரண்டும் பண்ணுனுறி னமனுலகம் பதிவ னன்றே, னலஞய கார்த்திகையிற பழைய பான்மை நன்கியற்றிற் செந்தழலி னகாஞ் சேர்வன், வலஞய வுரோகிணியி லிவற்றைச் செய்யின் மலரவன்ற னுலகினிது மருவு வானுல். (கஉ)

மான்றலைநா ளருச்சனையு மறையோர்க் கூனும் வனைதுகிலு மகிழ்ந்தளிக்கின் வயங்குஞ் சோதி, யான்றமதி புலவைடைவ னுதி

ரைக்க ணம்முறைசெய் திடின்ஞான மடைந்தி றத்த, ரென்றலிலாப் பரசிவத்தை யடைவ னின்ன தூயவறம் புனர்தத்திற் றுணிந்து செய் தோன், சான்றவரெண் ணதிதிபத மடைந்து பின்னர்த் தனிமுத லாம் பரசிவனைச் சார்வன் றானே. (கங)

பூசநாட் பூசையிழைத் தந்த ணாளர் போசனமுஞ் செய்விக்கிற் போதந் தன்னுன், மாசில்வியா ழத்தினெடு நிகரே யாவன் வரஞ் முறையா யிலியநாள் வழிபா டாற்றி, வீசுபரி மளநறுந்தண் புனல் வேட் டோர்க்கு விழைந்தளிக்கின் விடமுமிழ்வெள் ளெயிற்றுச் செங் கட், காய்சினவெம் பொறிப்பகுவாய்க் கவைநாச் சூட்டுக் கணபணப் பாந் தளினுலகங் கைக்கொள் வானல். (கச)

நன்மகத்தி லருச்சனையை யாற்றி யெள்ளு நானழி யேனுமத னிரட்டி யேனு, மன்னதன்றிப் பதக்கேனுந் தூணியேனு மளித் திடிற்றென் புலத்தவர்வா மூலகிற் சேர்வன், றென்மையதாம் பூரத் துப் பூசை யாற்றித் தூயமறை யோர்க்கியன்ற தளித்தல் செய்யி, னுன்னரிய பகனுலக மினிது சேர்வ னுத்தரத்திற் பூசையுள்ள முவ ப்போ டாற்றி. (கரு)

மழவிளங்கன் றொடுமெழுகு வாய்த்துத் தீம்பான் மடிசுரந்த மணிமிடற்ற புனிற்றுச் சேதாப், பழமறையோர்க் களிக்கின்வெயிற் கற்றை வீசிப் பாயிருள்சீத் தெழுபரிதி யுலகஞ் சேர்வன், விழுமியசீ ரத்தத்தி லியன்ற தானம் விழைந்துதவின் விரிசுடர்வெய் யவனூர் சேர்வன், றெழுதகைய சித்திரைநாட் பூசை யாற்றிச் சோதிமணி விரலாழி தானஞ் செய்யின். (கசு)

வானவர்கம் மியனுலகிற் சேர்ந்து பின்னர் மாசில்கிரீ சன்றனை யே மருவா நிற்பன், பான்மைதிகழ் சோதிநாட் பூசை யாற்றிப் பன் மறையோர்க் கினிதன்னம் பரிந்து நல்கின், மேன்மைதிகழ் வாயுவுல கடைவுற் றின்ப மிகமேவி வீற்றிருப்பன் விசாக நாளிற், றனமா நிதியளித்துப் பூசை செய்தோன் றகுமிந்தி ராக்கினியின் பதத்திற் சார்ந்தே. (கஎ)

ஒளியுமிழ்தே சினின்மிகுத்துள் ளுவந்து வாழ்வ னுவந்தனுடத் தருச்சனையை மாபோ டாற்றிற், களிசிறந்து விமானமிசை யூர்ந்து சென்றே கவின்றெழுமித் திரலோகங் கைக்கொள் வானற, றெளி வுறக்கேட் டையில்வணங்கி மாட தானஞ் செய்திடினுங் கவனிநீய செழுமென் றேறற், றுளிதுளித்து மணிச்சிறைவண் டார்த்துஞ் செம் பொற் றேடவிழ்கற் பகநீழ லின்பந் துய்ப்பன். (கஅ)

மூலநா ளருச்சனையை முதல்வற் காற்றி முதியமறை யோர்க்
குணவு முயன்று நல்கிற், சாலவே நிருதியுல கதனைச் சேர்வன் றகு
பூரா டம்பூசை தானுஞ் செய்து, சீலமா மறையோர்க்கு மியன்ற நல்
கிற் சேர்வனம துலகினையுத் தாராட நாளின், மேலதாம் பூசையிழைத்
தரிசி யேனும் வேறியா தேனும்வே தியர்கட் கீந்தால். (க௯)

மன்றல்கமழ் நறைபொழிபூந் தவிசின் மேய மறையவன்ற னுல
கெனினு மங்கண் வானோர்க், கொன்றியகம் மியனுலக மெனினுஞ்
சேர்வ னோணநா ளருச்சனைசெய் துணவு தன்னை, நன்றுமுவந் தந்
தணர்க்கு நல்கிற் செங்க ணாரணன்ற னுலகடைவ னவிட்ட நாளின்,
முன்றிகழ்பூ சனையாற்றி னெண்மாக மொழியும்வசுக் களினுலக
முறையிற் சேர்வன். (உ0)

மிகமகிழ்ந்து சதயநா ளருச்சித் தேத்தி மென்றுகிறு னிருநிதி
தான் வேதம் வல்லோர்க், ககனமர்ந்து தானமினி தளிக்கின் யார்க்கு
மருள்பொழியும் வருணனுல கடைவ னன்பின், முகனமர்ந்து பூ
ரட்டா திக்குப் பூசை முடித்தக்கா லொருபாதர் மூதூர் சேர்வன்,
றிகழ்தருமுத் தரட்டாதி பூசை தானஞ் செய்யினகிப் புத்தினிய
தேவூர் சேர்வன். (உக)

விளங்குமிரே வதிநாளிற் பூசை யாற்றி வெண்டும்பாற் புனிற்
றுவை வேத வாணர்க், குளங்குளிர வழங்கினிரு பேரந்து நாளு முலகு
விளக் குறும்பரிதி பதத்தைச் சேர்வன், றுளங்குகதிர் ஞாயிற்று வார
ந்தன்னிற் சோதிமணி யிழைத்தசின கரத்தைச் சூழ்ந்து, வளர்ந்த
மகிழ் சிறந்திறைவற் றொழுது போற்றி மாசிலா மறையவர்க்கு மாபி
னீந்து. (உஉ)

காழகில்செஞ் சந்தொடுகுங் குமச்சே றட்டிக் கதிர்முத்து வட
நகிற்குக் கனக்கப் பூட்டி, மாழைபொண்கண் மைமெழுதி நறுமென்
கூந்தல் வண்டாற்றுந் தண்டொடையல் வனைந்து வாய்ப்பச், சூழு
மணி மேகலைபொற் சிலம்போ டார்ப்பத் துடிமருங்கு றுவளவிளந்
தோகை போன்று, கேழ்கிளர்மென் றூவியனப் பெடைபோன் றெய்
திக் கேடில்சீர்ச் சிவயோகி தன்னைக் கிட்டி. (உ௩)

ஆக்கவனை யின்பநல னுகர்வித் தேல வகமகிழ்வித் தவள்
ம்பே றதனைக் கேட்டி, தீங்கிலுயர் கொலைகளவு கள்ளு
குவணம் மடியவர்க்குச் சிறந்த பூசை, பாங்கினொடு செய்யினுமிப்
பால நீக்கிப் பலரும்வணங் குறமேன்மை படைத்து வாழு, னோங்கி

யனப நுகர்ந்துமறு மைககண் வெய்யோ னுறைழ்விமா னத்துமையா
ளுலகிற் சேர்வள். (உ௪)

நுண்ணறிவிற் பலகலையுந் தேர்ந்து வல்ல நுடங்கியவெண் புரி
நூலின் மார்பன் றன்னை, நண்ணியுவந் தருச்சித்து நவையில் செம்
பொ னல்கியறு சுவையடிசி லருத்தி நல்ல, பெண்மையினிற் சிறந்த
பொது மகளி னோடும் பெரிதின்ப நுகர்ந்துவகை பெறச்செய் வித்
தோ, னெண்ணரிய தீவினைப்பூட் டறுத்து நாளு மீறில்பெருஞ்
செல்வமெய்தி யினிது வாழ்வன். (உரு)

வெண்ணிலவுக் கதிர்கான்ற மதிவா ரத்தில் விழைந்துவழி பாடி
யற்றி வேத வாணர்க், கொண்ணிதிய மியன்றதளித் துள்ளோன்
வெம்போ ருடற்றமரி லடுபகையை யொறுப்ப னுண்மை, பண்ண
வனைச் செவ்வாய்வா ரத்திற் பூசை பரிந்தாற்றித் தானம்பா லித்தோன்
போரி, னண்ணலரை வென்காண்பன் புதனிற் பூசை நாதனுக்கு நன்
கியற்றிச் சிவயோ கிக்கு. (உ௬)

தயிலமிடு வித்துத்தண் ணறுநீ ராட்டிற் றன்னுடல மின்பமெய்
தித் தழைவன் வாழ்வி, லுயர்வியா ழத்திறைவற் குவந்து பூசை யுஞ
ற்றுபுஞா னிகட்குமுண வுதவல் செய்யி, னயர்வரிய சிவஞான மடை
வன் வெள்ளிக் கருச்சித்துத் தானமுமந் தணர்க்கு நல்கின், மயிலிய
லின் வந்திக்கு மகவுண் டாகு மனத்துவிழைந் தவையனைத்தும் பெறு
வன் மாதோ. (உ௭)

மந்தவா ரத்திறைவற் பூசை யாற்றி மறையவர்க்கு மினிதளிக்
கின் மன்னர்க் கேற்பச், சிந்தையுவப் புறவொழுகி யிறில் செம்பொன்
சேர்வன்வெதீ பாதத்தி லடிசி லேனு, முந்தியகன் னிதியேனு மரிசி
யேனு முயன்றளித்து முதல்வனுக்குப் பூசை செய்தோ, னந்தமிறீ
வினைமுழுதுந் தணந்து தூய வமருலக மடைந்துமுத்தி யதன்பின்
சேர்வன். (உ௮)

மீண்டுமீண் டுரைப்பதெவன் சிவனைப் பூசை விழைவினொடும்
புரிகுவனேன் மேலோ னல்லாற், றீண்டரிய கீழோனே ருனு நீங்
காத் தீயகொடும் பவந்தீர்வன் றேவன் பூசை, யீண்டுமகிழ்ந் தெவ
னிழைப்ப னன்னோன் சால வின்னுத நிரயம்பா ராம லின்பம், பூண்
டமலன் றனையடைவன் பொருவில் வேள்வி புரிதவங்க ளறவுபெர்றி
யடக்க மெல்லாம். (உ௯)

நின்னுடைய சிவபூசைக் கொப்ப வல்ல நீயிதனைத் திடமாக வுணர்தி யென்று, மின்னுகதிர் விட்டெறிக்குங் குழவித் திங்கள் வெண்டிரைபாய் சுருட்டுதெய்வ விரிநீர்க் கங்கை, பொன்னிதழித் தண்படலை கற்றைச் செய்ய புன்சடையின் மிலைந்தசெம்பொற் பொருப்பு வில்லி, மன்னுமருந் தவவசிட்டற் குணர்த்திப் பின்னர் மாசி றிரு வெண்ணீற்றின் மகிமை சொல்வான். (௫0)

ஆகச்செய்யுள், ௧உ௬௫.

இருபத்தாறுவது

# திருவெண்ணீற்றினமகிமைகூறிய அத்தியாயம்.



பன்ம மென்பது தூய்மையாய்த் தலைமையாய்ப் பகரி
னுன்ன ரும்பர ஞானவா னந்தமா யுளதாற்
றுன்னு பாவமா வற்றையுந் தூரந்துபர்ச் சனஞ்செய்
நன்மை யானனி பவித்திர மளித்திடு நலத்தால். (௧)

பெரிதும் பன்மமென் றதன்பெயர் பேசிடப் பெறுமாறு
சுரிபங் கிக்குறுந் தாட்பெரும் பூதத்தாற் சுடர்விட்
டெரிசெங் குஞ்சிவெள் ளெயிற்றுநெட் டலகையா லிருண்ட
வரையின் மேற்றவா ளரக்கரால் வன்றுயர்ப் பிணியால். (௨)

ஆய வின்னல்க ளகன்றிட விரக்கையாற் றிடலாற்
றீய பல்பவந் தீர்ந்திட விரக்கைசெய் திடலாற்
றூய தாமதற் கிரக்கையென் றொருபெயர் சொல்வ
ராய்வு றின்மிக விளக்கலாற் பசிதமென் றறைவர். (௩)

கடிய பாவங்க ளியாவையுங் காரமாக் குதலா
னெடிது மன்னதைக் காரமென் றுரைப்பர்நீ ணிலத்திப்
படிவி ளங்குமிப் பன்மவுற் பவம்பகுத் துணர்ந்தே
யொடிவி லன்பொடுந் தரித்திட லுத்தம மாமால். (௪)

அனைய வுத்தம வெண்பொடி யாக்கினே யத்தோ
டினிய சௌமிய மென்றிரு வகைத் தாகும்
வின்வி னவ்விரண் டும்மறி வின்மையை விலக்கிப்
புனித ஞானம தளித்திடும் புகன்றிடக் கேண்மோ. (௫)

மற்றி வற்றினு ளாக்கினே யம்மிரு வகைத்தா
முற்றி டுங்கவு ணம்மொரு நால்வகை யுடைத்தாம்
பற்று மக்கினி கோத்திரந் தன்னிலும் பயனுய்
முற்றி டும்விர சாமகந் தன்னிலு முறையால்.

உள்ள தாக்கினே யந்தின முஞற்றுமோ மத்திற்
றள்ள ருந்தவ வருணிசெய் சமிதையந் தழலிற்
றெள்ளு சீர்திக முட்டியில் விளங்குசெந் தீயிற்
கள்ள லர்ந்தகாட் டழலிடை யுள்ளது கவுணம். (எ)

இவற்று ளக்கினி கோத்திரத் தியன்றவெள் ளியநீ
றுவப்பின் மூவகைக் குலத்தவர் தமக்குரித் தாகு
நிவப்பு றும்விர சாமகத் தெழுந்தவெண் ணீறு
மவர்க்கு ரித்தென லாகுமுன் னறைந்ததே போல. (அ)

தினமு ஞற்றிடு செந்தழ லோமவெண் டிருநீ
றனைய வில்லறத் தொழுகுறு மவர்க்குரித் தாகு
மனமு வந்துள சமிதையந் தழற்பொடி வருணி
புனைய லாகும்வே தியர்கட மட்டிலிற் பூத்த. (கூ)

தவள நுண்பொடி பின்னவர் தரித்திட லாகுந்
திவளும் வெவ்வனத் தடுதழற் பிறந்தவெண் டிருநீ
றவர்க ளன்றிய குலத்தவர்க் கணிந்திட லாகு
மிவைய ணிந்திடற் கியைந்துள மனுவினை யினிக்கேள். (க0)

ஆய வக்கினி முதலிய வதர்வண மாறு
தூய சீர்கொள்சா பாலமே முிம்மனுச் சொற்றுத்
தீய பாவம்விட் டகன்றிடச் சிந்தையு ணிறைந்த
நேய மாய்முழு நீறுபூ சுகநெறி நின்றோன். (கக)

தயங்கு றுந்திரி யாயுட மந்திரத தானும
வயங்கு சீர்கொண்மே தாமனு வானுநல் வருணி
நயங்கொ ளுந்திரி புண்டரந் தரிக்கஞா னத்தா
லுயர்ந்தி யாவையுந் துறந்தவன் றரிக்குமா றுரைப்பாம். (கஉ)

கூற ருந்திரி யம்பக மனுவினாற் குடிலை
யேறு மைந்தெழுத் தானுதன் மார்புதோ ளிவற்றுந்
தேறி டுந்திரி புண்டர மஞ்சமந் திரத்து
நீறு பூசியே தரிக்கவே ணியர்திற நிகழ்த்தின். (கங)

ஆதி தன்னின்மல குடிலையா யந்தத்து னமவாயத்
தீதில் சீர்நடுச் சிவமெனு மனுவினைச் சேர்த்திட்
டோத ருந்திரி புண்டரந் தரிக்கமற் றெழிந்தோர்
நீதி யாற்றிரி புண்டர மும்முழு நீறும். (கச)

மனுவை யின்றியே வனைகவில் வான்முறை செய்யி
னனையர் தங்களுக் ககலுமைம் பாதக மவற்றோ
டினைவ தாமுப பாதக முங்கெடு மிதுமெய்
நனிது றந்தவன் றனக்கிது ஞானத்தை நல்கும். (கரு)

வனத்த னுக்குமா விரத்தியை வழங்குறு மனையை
நினைத்த வன்றனக் கறங்களு நீதியு நிறைக்குந்
தனித்தி டும்வரு ணிக்குநான் மறையுணர் தகுதி
யனைத்து நல்குறும் பின்னவற் கினிதற மளிக்கும். (கசு)

மற்றை யோர்களுக் கொழித்திடும் பாவமிவ் வண்ணஞ்
சொற்ற பான்மையி லணிந்திடான் றுமொரு துணிவைப்
பற்றி வேறொரு பரிசினாற் றரிப்பவன் பாரி
லுற்ற சென்மமும் பலனுறான் மலப்பன்றி யொப்பான். (கஎ)

யாவர் தாஞ்சில ரிம்முறை தரித்திடா திகழ்ந்து
தாவில் சீர்மறை சாத்திரஞ் சொல்லிய தரும
மேவி யாற்றினு மதன்பய னில்லைமிக் குயர்ந்த
றாவெண் ணீற்றினை யொருவனெற் றியினிடைத் தோன்ற. (கஅ)

அங்கு நோக்கிமற் றெவன்வெகுண் டானவன் றன்னை
யிங்குச் சங்கர சாதியென் றறிகவிங் கீற்றைப்
பொங்கு மன்பினிற் றரித்துளான் றனைக்கண்டு பொருமை
தங்கி யாங்கவ னந்தண னிகழ்ச்சிகள் சாற்றின். (கக)

அன்ன வன்றனைப் பின்னவற் குப்பிறந் தவனென்
றுன்னி யோர்கவொண் டவளநீற் றினையுவந் தணிந்தோன்
றன்னை யேபுடைத் தாளெவ னன்னவன் றன்னை
இந்நி லத்தினி னீசனென் றேயறிந் திடுக. (உ0)

எனையர் தாஞ்சிலர் வேதநூல் வழியினு மிலகப்
புனையும் வெண்டிரு நீற்றினு மன்பின்றிப் போவ
ரனைய ரன்னையர் வயிற்றிடைக் கருவினு ளுறுகுஞ்
சனன நாண்முத லுள்ளநாள் வரையினுஞ் சால. (உக)

இழைத்த நற்றவ நல்லற னின்றியே யிழப்பார்
தழைத்த சோதிவெண் ணீற்றினில் யார்சிலர் தமக்குப்
பழிப்பி ருந்திடு மவர்கள்வே தியரெனப் படினும்
பிழைத்த தாகியே யிழிபிறப் பாமவர் பிறப்பு. (உஉ)

எவனொ ருத்தன்ரு னீசனே யென்னினு மன்றி
யவனி தன்னிடைப் பின்னவ னென்னினு மவன்பாற்
சிவனி லாஞ்சனை யாகிய திருவெண்ணீற் றினைக்கண்
டுவகை யாவனோ வாங்கவ னேயுயர் மறையோன். (உ௩)

யாவர் நீற்றினை யணிந்தவர்க் கண்டினி துவப்பார்
தேவர் மாதவ ரவர்தமைப் பூசிப்பார் தினமு
மோவு றாதவ ருணர்ந்துள கல்வியே கல்வி
மேவி யன்னவ ருஞற்றிடும் வேள்வியே வேள்வி. (உச)

தழைய வாங்கவ ராற்றிடுந் தவங்களே தவங்க
ளொழுகி மற்றவர் நடாத்திடு மொழுக்கமே யொழுக்க
முழுது நீறணிந் தவன்றனை முற்படக் கண்டு
விழைகு வான்றனை விண்ணவர்க் கிறைவனும் வியந்து. (உரு)

உவந்து தாள்பணிந் துருகிநின் றுடுவ னுடனே
நிவந்த காட்சிகொ ணிலாக்கதிர் கான்றவெண் ணீறிட்
டவன்றின் னுதது தின்னினுந் தினத்தக்க தனுவே
கவர்ந்த வன்னதாற் பாவமு மில்லைகாண் குறினே. (உசா)

இனைய நீற்றினுக் கிறையுநீ யையுற வெய்தேல்
புனலின் மூழ்கியே யாவன்வெண் ணீற்றினாற் பொதிய
நனிமெய் பூசுவ னன்னவன் வருணியா னுலு
மனையில் வாழ்பவ னென்னினும் வனத்தனே யெனினும். (உஎ)

அளவில் பாவம்யா வையுந்தணந் தருங்கதி யடைவன்
றெளியும் வேதிய னக்கினி கோத்திரத் திருநீ
றொளிர வேதின மூழ்குக யதியதை யுஞற்றின்
வெளிய தண்புனன் மூழ்குகின் றதனினு மேலாம். (உஅ)

அறலின் மூழ்குறி னதனிடை யுயிர்வதை யாகு
மறியு மப்புனன் மாயையென் றறிகவம் மாயை
நிறையு யிர்க்குவன் னிகளமென் றுணர்கவந் நிகளம்
பறிய டத்திரு நீற்றுநா னஞ்சொலப் படுமால். (உகூ)

மைய லைத்தெறு மற்றநு னற்புத நம்மாற்
செய்ய நாவினுற் சொலவரி தாகுமித் திருநீ
றுய்ய நன்கணிந் தேகரை யேறிடா துலகோர்
செய்யு மேனைய வறங்களிற் றேம்புவர் சால. (கo)

உனக்கு நாமினிப் பலபட வெனைத்தென வுரைப்பேந்
தனக்கு நேரிலாத் தவளநுண் பொடிதரிப் பதுவே
யனைத்து ளுந்தலை யாகிய தருமதா ரணமா
நினைத்து வைகலுந் தரித்திடி னேடித்த லின்றி. (கக)

வல்லை யிற்பா ஞானபோ தம்வரும் வனைவோன்
சொல்ல ரும்பெரும் பாவியேற் பாவங்க டொலையு
மில்லை யையுற வித்திரு நீற்றினுக் கெதிராச்
சொல்ல வேறொரு பொருளுமற் றுண்டுகொ றாயோய். (கஉ)

புரத்தல் காரண மாகவு நன்மையின் பொருட்டும்
பரித்த தூய்மையி னேதுவே யாகவும் பண்டு
கருத்தி லெண்ணிநா மிதனையுண் டாக்கினங் கவுரி
தரித்தி டும்படி யவட்கினி தளித்தனந் தவத்தோய். (கங)

இங்கி யாவன்மற் றிதனைநம் வடிவென வெண்ணித்
தங்கு மாக்கினே யத்திடைச் சார்ந்ததே யெனினு
மங்க தல்லது கவுணத்தி லாயின தெனினும்
பொங்கு மன்புடன் மனுவினுற் புனைவனே வன்றன். (கச)

பன்ன ருஞ்சிவ ஞானமும் பெற்றுயர் பதமா
முன்ன ரும்பர முத்திபு மடைவனென் றுரைத்தான்
பொன்னின் வார்சடைப் புனிற்றிள மதிதவழ் புனிதன்
பின்ன ரக்கமா மணியினை தியல்புமே சுவனுல். (கரு)

ஆகச்செய்யுள், கஅடுo.



இருபத்தேழாவது

# உருத்திராக்கமகிமையுரைத்த அத்தியாயம்.

அருந்தவ வரம்பு கண்டசீர் வசிட்ட வறைகுதுங் கேண்மதி யன்பிற், றிருந்திய வக்க மணியினை யிலகு சேயொளிப் பொன்னில் வெள் ளியினிற், பொருந்துறப் பொதிந்து சிகையினிற் காதிற் புரிந்த

மூந் நூலினிற் காத்தி, லூரந்தனின் மிடற்றி லிவற்றினு ளொன்றி லுன்னருங் குடிலையை யுரைத்தும். (க)

'அன்றியைந் தெழுத்தா லாயினு மல்ல தான்மமந் திரத்தினு லெனினு, மொன்றினை நினைந்தாங் குணர்வுளோன் றரிக்க வுவந்திது தரித்திடி னுவம,'மின்றிய சிவஞா னம்பெறு வதனுக் கேதுவா மிரு ஞ்சிகை தரித்த, பொன்றிகழ் கடவுண் மணியினை யரிய பொருளெ னும் பரபத வடிவா. (உ)

சிந்தனை செய்க செவியணி மணியைச் சிவமொடு சத்தியாத் தெரிக, கந்தர மணியைக் கலைமக ளலது கனலியென் றெண்ணுக மூந்நூ, றந்தணி மணியைக் கடவுளர் யாருந் தாமென வெண்ணுக வருணி, மூந்துறு நால்வர் தமக்கும்வே திபர்கண் முதலிய நாற்குலத் தவர்க்கும். (ந)

மாபினில் விதித்த மனுவினைப் புகன்று வனையலா மிம்முறை வனைந்தோன், விரிசுட ரெறிக்கு முருத்திர வடிவாய் விளங்குவ னையு றல் வேண்டா, பரிவொடுந் தரித்த வனையவன் றன்னைப் பார்க்கினுங் கேட்கினும் பற்றுக், கருதினுந் தரித்தோன் றன்னைமோந் திடினுங் களைகுவன் றீவினை யனைத்தும். (ச)

மொழியல வற்றை மொழியினு நாளு முயன்றுடல் வருந்திட விழைக்குந், தொழிலிடைப் பயின்று துவளினுங் கவலை தூப்பவன் றுயரொடுஞ் செல்லா, வுழியினிற் சென்று தெருமா லுறினு மூத்திர முய்த்திடா விடத்தில், வழுவுற விடினு மற்றிது வனைந்த மாட்சியான் வல்வினை முழுதும். (ரு)

துறப்பன்மற் றனையோ னகமகிழ்ந் தியாண்டுத் துய்ப்பினு மாயி டை தூய, சிறப்புடைப் பரமன் றுய்த்தமை தா ரிடமாந் தெரிந்தவன் பருகிய யாவு, மறக்கட லனையான் பருகிய வவையா மன்னவன் மோந் தவை யனைத்து, மிறப்பொடு பிறப்பு மில்லவன் மோந்த வென்னலா மன்றிமற் றிலவே. (சு)

ஈங்கிது தரிக்க வுளத்திடை நாணம் யாவனுற் றிருந்தன னவன்மூற் றீங்கதி னின்று நீங்குத லில்லைச் சீரிய விதுபுனைந் தவனை யாங்கெதிர் நோக்கிப் பழிப்பவன் யாவ னன்னவன் சங்கா சாதி பாங்குருத் திரர்கள் யாவரு மிதனைப் பரித்தலாற் பானடி யடைந்தார்.

எண்ணருந் தவத்து முனிவரர் யாரு மினிதுவந் திதுபுனைந் ததனு, லுண்மையி னுயர்ந்த சித்திக ளடைந்தா ருலகெலா முதலியு

பிரமன், வண்மைமே சரக்க மணியினை வணைந்து மகிழ்பிர மத்துவ
மடைந்தான், றிண்ணிய விதனைத் தரிப்பது தனிலுஞ் சிறப்பெவ
னுடலெடுத் தவர்க்கே. (அ)

விழுமிய விதனைப் புனைந்தவன் றனக்கு மென்றுகி லாயினு மன்
றிக், கெழுமுறு நிதிக ளெனினும்யா தெனினுங் கிளர்வுறும் விழை
வுட னளித்தோ, னழிதகு பாவ முழுவது மொருவி யழிவிலாச் சிவ
னுல கடைவன், வழுவில்சீ ரிதனைத் தரித்துளான் றன்னை வருதி
யென் றழைத்துள மகிழ்ந்து. (கூ)

உயிர்த்துள விருவர் பலிகரு மத்தி னுறுசுவை யடிசினுட் டிய
னே, யயர்ப்பிலா வவன்ற னன்னையும் பிதாவு மகமினி துவப்பராங்
கவனும், வியப்புற மகிழ்ந்தென் புலத்தவ ருலக மேவுவன் மற்றித
வேய்ந்தோ, னயத்தகு பதத்தை மண்ணுநீர் பருகி னன்குவாழ்
குவன்சிவ னகரில். (க0)

ஆதரித் திதனை மாலிகை யாக வங்கையிற் கடகமே யாகத், திதி
ல்சீர் மற்றை யவயவத் தணியுஞ் செறிசுடர் மணிக்கல னாகப், பேதமற
றணிந்தா னுருத்திர வடிவம் பெறுவன்மற் றிதுதனை வாளா, யாதொரு
தலத்தி லாயினு மனுவோ டென்னினு மனுவிலா தெனினும். (கக)

பாவகத் தோடு கூடியு மன்றிப் பாவக மின்றியும் பரித்தோன்,
மேவுநால் வருணத் துள்ளவ னேனும் வேறுளா னென்னினும்
வெள்கா, தோவறத் தரித்தோ னுடற்றுபா வங்கள் யாவையும் வல
விரைந் தொருவி, மேவரு ஞான போதமுற் றிடுவன் மற்றிதன் மகி
மையை விளம்பின். (கஉ)

ஏலவு மிறும்பூ திதுசொல முடியா தாதலா லிதனையெப் பொழு
துஞ், சாலநீ தரித்துக் கொள்ளுதி முன்னுட் சாதிசண் டாளன்மற
றொருத்தன், மேலதாம் விடமன் வைகலோன் றினுக்குண் மிகுதக
பல் லாயிரம் பசுவை, நாலுணர் பல்லா யிரமறை யோர்க டங்களைச்
செகுத்துளா னெய்தின். (கங)

அன்றியு மளப்பி லறக்கொடும் பாவ மனைத்தையு மிழைத்தன
னிழைத்து, நன்றுறு மக்க மணிதரித் ததனு னவிலரும் பாவங்க
ளெல்லாந், துன்றிய வனத்துச் சுடுதழற் பட்ட தூயவெண் பஞ்சு
போற் றொலைவுற், றின்றியே போய வன்னவ னுயு மிறுதியி லடை
தெம னூதர். (கச)

நடுவன துலகிற் கொண்டுபோ யவனை நடுவன்முன் விடுத்தனர் நடுவன், கொடியவன் றன்னைக் கண்ணுறு வொன்று கூறினன் குலீன கேட் குதியா, னெடுநில வரைப்பி லளப்பிலாத் தீங்கு நீயிழைத் துள்ளன வனைய, கடியவல் வினையின் பலனையா நன்கு கணித்தறிந் தவற் றினுக் கியைய. (க

ஒறுத்திடுந் தண்டத் துன்றனை விடுதற கொன்றுகின் றேமுலம் யாதாற், பொறுத்தன மெனிற்கே ளுருத்திர வக்க மணியைநீ புனைந்தபுண் ணியத்தாற், செறுத்திடு பாவ முழுவதும் வெந்து தீர்ந்தன நீயினித் தேவும், பெறறகரி தாமிவ் விமானமேற் கொண்டு பிஞ்ஞக னுலகிலே கென்முன். (கசு)

பின்னையங் கவனும் பரிதியங் கடவுட் பேரொளி பெருகியே யாண்டுஞ், சென்றிடு விமான மூர்ந்தர மகளிர் சீரிய வாடல்பாடலினே, டொன்றிய வான துந்துபி முழக்கோ டெப்பொடு சூழ்ந்தெதிர் வழுத்த, மன்றவு மகிழ்துங் குள்ளமோ டென்று மறுவில் சீர்ச் சிவபுரம் புகுந்தான். (கஎ)

இன்னதன் மையினு லிம்மணி தன்னை யாவருந் தரித்திடல் வேண்டு, மன்னவர்க் கிதுவே போகமும் வீடு மளித்திடு நாமுநீ தணிவோ, மென்னவே சொற்றனன் மலையா சுயிர்த்த விலங்கிழை பாகனு மிறையோன், பின்னரும் வசிட்டன் பெரிதுள முவப்பத் தாரகத் துண்மைபே சுவனுல். (கஅ)

செய்யுள், கஙௗஅ.

இருபத்தெட்டாவது

# பிரணவமகிமையுரைத்தஅத்தியாயம்.

ஓரெழுத் தாகிய வோமெ னும்பதந்
தாரக மென்னவுஞ் சாற்ற லாமது
சீர்திகழ் பிரணவ மென்றுஞ் செப்பலாங்
கூரிய மறைமுடி யுணர்ந்த கொள்கையோர். (க)

தினந்தொறும் விசேடமாச் செபிப்பர் காணதை
நினைந்திடி னிருடிமுன் னிகழ்த்து மேழினை
மனந்தனில் வகைபெற வகுத்துக் கொண்டுபின்
கனித்துரு வேற்றுதல் வேண்டுங் கற்றுளோர், (உ)

செவித்திடு மதற்குள தியானந் தேசிக
னுவப்பொடு முணர்த்துப தேச வுண்மையிற்
றவப்பய னுணர்ந் துளத்திற் றங்கிடக்
கவற்சிலை விடுத்தவர் கண்டு கொள்கவே. (௩)

யாவைமற் றுலகினு மியன்ம றைக்கணு
மூவகை மூவகை யாமொ ழிந்திட
லாவன வவையவை யரிய தாரகத்
தாவில்சீர் வடிவென வுணர்தி சாலவும். (௪)

உலகினு மறையினு மொன்ற தாகவே
யிலகுமே காந்தத்தில் யாது தோன்றுவ
தலகில்சீ ரன்னது மனைய தாரக
நிலவிடும் வடிவென நினைந்து கோடியால். (௫)

ஆதலாற் றாரக மழிவின் றாகிய
தீதுதீர் பரசிவ மென்னத் தேறுதி
காதலாம் பலபல காரி யங்களின்
சாதனத் தினிலுணர் பொருளின் றனகணும். (௬)

அறிதரப் பொருளினு மையு றும்படி
செறிதரு பொருளினுந் திடங்கொ ளப்படும்
பிறிதொரு பொருளினும் பேதம் பேதமா
யுறுவன வாகியே யுறுபொ ருட்கணும். (௭)

எல்லையி லுயிரெலா மென்று மோமெனச்
சொல்லுவ ஞானவா னந்தத் தோற்றமா
யொல்லுறு சிவமுமோங் காரங் கட்புலப்
பல்பொரு ளுருவமு மதனின் பாலவே. (௮)

மொழிகளும் வன்னமு முழுது மன்னதே
கழிதரு காரண காரி யங்களா
லொழிவிலாக் கேவலப் பொருளி லுண்மையா
மழிவிலா வியல்பினை யதுவென் றேயறி. (௯)

ஊனமில் பரசிவ னுலகொ டுற்றிடிற்
றானுமவ் வுலகொடு தங்கி வைகுமவ்
வானவன் றனக்கிது வாச கப்பொரு
ளானதா மவனுல குருவ னுய்விடின். (௧௦)

அதுவுமவ் டு...... சகம தாய்விடும்
பதியுல கொடுபயி லாதொ ருத்தனைப்
வதிவுறிற் றனுமொன் றாகி வைகுறு
மதுவென வவனென வில்லை யன்னியம். (கக)

ஈசனுந் தாரக மென்ற நாதமும்
வாசக வாச்சிய மெனும்வ குப்பினு
ளுசமி லிலக்கிய விலக்க ணையினாற்
பேசிடி னதற்குநந் தமக்கும் பேதமில். (கஉ)

தாரக மநாதநாந் தாம நாதியிச்
சீரினி லாங்கதன் சிறப்பைத் தேசிகன்
பேரரு ளாற்சொலப் பெற்றிட் டைம்பொறி
யோர்வழிப் பட்டிட வுள்ள டங்குறு. (கங)

முனிவினைத் தணந்துமா மோன மெய்தியோர்
தனியனுய்ச் சுவத்திகா தனத்தி லேமண
மினிதுற நிலைமைபெற் றிருந்து வானுயர்
பனிவரைக் குவட்டினி னதியின் பாங்கரில். (கச)

பதிவுறு குகையினிற் பாமன் கோயிலின்
மதியினுக் கியைந்துள மற்றி டங்களின்
முதிர்தழல் வேள்வியின் முன்னிற் கீழ்த்திசை
யதுதனை யாயினும் வடக்கை யாயினும். (கரு)

தண்ணுறீஇ யிலைகனி கந்தம் பாரிடை
யண்ணுறு முணவென வுண்டு மல்லது
நண்ணிய வையமேற் றுண்டு நாடொலைத்
தெண்ணருங் குரவனை யிறையென் றெண்ணுபு. (கசு)

உளந்தனில் வணங்கிமெய் யுணர்ச்சி வல்லனுய்த்
தெளிந்திது செபிக்கவிச் செபத்தை யிம்முறை
வளம்பெற மூன்றிலக் கம்வ குத்திடின்
விளங்கிய மந்திர சித்தி மேவுமால். (கஎ)

வெவ்வா விருசுடர் விழுங்குங் காலையில்
வவ்வுறு முணவினை மறுத்தெண் ணுயிர
மவ்வுரு வாய்ந்துபா லனங்கை தொட்டிடிற்
செவ்விதின் முற்பவந் தெளிவ னங்கவன். (கஅ)

மனங்குளிர்ந் தொருவனோர் வருட வெல்லையுந்
தினம்பனீ ராயிர முருச்செ பிப்பனே
னினைந்திட லரியதாய் நிகரி லாச்சிவங்
கனிந்திடு மனையவன் காணத் தோன்றுமால். (௧௯)

பொற்றுணர் நறைகமழ் பலாசப் போதினாற்
கற்றையஞ் சுடர்த்தழல் வேள்வி கைக்கொளின்
மற்றவன் முழுவதூஉம் வல்ல னாகுவன்
முற்றவுந் துறந்துள முனிவ கேட்டியால். (௨0)

குழைத்தெழு பிப்பிலச் சமிதை கொண்டெரி
தழைத்திடு முத்தழ றமைவ ளர்த்திடின்
விழுத்தகு பிராமணத் தன்மை மேவுறு
மொழுக்கமுந் தவமுமிக் குயர்ந்த மேலையோய். (௨௧)

பசியதண் டோட்டறு கதனிற் பண்ணுறின்
வசையில்சீ ரிருநிலம் பரிக்க வல்லனா
மிசையும்வெண் பொரியினாற் செய்யின் மேதகு
நசையுறு கன்னிகை விவாக நண்ணுவான். (௨௨)

தண்ணறு நெய்யினாற் றழல்வ ளர்த்திடி
னெண்ணிலா வேட்கைகள் யாவு மற்றிடு
நண்ணிய திலத்தினா னயந்தி ழைத்திடிற்
றுண்ணெனக் கவலைசெய் நோய்தொ லைந்திடும். (௨௩)

வேறு.

சுழிபுன றோய்ந்துட றாயவ னாகி
விழுமிதி னிந்திரி யங்களை வென்றே
யொழுகு மிலக்கம தாகிய வோமம்
வழுவற வாற்றுதல் வல்லவ னென்னின். (௨௪)

பிறரறி யாவகை பீழை விளைத்து
மறையவ னைத்தெறும் வல்வினை நீங்கு
மறைபுனன் மூழ்கி யதன்கரை வைகி
யுறுதி யிலக்க முருச்செப முற்றால். (௨௫)

மறைந்துகள் ளாண்டதோர் வன்பிழை மாறு
நறும்புனன் மூழ்குபு நாதன்முன் னாக
வுறைந்துரை யாட லொழிந்தொ ரிலக்கந்
திறம்ப லிலாது செபித்திடு வானேல். (௨௬)

காந்து செழும்பொரு ளைக்கவர் வுற்றுப்
பொருந்திடு தீவினை போம்புன லாடி
யரும்பொறி யைந்து மவித்து வெகுட்சி
பிரிந்துதென் பான்முக நோக்கு பிரான்முன். (௨௭)

மோன மடைந்து முயன்றொ ரிலக்கந்
தானுரு வேற்றுவ னேற்குரு தற்பத்
தீன மறைப்பி விழைத்தக னுலா
மூனம தாகிய வல்வினை யோடும். (௨௮)

தெண்புன லாடுபு செங்கதி ரோன்முன்
னண்பொ டயர்ந்தொ ரிலக்க நவிற்றிற்
பண்பிலர் தம்மொ டுடம்பட லாய
புண்படு தீவினை போய்விடு மன்றே. (௨௯)

சீத நறும்புனன் மூழ்குதல் செய்து
நாதன்முன் னேயொ ரிலக்க நவிற்றி
னேதிலர் தாமறி யாம லியற்றும்
பாதக மாமெவை யும்பறி போமால். (௩0)

ஒடிவி லுவப்பொடு மொண்புன றோய்ந்து
கட்வுண்மு னேயுரை யாடுதல் கைவிட்
டடைவி னிருப்பதி னுயிர மேற்றி
னெடியி லகன்றிடு நொய்யபல் பாவம். (௩௧)

துறந்தவன் வேதியர் தோகையை யாரு
மறிந்திட லின்றி யணைந்திடின் மூழ்கி
யெறிந்து புலன்சிவன் முன்ன ரிலக்கஞ்
சிறந்து செபித்திடி னவ்வினை தீரும். (௩௨)

அன்னவன் மன்ன ரணங்கொடு பல்காற்
றுன்னி னிலக்க முருத்தொகை யேற்ற
மன்னிய வவ்வினை மாளுமி தல்லா
லின்னு முரைத்து மிருந்தவ கேட்டி. (௩௩)

வணிக மடந்தையை மற்றவ ளுளு
மணைவுறின் யாரு மறிந்தில ராயிற்
பணிவொ டிலக்கமொர் பாதி செபித்தாற்
றணிவரி தாகிய வவ்வினை சாரான். (௩௪)

பின்னவ ளேப்பிறர் தாமறி யாம
லன்னவ ளொரு மனைந்துள பாவ
முன்னிய வாயிர மோடொரு நாளு
மேயற்றிடி

வருண்ணியு மன்றி வனத்தனு மிவ்வா
றிருணின்ற பாவ மிழைத்தன ரென்னின்
முரணற முன்ன மெதிக்கு மொழிந்த
வருடரு மச்செப மாற்றுதல் வேண்டும். (நகூ)

இல்லினில் வாழ்பவ னிப்பிழை செய்யிற்
சொல்லி விதித்திடு முன்றொகை தன்னி
னல்கிய நான்கினி லொன்று நவிற்றி
னல்லல் விளைத்துள வவ்வினை தீர்வன். (நஎ)

மாசில் சிறப்புடை வானவர் தாமிவ்
வோசையை யேமுத லாகவு ளார்க
ளாசை தவிர்ந்திடு மங்கதை யன்றிப்
பேசிடு தோற்றமொன் றும்பிறி தில்லை. (நஅ)

குடிலையி னிமை யோர்கள் குழாமு
மடைவொடு சன்னத்த மாகுவர் நாளு
நெடிதுமவ் வோசையை யேநினை வார்கட்
கிடருறு பாதகம் யாண்டினு மில்லை. (நகூ)

இன்னதன் மேன்மை யெமாற்சொல லாற்று
துன்னுறி னற்புத மற்புத மோமென்
றன்னதை நாடொறு மாய்குவன் யாவன்
முன்னவன் றீமை முதிர்ந்துள னேனும். (சO)

ஊன முறுந்தொழில் யாவு முழுந்துந்
தானொரு தீங்கினை யுந்தழு வானு
லீனமி லெவ்விர தங்களு மெண்ணி
ளுனமு மீட்டு தவங்க ளனைத்தும். (சக)

பழமறை கற்ற பயிற்சிகள் யாவும
விழுமிய பற்பல வேள்விகண் முற்று
மழகிய தீர்த்த மடங்கலு மாடுந்
தொழில்களு மேனைய தூய வறங்கள். (சஉ)

முழுவதும் வேத பொருங்கு மொழிந்த
வழுவக னற்செயன் மற்றுமிவ் வெல்லா
மொழிவறு தாரக முள்ள மழுத்து
மழிவில் பலத்தொடு மொப்பென லாகா. (சங)

விரித்து விரித்து விளம்புவ தென்னே
சுருக்கி யுனக்கிது சொற்றன மின்னு
முரைப்பரி தாகிய தாரக மொன்றாற்
பிரிக்கரி தாய பிறப்பற லாமால். (சச)

இன்னதொர் தாரக மென்னும் விளக்காற்
றன்னுயி ரைச்சிவ மாம்படி தான்கண்
டன்னவன் வாழ்வ னசேதன ராகி
மன்னிய நால்வரு ணச்சிர மத்தில். (சரு)

வழுக்கிய புல்லரு மற்றிது தன்னு
லிழுக்கிய பாவ விருங்கட றன்னைக்
கழித்துமெய்ஞ் ஞான மெனுங்கரை யேறிப்
பழிப்பில் சிவத்தொடு மொன்றுவர் பண்பால். (சசு)

நின்னுயி ருய்ந்திட நீயு மினிக்கே
ளின்ன வெழுத்தினை யென்று நவின்றிட்
டன்னியம் யாவு மகன்றுவி டென்றான்
றன்னொடு மொத்தவர் தானல தில்லான். (சஎ)

ஆகச்செய்யுள், கஉகரு.

---

இருபத்தொன்பதாவது

# வருணச்சிரமங்கூறிய அத்தியாயம்.

-✻✻✻-

செம்மைசேர் மறையவர் செயல்க ளாறவற்
றிம்மையில் வேண்டுவ பாதி யேனைய
வம்மையில் வேண்டுவ வாகு மாங்கவை
தம்மையிவ் வாறெனப் பகுத்துச் சாற்றுதும். (க)

மாசறு மிருநிதி வாங்கல் வேள்வியை
யாசிலார் தம்மைக்கொண் டாக்கு வித்திடல்
பேசரு மறையினைப் பிழையி லார்தமக்
கேசற வோதுவித் திடுத லிம்மைய. (உ)

ஓதுதல் வேட்டல்கைத் தூதவ லம்மையி
னேதுவா மன்னர்க்கு வணிகர்க் கீதலும்
வேதமும் வேள்வியு மூன்றும் வேந்தியர்
நீதிபோ லம்மையி னிமித்த மென்பவே. (௩)

அறைகழ றூனவே லரசர்க் கிம்மையிற்
பெறுபய னீதியிற் பிழைத்து ளோர்தமை
முறையினிற் றண்டித்தன் முனையில் வஞ்சகஞ்
சிறிதுமில் லாதபோர் செய்து சீருறல். (௪)

வணிகருக் கிம்மையில் வாணி கத்தொடு
தணிவில்வே ளாண்மைசெய் திடல்ச துர்த்தருக்
கிணையிலிம் மூவரு மின்பு றும்படி
தணிவிலா தவர்பணி தமையி ழைத்தலாம். (௫)

இம்மையின் பயனிது மறுமைக் கும்மிதே
செம்மைநாற் குலத்தவர் தமக்குஞ் செய்தொழின்
மம்மர்தீர்த் துரைத்தனஞ் சுருக்கி மற்றினி
யம்மவாச் சிரமநான் கவையி யம்புவாம். (௬)

வருணியில் வாழ்பவன் வனத்த னீத்தவ
னருண்மிகு நால்வாச் சிரமத் தாரெனத்
தெருண்மிகு மறையுடன் மிருதி செப்புமிப்
பொருண்முறை வருணிக்குப் புகலக் கேட்டியால். (௭)

ஏற்றிடு மையமுங் குரவ னேவலுஞ்
சாற்றரு மறைநவின் றிடலுஞ் சந்தியிற்
போற்றுவங் கனைகளு மிரண்டு போழ்திலு
மாற்றருஞ் சமிதையான் மகம்வ ளர்த்தலும். (௮)

இல்லறத் தொழுகுவா னிறைவன் பூசனை
நல்லவு பாசன வோம நாடொறுஞ்
செல்விருந் தோம்புதல் யாகஞ் செய்திட
லெல்லையி லுவப்பினூற் றுண மீந்திடல். (௯)

மேயசீர் வனத்தவன் வேட்ட லோதுதல்
காய்கனி சருகிலை கந்த மாதிய
வாயபல் லுயிர்க்களித் தருந்தல் வைகலுந்
தூயநித் தியத்தொழி லாற்றல் சோர்வற. (௧௦)

துறந்தவன் செய்வினை நித்தி யத்தொழின்
மறந்திடல் பக்குவ வுள்ளம் வந்திட
விறந்துள புசிப்பினும் யாக்கை யாதிய
நிறைந்தபல் பொருளினும் வேட்கை நீங்குதல். (கக)

பலிபெடுத் துணல்சிவத் தியானம் பண்ணுத
லலைபுனன் முப்பொழு தாடல் வெண்பொடி
யிலகவுத் தூளனு மிடுத லின்னுயிர்
நிலையினை யினிதுணர் நிமித்த மாகவே. (கஉ)

மாசறு காட்சிசேர் குரவன் றன்வயி
னாசறு மறைமுடி வமர்ந்து கேட்டுடல்
பேசிடி னனையவன் பெற்றி யின்னன
நேசமா மில்லுறை பவனை நீங்கலா. (கங)

மூவருஞ் சிற்சில முறைசெ யப்படு
மேவுமம் முறைசொலி னுப்பு மென்புளி
யோவுதல் புணர்ச்சியை யொருவ லாதிய
தாவில்சீ ரொழுக்கமாந் தவத்தின் மேலையோய். (கச)

எம்முடை யருள்பெற யாவர் வேண்டுநர்
தம்முடை யொழுக்கமே தவறின் றாற்றுக
வம்முறை யாற்றிடி னவர்க்கெஞ் ஞான்றினு
நம்மரு ளாலிலை நரக வேதனை. (கரு)

சிறந்துள வருணவாச் சிரம நீதியிற்
பிறந்துள புண்ணியம் பிறவி நீக்குமா
லறந்திக ழன்னவ னமைய றிந்திடு
நிறைந்தஞா னத்தினைப் பெற்று நேரிலா. (கசு)

நமதியல் பாகிய வடிவை நண்ணுவ
னமர்வரு ணாச்சிர மத்தொ ழுக்கம்விட்
டெமதொரு முத்தியை யிச்சிப் பார்க்குவெந்
திமிரவல் வினைகளும் பவமுந் தீர்ந்திடா. (கஎ)

வேறு.

முன்னைநாட் சாண்டில் லியனெனு மறையோன் விஞ்சையிற்
றிது நாண் முயல்வுற், றன்னவ னறத்தின் சாதக மான வருமறை
வசனமவிட் டகன்று, துன்னரும் பிறனில் விழைவதும் பின்னுஞ்

சொல்லருந் தீவினை பலவு, மன்னவெஞ் ஞான்று மிழைத்துமா யோனை மறைசொலா மார்க்கத்தின் வணங்கி. (கஅ)

வந்தனன் பின்னர் மலர்மகள் கொழுநன் மற்றுநம் மாயையால் வடிவொன், றந்தணன் முன்ன ரெடுத்தெதிர் தோன்ற வரிதனை யாங் கவன் கண்டு, சிந்தையி லுவந்து வழிபட லாற்றிச் சேவடி பன்முறை பணிந்தான், பைந்துழாய் நறுந்தண் படலையங் கடவுள் பகர்வனுங் கவன்றனைப் பார்த்து. (ககூ)

கேட்டியான் மறையோய் கெடுமதி யுடையோய் கெட்டது கெட்டதுன் கிரியை, நாட்டிவின் வுயிர்க்குட் டுணிந்தவ னீயே நால் வரு ளாச்சிர மத்தை, யீட்டிய மறையின் வழியினை நின்போ லிழுந் தவ னுலகின்மற் றெவனே, வாட்டுறு கடும்பா வியர்க்குணி வலியை மற்றுனக் கெதிரிலை யெவரும். (உ0)

சுருதியி லுனக்குச் சாந்திபு மில்லைத் துணிந்தசாண் டில்லிய குமார்க்கப், பரிவினி லெனினு நகையருச் சித்தா யாதலாற் பன் னெடுங் கால, மருமறை விதியை யடைந்திட லின்றி யருகிய பாஞ் சராத் திரநூன், மருவிய முறையே பெட்பொடு நமது பூசையை மறை யவர்க் கொண்டு. (உக)

பண்ணுவி யென்றிம் மொழியினைப் பகர்ந்து பரிதிபோ லொளியு மிழ் திகிரி, யண்ணலம் படைக்கைப் பண்ணவன் காந்தா னங்கதற் பின்றையந் தணனு, மெண்ணரிய பாஞ்ச ராத்திர வழியே யெறுழ் வலித் தடம்புய நீல, வண்ணனை வழிபா டுஞற்றியே வந்தான் மறை யொழுக் கந்தணந் தவர்க்கு. (உஉ)

தன்னொரு பெயரால் வயினைவ நூல்சாண் டில்லிய சங் யென்றோன், றந்நிலை சமைத்தான் பாவமோ னிகளா யமைந்தபா சண்டரா யாந்தர், பின்னதன் வழியே யொழுகினர் நீக்கித் திம் முறை பெரிதுநாள் செல்லத், துன்மதி மறையோன் றொலைந்தனன் வாணுடொலைதலு நமன்விடு தூதர். (உங)

பாசமார் கையர் வெருவரு முகத்தர் படர்ந்தெழு சிற்றார்வெள் ளெயிற்று, மூசுகெட் டுயிர்ப்பின் மூர்க்கரா யவனை முரணுறச் சிக் கவே பிணித்து, வீசுகான் மேலாப் பிடித்துமுற் காத்தால் வெரு வரப் புடைத்தலைத் தீர்த்து, நாசமி லிருட்டுக் கிணற்றிடை வீழ்த்தி நலிந்தனர் கொண்டுபோய் நமன்முன். (உச)

விடுத்தன ரவனும் வெருவரு தோற்ற மீக்கொடு வெகுண் டெதிர் மிகவுங், கடுத்திடு முகத்தா லனையனை நோக்கிக் கூடியதன் றாதருக் குரைப்பான், பிடித்துள விவனை வருத்துதி ரென்றான் பிடுசா லனையரு மவனை, யடர்க்குமுற் காங்க ளள்ளிலைக் கழுமு ளாதிய படைகளா லடர்த்தார். (உரு)

பிற்றையு நடுவ னழலெழ நோக்கிப் பேசுவான் பெட்டவர் குறிப்பு, மற்றவர் குறிப்பும் பரிகரித் தற்குச் சுருதியின் பெலத் தில்வா திப்ப, ரெற்றுநீ வரைப்பின் மறைநெறி யொழுக்கம் யாவுநீ ழிழுதையா விறந்த, தற்றமில் பதக னுமிவன் றன்னை யப்பெரும் பாவங்க டொலைய. (உசு)

தீயினுங் கொடிய ரவுரவ மாதி நரகிடை முறைமுறை செலு த்தி, வாய்திறக் கொண்ணு வன்றுய ருறுத்தி மறித்துமித் தீயனைப் பற்றி, நீயிர்கள் வம்மி னென்றன னவரு நிகழ்த்திய சொல்வழிக் கொடுபோ, யாயுநுண் மறையின் றுறைபிழைத தவனைப் பலபதி னுயிர மாண்டு (உஎ)

வெந்நிர யத்து வீழ்த்தினர் மெலித்து மீட்டும்வெங் கூற்றெதிர் விடுத்தா, ரன்னவன் றன்னை மறலிகண் ணுற்றாங் கடைவுற வொரு மொழி யிறைவா, னன்மைமிக் குடையோய் மறைவலோய் வாராய் நனிதவப் பொறுப்பதற் கரிய, துந்நெறிப் பாவப் பயனெனும் பழங் கண் டுய்த்தனை தொலைத்தனை யினிப்போய். (உஅ)

விண்டுவின் பரம பதமடை கென்றான் விரிசுடர் விமானமே லேறிக் கொண்டுவே தியனல் வரிசையா னறவு கொப்புளிக் கும்பசுந் துளவத் தண்டுண ரலங்கற் றடமணி மௌலித் தாமரைச் செங்கணு னுலகை யண்டின னவனை யவிர்சுட ராழி யடுபடை யண்ணலுங் காணு. (உகூ)

விழைவுட னொருசொன் மொழிகுவன் வருதி வினைதவிர் விழுமி யோய் வேத, வழியினைத் தணத்த லாலுறு பழங்கண் மாந்தினை பாஞ்சராத் திரநூ, றழுவுதந் திரத்தா னமைவழி பட்ட தன்மையால் யாமுனை யுவந்தே, மொழிவற நீயு நமையுவந் தவன்கா ணின்னுநீ யுத்தம குலத்தில். (௩0)

சென்றெம தருளாற் பிறந்துயர் வருணச் சிரமநல் லொழுக்கி னுக் கேற்பத், தொன்றுபட் டுள்ள மறைவகுத் தனவாந் துகளறு நல் வழி தோய்ந்து, நன்றுற வியன்ற செய்துநம் மருங்கு நனிதவப் பெட்

பொடு நமக்கு, மன்றவு மாரா தனையினில் விழைவு மல்கியே பிரமஞா
னத்தை.' (௩௧)

அடைந்துநீ யமிர்த னுகுதி யென்று னனையசொற் செவிப்புல
னுற்றேறு, னுடங்குவெண் புரிநூன் மறையவர் குலத்தி னுவலருந்
தீழற்குநேர் மகிமை, யுடன்பிறந் தவண முயர்த்தவ னருளா னுயர்
தரும் வருணியி னெழுங்கிற், றிடம்பெற வுறைந்து மறையெலாம்
பயின்று திகழ்தரு நானநல் விரதப். (௩௨)

இனிதிழைத் ததன்பின் மணப்புணர் வெய்தி யில்லறக் கிழமை
பூண் டதனை, யனுதினந் திடங்கொண் டங்கியா தான யாதிய வேள்வி
யின் கருமந், தனைமுத லாய வறம்பல வுஞற்றித் தகவிலெப் பாவமுந
தணந்து, புனிதனுய்ப் பரம ஞானமெய்ப் போதும் புந்தியிற் கொண்
டவ னுகி. (௩௩)

ஈசனை யன்றி யெனைத்துள பொருளு மிறப்பன வெனவுளந்
தெளிந்து, பாசிலா வருளால் விரத்திவந் தடைந்து மற்றெவற் றினும்
விழை வின்றிப், பேசருங் கருமம் யாவையு மொருவிப் பின்னரெங்
கருணையைப் பெற்றே, யாசிலா வேத சிரத்தினிற் றெளியு மகண்டித
ஞானம தடைந்து. (௩௪)

அன்னதா னுலக மெவைக்குமோர் விதாதா வாகிமற் றெனைத்
துமோர்ந் ததுவாய், மன்னியா வைக்குங் காரண மாகி வாய்மையா
யானந்த வடிவாய், முன்னடு விறுதி யின்றிய முதலாய் மொழிந்திடு
மளவைகட் கரிதா, யின்னதென் றொருவர் பகுப்பதற் கரிதா யிணை
யிலாப் பரசிவ மெனலாய். (௩௫)

நிறைந்துள நம்மைத் தன்னுயி ருடனே நீக்கமற் றுள்ளதா
வென்றுந், திறம்பிடா தெளிதாக் கண்டன னெடுத்த தேகத்துக்
கடுத்துள பயனைப், பெறுந்துணை வதனு னுலகினை யிகழ்ந்த பெரு
விளக் கம்பெரி துளனுய்க், குறைந்தசே டமதாம் புசிப்பினைத் தவி
ராக் கொள்கையா லாதர வின்றி. (௩௬)

துய்த்தனன் கருமந் தொலைந்திடு முடிவிற் றொடக்குறு மாயை
விட் டகன்று, னித்தகை யாய வருணவாச் சிரமத் தியன்றவா
யான் மறையின், வைத்தசித் தாந்த வருத்தம தாலே மல
யன்றிமுத் திக்குப், புத்திவே றில்லை யில்லைகா ணளப்பில் புனித
மாந் தருமநூன் முழுதும்.

மேதகும் வேத வங்கமு முபவே தங்களும் புராணத்தின் விரி வுந், நீதில்சாங் கியம்யோ கங்கள்பா சுபதச் செய்தியுந் திகழும்வே தஞ்சொல், சாதிகண் மிகுமாச் சிரமங்க ளுடைய தருமமு மேனைய பிறவு, மா திறூ லாய மறைக்குமா றிலதா மெனினது வேபிர மாணம்.

அன்றிய வ்வினைத்து மோர்பிர மாண முன்றுகா ணைவைசில் மிருதி, நின்றுள மறைக்கு மாறுபா டாவ நிகழ்பிர மாணமற் றல்ல, நன்றுமிவ் வியல்பான் மறைசொ லு முறைமே நடைபெறல் வேண்டு மென் றுரைத்துக், கொன்னுறயம் படலைப் புரிசடைக் குழகன் யுக வியல் கூறலுற் றனனால். (௩௯)

ஆகச்செய்யுள், ௧௪௩௯.

முப்பதாவது

# யுகதருமங்கூறிய அத்தியாயம்.

காலதத்துவ வறிஞர்நான் குகமெனக் கணிப்ப
ரேல வற்றினுண் முதலுகங் கிருதமா மிரண்டாம்
பாலதாவது திரேதமூன் றதுதுவா பரமா
ஞால மீதினி னான்கதா முகங்கலி நவிலின். (௧)

முண்ட கத்தவி சுகந்தவன் முதலுகக் கடவுள்
விண்டொ டர்ந்தெழு கதிரிரண் டாவதின் வேந்தன்
றண்டு மாய்நறுந் தாமன்மூன் றுவதின் றலைவன்
மண்ட லும்புக ழுருத்திரன் கலிக்குமன் னவனே. (௨)

சத்து வங்குண மாவது முதலுகந் தனக்குச்
சத்து வத்துட னிராசத குணமடுத் ததற்கு
வைத்த ராசத குணத்தினைத் துவாபர மருவு
மெத்தி றத்தினுங் கலியுகந் தாமத மெய்தும். (௩)

ஒன்ற தாகிமே லாகியே யொளிதிக ழறந்தான்
மன்ற நாடொறுந் தூயதாய் மழவிடை வடிவாய்
நின்ற நம்முடை யூர்திகா னான்கது நீதி
துன்று முந்திய வுகத்தினிற் பதத்தொடுஞ் சுடரும். (௪)

முப்ப தத்தொடு நிலைபெறு முதிர்திரே தத்திற்
செப்ப ரும்பத மிரண்டொடு துவாபரஞ் சேரு
மப்ப தத்திலொன் றேகலி யுகத்தினி லமரு
மிப்ப குப்பினி லுணர்தியா லினிதுக தருமம். (௫)

முன்னு கத்தினின் முத்தழன் மறையவர் வலியோர்
பின்னு கத்தினிற பெருந்திறன் மன்னவர் பெரியோ
ரன்ன தற்கடுத ததனிடை வணிகரே யதிக
ருன்ன ருங்கலி யுகத்தில்வே ளாளரே யுயர்ந்தோர். (௬)

ஆதி யாமுகந் தியானமுந் தவமுமாற் றிடலாம்
போது ஞானயோ கம்புரிந் திடறகுந் திரேத
மாது வாபரங் கருமயோ கம்வகுத் திடலாம்,
பேத மாங்கலி தானமொன் றுஞ்செயப் பெறுமால். (௭

முந்து கத்தினி லனைவர்க்கு முழுத்திடு மாயுள்
வந்து தேவருந் திருத்தியா யுவப்புடன் வதிவர்
சுந்த ரீந்திகழ் வடிவம்வா ணாள்வலி தொலையா
வந்த மில்பல னிவ்வுகத் தனைவர்க்கு மொக்கும். (௮)

அடுத்த திற்சிறி தொருவருக் கொருவர்மா றுவர்
விடுக்க ருந்துவா பரத்தினில் வெம்பசி தாகந்
தொடுத்துண் டாகிய பலதுயர் மறையவர் தோய்வர்
கடைப்ப டுங்கலி முறைமையைக் கழறுதுங் கேட்டி. (௯)

பிரம நிட்டித ருகிவிஞ் சையிற்பெரி யவரு
முரிமை வேதியன் றனைத்தபோ தனன்றனை யுயர்ந்த
தருமநிட்டிதன் றன்னையெவ் விடத்தினுஞ் சால
வருமை யெண்ணிடா தனைவரு மிகழ்வாங் கங்கே. (௧௦)

மறைய வன்றனை மன்னனை வணிகனை வாக்கான்
முறையி கந்துள பழிமொழி தன்னையு மொழிவர்
தெறுத ருங்கொலை யாதிய வினைகளுஞ் செய்வர்
குறைவில் வஞ்சக மௌவியம் பெருமிதங் கோபம். (௧௧)

காமம் பொய்யுரை மயக்கமீ யாமையாங் கூர
மாம னைத்துமெக் காலமுங் கலியின தழுக்காற்
றுமி யற்கையா மாந்தர்பாற் றங்குறு குணமாய்த்
தீம னத்திடை விழைவுடன் வளர்வன தினமும். (௧௨)

சிவனி டத்தினி லன்பரா சியசிலர் திருமா
லவனி டத்தினி லன்பரை யவனையாங் கிகழ்வ
ரவனி டத்தினி லன்பரா கியசில ரானுற்
பவம கற்றிய வன்பரை யவன்றனைப் பழிப்பார். (௧௩

முருகு விம்மிய முளரியங் தவிசின்முன் னவனைப்
பரவு வோர்சிலர் பனிப்பகை யங்கியைப் பழிப்ப
ருருவி லான்றுய ருழப்பவன் விஞ்சைகற் றுணரான்
றிருவி லானூர னில்லவன் றம்மைநிந் திப்பார். (௧௪)

எள்ளல் செய்பவ ரவ்வுகத் தெண்ணிலி மழையுற்
றுள்ள வச்சமு மொண்பயி ருலப்புறு கேடும்
விள்ள ரும்பொரு ளழிகையும் பன்முறை மேவுங்
கள்ள மாந்தர்கள் கருணையு மறிவுமில் லவராய். (௧௫)

கடவுள் விம்பமும் வெகுளியிற் பிடுங்குவர் கையால்
வடிவு சேர்திரு மேனியை மறையவர் முதலா
வடைவின் மூவரு மலர்கடு யருச்சனை யாற்று -
தொடியு முள்ளமோ டொருவுவ ரச்சமு முறுராய். (௧௬)

மருண்டு தத்தமக் கமைத்துள முறையினை வழுவி
யிருண்ட புல்லிய வொழுக்கத தி லெய்துவ ரினையர்
தெருண்டு பெட்பொடும் வீடுபே றெய்துவான் சிந்தை
முரண்டொ லைத்திடு முதுமறை நவின்றிடன் முயலார். (௧௭)

ஈட்டு மொண்பொருள் வேட்கையா லிம்மையின் பயனில்
நாட்ட மாகிநால் வேதசாத் திரங்களை நவில்வார்
வேட்டு வேள்விமுன் னாகிய நற்செயல் வினையார்
மூட்டு வெவ்வினைக் கலிவந்து தோன்றினிம் மூவர். (௧௮)

பொருளை யீட்டுவர் நீதியின் றிப்புகழ் வேண்டி
யிருளை யோட்டிய வெரிசுடர் வேள்வியை யிழைப்ப
ரருளை வீட்டுவ ராருயி ருய்ந்திட வன்பான்
மருளை வாட்டிய மகஞ்செயார் மறுமையைக் குறியார். (௧௯)

தாங்கள் பின்னவன் றன்னுழைக் கேட்பர்க டனத்து
வீங்கு பெட்பினு லவன்றனை வியந்துசே விப்பா
ராங்க வன்றனு டடுத்துரை யாடியெஞ் ஞான்றும்
பாங்கி னுற்பரி சித்துட னுண்டுகண் படுப்பார். (உ0)

வினைஞர் வேந்தனுக் கமைச்சரா யறிவின்மேம் படுவர்
புனித வேதிய ராருளின்றி யுயிர்க்கொலை புரிவ
ரினிய தண்புனல் படிகலர் செபம்பல வியற்றார்
மனையின் முத்தழல் வளர்த்திடார் வறிதருந் துவரால். (உ௧).

கடவுள் பூசையிற் கருத்தில ராகுவர் கலியின்
முடிவின் மந்திரத் தொடுமுழு நீறுபூ சுவதும்
வடிவு றத்திரி புண்டரந் தரிப்பது மறந்து
நெடிது மோர்மயக் கத்தினுல் விடுவரிந் நெறியை. (உஉ)

மற்று முள்ளன வாகிய வறங்களு மறையி
லுற்ற வக்கினிட் டோமமா தியவுயர் மகமு
மெற்றை ஞான்றினு மிடைவிடா தியற்றுதம் விதியு
முற்று நீக்குவர் முதுதிரி புண்டர மெனினும். (உங)

தரித்தி டார்மறை தம்மொடு சாத்திர புராணம்
பரித்த பாரத மிவற்றினை நொய்தெனப் பழிப்பர்
விருப்பொ டுஞ்சிலர் வைப்பந்துகா பாலமே வுவர்க
ளருத்தி யாற்சிலர் பாசுப தத்தினை யடைவர். (உச)

சிலர்ப வுத்தமே விழைகுவர் சிலர்பா சிவத்தைப்
பலவி தப்படு மென்பர்க ளொன்றெனப் பகரார்
சிலர்ம கிழ்ந்துலோ காயதம் பெரிதெனத் தெளிவர்
சிலர்வி ரும்புவர் யாமளஞ் சிறந்ததென் றெண்ணி. (உரு)

சிலரி லாகுளஞ் சீரிதென் றினிதுசிந் திப்பர்
சிலர்க டாம்வயி ரவத்தினை மேலெனத் தேர்வார்
சிலர்து ணிந்தவ ராகிவா மந்தனிற் றிகழ்வர்
சிலர்கள் சாத்தமுஞ் சிலர்கள்சாம் பவமுமாய்ச் சேர்வர். (உசு)

வேறு.

தந்தஞ் சமயத் தினுங்கிரியைத் தாந்தா முயர்ச்சி பெறச்சாற்று
மந்தண் பனுவல் களுமற்றைச் சமய நூலு மருமறையால்
வந்த பிரமா ணத்தனவா வவற்றைத் தாமே மதித்துமிகச்
சிந்தை யுவந்து கலிமுடிவிற் செய்வார் மறையோர் முதன்மூவர்.(உஎ)

கலியின் முடிவிற் பின்னவர்தாங் கறையற் றிலகு வெள்ளெயிறுந்
தலைமுண் டனமுந் துவராடை யுடையு முளராய்த் தவஞ்செய்வ
ருலகிற் சிலர்தா முடம்புவிற்ப ருயருந் தீர்த்தஞ் சிலர்விற்பர்
சிலர்தண் டயிலம் விற்றிடுவர் சிலர்விற் றிடுவர் தெய்வத்தை. (உஅ)

சிலர்தாந் தீம்பால் விற்றிடுவர் சிலர்தாங் கிருதம் பகர்ந்திடுவர்
சிலர்தாம் புதல்வர் தமைப்பகர்வர் சிலர்தா மனைவி கனைவிற்பர்
சிலர்தாம் பகர்வர் தானியத்தைச் சிலர்தாந் தெண்ணீர் தனைவிற்பர்
சிலர்தன் னியமை விற்றிடுவர் சிலர்தாம் பசுவை விலைசெய்வர். (உகூ)

சிலருந் றன்னை விற்றிடுவர் சிலர்கள் ளினையே விற்றிடுவர்
சிலர்தம் முடனே பிறந்தவரை விற்பர் தீய கலியுகத்தி
னிலவு கதிர்கான் றிடுமுந்நூன் மறையோர் தம்பா னிதிகவர்வான்
புலவு கமழுங் கூரிலைவே லரச ரேவற் பொருபடைஞர். (௯0)

தாளைப் பிணிப்பர் தடங்கையைச் சிக்க யாப்பர் தலையிடுவர்
மூளுந் துயர்செய் திம்முறையே முழுதும் பழிப்பர் முறைபிறழ்ந்து
நாளு முயர்ந்த வாதனத்தி னன்காம் வருணத் தவரிருப்ப
ராளுந் தலைவ ரெனக்கீழ்நின் றந்த ணாளர் சேவிப்பர். (௯௧)

அன்னோர் தம்மை வாழியுவென் றருமா மறையோர் பழிச்சுவர்கண்
முந்நூன் மார்பர் மேலிருத்தல் கண்டாற் பின்னோர் முகங்கறுப்பர்
பின்னோர் தம்வா யிலின்மறையோர் சமயம் பார்த்துப் பெரிதிருப்ப
ரன்னோர் தமக்கு மறைபவர்க ளருநூல் வருத்தி யறிவிப்பார். (௯உ)

மறையின் பொருளை மாநிதியின் பொருட்டு மற்றுங் கவர்க்குரைப்பர்
முறையின் றெவருங் கலிதொடங்கிற் பிறனில் விழைந்து மோகிப்ப
ரறையி னின்னு மெத்துணையென் றறைவோ மறையின் வரம்பாய
துறையு மழிந்து விடுமிவ்வா றுய கலியின் றோடமற. (௯௯)

செயிர்தீர் மறையின் முறைநிறுவச் சனகன் முதலோர் திறத்துநா
மயர்வின் ஞான முணர்விப்போ மாழி யேந்து நெடுமாலு
முயரு முலக முழுதுமினி தோம்பற் பொருட்டோ ருருவுகொடு
பயனு மறையின் பொருடெரியப் பலசூத் திரங்கள் பண்ணுவனால். ()

அனையோன் றனக்கு மாணவக னாகி யுள்ளான் சயிமினிமற்
றினையோ னமதா ணையின்வயத்தால் வியாபிக் கின்றே னிவன்றானு
நனியுங் கரும காண்டநடத் தற்கு மனைவாழ்க் கையைநண்ணி
வினைதீர் வேள்வி தானங்க ளிழைத்து விதியின் மிகவொழுகி. (௯௫)

தன்னு மத்தாற் சயிமினிசூத் திரமென் றுரைப்பன் றருமத்தை
யின்னே ரிருவர் தாமுமறை வரம்பை யினிது நிறுவிடுவ
ரந்நான் மறையின் றுறைவழியை யாகு மளவை பயின்றெவரு
மின்னு தனதீர்ந் தினிதுய்வ ரிதனுன் வருந்தி யெவ்விதத்தும். (௯௬)

வீடு விழைந்த மறையவன்றான் வெய்ய கலியின் றோடமற
நாட லரிய மறையொழுக்க நிலைநின் றினிது நடாத்திடுக
தேடு ஞானத் தீச்சைவரிற் றிகழுங் கிரியை விரிவின்றிக்
கூடு மவற்றைச் சிறிதிழைத்து ஞானப் பயிற்சி குறித்திடுக. (௯எ)

ஞானப் பயிற்சி யாற்பாவ நண்ணி டாது சருகுநிறாள்
கானக் கனலி னகப்பட்டாற் கணத்திற் றுகளாய்க் கரிவதுபோன
ஞானத் தழலா லறிந்திழைத்த வினையோ டெல்லா நசித்துவிடு
ஞானி கிரியை செய்திடினுங் கலியின் றோட நணுகுறான். (௩௮)

வேத முடிவின் கேள்வியின்றி விடினு மிசையா ததைமிசைந்து
நீதி யல்ல செய்திடினு மவனைத் தீங்கு நெருங்காவாம்
போதும் பாம ஞானமுறிற் சிவமே யாவன் புண்ணியமுந்
தீது மவனைச் சோாமற் சிதைந்து விடுமெய்ஞ் ஞானத்தால். (௩௯)

சிறிது முயற்சி யோடிருந்தும் பெரிது முயிர்க்குச் சிறப்பளிக்கு
மறுவி லின்ப நலனுதவு மிடையூ றனைத்து மாற்றிவிடு
முறுதி யாக வெஞ்ஞான்று ஞானப் பயிற்சி யுறல்வேண்டு
மறலி னிடைவா யிலிகும்ப மமிழ்த்தி னெவ்வாற் ருனுமது. (௪0)

சின்னாட் சென்ற வளவிலே தெண்ணீர் நிறைந்து விடுமதுபோற்
பன்னா டோறும் பயின்றவர்க்கு ஞானம் பரிபூ ரணமாகுந்
துன்னு நின்ற விந்தனத்து ளிருந்த வன்னி சுடல்போல
வுன்னு நின்ற ஞானமுமுள் ளிருந்தெ மாசை யுடன்றெரிக்கும். (௪௧)

நீசக் கன்னி தனைநிருபன் விழைந்தா லவளு நிருபனுக்கங்
காசைக் கிழத்தி யாமெவரும் பழிப்பற் றவளை யறமதிப்பா
பூசக் காத்தி னெய்யவனு ஞான வேந்த னெடுபொருந்தின்
மாசற் றவனை வானவர்தா னவரும் பழியார் மதிப்பரே. (௪௨)

எற்றை ஞான்று மிஞ்ஞான மெனுமூ தியத்துக் கழிவில்லை
மற்றை யதுவு மறைமுடிவின் ஞான மன்றி வேறன்று
சொற்ற வினைய முறையன்றி யாவ னெனினுந் தொல்காசி
பற்றி யடைந்து பரிவினெடு மணிகன் னிகையிற் புனல்படிந்து. (௪௩)

ஆதி யகிலே சனைச்சேவித் தியன்ற பூசை யாங்கியற்றி
யோது மொருநா ளானுலு மிரவு பகலு முணவொழிந்தோன்
மோது கலியின் றோடத்தைத் தணப்ப னன்றி முரிதிரைநீர்ச்
சீத நறும்பொன் முகரிசூழ் திருக்கா ளத்தி சென்றடைந்து. (௪௪)

தெண்ணீர் தோய்ந்து தென்கயிலை நாதன் றனையுந் தெரிசனைசெய்
துண்ணு தற்றைக் குபவசித்துப் பூசை யிழைத்தோ னொருகாலு
நண்ணான் கலியின் றோடமவன் பிறவிப் பிணியு நனிதீர்வன்
விண்ணோர் பாவு மப்பதியை வருந்தி யெனினு மிகவடைந்து. (௪௫)

அன்பி னுடனே யாவனொரு மனித னுங்கண் வதிவனவ
னின்ப மனிதர் தம்முளுமற் றெல்லோ ருள்ளு மிணையில்லான்
றுன்பக் கலிதோ டங்குரப்போ னிம்மா நகர்க்கே துணிந்துறைக
நன்கு திருக்கா ளத்திநகர் நாதன் றன்னை வணங்காமல். (சக)

முத்தி விழைந்தோன் முதிர்பசிக்குச் சொன்றி யல்லான் முதியவிடூந்
துய்த்த சதுரா னுகுவனுற் சுருதி முடிவின் மறைவாகி
வைத்த ஞான முனக்கிசைத்தேம் வந்த திதுதான் வழிவழியாச்
சுத்தர்க் குணர்த்து மற்றையர்க்குச் சொல்லே லென்றான் பரஞ்சோதி.

ஆகச்செய்யுள், கசஅக.

முப்பத்தோன்றாவது

# ஞானோபதேசமுணர்த்திய அத்தியாயம்.

மூன்றுமே வொருகற் பத்தின் முதுதேவ தாரு காவி
லந்தணர் பிருகு வென்பா னத்திரி வசிட்டன் றாய
சிந்தையின் புலக னாதி கவுதமன் றிகழ்மா ரீசன்
றந்துபி கால பத்ர னுயுண்மான் சுமந்து தக்கன். (க)

கிங்கண னுருத்ர பத்தன் கிஞ்சுகப் பிரபன் மாரன்
கங்கணன் கவுசி கன்கா கோலுக னருட்கா குத்தன்
றங்குகா சிபன்சம் வத்த னுதூர்தோ து தவக்கி ரீடி
யங்கமர் பிரிய னாதி வருணனு ரோக்கி யன்றான். (உ)

கண்ணுவன் விசுவா மித்ரன் புலத்தியன் கணன்சு கேது
நண்ணிய கிருது சீல வாமனே தூர்ப் பெலன்மெய்ஞ் ஞான
மண்ணுது ரதிக்ர மன்று னுதியா மருந்த வத்தோ
ரெண்ணுறு நாற்பத் தெண்ணு யிரவாங் கிருந்தா ரன்றே. (ங)

அன்னவர்க் கிருளை வீட்டி யரியஞா னம்போ திப்பான்
முன்னர்நாங் கணவ னுக முகுந்தனம் மனைவி யாகப்
பன்னருங் கோல மெய்திப் பாசடைத் தவப்பள் ளிக்கட்
டுன்னுனர் காணச் சென்றேம் பலியெனத் தொல்வ னத்தே. (ச)

மற்றவர் பன்னி மாரெம் வனப்பினை வந்து நோக்கி
யற்றன ரறிவு நாணு மாசைகைம் மிக்க மிந்தார்
பற்றகன் முனிவர் மைந்தர் பாரியாம் வஞ்ச மாதை
முற்றினர் தழுவி யாரு முயங்கினர் மோகித் தார்கள். (ரு)

அழிதரு கிழத்தி மாரை யந்தண ரறவோர் நோக்கித்
தழலெனச் சீறி யாபி சாரமாங் கிழைத்தா ரெம்பான்
முழுவது மேவிச் சாரா முறைமைகண் டெவரு மொய்த்துப்
பழிவிளைத் தவனீ யார்கொல் வந்ததென் பகர்தி யென்ன. (௬)

என்னைநா னின்ன னென்றே யியம்புவ னுமக்குப் பின்னர்
மன்னிய விவளோ டெண்டு வந்தது தவத்துக் கென்ன
நின்னுடைத் தவத்துக் கேது குறையென நெருப்பிற் பொங்கித்
துன்னினர் நீங்கி யில்லந் தோறுமியாம் பலிகொள் போதில். (௭)

வந்தெழிற் கற்பின் மிக்க வருந்ததி யெம்மை நோக்கிப்
போந்துதாள் விளக்கி யன்பி னுதனத் திருத்திப் போற்றி
யேய்ந்தபாத் தியமுன் னாய யாவுமீந் தினிய கூறி
வாய்ந்திடு பலியு நல்கி வணங்கின ளொன்று சொற்றாள். (௮)

யாண்டுளீர் யாவர் நீர்நும் மொழுக்கமியா தென்றாள் யாந்தா
மீண்டுகந் தருவ னன்று தேவனன் றியக்க னன்று
காண்டகு மாக்க னன்று கருதின்மா னிடனு மன்று
தீண்டரும் பாம்பும் புள்ளும் பசுவுமன் றுண்மை செப்பின். (௯)

சத்தமுன் னைந்து மன்று தயங்குமைம் பூத மன்று
புத்தியைம் பொறிக ளன்று செய்விப்பான் புசிப்பா னன்று
வித்தையன் றவித்தை யன்று விதந்தவாச் சிரமி யன்று
துய்த்திடு மின்ப மன்று துன்பமு மன்று தோகாய். (௧0)

சாதனஞ் சாத கன்சீர்ச் சாத்திய மன்று சாற்றப்
பேதைகேள் சித்தர் தம்முட் பெரியர்யாம் பிரிவற் றெங்கு
நீதிய வியோமம் போன்று நிறைந்துளே நிறைந்த வாற்றால்
யாதொரு தலத்தி னின்றும் போந்தன மெனப்ப டேமால். (௧௧)

ஆயினு மவிர்செஞ் சோதி யருக்கன்மண் டலத்தே நின்றுஞ்
சேயிழை யோடு வந்தே மிருவர்க்குஞ் சிந்தை தம்மின்
மேயின செய்த றூனே விழுத்தகு மொழுக்க மாகு
நீயினி யுணர்ந்து கோடி நிகழ்த்திய வினைய நீரால். (௧உ)

நின்னுடைக் கணவ னெம்மை யாதரித் ததனு னீவந்
தென்னிடைப் பரிவு கூர்ந்திட் டினிதுப சரித்த வாற்று
துன்னிடத் துவகை யுற்றே மெனவவ ளொருவி வஞ்ச
மின்னிடை யவடன் னோடு மறைந்தனம் விரைந்து மாதோ. (௧௩)

வேறு.

அங்கண்மா ஞாலமு மசைந்த தத்தவர்
தங்கண்மந் திரங்களுந் தவறச் சிந்தையிற்
பொங்குறு தியானமும் பொலிவ ழிந்தன
மங்கல வனமும்பின் வனப்பின் றுயதால். (கச)

ஆங்கவ ரனைவருங் குழுமி யந்திலைத்
தேங்கம லத்தவி சுவந்த தேவனைத்
தாங்குறு குற்றனர் தொழுது தாழ்ந்தன
ரீங்குறு செய்திகள் யாவுஞ் சொற்றனர். (கரு)

சொற்றவை கேட்டலுஞ் சுருதி நான்முக
னுற்றமை யுளத்திடைத் தியானத் தூலுணர்ந்
திற்றென விசைப்பனும் மிருக்கை யெய்துறப்
பெற்றவன் மாலொடு பிறைகொள் வேணியான். (கசு)

கட்புல னுகவுங் கடவுட் டன்மையை
யுட்கொளா துணர்விழுந் தூம ராயினீர்
மட்குறு மகமுதன் மற்றி யாவையுந்
திட்பமாங் கல்விகேள் விகளுஞ் சிந்தினீர். (கஎ)

மூந்துபல் பவந்தொறு முயன்ற நன்மையா
லந்தமில் பரம்பொரு ளனையப் பெற்றுநுஞ்
சிந்தையின் மருட்சியாற் றெரிவு றுமையின்
வந்தனிர் மலர்கபேய் வழிப டாமலே. (கஅ)

எவனரு ளாலுல கினிது தோன்றுவ
வெவனரு ளாலவை யினிதொ டுங்குவ
வவனுமை யடித்தாலும் மாண வத்தினு
லிவனென வறிவுறீ ருமைவிட் டேகினுன். (ககூ)

அறிவுமக் கின்மையா லவம தித்தனிர்
மறுவில்சீர் வானமுன் வகுத்த பூதமு
மெறிகதிர்ச் சுடர்களும் யாவ னுணையி
னெறியினி னின்றுதந் தொழினி கழ்த்துவ. (உ0)

அவற்றினுக் கீசனு மவனை யெள்ளியே
தவக்குறை யாலேயோ தவறி ழைத்தனி
ருவப்புறு பிரமனு முவணை வூர்தியுஞ்
சுவர்க்கமன் னனுமவன் வேறு சொல்வதென். (உக)

இனிதளிப் பவனவ னில்லென் பானவ
னனைவருக் கும்முயி ராவ னன்னவ
னெனையவற் றொடுமியைந் தியைந்தி டானவன்
றனைநிக ரவனியல் சாற்றற் பாலதோ. (உஉ)

மாசிவ னுருத்திரன் மகேச னீச்சுரன்
பேசருஞ் சங்கரன் பிரம மென்றுமற்
றேசறு பெயரினால் யாண்டுந் தோயினு
மாசிலிவ் விடத்துளா னெனவ நப்படான். (உஙு)

பாவனை யில்லவன் பாவிக் கப்படா
னேவரு மலங்களோ ரைந்து முற்றிடான்
மேவுமைந் தெழுத்துரு வாய்வி ளங்குவான்
யாவினும் வடிவில னென்ன லாகியும். (உச)

மற்றுநும் மிடத்தருள் வைத்த தால்வடி
வுற்றுமக் கெதிருற வுலகம் யாவையும்
பெற்றிடு மாயனும் பெண்ண ணங்குடன்
றுற்றநும் வனத்திடை வந்து தோன்றினன். (உரு)

அன்னவன் முத்தியை யளிப்ப னென்றுளத்
துன்னிநீர் சரணடைந் துய்ய வேண்டுமே
லிந்நிலை யேசிவ லிங்க பூசனை
மன்னுபு நாடொறு மிழைத்து வாழ்த்துமின். (உசு)

எத்தலத் துளதுகா ளத்தி யென்பது
தத்துபொன் முகரியெத் தலத்தி னுற்பவ
முத்தியை யறம்பொரு ளின்ப மூன்றுடன்
பத்தர்கட் கெத்தலம் பாலிக் கின்றது. (உஎ)

எந்நதி கங்கைதோய்ந் தமல மெய்தினன்
மன்னுகோ தாவரி வந்து மூழ்கியே
பொன்னெடுங் கிரிவலம் வந்து போற்றுபு
தன்னடைந் துளவினை தணந்து போயினள். (உஅ)

நன்னதி யாவுமெந் நதியின் மூழ்குபு
துன்னருந் தம்வினை துரந்து போகுவ
வந்நெடுந் தலந்தனை யடைந்து நீவிரு
முன்னருங் காமமா தியவு ருதொரீஇ. (உகூ)

ஐந்தையு மடக்கியந் நதியி னடிமற்
றெந்தைகா ளத்திவெற் பினையு நல்வலம்
வந்துதாழ்ந் தெழுந்தவண் வைகி யற்றைநா
ளந்தணர்க் குஞ்சிவ யோக ராயுளார். (௩0)

தமக்குமற் றன்பர்க டமக்குந் தானங்க
ளுமக்கியன் றனவளித் துணவொ ழிந்திருந்
தமைப்பருந் தொல்வன மடைந்தி லிங்கத்தி
னுமைக்கொரு பாகனை யுவந்த ருச்சனை. (௩௧)

ஆற்றுமி னப்பொழு தண்ண றோன்றுவன்
போற்றுமின் பூசனை புரிமி னன்னவன்
மாற்றருங் கருணையால் வளங்கொண் மாமறை
யீற்றினின் ஞானமாங் கினிது ணர்த்துவன். (௩௨)

வெய்யதோர் மாயையை வீட்டி வீடெனு
மையறு காட்சியா னந்த வாழ்வுபெற்
றுய்யுமி னெனவய னுரைப்ப வாங்கவன்
செய்யதாள் பன்முறை பணிந்து சேவித்தே. (௩௩)

குழறிய மொழியினர் கூப்புங் கையினர்
பொழிபுனல் விழியினர் புகழு நாவினர்
விழுமிதின் விடைகொடு போதன் மேயினர்
தழுவுபொன் முகரியந் தண்ண றும்புனல். (௩௪)

ஆடின ராடுறு மளவின் முன்னமே
கூடிய பாவம்யா வுங்கு லைந்தகன்
றோடின விறைவனை யுவந்து கண்ணுறீஇ
மாடுற மும்முறை சூழ்ந்து வாழ்ந்துபின். (௩௫)

மறைமொழி மனுவினும் வழக்கி னும்புகழ்ந்
திறைவனை நினைந்துண வின்றி யப்பக
லுறுபுனற் பிற்றைஞான் றுவந்து மூழ்குபு
குறைவில்சீ ரந்தண ருவகை கூர்ந்திட. (௩௬)

ம்ழவிளங் கன்றொடு சுரபி மாநிலம்
விழுமிய நன்னிதி விழைவொ டீந்தனர்
செழுவிய கனிகிழங் கீதல் செய்தனர்
பழுதில்சீர் வேதியர் பரம யோகியர். (௩௭)

கண்ணுத லடியவர் களிசி றந்திட
வுண்ணுறு மறுசுவை யடிசி லூட்டுபு
நண்ணுகா ளத்திநா தற்குப் பூசனை
பண்ணிநல் விடைகொடு பணிந்து போயினர். (௩அ)

பண்டையி னெல்லையிற் பதிந்து நற்றிரி
புண்டர நுதலினர் புனித னைந்தெழுத்
தண்டுறு தாரகத் தழுத்து நாவினர்
மண்டொளி திகழ்சிவ லிங்கம் வாய்ப்புற. (௩௯)

கட்டழ குறக்கொடு கமழ்தெண் ணீரினன்
மட்டவிழ் மலரினல் வளர்செஞ் சாந்தினு
ளுட்டெளி வுங்டயர்பூ சனையு ஞற்றினர்
தட்டுத விலாதுபல் காலந் தங்கியே. (சO)

இன்னண மொழுகுறு மேல்லை தன்னில்யா
மன்னவர் மகிழ்ந்துறை யவ்வ னத்தினி
னன்னலந் திகழ்திரு நீறு நன்னுதன்
மன்னுபுண் டரமொளி வயங்கி வாய்ந்திட. (சக)

கொடிபுரை நுண்ணிடைக் கொம்மை வெம்முலைக்
கடிகமழ் கருங்குழற் கவுரி தன்னொடு
நடைபயின் றுள்ளுளே நகைகொண் டன்னவர்
கடைதொறும் பலியினைக் கைக்கொள் வாமென. (சஉ)

அடைந்தன மங்கிலே யனையர் கண்ணுறீஇத்
தடங்கம லத்தயன் சாற்றும் வாய்மொழி
திடங்கொளு மனத்தினர் சிந்தை யாலறிந்
துடங்குவந் தனைவரு முவந்து கிட்டினர். (சஙு)

அண்ணலிவ் வண்ணமே யணைவ னென்றுளத்
தெண்ணியிங் கவனெழுந் தருளி னானெனத்
துண்ணென வார்த்தனர் தொடர்ந்து சூழ்ந்துநந்
தண்மலர்த் தாளிணை பற்றிச் சாலவும். (சச)

மனமகிழ் சிறந்துபன் முறைவ ணங்கினர்
புனல்பொழி விழியினர் புளக மெய்யினர்
கனிதரு முளத்தினர் கரையில் காதலர்
நனிமிகக் குழறிய நாவி னூற்சொல்வார். (சரு)

இறையுமோ ரறிவிலா திருண்ட சிந்தையிற்
சிறியரேஞ் செய்பிழை பொறுத்தி தீரரும்
பிறவியங் கடலிடைப் பெரிது மாழ்கிமற்
றுறு துணை யின்றிநொந் துளையு மெங்களை. (சசு)

புரந்தருள் புரந்தரு ளென்று போற்றிநின்
றிரந்திரந் தடியில்வீழ்ந் தெழுந்து பண்முறை
நிரந்தன ரருச்சனை நிரப்ப வந்நிலை
வரந்தரு முமையொடெம் வடிவு காட்டியே. (சஎ)

சொற்றன மிவையருந் துறவிர் காளுமக்
கற்றமின் ஞானமா யநாதி யாகிவீ
டிற்றிட லாய்மறை யுரைத்த தாமொரீஇச்
சொற்றனைச் சொல்லுதுந் துணிந்து கேட்டிரால். (சஅ)

நுண்ணணு வுக்குநா நுண்ணி தாமணு
வொண்மகத் தினுக்குநா முறும கத்தெனல்
பண்ணுமெவ் வுலகும்யாம் பழையன் றானும்யா
நண்ணிய புருட னு மீசன் றானுநாம். (சகூ)

இரண்மயன் றானும்யா மேக நாதன்யாங்
கரமொடு தாள்செவி கண்ணின் றுயினுந்
தெரிகுவ மூழுவதுஞ் செப்பல் கேட்குதுந்
திரிகுவ மெங்கணுஞ் செய்வம் யாவையும். (ருo)

எம்மிலே யாவையு முணர்தும் யாமெமை
நம்முடை யறிவின னியு ணர்ந்துளே
மம்மமற் றொன்றின லறிகின் றேமலேஞ்
செம்மைவே தங்களாற் றெரிகு வோமும்யாம். (ருக)

மாமறை மூலநா மறைபி னீற்றினிற்
சேமுறு வித்துநாந் தீங்கு நன்மைக
ளாமவை யெமக்கிலை யழிவுந தோற்றமு
நாமறி யோம்வரு ணுதி யும்மிலை. (ருஉ)

சத்தமுன் விடயமுஞ் சாற்று மாயையும்
புத்தியு முடலமும் புரிவி னைப்பயன்
றுய்த்தலுஞ் செய்தலுந் தொழில்செய் வித்தலு
முய்த்திடு கருத்தனு மொன்று மன்றியாம். (ருங)

எம்முள்யாம் விளங்குதும் யாமெ வற்றையு
மெய்ம்மையாய் விளக்குவம் வெளியி னின்றும்யா
மம்மவோ ரியல்பிலே மலம கன்றுளே
மிம்முறை யாகிமற் றென்றும் வைகுதும். (௫௪)

தொடருநம் மாயையி னுலகந் தோன்றுவ
வுடலினை வேறெனு துயிர்க டாமெனு
மடமையி னுற்பலன் விழைந்து மன்னுயி
ரிடருறு பலவினை யீட்டு கின்றன. (௫௫)

மெய்யினை யுயிரென மேற்கொள் புத்திதா
னெய்துத லியல்பிலே யெமக்கின் றுதலாற்
பொய்படு முடலிலேம் பொய்ய தாமுடல்
செய்திடுந் தொழில்களு மெமக்குத் தீர்ந்தன. (௫௬)

முன்னும்யா மொருவமே முழுதுந் தோன்றிட
வன்னவற் றொடுகலர் தானும் வேறியா
முன்னிடி னவையெலா மொடுங்கிப் போய்விடிற்
பின்னும்யா மொருவமே பிறர்மற் றில்லையால். (௫௭)

நமக்குமுன் னொருபொரு ளில்லை நாடுறி
னெமக்குமற் றொருபொருள் பின்னு மில்லைநந்
தமக்கிணை தானிலைச் சகங்க ளியாவையு
மமைப்பம்யா மெமக்கடங் காத தொன்றிலை. (௫௮)

விளங்குசங் கற்பமும் விகற்ப புத்தியுந்
தெளிந்திடி னெமக்கிலை செப்பி னெம்மிடத்
தளந்திடு மளவையு மளக்குங் கோல்களு
மளந்திடு வானுமற் றில்லை யாமரோ. (௫௯)

திகழுவெஞ் ஞான்றினு ஞான சிந்தையின்
மகிழ்வுறு மின்பமா மிலக்க ணம்வதிந்
திகழ்வுறு வெமையறி யார்கள் யாவருந்
தகுதியா னம்மைநாந் தாமு ணர்ந்துளேம். (௬௦)

அனைத்துமுண் டாக்குதற் கெம்மை யன்றியே
யினைத்தென யாதொரு பொருளு மில்லையா
லெனைத்துநா முணர்ந்திடு மியல்ப தேயலாற்
றினைத்துணை யுயிர்க்கொரு செயன்மற் றில்லையே. (௬௧)

இயன்றுநாஞ் செய்திடப் படாத தேதுமி
லயர்ந்தமூ டர்களறி யாதி ருப்பம்யாந்
தயங்குமெவ் வுயிர்க்குஞ்சான் றாகி வைகுவோம்
வியம்பெறு தோற்றமுந் தோன்றி வீவதும். (௯௨)

உன்னிடின் மலத்தினா லலதுயிர்க்கிலை,
முன்னுயி ரின்னதோர் முறையிற் றோன்றிய்
இன்னுமே யின்னண மாவ தென்றிடு
மன்னதோர் விகாரமு மாவிக் கில்லையால். (௯௩)

அழிவில நித்திய மாகு மாருயிர்
பழையன வியாபகப் படுவ வவ்வுயிர்க்
கொழிவிலா வுயிரும்யா மொன்றற் றழிவுமை
மொழியினு மநேகமா மொழிவ ரேனுமாம். (௯௪)

வேறு.

பண்டை ஞான்று பரிபக் குவத்தராய்க்
கண்ட நுண்ணிய காட்சி யறிஞராய்
மண்டு தூய மனத்தின ராய்ப்பலர்
தொண்டு பட்டுச் சுருதி மொழியினால். (௯௫)

தமக்கு நாமுயிர் தாமென வெண்ணியே
சுமக்கு மோகக் கருமங்க ளைத்துறந்
தமைப்பி ரும்பர ஞான மடைந்தனர்
நுமக்கு மச்செயல் வேண்டி னுவலுவாம் ௯௬)

வருண வாச்சிர மத்து வகைப்படுங்
கரும நீத்துக் கழியு முடலென
வொருமித் தெண்ணி யுமக்குயி ராமெமைத்
தெரிம னத்திடைச் சிந்தைசெய் துய்திரால். (௯௭)

மாயை மெய்யினின் மானிடப் பாவக
மாய சிந்தை யகன்றுசங் கற்பமோ
டேய பேத விகற்பம்விட் டெம்மைநீர்
தூய வின்னுயி ராய்த்துணிந் துய்யுமின். (௯௮)

நிகரில் வேத நிதியாய்ப் பழையதாய்ப்
புகரி றூய பொருளா கியவெமை
யகலு றூதும் முயிர்க்குயி ராவெணி
நுகரு மின்பமுற் றேயிரு நோன்மையால். (௯௯)

இன்ன ஞான மியம்பின மின்னரு
டன்னை வைத்தவி ஞனுந் தமக்கியாம்
பின்ன மற்றிதைப் பெற்றுற் கிரியைக
டுன்னி யாங்கவர் தம்மைத் தொடர்வுறு. (எ0)

தண்ணந் தாமரைப் பாசடைத் தங்குநீர்
வண்ணம் போன்று வதியுமல் லால்வினை
பண்ணு வான்றனைப் பற்றித் தொடர்ந்திடா
துண்மை ஞானமுற் றோன்வினைக் குட்படான். (எக)

அன்ன வன்னிடத் தவ்வினை யென்செயும்
வுன்னி யுண்ட துகிலென மாய்ந்திடும்
பின்னர்த் தாங்தொட ராமுற் பிறப்பினிற்
றுன்னு கின்ற வினைப்பயன் றுய்த்தறும். (எஉ)

ஞானத் தானசி யாதது ஞானிக்கு
மூனத் தாற்கும துண்டே யுலப்புறு
ஞானத் தாற்குமுன் ஞளுள சஞ்சித
மீனப் பட்டிடு மேயெரி பஞ்சென. (எங)

வினையை மேற்கொடு செய்பவர்க் கவ்வினை
துனையப் பின்னருஞ் சூழ்ந்து தொடர்வுறு
மனைய தாற்பின்னு மவ்வினை யின்பயன்
றனைய ருந்தச் சரீர மெடுப்பரே. (எச)

எடுத்த ருந்துழி யின்னு மிழைப்பர்க
ளடுத்த டுத்து வினைகளை யாற்றலாற்
றடுப்ப தின்றிச் சகட்டுருள் போற்சகந்
தொடுத்த லின்றிச் சுழன்று திரியுமால். (எரு)

உண்ண வுண்ண வுஞற்றும் வினைப்பய
னெண்ண வெண்ண வளவின்றி யீண்டுறு
நண்ணு சாந்தியி ஞலு நசித்திடா
வெண்ணு ஞானத்தி ஞலன்றி யாவர்க்கும். (எசு)

இழைத்தி டும்வினை யாற்பிறப் பேகுமோ
வழுத்து நன்மையுந் தீமையு மாம்பய
னெழிப்ப தன்றவை யுண்டிடத் தக்கன
செழிக்க வுண்டுபின் சேடித்து நின்றவும். (எஎ)

குறித்தி டிற்சத கோடிகற் பஞ்சென்று
மறித்து முண்டு தொலைத்தன்றி மாள்கிலா
செறித்த நிட்டையிற் செந்தழல் வேள்வியி
னுறைத்த பூசையின் மற்று மொழிந்துள. (எஅ)

வினையி னாலும் வினைக ளொழிவுறா
வனைய தாம்வினை யன்றியஞ் ஞானமு
மினைய ஞானத்தி னாலன்றி யேகுறா
தெனவு ரைப்ப ரினிதுணர் மேலையோர். (எகூ)

முத்தி நல்கு முயலும் வினையென
வித்தி னத்தி னளவு மியற்றினீர்
புத்தி யின்மையைப் போக்கநும் பாலரு
வைத்த லானுமை தன்னொடும் வந்தனம். (அ0)

வந்து நாம்பலி வாங்குநர் போலடுத்
துய்ந்தி டும்பர ஞான முமக்குறத்
தந்தி டும்படி சார்ந்தன நீவிர்வா
ழுந்தண் பாசடை யாச்சிர மந்தொறும். (அக)

அளவி லாத வரும்பிறப் புத்தொறு
மொளிருஞ் செந்தழல் வேள்வி யுயர்தவம்
வளருந் தானமற் றுள்ளவற் றான்முனந்
தளர்வில் பாவந் தொலைந்தவர் தங்கட்கு. (அஉ)

ஞான சிந்தனை நண்ணுறு நற்றவந்
தானம் வேள்வி தகுதீர்த்த யாத்திரை
யூன மில்சிவ பூசை யுஞற்றிடும்
பான்மை யாலிது வல்லே பயன்படும். (அங)

நுங்க ளுக்குமுன் னோற்குந் தவங்களிற்
றங்கு கின்ற மயக்கந் தழைத்தலாற்
பொங்கு சீர்ச்சிவ பூசை மகத்துவ
மிங்கு ணர்ந்திலி ரிற்றைஞான் றெல்லையும். (அச)

நறவு பில்கிய நாண்மலர் மேலவ
னறிவு றுத்த வறிந்தருச் சித்தனி
ரிறைவ னைத்திருக் காளத்தி யீசனைப்
பெறல ருந்தவத் தாற்றொழப் பெற்றனிர். (அரு)

பெற்ற தாற்பல பாவப் பெருக்கெலாஞ்
செற்று ளீர்திகழ் வேத சிரத்தினி
னுற்ற ஞானமு முள்ளங்கை வில்லம்போற்
பற்றி னீரொன்று கேண்மின் பகர்ந்திட. (அசு)

மறுமை யில்லெனு மாசுடை யாளர்க்கு
மறிவெ னுஞ்சுட ரற்ற குருடர்க்கு
முறுதி யாயவிஞ் ஞான முருசியா
மறுமை யில்லெனும் வஞ்சக ரெள்ளுவார். (அஎ)

தெருளி லாருந் திகைத்திது கொள்கிலர்
மருளி லாத மதியுடை நீவிரிப்
பொருளை யெண்ணிப் புவியிடை மாந்தருக்
கருளொ டும்பரி பாகத் தறையுமின். (அஅ)

ஊன மின்றிய நான்மறை யுச்சியி
லான ஞானமெஞ் ஞான மதைநுமக்
கீன மாயை யிருளறுத் தின்புறு
மோன முத்தி பெறநா மொழிந்தனம். (அகூ)

மன்னு கின்ற விதனை மறைவழி
தன்னி னிற்பவர் தங்களுக் கோதுமி
யர்க்கறி வித்தா ல
நன்மைக் கேதுவன் றுய்விடு நாடிடின். (கூ0)

அங்கண் மாநிலத் தைதிக நூல்களு
மிங்கு நாம்விதித் தேமவை யெண்ணுறிற்
பங்கு பங்காய்ப் பலபல மூர்த்தியைத்
தங்க டங்களிற் றுபித்துக் கொள்வன. (கூக)

அனைய மார்க்க மளப்பரும் பாவிகட்
கினிய வாக விருக்கு மவர்களுக்
கெனைய கோடிகற் பங்க ளிகக்கினும்
வினையி னீங்கிய வீடுபே றில்லையே. (கூஉ)

மற்று நீவிரிவ் வைதிக மார்க்கத்தை
யெற்று நீர்வரைப் பின்க ணிதமுயி
ருற்றி டும்படி யோதுமி னென்றுநாஞ்
சொற்ற னந்தற வோரது கேட்டபின். (கூங)

கழுமு கிழ்த்துக் களிதூங் குளத்தினர்
சிரமு றப்பணிந் தேத்துபு சிந்தைநைந்
துருகித் தங்க ளுயிர்க்குயி ராகமைப்
பரிவி னோடென்றும் பாவிக்கும் பண்பராய். (௯௪)

நாமு ணர்த்திய ஞான வழியினுந்
தோமில் பத்தியி னாலுஞ் சுருதியி
னுமொ ழுக்கந் திடங்கொண் டரியநாண்
போழு ளத்தின ராயெப் பொழுதினும். (௯௫)

அம்மு றைக்க ணொழுகி யறிவுளோர்
தம்மி டத்தினுந் தாபித் தனரதை
யிம்மு யற்சியி னிவ்வுப தேசத்தைச்
செம்ம னத்தி னவர்க்குத் தெளித்தனம். (௯௬)

பிற்றைக் காலஞ் சிறிது பிறகிடப்
பற்றிக் கேள்விப் படுமவர் தாமெலா
முற்றக் கேட்டு முறையே நிலைநின்று
மற்றுப் பேத மிலாது வதிந்தனர். (௯௭)

அன்ன வர்க்குட் சிலர்க்கரும் பாவத்தாற்
சொன்ன ஞானந் துலங்கிய தில்லையாற்
பின்ன ரீம்முனி மைந்தர் பெருந்துயர்
தன்னை யெய்தினர் தத்தமிற் றுஞ்சிலர். (௯௮)

வீற்று வீற்று விகார மடைந்துமுன்
னேற்றி ருந்தகா ளத்தியி னெய்தடைந்
தேற்று வெண்டிரை முத்த மெறிந்திடும்
போற்று புண்ணியப் பொன்முக ரிக்கணே. (௯௯)

சென்ற டைந்துநற் றீம்புன லாடினர்
மன்றன் மாக மகத்தின் மகிழ்வொடு
நன்று மும்முறை நம்மை வலஞ்செயா
வொன்று சிந்தையொ டோரைந் தெழுத்தினால். (௧௦௦)

நித்தம் பூசை நிரப்பியொ ராண்டுசெ
லத்தி னத்துறு மாசி மகத்தருண்
முத்தி நல்குநன் னீரினின் மூழ்கியே
யுத்த மத்த ருளத்தெமை யுன்னினார். (௧௦௧)

அனைய காலையி லம்பிகை தன்னொடு
மினிய பால ரிருவ ரொடுமுளங்
கனியு நந்தி கணத்தவர் தம்மொடும்
வனச மேலவன் றன்னொடு மாலொடும். (கOஉ)

வச்சி ரப்படை வாசவன் றன்னொடு
மிச்சை வானவ ரேனையர் தம்மொடு
முச்ச கத்தின் முனிவர் குழாத்தொடு
நச்சு மன்புடை நம்மடி யாரொடும். (கOங)

பூர ணைக்கட் பொருந்திய வம்மகத்
தார ணத்தி னருந்தவ ரெண்ணிய
கார ணத்தின் கருமம் பயன்படச்
சீர ளித்திடு தீம்புன லாடினேம். (கOச)

ஆடு கின்ற வதனு லவர்தமைக்
கூடி நின்றவெம் பாவங் குலைந்தன
தேடு ஞானந் தெளிந்தனர் சிந்தையி
னீட வேதரித் தார்நிலை பெற்றனர். (கOரு)

மறித்து மந்நகர் தன்னிலம் மாதவர்
சிறப்பி னத்தலத் தெய்விக மேன்மையைக்
குறித்துக் கொண்டவண் வைகிக் குலர்வினர்
பெறற்க ரும்பயன் பெற்றிடு மாயிடை. (கOசு)

இயன்ற வாற்றி னிருநிதி தானிய
முயன்றி யாதொன் றளித்த முழுத்தவ
னயன்ற ருஞ்சிவன் றன்னுரு நண்ணுவான்
பயின்ற வப்பதி யும்பதி சூழ்தரு. (கOஎ)

நாடு தானு நமக்குநந் தேவிக்கும்
பீடு சான்றிடு பெட்பளிக் கின்றன
நாடி யங்கண் வதிந்தவர் நல்லறந்
தேடி னார்திரும் பப்பிற வார்களே. (கOஅ)

வாய்மை சொற்றனஞ் சொற்றன மற்றெவர்
தூய்மை பெற்றவந் நாடு துயர்ந்திடத்
தீமை செய்வது சிந்தையி லெண்ணினோர்
யாழி சைக்குதுங் கேளவ ரின்னலை, (கOகூ)

உலறு பங்கி யொடிகவு ளாழ்ந்தகண்
ணிலகும் வாளெயிற் றெக்கும் வயிறுடை
யலகை யாகி யயுத வருடமட்
டலைவு பெற்றுப் பிறந்தே யுழன்றபின். (ககo)

புன்ம லத்திற் புழுமுத லாகிய
சென்ம முற்றுத் திளைப்பர் கொடுந்துயர்
நன்மை யாற்றியந் நாட்டைப் புரந்திடுந்
தன்மை யாளர் பெறும்பயன் சாற்றுதும். (ககக)

இம்மை யிற்பெருஞ் செல்வ மினிதுபெற்
றம்மை யிற்சுட ரம்பொன் விமானமேற்
பொம்ம னல்லெழிற் புத்திரர் பேரர்கூ
டம்மொ டுந்தமைத் தந்தவர் தம்மொடும். (ககஉ)

தேறல் பில்கிய செம்பொற் றருநிழன்
மாறில் செல்வ வளநக ரத்திடை
யீறில் கால மிருந்தின்ப மெய்தித்தே
னூறு தாமரை யொண்பொகுட் டுற்றவன். (ககங)

மல்ல லோங்கெழின் மாநக ரத்திடை
யெல்லை யின்றிய வின்ப நுகர்ந்துபின்
முல்லை யூரான் முகிழ்முலை யம்புய
வல்லி கேள்வன் வளம்பதி தன்னிடை. (ககச)

அங்க வன்றனக் கொத்த வரும்பெறன்
மங்க லந்திகழ் வாழ்வு நெடிதுதுய்த்
தெங்க ணும்பிணை யின்றிய நம்முல
கங்க டைந்துநம் பாலன்ப தாகியே. (ககரு)

இன்பம் யாவையு மெய்தி மலர்மக
ளன்பன் றன்னொரு கற்ப மமர்ந்ததன்
பின்பு ஞானமும் பெற்றுநம் பேரரு
ணன்கு சேர்முத்தி நண்ணுவ ரன்னவர். (ககசு)

செப்பி டிற்றிருக் காளத்தி நாதனுக்
கொப்ப தாக வொருசிவ லிங்கமும்
வைப்பின் மூவுல கத்துளு மற்றிலை
யப்ப திக்க ணடைக வறிந்தவன். (ககஎ)

மறைச்சி ரத்தினில் வாழ்நி தி யாயுயர்
சிறப்பு டைப்பா ஞானத்தின் செய்தியை
யுறக்க ருத்திலர்க் கோதவொண் ணுதிது
பிறப்ப றத்துணி வார்கட்குப் பேசலாம். (கக௮)

ஈண்டி யாவர்க ளிவ்வதத்தி யாயத்தை
பூண்டு கற்பவர் கேட்பவர் முந்தையிற்
றாண்டு பாவத் தொடர்பற்று ஞானத்தைப்
பூண்டு பேரின்ப வீட்டிற் புகுவரே. (ககக)

ஆகச்செய்யுள், க௯௦௦.

முப்பத்திரண்டாவது

# * இருபு நிதாகனுக்குபதேசித்த அத்தியாயம்.

முருகவிழ் தாமரை முதல்வன் முன்னைநாள்
விரிவுறு முலகுயிர் விதித்துங் காமத்தாற்
பிரிவருந் தேவியுந் தானும் பெட்புடன்
மருவினன் பன்னெடுங் காலம் வைகினன். (க)

மற்றவண் முப்பதி னுயி ரம்மகப்
பெற்றன னன்னவர் கண்ட பேதையர்ப்
பற்றினர் புணர்ந்தன ரனையர் பாங்கரிற்
றுற்றிய வரக்கரெண் ணிலர்க டோன்றினர். (உ)

ஆங்கவ ராலுல கலக்க ணெய்தலு
மேங்கினர் முனிவர ரமரர் யாவரும்
பூங்கம லத்தவன் செவிபு லப்படத்
தாங்கரு முறையிடத் தணந்து மோகத்தை (௩)

பரமனை யுளத்திடைப் பதிவித் தெண்ணுறுப்
பிரமனஞ் சேலென வவரைப் பேசியே
வரமிகு மொருமக வுயிர்ப்ப மற்றவ
னுரமிகு மாக்கரை யொருங்கு வீட்டினன். (௪)

அருந்தவ ரிமையவ ரச்சந் தீர்ந்துபோ
யிருந்தன ருலகெலா மின்ப மெய்தின
பிரிந்துள மலரயன் பின்னைத் தன்னொடாந்
தரந்தையுற் றெள்ளல்செய் தறைகு வானிவை. (௫)

* ரிபுவென்றும் இப்பெயர் வழங்கும்.

யாதுசெய் தனனியா னெனது காமமிக்
கீதுடை மைந்தரை யுயிர்த்துந் தீர்ந்தில
போதநெய் சொரிதொறும் பொங்குந் தீயெனக்
காதல்கைம் மிகுந்ததென் றுளங்க வன்றுபின். (௬)

தன்னுடை மனைவியுந் தானுஞ் சாத்திக
மன்னியைம் பொறியையும் வாட்டி மாநிலத்
தெங்நக ரங்களு மிணையின் றாகிய
நன்னக ராயகா ளத்தி நண்ணினான். (௭)

பின்னலந் தாழ்சடை முடித்துப் பேரொளி
நன்னலந் திகழ்திரு நீறு நன்கணிந்
துன்னருஞ் சீனாயு முடுத்து ருத்திரன்
றன்னுடை யக்கமா லிகைத ரித்தனன். (௮)

புனிதநீற் றுத்திரி புண்ட ரம்புனைந்
தினியவெண் டிரைகொழித் திலகு நித்தில
நனிசொரிந் திலங்குபொன் முகரி நன்னதி
தனின்முழு கினன்றிரி காலந் தம்மினும். (௯)

சருமசாங் கந்தமுங் கனியுந் தானுகர்ந்
தொருபதப் பெருவிர லுதியை யூன்றிநின்
றிருகர முச்சியின் முகிழ்த்தி யாதினும்
பரிவொரீஇ யுடற்கொரு பற்று மின்றியே. (௧0)

உள்ளமும் வெருவர லொழித்தொன் றாய்நறுங்
கள்ளவி ழிதழியங் கற்றை வார்சடை
வள்ளலை மறுவில்கா ளத்தி மாநகர்க்
கிள்ளையந் தேமொழி யுமைதன் கேள்வனை. (௧௧)

குறித்தெழுத் தைந்தையுங் குடிலை தன்னொடுஞ்
செறித்திடு செபத்தொடு சிந்தித் திம்முறை
மறுக்கருந் தேவர்தம் வருட மாயிர
முறைத்திடு கருத்தினோ டுஞற்றி னன்றவம். (௧௨)

அவன்மனைக் கிழத்தியு மனைய பான்மையிற்
றவநனி யிழைத்தன ளிருவர் தம்மையு
முவகையுற் றுமையொடு மொருங்கு தோன்றினோங்
கவலையற் றிருவரு மெம்மைக் கண்ணுறா. (௧௩)

வீழ்ந்தனர் பன்முறை வீழ்ந்து பின்னருந்
தாழ்ந்தனர் தாமரைத் தாளிற் றந்துயர்
போழ்ந்தன ரொருமொழி புகலுற் றாவர்
வாழ்ந்தன ராகியோர் வரங்கு றித்தனர். (கச)

வழுவிலா வறத்தினன் கருணை வாய்த்தவன்
கெழுவிய விதிவிலக் குணர்ந்த கேள்விய
னழிதரு பொறிகள்வென் றடைந்த ஞானவான்
விழுமிய வொருமகன் வேண்டு மென்றனர். (கரு)

ஆங்கவ ரியம்பிய வவையெ லாநிறைந்
தோங்கிய வொருமக னுமையும் யாமுமாய்ப்
பாங்குற வளித்தனம் பரம ஞானியா
யீங்கவன் பெயரினை யிருபு வென்பரால். (கசா)

அன்னவன் றனையுயிர் த தளவில காதலா
னன்மறைக் கிழவனு நண்பிற் றேவியும்
பன்முறை தழீயினர் பணிந்து காளத்தி
மன்னனைப் பின்னருங் கேட்ப ரோர்வரம். (கஎ)

மாகமா மகத்திற்பொன் முகரி வார்புன
லோகையாற் படிந்துதக் கினையு வந்தளித்
தீகையா லியன்றதா னமுமி மைத்துநின்
போகமா ராலயம் பொருந்திச் சேவித்தே. (கஅ)

நூற்றெட்டா கியவலஞ் சூழ்ந்து நோன்பென
வேற்றிடு பகலுண வின்றி வைகியே
போற்றினர்க் கினியநற் புதல்வற் பேறருண்
மாற்றருஞ் சிறப்பினிவ் வரமு நல்கென்றார். (கசு)

என்றலு மிறைவியை யிறைவ னேக்குறு
நன்றருள் பொழிந்துபின் னளின பீடமா
மன்றலம் பொருட்டுறை மறைய வன்றனை
யொன்றுற நோக்கிமற் றிவையு ரைப்பனல். (உ0)

மற்றிவண் மாசியின் மகந்தொ டங்குறு
வுற்றுள மதிதொறு மகமு தித்தநாட்
பற்றியிந் நோன்பினைப் பண்பி னுற்றிப்பின்
முற்றுமா சியின்மகந் தனின்மு டித்தவன். (உக)

பின்னாரோர் யாண்டினிற் பெறுவன் மைந்தனைக்
கன்னிகை யாயினுங் காளை யாயினு
மின்னவா றிழைக்கினிப் பயனை யெய்துவர்
துன்னிய வறுமைபோஞ் சொற்ற வெல்லையில். (உஉ)

வெம்பகை வென்றிட நோற்கின் வெல்குவர்
செம்பொனை விழைவுறிற் செம்பொன் சேர்குவர்
நம்பிய விஞ்சையை நாடி னண்ணுவ
ரிம்பரி னின்பமே யெண்ணி னெய்துவர். (உ௩)

இவ்வழி யொருவனுக் கிருக்க வில்லிடஞ்
செவ்வி தினல்கிடி னன்றிச் சிந்தையில்
வவ்விய தொன்றினை வழங்கி னுங்கவ
னுய்வுறு பாகதி யுறுவ துண்மையால். (உ௪)

ஈண்டையி னியற்றிய யாக நற்றவம்
பூண்டிடு மாசெபம் புரியுந் தானங்கள்
வேண்டிய வனுவள வெனினு மேருவிற்
காண்டகு பெருமையாய்க் கதிவ ழங்குமால். (உ௫)

என்றிவை யினிதுரைத் திறைவ னேடவிழ்
மன்றலம் புரிகுழன் மகரு வார்குழைக்
குன்றுறழ் குவிமுலைக் கொடிநு சுப்பிடைத்
தன்றுணை யுமையொடுந் தான்ம றைந்தனன். (உ௬)

## வேறு.

மன்றவுறு மேல்வைக்கண் மலரவன் மகிழ்தூங்கி
யெறிபுன னதிமூழ்கி யிறையவ னுறைகோயின்
முறைமுறை சூழ்போந்து முகமலர்ந் தினிதேத்தி
நிறையுறு தேவியொடு நீடுல கெய்தினனால். (உ௭)

சிறந்துள விருபுவெனுஞ் செங்கனி வாய்மைந்த
னிறைந்திடு ஞானமொடு நீணில மினிதுய்யப்
பிறந்திடு பொழுதேநற் பேரறி வொடுதோன்றிக்
கறங்குதெண் டிரையுலகிற் கடவுளர் வருடத்தில். (உ௮)

ஓரைந் தங்காறுந் திரிவுற வுலகுள்ளோர்
நேர்பட வன்னவனைக் கண்டுள நெக்கிலராற்
றீர்வரி தாகிமுனைட் செய்துள தீவினையா
லார்வ முடன்பணிவுற் றவனுயர் ஞானத்தை. (உ௯)

பெற்றினி துய்யாமற் பேதைய ராய்வைக
மற்றவ னம்முழையே வைத்திடு மன்பினனுய்ப்
பற்றொரு சிறிதிலனுய்ப் பல்லுயி ரின்கண்ணு
முற்றிடு மின்னருளா லொருநிலை வுட்கொள்ளா. (௯0)

என்னுடை ஞானமிஃ திவ்வுல கின்கண்ணே
மன்னுதல் பெறல்வேண்டு மற்றிடை யூறின்றி
யுன்னுறு மாணவக னொருவனை யான்றேடி
யன்னவ னுக்கருள்வ லென்றினி தாராய்ந்தான். (௯௧)

இரைபுனல் படுகரிடத் தெவ்வகை யிழிதருமவ்
விரைவென வும்பலநாண் மிகுபல மாதங்கண்
மருவிய வருடத்தை யெவ்வகை மருவுறுமப்
பரிசென விதுபெறவோர் பாலக னேயடைக. (௯௨)

என்னுமொர் துணிவுடனே யெங்கணு மினிதுலவ
வந்நிலை யேயொருவ னளவில் பவந்தோறு
முன்னுறு நல்லறனு முற்றிய நமதருளுந்
துன்னிய வொருபுதல்வன் வந்தெதிர் தோன்றினனுல். (௯௩)

புலத்தியன் மைந்தனவ னிதாக னெனப்புகல்வோ
னலத்தகு மில்லொழுக்க நாளுந முயன்றுடையோன்
சொலத்தகு தூமறையோன் கண்டு துதித்திறைஞ்சிக்
குலத்துயர் தன்னில்லங் கொண்டு நடந்தனனுல். (௯௪)

ஆரமு துறழினிய வடிசிலை நுகர்வித்துச்
சீரிரு புவினுக்குச் செப்புவ னொருதீஞ்சொல்
பேரருளும்முணர்வும் பெற்றுள பெரியோய்கே
ளோர்தமி யேனுக்கிங் குய்வகை யருளென்றான். (௯௫)

சொற்றிடு மவன்விழைவுந் தூய்மையு மெதிர்நோக்கிப்
பெற்றினி தவனுய்யப் பெறலரு ஞானத்தைத்
தெற்றென வின்னருளாற் றெளிவுற வுணர்விப்பான்
மற்றவன் முகநோக்கி யொன்று மகிழ்ந்துசொல்வான். (௯௬)

மறையவர் குலம்வாழ வந்த நிதாகாகே
ளிறையுமொர் மறுவில்லா யாதொரு பொருடன்னு
னிறைதரு மெவ்வுலகு நீடி யளப்பிலவாய்
முறைபெற மாயையிலே நின்று முகிழ்த்திடுவ. (௯௭)

யாதொரு பொருளாலே யினிதவை நிலைபெறுவ
போதவு நிலைபெற்ற வாங்கவை முன்போல
யாதொரு பொருளாலே மாயையி லேபின்னு
மோதிய வான்முறையே யாவு மொடுங்குறுவ. (௩அ)

அப்பொருள் பன்மறையின் முடிவுக ளாய்ந்திதுவே
மெய்ப்பொரு ளாயசிவ மென்று விளம்புவதாந்
தப்பற வன்னதுதான் சகமுழு தும்விரவி
யப்புற முந்தானே யாயழி வின்றியதால். (௩௯)

வேறு.

உலக முழுது மசத்தாகத் தான்சத் தாகி யுள்ளதது
தொலைவி னிருத்த மனிருத்த மாமெய்ப் பொருளுந் தேரியக்த்துக்
குலவு முலக நிலையின்மை யாகத் தனக்கக் குறையின்றி
நிலவு முலக மவிச்சையென விச்சை தானுய் நிறைந்துளது. (௪0)

யாதோ ருயிர்க்கி யாதொன்று செவியா லோசை யியற்றுவது
யாதோ ருயிர்க்கி யாதொன்று கண்ணு லொளியை யியற்றுவது
யாதோ ருயிர்க்கி யாதொன்று மூக்கா லுற்ற மியற்றுவது
யாதோ ருயிர்க்கி யாதொன்று நாவாற் சுவையை யியற்றுவது. (௪௧)

யாதோ ருயிர்க்கி யாதொன்று மெய்யாற் பரிச மியற்றுவது
யாதோ ருயிர்க்கி யாதொன்று மனத்தா னினைவை யியற்றுவது
நீதா னனைய தொருபொருளைப் பரம சிவமென் றேநினைதி
யோதி னதுதான் பஞ்சமய கோசங் கடந்தே யொளிருமால். (௪௨)

ஐந்து கோசத் தன்னமய கோச மெனுமிவ் வாக்கைக்கு
வந்து கனவி லுறும்யாக்கை மற்றெவ் வாறு பொய்யாய்ப்போஞ்
சிந்தித் துணரி னம்முறைபோற் றிரளு மன்ன கோசமாய்ப்
பந்தித் துள்ள விவ்வுடலும் பொய்யா யொழிந்து பாறுமால். (௪௩)

கழியு முடம்பி னின்னுயிரைக் கட்டுப் படுத்திக் கைகாலிற்
றொழில்க ளியற்றி மாயையாற் சுழல்வித் துள்ளும் புறமுமா
யுழிதந் துலவும் பிராணனென வுரைக்கு மருத்து முதலாய
பழுதில் பலவு நீயென்று நினைத லறிவின் பாலதன்றால். (௪௪)

தடுத்தூலரிய மனோமயமாங் கோசந் தானுஞ் சங்கற்பந்
தொடுத்த விகற்பம் பலவுமெய்போற் றுணியு மதுவு நீயன்று
படுத்தி யிதனுக் கிதுபொருளே யென்று பலவற் றையும்பகுத்துத்
திடத்தை யுடையும் புந்தியுநீ யன்று தேர்ந்து தெளிவுறினே. (௪௫)

இன்ப மடைந்தேன் றுன்படைந்தே னியாது மறிந்தேன் யான்செய்
னென்ப தேதொன் றதுநீகா ணினைய குணமப் பொருட்கில்லைத் [தே
தன்பேர் மெய்ம்மை பரஞான மனந்த மெனவே தனிமறைக
ளன்பால் வழுத்தப் படுகின்ற தேதொன் றதுவே யருட்சிவங்காண். ()

உளத்தி னிடமா யுணர்ந்திடுதற் குரிய பொருளா யுளவெவையுங்
கிளப்பில் யானே யல்லவென வகன்ற ததுவே கிளர்சிவமா
மளப்பில் பரம ஞானமா யழியா வின்ப வெள்ளமாய்க்
கிளத்த லரிதாய் நின்றதது ஞானத் தாலே கிடைப்பதால். (சஎ)

அனைய பொருளை விளக்குவன வங்கண் விசும்பி னுடுவன்று
பனிவெண் டிங்கள் பரிதியன்று படர்ந்த மின்னுக் குழாமன்று
லினைய வாய வெவற்றினையுந் தன்னால் விளக்கி யெஞ்ஞான்றுந்
தனது விளக்கந் தன்னாலே தானே விளங்குந் தன்மைத்தால். (சஅ)

யாதோர் பொருடான் வாக்கினாற் பலவா வியம்ப விலக்காயு
மோதா நிற்கு மம்மொழியைக் கடந்த ததுவே யொப்பில்சிவம்
யாதோர் பொருண்மற் றுளத்துக்குக் கரியா யிருந்து மினிதுளத்தின்
போதந் தன்னாற் பிடிபடா துள்ள ததுவே பொருவில்சிவம். (சகூ)

கண்ணுக் குரிய காட்சியினைத் தன்னா லுயிர்க்குக் காண்பித்துக்
கண்ணுக் குரிய காட்சியினைக் கடந்த தேதொன் றதுசிவங்கா
ணண்ணுஞ் செவிக்குக் கேள்வியினைத் தன்னா லுயிர்க்கு நல்கித்தா
னெண்ணற் கரிய கேள்வியினை யிகந்த ததுவே யிணையில்சிவம். (ருO)

யாதொன் றுணர்ந்த பொருளென்றும் யாதொன் றுணராப் பொருளென்றும், பேத முறுமவ் விருபொருட்கும் பிறிதாய் நின்ற பொருள்யாதொன், றோதி லதனை மறைமுடிவி னுண்மை மொழியா லுறுதிகொடு, தீதில் சிறப்பிற் பரமசிவ மென்றே யுளத்திற் றெளிகுதியால். (ருக)

உடலென் றுயிரென் றோர்ந்துபகுத் துணரு முணர்வா மொள்ளழலா
மடமை யுடைய தர்க்கமின்றி வருணி முதலா மாச்சிரம [ன்
ரடையு மொழுங்குஞ் சாந்தியொடு தாந்தி யிரண்டு மவியுதவுஞ்
சுடர்செய் வேள்வி முதல்யாவுந் துறந்தாற் றாய விச்சையுண்டாம். ()

விச்சை யதனாற் பவந்தீர்வன் வீடு பேறு மதுதானே
யிச்சை யுடைய வவிச்சையினாற் பிறவி நீங்க லில்லையா
லச்ச மில்லா வாசையா லாற்றுஞ் செயல்க ளளவில்லை
நச்சி யவற்றை யாற்றுதொறு ஞானந் தலைக்கூடு தலரிதே. (ருந)

வேறு.

இம்முறை யெண்ணி யென்று மிருத்திநீ யிருத்தற் காய
வம்முறை திடங்கொண் டெல்லா மகனுந்தி மறையந் தத்தின் [மேலோர்
மெய்ம்மையித் துணையென் றோர்ந்து விளம்பினேன் றவத்தின் மே
தம்மைநன் குணர்ந்தோர் யாரு மிம்முறை சாற்றி னார்கள். (ருச)

பரயொளிப் பனிவெண் டிங்கட் படர்சடைப் பவள மேனி
நாயக னெனக்கிவ் வாறே நவின்றன னாறுந் தூயின்
சேயிதழ்க் கமலச் செவ்விச் செங்கண்மா றுனு மிவ்வா
றேயவே யிசைத்தா னன்ன வூர்தியு மிதுவே சொற்றான். (ருரு)

நின்னுழை வைத்த தூய நேயத்தா னிகழ்த்தி னேன்யான்
பின்னர்வே றொருவர்க் கீது பேசிடே னெனவந் நாளின்
மன்னிரும் புவியின் மீது வயங்குற நிதாகன் றன்பா
லுன்னுதத் துவஞா னத்தை யுணர்த்தியே யிருபு போனான். (ருசு)

போயபி னிதாகன் றானும் புந்தியு ளிதனைச் சிந்தித்
தாயுமா றில்லா னாகி யயர்த்தன னவன்ற னக்கு
மேயமுற் றவமுஞ் சின்ன மாதலான் மெய்ஞ்ஞா னத்தி
னேயமுற் றிலனாய்ப் பின்னுங் கிரியையே நிகழ்த்தி னானால். (ருஎ)

இன்னண மொருகா றிற்ப விமையவ ராண்டு தன்னிற்
றுன்னுமீ ரைஞ்ஞூ றாண்டு தெரிலந்திட விருபு தோன்றி
யன்னவன் முன்னஞ் செய்தி யதிதியைப் போன்று ராய்மான்
முன்னுற நின்ற போழ்தின் முற்றிழை யொடுநி தாகன். (ருஅ)

ஆங்கவன் றன்னைக் கண்ணுற் றடிபணிந் தகத்து ளுய்த்து
வீங்குறு பெட்போ டாறு சுவையுண்டி மிசைவித் தான்பின்
யாங்குளீர் யாண்டுப் போதற் கெய்தினீ ரினிய வுண்டி
பாங்குற வமைந்த தோவென் றுரைத்தனன் பரிவி னோடும். (ருகூ)

அன்னசொற் செவிப்பு லத்தி லடைதலு மனையோன் சொல்வா
னின்னுழி யிருந்து வந்தே னின்றுழிப் போவே னென்னும்
பின்னமற் றென்பா லில்லை பேருடம் பிறப்ப தாதி
யின்னலும் பசிதா கங்கள் யாவுமிங் கில்லை யென்றான். (சு0)

என்னலு நிதாகன் சீறி யென்னென வுரைத்தாய் பொய்யை
யுன்னொடு மென்கண் காணு முடலமு முண்ட வூணு
முன்னிய பசிதா கங்கண் முழுவது மில்லை யென்றாய்
துன்மதி யுடையோய் வாய்மை சொற்றிலை தூரப் போதி. (சுக)

மெய்ம்மைகூ றுத மாந்தர் வெங்கிர யத்திற் பன்னு
ளம்மவோ துயரு ளாழா வழுங்குவ ரவைய வினர்
தம்மொடு பேசி னுலுஞ் சாரினுங் கண்ணுற் றுலும்
விம்முறு நரகா மென்று விதித்தன ருணர்வின் மேலோர். (கூஉ)

என்றிவை நிதாகன் கூற விருபுராத் தெண்ணு கின்று
னென்றுநா முரைத்த தின்னே னுறுதிகொண் டுணர்ந்தா னில்லை
நன்றினி யதனை யின்னு நாஞ்சொலக் கடவ மென்று
மன்றவு மவனை நோக்கி மற்றிது வினவ லுற்றுன். (கூ௩)

தொன்மறை நிதாக யாது சொற்றனை நீயிப் போதிங்
கன்னதை யின்னு மாராய்ந் தறைகுதி யரிய வாய்மை
மன்னிய நிலைமை யுள்ளோய் மாந்தரு ளுயர்ந்தோய் விஞ்சை
யென்னவுந் தெரிந்தோ யின்னு மிசைத்திமற் றிதனை யென்ன. (கூச)

பிற்றையு மனைய வாறே பேசின னிதாகன் கேட்டு
முற்றுணர் வுடையோன் மீண்டு முகமலர்ந் தருளி னேடு
மற்றுமா ணுக்க னுக்கு வான்முறை வழுவா வண்ணந்
தெற்றென வவனுட் கொள்ள வுணர்த்தினன் றிறம்பா ஞானம். (கூரு)

உணர்த்திய விருபு பின்ன ருரையுணர் விறந்தி யாண்டுந்
தணப்பற வமைந்து நின்ற தனிமுத றுனே யாகிக்
குணத்தினைக் கடந்த வொன்றின் குரைகழல் குறித்தே தொன்றும்
பிணிப்பில னுகி வாளா திருந்தனன் பின்னி தாகன். (கூகூ)

அவ்வுப தேச முள்ளத் தமைவுற வுணர்ந்தோ னுகிச்
செவ்விய குரவன் வாக்கைச் சிந்தித்தே யிறும்பூ தெய்தி
வவ்விமும் முறைசூழ்ந் தேத்தி வணங்கினன் மனைவி யோடு
முய்வகை தெரிந்த வன்ப னொருமொழி நுவல லுற்றுன். (கூஎ)

மறுவறு காட்சி மேலோய் மற்றுநின் னருளி னுலே
நிறைவுறு முவகை யுற்றே னென்றலு நிதாகன் கேட்ப
முறையுணர் குரவன் சொல்வான் முன்னுனக் கிதுபோ தித்த
வறிவன்யான் மறித்தும் வந்தே னின்னுடை யறிவு காண்பான். ()

நினக்கியா னளித்த விஞ்சை நிலையதோ வன்றோ வென்றுன்
மனைக்கண்வந் துற்றே னீயு மறந்தனை மறித்துஞ் சொற்றே
னனைத்துள செயலுந் தெய்வச் செயலென வறிந்த டங்கி
யினிக்கரு மங்க ணீங்கி யாஞ்சொற்ற விதனை யென்றும். (கூகூ)

பரமென விருத்தி யென்று பணித்தனன் போய பின்றைப்
பிரமனின்மெய்ப் புதல்வன் மைந்தன் பெறலரும் பெரிய பேற்றைத்
திரமுற வுள்ளத் தெண்ணித் தெளிந்தனன் வழாது வைகக்
குரவனும் யாண்டொன் றேகக் குறுகின னவன்பாற் பின்னும். (எ0)

குறுகலு நிதாகன் கண்டு கூறிய வாய்மை தன்னை
யறிவுற வெளிப்ப டுத்தி யறைந்தன னதற்குப் பின்னர்
மறுவறு சிறப்பின் மிக்க வரம்பிலா னந்த வின்ப
நிறைவுறு மமிர்த மான நிகரில்வீ டடைந்தா னன்னோன். (எக)

கெடலரு முத்திப் பேறு கெழீஇயவ னடைந்த பின்றைச்
சுடருமெய்ஞ் ஞானத் தீயாற் பாவங்கண் முழுதுஞ் சுட்டு
நெடிதுளந் தூய னாகி நிதாகனு மனைய நீரா
லடைவுறு வருணி முன்னோ ராற்றிடு செயலகள யாவும். (எஉ)

நீத்தினன் மாயை யென்று நித்தமிவ் வுடற்கு நீங்கா
மாத்திரை யாகிச் செய்வ செய்தனன் மண்ணில் வைகிக்
காத்திரந் தனக்க மைத்த கருமசே டங்க டெய்த்துத்
தேய்த்தபின் முடிவு தன்னிற் றிளைத்தன னழியா வின்பம். (எங)

மாசில்சீர் வசிட்ட வேதம் வகுத்ததாய் மறைவதாகிப்
பேசொணு வுலக முய்யும் பெற்றித்தாம் பரம ஞான
மாசிலா மறையோ னுய குரவன்று னருளப் பெற்றுத்
தேசின்மா ணுக்கன் வீடு பெற்றிடு சிறப்புச் சொற்றும். (எச)

ஆகச்செய்யுள், கஙஎச.

---

முப்பத்துமூன்றுவது

# பின்னவன்முத்திபெற்றஅத்தியாயம்.

-⟶✳✳⟵-

தூய தவத்தி லுயர்ந்த வசிட்டா தொன்னுளின்
மாயிரு ஞாலம் வழுத்திய நாலாம் வருணத்தி
லாய வொருத்தன் காண்மீ ரப்பே ரடைகின்ற
தேய்ம் வதிந்தோ னருள்சிறி தேனுமி றீயோனே. (க)

பல்லுயிர் கட்கும் பையு ளிழைப்போன் பண்டுள்ள
நல்வினை யாலே யொருசிவ யோகி நடர்தெய்த்து
மெல்லுட றேமீபி வருத்தமொ டெய்தலும் வினையோன்கண்
டொல்லையி லுள்ள மிரங்கி யவன்றளர் வுட்கொண்டு. (உ)

மற்றவன் மெய்யைத் தன்னிரு கையால் வருடுற்றுத்
தெற்றென வின்னலை நீக்கின னதனாற் சிவயோகி
பற்றமி லருளுட னன்னவ னைப்பார்த் தறைகின்றான்
குற்றமி லன்பு மிகுந்துள வேளாண் குலமுள்ளாய். (௩)

நின்னுழை வைத்த வுவப்பினி லொன்று நிகழ்த்துறறா
முன்னுடை யில்லவ டன்னொடு நீகே ளுலைவுற்ற
வென்னிடை யாற்றிய நன்றியி னாலுன் னிடமாய்முன்
றுன்னிய பாதகம் யாவு மகன்றே தொலைவுற்ற. (௪)

ஈண்டினி நீகதி யெய்துறும் வண்ண மியம்பக்கேள்
சேண்டொடு குவடு திகழ்ந்த திருக்கா ளத்திக்குப்
பூண்டவுன் மனைவியொ டேகுதி யென்றிது போதித்து
வேண்டல் வெறுத்த விரண்டு மிலாதவன் விட்டேக. (௫)

இம்மொழி தனது செவிப்புல னாக வியைந்துள்ளோன்
செம்மொழி யென்று திடங்கொடு மனைவி யுடன்சென்று
பொய்ம்மொழி புரையு மருங்குலின் ஞானப் பூங்கோதை
யம்மலை மகளொடு மிறையம ரந்நக ரடைவுற்றான். (௬)

மாசி மகத்திற் பொன்முக ரிக்கண் மகிழ்ந்தெய்தி
வீசிய வெண்டிரை தண்டர ளங்கண் மிகச்சிந்திப்
பூசலின் வண்டறை தண்டலை தேறல் பொழிந்தென்றுந்
தேசு திகழ்ந்த வுருத்திர தீர்த்தஞ் சென்றாடி. (௭)

அன்னதில் வைகலு மின்னனை யாளொடு மவன்மூழ்கிப்
பொன்மதின் மண்டப மாளிகை பொற்கோ புரமாதி
துன்னுறு மாலய நூற்றொடு மெட்டு வலஞ்சூழ்ந்து
முன்னவ னம்பொன் மலர்ப்பதம் வீழ்ந்து முயன்றேத்தி. (௮)

கண்ணுத லன்ப ரருட்சிவ யோகிகள் களிகூர
விண்ணமிர் தின்சுவை யொத்துள வடிசிலை மிசைவித்து
நண்ணிய திங்கண் மகந்தொறு நல்வெதி பாதத்தும்
புண்ணிய மாநதி யாகிய வதனிற் புனலாடி. (௯)

இலகிய வானெய்த் தீபமு நாதற் கினிதேற்றி
நலமலி யுந்தன முதலிய தானமு நனிசெய்து
பொலிவுறு கன்றொடு பால்பொழி வுற்ற புனிற்றாவுங்
குலமறை யந்தண ரின்புற வினிது கொடுத்தானால். (௧0)

பின்னரு மறையவர் யோகர் நமைத்தொழு போன்ப
ரென்னு மிவர்க்கு மியன்ற தளித்தன னிவ்வாறே
முன்னிய நோன்பொரு யாண்டுறு மெல்லை முடித்திங்ஙன்
மன்னி வதிந்தன னிறுதியி னெல்லையின் மடிவுற்றான். (௧௧)

முடிதலு மும்மத நால்கு மருப்புயர் மால்யானை
யடல்கெழு குலிச நெடும்படை வானவ ராசாகிக்
கொடிபுரை நுண்ணிடை மடவா றன்னொடு குலவுற்றுக்
கடவுளர் போற்றக் கற்பக நறுநிழல் கைக்கொண்டு. (௧௨)

களிதரு மின்ப நுகர்ந்தனன் மீண்டுங் காளத்தி
யொளிதரு செஞ்சடை வெண்பிறை வானவ னருளுய்ப்பக்
கிளிகள் புகழ்ந்திட மஞ்ஞை நடிப்பக் கிளர்சீத
மளிபயி றண்டலை சூழ்ந்தபொன் முகரியி னணுகுற்று. (௧௩)

தண்டுளி வெண்டிரை நுண்புன லேறுய்ந்துமை தன்கோனை
யண்டர்க டொண்டுசெய் புண்டரி கப்பத மவைதாழ்ந்து
கண்டுளி கொண்டிட மெய்புள கிப்பக் கைகூப்பி
யொண்டொடி தன்னொடு பூசை யிழைத்தவ னுற்றானால். (௧௪)

வேறு.

பழகிநுள வங்நகர் பதிநதினி திருபப
விழைவுறு பெருங்கருணை வைத்திடும் வியாழ
னழகினொடு தாரக மடுத்தபத மைந்துஞ்
செழுவிதி னுணர்த்தியவ னுக்கினிது செப்பும். (௧௫)

இருவகை நியாதமு மியற்றியுரு வேற்றிங்
கரியவித னுக்கிருடி யாதியவொ ரைந்துந்
தெரியமறை சொற்றமுறை செப்பின முணர்ந்தா
யொருவரிய பூரகமுன் மூன்றையு முணுற்றாய். (௧௬)

விண்ணரசு கேட்டியிது வெந்தழலின் வேள்வி
யுண்ணலுறு சேடமுண லுப்பொடு புளிப்பு
நண்ணுத லிலாதினி தருந்திநனி காம
மெண்ணரிய சீற்றமுதல் யாவையு மிகந்து. (௧௭)

ஒருரையு மின்றியொ ரிலக்கமுரு வேற்றிச்
சீரியவிம் மந்திரநற் சித்திபெறு மாற்றாற்
கூரிய வுளத்தினிது கொண்டு விழைவுற்ற
காரிய மனைத்தையு மடைந்துகளி கூர்தி. (௧௮)

உற்றவிது சித்திபெறி னேங்குலக மூன்றுட்
பெற்றிடுவ தற்கரிய பேறுபிறி தில்லை
மற்றெவ னொருத்தனிதை வைகறை யெழுந்து
முற்றும்வகை நூற்றினொடு மெட்டுரு முயன்றான். (கக)

அன்னவ னிடத்தளவில் பாவமவை யெல்லா
முன்னுமொர் கணத்தினி லொழிந்துவிடு நீச
னென்னினும் விழைந்துசிவ வென்றதொரு வாக்குச்
சொன்னவனொ டேயினிது தோழமைய னாக. (உ0)

யாவனொரு வன்மறைகள் யாவையு முணர்ந்து
நாவினூற வேசிவ வெனத்தின நவிற்றான்
பாவியவ னேயவனொ டேபயி லொணாது
மேவியுரை யாடின்மிகு சாந்திசெயல் வேண்டும். (உக)

உவப்பொடிது நித்தமுமெண் ணுயிர முருத்தான்
செவிக்கின்மறை யோனுயிர் செகுத்தவினை யாதி
தவக்கொடிய பாதகமு மாறுமதி தம்மு
ளெவர்க்குமக லும்பிணிக ளர்வுறு மிதற்கே. (உஉ)

வயம்வர வருட்டலவரு வித்திட லகற்றல்
பயனுற மயக்கல்வலி தீரும்வகை பண்ண
லுயிரொருவு வித்தலென வுள்ளசெய லாறு
நயமொடு மளிக்குமிது நாடினெளி தன்றே. (உங)

ஈதணிமை யாதியெனு மெண்வகைய சித்தி
சாதனை தரும்பல வுரைப்பதென் றவத்தோய்
மேதகைய வீடுபெற லுந்தருதன் மெய்கா
ணுதலி னிதைக்கடி தியற்றென வறைந்தான். (உச)

அவ்வுரை மனக்கொடவ னுயிடை யமர்ந்து
செவ்விதி னிலக்கமுரு வேற்றுவது செய்தான்
றெவ்வடு திறற்குலிச பாணியுறு செல்வ
மெவ்வமென நீத்தய னிருக்குமுல கெய்தி. (உரு)

முள்ளுடைய மூலமெனு முண்டக மமர்ந்த
தெள்ளிய மறைக்கிழவ னைக்குறுகல் செய்து
விள்ளவரி தாம்பிரம சரியநிலை மேவித்
தள்ளரிய வைந்தையு மவித்துயர் தவத்தால். (உசு)

செப்பரிய வாய்மையுள னுய்ச்சிறுக வுண்டி
துய்ப்பவனு மாயுரிய தூயதனி நிட்டை
தப்புத லிலாதுயர் சமாதியி லிருந்தா
னெப்பொழுது நான்முக னவன்றனை யுவந்து. (௨௭)

இருளறு பரஞ்சுட ரியற்கையறி விப்ப
மருளறு மனத்தன்மல ரோனடி வணங்கித்
தெருளுற வுளத்தது தெளிந்துருள் சகட்டி
னுருளுறு முடம்பொருவி முத்திநல னுற்றான். (௨௮)

வீடுறுதல் கண்டுள.வின் னோருமுனி வோரு
நீடுபிற விக்கடலை நீந்துதல் விழைந்து
நாடுதனி லெங்கரு மொப்பரிய ஞான
வீடுதவு தென்கயிலை மேவினர் விரைந்தே. (௨௯)

மற்றவர்க ளுட்சிலர் வளம்பெற விழைந்து
பெற்றனர் சிலோகபயம் வேண்டியது பெற்றார்
பற்றகலும் வீடுபெற லேசிலர் பலித்தார்
முற்றுமவர் தந்தநினை வின்படி முடித்தார். (௩0)

ஆனபரி சாலரிய வங்கரி லுள்ள
மேன்மையத னுனமது மிக்கவரு டன்றாற்
பான்மைபெற் றுற்றபரி பாகமத னல்வந்
தூனமில் சிறப்புடைய வத்தலனி லுற்று. (௩௧)

வேண்டிய பயன்களவை யும்பெற விழைந்தே
யாண்டற னியற்றியடை தற்கறிவி லாதா
னீண்டுட லெடுத்தவகை நாயுட லெடுத்து
மாண்டிடுத லும்புழுவின் வாழ்க்கையு நிகர்க்கும். (௩௨)

அப்பதி யடைந்துத னளப்பறு பிறப்பைத்
தப்பவறி யான்பிறவி தான்மிகு சழக்கென்
றொப்பரிய நுண்ணிய வுணர்ச்சியுடை யோராய்ச்
செப்பரிய மேன்மைமுனி வோர்களுரை செய்தார். (௩௩)

ஆண்டுதனி லோர்திவச மேனுமவ ணெய்திக்
காண்டகைய தென்கயிலை யங்கடவுள் சேவை
பூண்டிடல்செ யான்பிறவி புல்லிதென வெள்ளி
மாண்டமதி தட்பமுடை யோர்மிக வகுத்தார். (௩௪)

கடைப்படு பிறப்பினனு மக்கயிலை தன்னி
லிடைப்படி லவன்பிறவி யேபிறவி யென்று
திடப்படு மறைக்கலைஞர் செப்புவர் வசிட்டா
வெடுத்தினிது பற்பல விசைப்பதெவன் மாதோ. (௩௫)

கொடிதுகொடி தோர்புதுமை கூறுது முயர்ந்தோய்
விடலரிய தென்கயிலை நன்னகரம் விட்டு
முடிவில்பா முத்திபெற வேறுதல முன்னி
யடையுமவர் தங்களறி வின்மைகொடி தந்தோ. (௩௬)

இபபரம ஞானமறை யீற்றினுறு சார
மொப்பரிய வீடுபெறு தற்குள வுபாயந்
தப்புறு மசேதனர் தமக்கடை யொணுது
செப்பின நினக்கருளி னற்றெளிய வேநாம். (௩௭)

இங்கிதனை யன்பினொடு பத்தியுள மில்லார்
தங்களிடை யோதரிது நம்முடைய தாளிற்
பொங்குபெரு வேட்கை யுளராய்ப் பொருளுணர்த்துந்
தங்கள்குரு வின்னிலைமை தாமுளரு மாகி. (௩௮)

உன்னியுணர் வித்தகரு மாகியொரு சொல்லோ
சொன்னெறிகொ ணல்லறிவு சூழ்புனித ராகி
மன்னுகுர வன்சொலை மறுதவரு மாகி
நின்னுடைய தாளினிறை நேயர்களு மாகி. (௩௯)

உடலுமுயி ரும்பொருளு மொண்குரவ னுக்கு
நெடிதுவகை யாலுதவு நேயர்களு மானுற்
கடியபிற விக்கடல் கடப்பது பொருட்டுத்
திடமுற வுணர்த்திது தெருண்டிடு முளத்தோய். (௪0)

விழைவினொடு நீயெமை வினவிய திறத்தா
லழிவகலு முத்தியடை தற்கிதை நினக்குக்
கழறினம் வசிட்டவிது கைப்பல னளிக்கு
மொழிபல வுரைப்பதெவன் முத்திவழி யீதே. (௪௧)

இன்புறு லயிங்கமெனு மிவ்வுப புராண
நின்பெயரி னுலகி லென்றுநிலை நிற்க
நன்கிது புராணமெவை கட்குநல மாகு
மென்பது திடங்கொளித னுக்குவமை யின்றால். (௪௨)

இப்ப னுவல் பத்தியொடு மெம்மருள் விரும்பி
யொப்பரிய பெட்பினொடு மோதுபவர் யாவ
ரப்புனிதர் வாக்கினிலெஞ் ஞான்றுமமர் வாள்காண்
டப்பரு மகேசையெனு மெம்முடைய சத்தி. (௪௩)

ஆங்கவ ருளத்திடை யநாதிபரா மானோ
னோங்குற விளங்குவ னுவப்பொடிது கேட்போர்
நீங்குவர்க ளெவ்வினையு நீடெல கெவைக்குந்
தீங்கினை விலக்குமிது திண்ணமிது திண்ணம். (௪௪)

எண்ணியித னைத்தின மியம்பிடுக வென்றும்
புண்ணிய தினத்திலெனி னும்புகல வல்லோன்
பண்ணுவினை யாவையு மகன்றுபர மன்னோன்
மண்ணுலகில் யாவரும் வணக்கமுற வல்லோன். (௪௫)

என்றிவை வசிட்டமுனி யின்பொடு களிப்ப
மன்றல்கமழ் பொன்னிதழி வார்சடையெம் வள்ளல்
வென்றிதிகழ் பின்னவன் விளங்குபர முத்தி
யொன்றிய வருங்கதை யுரைத்தருளி னானல். (௪௬)

என்னுமடை விற்கதைகள் யாவையு முரைத்தான்
மன்னுபுகழ் நேமிவன மாதவர் தமக்குப்
பன்னிய வியாதமுனி பாலினெனு மேன்மை
துன்னிவளர் சூதமுனி தொல்லுணர்வின் மேலோன். (௪௭)

## வேறு.

வாழி யேதிருக் காளத்தி வானவன்
வாழி யேயவன் வாமத்தில் வாணுதல்
வாழி மைந்தர்கள் வாழி யடியவர்
வாழி வைதிக சைவ மரபெலாம். (௪௮)

வாழி பொன்முக ரித்தெய்வ மாநதி
வாழி யந்நதி சூழ்வள நாடெலாம்
வாழி காளத்தி மாநகர் நாடொறும்
வாழி வையகம் வாழி மழைமுகில். (௪௯)

வாழி வானவர் வாழிய வந்தணர்
வாழி யானினம் வாழிய மன்னவன்
வாழி யிக்கதை வாழி படிப்பவர்
வாழி கேட்பவர் வாழி யெழுதுவோர். (௫0)

ஆகத்திருவிருத்தம், ௧௭௨௪ ; பாயிரமுள்பட - ௧௭௭௬.

# சிறப்புப்பாயிரம்.



பொருணைநதி யுவட்டெறியுந் தமிழ்நாட்டி லளகைநகர்
    பொருவும் வீரைக்
குரிசில்பரி மளகவிரா சன்றமிழ்தே ரானந்தக்
    கூத்தன் விண்ணோர்
பரவுமியற் கர்சிதனில் வாசமா யகிலேசன்
    பீரதம் பெற்றோன்
சுருதிபுகழ் காளத்திப் புராணத்தைச் செந்தமிழாற்
    சொன்னா னன்றே.



*ஐந்தாவது

# கண்ணப்பர் சிவகோசரியார் முத்தியடைந்த அத்தியாயம்.

பொன்னுமா மணியு முத்தும் பொருகரி மருப்பும் வீசித்
துன்னும்வெள் ளருவி வீழுந் துதைமலர்ப் பொதும்ப ரூடு
மன்னிய விருள்கால் சீத்து வளரொளிக் கற்றை கான்று
பன்னக மணிகு லாவும் பாங்கரே ஞாங்க ரெங்கும். (க)

இம்மெனக் கவித்த மேக மிகலெனக் கனன்று சீறி
மும்மதக் கலுழி வேழ முறைமுறை மதர்த்துப் பாயும்
வெம்முழைப் பாழி தோறும் வெள்ளுகிர்ப் பகுவாய்ச் சீயந்
தம்மினத் தோடுங் கூடித் தனியா சிருக்கு மாதோ. (உ)

முள்ளரிக் குலங்கண் மேய்ந்து முகரையா லுழுத தொய்யி
லொள்ளிய குறிச்சி யாதி யும்பர்தோய் குவட்டின் காறுந்
தெள்ளொளி வயிர ராசி திகழ்வெள் ளருவி யேய்க்குங்
கள்ளவிழ்ந் தொழுகல் செய்ய கதிர்மணி நிரைகள் போலும். (ங)

அடைகிடந் தூப்பி வேங்கை யானினைக் கறுவா நிற்கும்
பெடையொடும் பறவை யீட்டம் பெருங்களி யாட்டம் பேணும்
விடையொடுங் காட்டாப் பேழ்வாய் விட்டிளங் கன்றுக் கூட்டுங்
குடமடி பொழிந்த தீம்பான் மிருகங்கள் குடிக்கு மன்றே. (ச)

இனையபல் வளத்த தாகி யிரசதத் தகடு போன்று
புனைநெடுங் குடுமி பூத்த பொற்புறு திருக்கா ளத்தி
வனசார்க் கதிப னாகன் வளமிகு முடுப்பூர் வாழ்வான்
றிணமடு படைக்க லங்கற் றூளியிற் செருக்கு மொய்ம்பன். (ரு)

---

* இந்தஅத்தியாயம், கிடைத்த கையெழுத்துப்பிரதிகளுள் ஒரேபிரதியில்மட்டும் இருந்தமையாலும் இந்தநூலின் முதனூலாகிய வடமொழிப்புராணத்தில் இந்தச்சரித்திரம் காணப்படாமையாலும் இந்த அத்தியாயச்செய்யுள்நடை இந்நூலாசிரியருடைய செய்யுணடையைச் சிறிதும் ஒவ்வாமையாலும் பத்திமானாகிய யாரோஒருவர் இடையேஇயற்றிச் சேர்த்திருக்கலாமென்று எண்ணுதற்கிடமாகஇருந்தமையாலும் இது தனியே பதிப்பிக்கும்படிசேர்ந்தது.

ஆறலைப் படுத்துஞ் சோரர்க் கதிபனை விளித்துப் பூகத்
தாறலைத் துகள்கூன் மந்தி நண்பனைப் பலவிற் பாயத்
தேறலைப் பொதியி ருவிற் றிகழ்குடக் கனிகள் கீறி
மாறலைத்தொழுகு செந்தேன் மருதநாட் டிருக்கை யேவி. (௬)

கவ்வுமா னிரையும் பொன்னு மணிகளும் கலனும் பெற்று
நிவரும்வாழ்க் கையனு நாக னீணகர் பாது காத்துங்
கவனவெங் காடு காத்துங் கானவர் புனங்கள் காத்துந்
தவநெடுங் கால மெல்லாந் தத்தையோ டிருந்து வாழ்ந்தான். (௭)

தேமொழி மழலைச்செவ் வாய்ச் சிறுமிலா மையினு லெஞ்சித்
தாமநெட் டிலைய வைவேற் சண்முகன் கோட்டம் புக்குக்
காமுறு தவத்தாற் றத்தை காரரிக் குருளை போலத்
தோமிலா மகவை யீன்றாள் சோபன முலகு போர்ப்ப. (அ)

திண்ணனென் றினிய நாமஞ் சிறுவனுக் களித்து நாக
னெண்ணுமை யாண்டு மேவ வியற்படைக் கலங்கள் கற்பான்
புண்ணியக் குரவற் சேர்ப்பக் கற்றவன் பொருவி லாமற்
றண்ணளிக் கூள மேக மனையதோற் றத்து மிக்கான். (௯)

மாச்செறி விடையே வேடர் மகாரொடுந் திண்ணன் மேவ
வுரப்பரி குருளை கைம்மா முலையுண வூட்டா நிற்கும்
வரிப்புலி பறழைக் காட்டா மடியினில் விடுக்கும் பல்லக்
கருப்பெருங் குட்டி தாழக் கவரியு ளளியு மன்றே. (௧0)

சிறுவனிவ் வாறு லாவத் திரைநரை முதிர்ந்து நாக
னுறும்வலித் தடந்தோ ளாலே கார்முக மேற்றி வேட்டைக்
குறுபகல் செல்லான் வைக வுரைத்தன புள்ளு மாவுந்
துறுகலு முழைஞ்சுந் தூறுங் கலித்தன தொடர்ந்து டற்ற. (௧௧)

இறவுளர் வளாக மெல்லா மேனமுங் காட மாவும்
பறவையு முருக்கிச் செல்லப் பதறிநெட் டுயிர்ப்பெ றிந்து
மறவருக் கதிப னுகன் வாய்தலின் முறையிட் டார்கள்
குறவர்க ளாதி யான குடிகளும் பிறரு மாதோ. (௧௨)

அவ்வுரை கேட்டு நாக னதரந்தான் றுடிப்ப நக்கு
வெவ்வலி மூப்புக் கொண்டே னென்செய்கேன் வினயு முற்றச்
செவ்விய குமரன் றன்னை விடுத்துநஞ் செல்ல றீர்ப்ப
னெவ்வரீத் திருமி னென்று னிகறெறு புலவு வேலான். (௧௩)

நாகனிளங் குமரன் றன்னை நாகன்முன் விளித்து மைந்தா
வேகமா மிருக வேட்டை விட்டொ ணுண்டிப் போது
பாகடு குதலைத் தீஞ்சொற் குறத்தியர் பாணு நாறி
மாகநீள் வேலி பேர்த்துப் புனமெலா மழித்த மாக்கள். (௧௪)

எனச்சிலர் குறிஞ்சி மாந்த ரிசைத்தன ரவர்க ளோடுங்
கனக்கொடு மாமவை வேல்வாள் கப்பணந் திகிரி யேந்துஞ்
சினக்கடு வீர ரோடும் வனமெலாந் திரிந்து சூழ்ந்து
மனத்தொடு கன்னி வேட்டை யாடிநீ வருதி யென்றான். (௧௫)

அந்நிலைக் கரிய சீய மலங்கரித் ததுபோற் றிண்ணன்
மின்னெறி மணிப்பூண் சாத்தி வெம்படைக் கலங்க ளார்த்துக்
கன்னலிற் கனிந்த தீஞ்சொற் கவிரிதழ்க் குறத்தி கேள்வன்
பொன்னிதழ்க் கமலத் தாள்கள் போற்றியே விழவு செய்து. (௧௬)

கல்லென முரச மார்ப்பக் காகுளி யார்ப்பத் தாரை
பல்லிய மிரலை யார்ப்பப் படைமற வீர ரார்ப்ப
வல்லியக் கரிய கூர்வாய் ஞமலிகண் மருங்கி லார்ப்ப
வில்லொலி யார்ப்ப வேட்டைக் காட்டின்மேல் விரைந்து போனான். ()

மங்குல்கண் படுக்குங் கோட்டுக் கானத்து வரையின் சாரற்
கங்குலொத் திருண்டு வீங்குங் காட்டகத் தாரி தோறும்
வெங்கனல் கொளுந்திச் சூழ்ந்து வெடிபடக் கொடிய வீர
ரெங்கணு நுழைந்து வானத் திடியென வார்த்துப் பொங்கி. (௧௮)

பறையடித் தூறி மாவும் பறவையு மெழுப்பி யோடுங்
கறையடித் தொகுதி மாய்த்துக் கனலுமிழ் தறுகட் பேழ்வாய்க்
குறுகுவல் லியத்தைப் பாணங் கூட்டிணை விடுத்துப் பாய்ந்து
கறுவுவல் லுளியங் குத்திக் காடியி னுயிரை யுண்டார். (௧௯)

வேறு.

பட்டன மாவினம் பாயு மாமுயல்
பட்டன கடமைகள் பறக்குங் கோகிலம்
பட்டன மயிற்குலம் பசிய கிள்ளைகள்
பட்டன மேதிகள் பறவையீட்டமே. (௨0)

வேறு.

அஞ்சின்றப் புள்ளு மாவு மலகிலா வனவுந் தத்தி
விஞ்சுமின் னுயிர்கள் யாவும் வெங்கொலைப் படுத்தப் பார்த்திச்
செஞ்சிலை குழைத்த வேடர் திறல்கண்டே யுட்கி யோடி
மஞ்சுறை திருக்கா ளத்தி வரையினிற் புகுந்த மன்னோ. (௨௧)

கடிமதிட் சாலங் கோளிக் கண்ணிநீ பகங்கள் வைத்தாங்
கொடியெறிந் ததகா மாற்றி யுட்சில ஞமலி யேவிச்
செடிபடு கடமா வாதி விலங்கெலாஞ் செகுத்துப் பின்னும்
பிடிபடா திரியல்போன வராகத்தைப் பிடித்துக் கொன்றார். (உஉ)

இத்திறம் வேட்டை யாடி யிகலிமாக் குறும்ப றுத்தார்
மத்தியிற் றவனன் போந்து வடவையிற் கதிரொ றிப்ப
வித்தகக் குரிசி லிற்ப வீரர்நீர் விடாயிற் சென்று
கைத்தல முகிழ்த்து வீரன் கழல்பணிந் திணைய சொன்னார். (உ௩)

வேறு.

எய்ச்சது தானைகள் யாமெ லாமினி
யுச்சயார் மாத்தசை யுண்டு நீர்குடித்
தச்சிறு வேலியூ ரிணைவ மென்னலும்
வச்சிர வாகுவான் வனமெங் கேயென. (உ௪)

காவத மரையினிற் கமல வாவியுங்
கோவெனும் பெரியவைங் குடுமித் தேவுறை
பூவலர் நறியதண் பொழிலுந் தெண்டிரை
தாவுபொன் முகரியுந் தயங்கு மென்னவே. (உ௫)

வேறு.

இரைத்தெழு தானை வேந்த னினியநன் னிமித்த மெய்த
விரித்தபொன் முகரி யாற்றின் றடங்கரை மேவி வேடர்
பரித்துவந் தறுத்த வேனப் பருந்தசை யாணி யாலே
நெருப்புகுத் தவித்து வக்கு நீரொன நிறுவிப் போனான். (உ௬)

வேறு.

உற்றதத் துவங்களை யொருங்கு நீத்துயிர்
கொற்றவன் கயிலையைக் குறுகு மாறெனச்
சுற்றிய வீரர்தந் தொகுதி நீக்கியே
பொற்றிருக் காளத்திப் பொருப்பி லேறினன். (உ௭)

தொடுகழற் றூளொடுந் துணைவர் தம்மொடு
நெடுவரிச் சிலைகொடு நீர்வி ளைய்விறற்
கொடுவரிப் புலியெனக் குறுகு நாயனை
முடுகிடாக் குடுமியந் தேவின் முன்னுய்த்தார். (உ௮)

செந்துண ரிளநறுத் துளிப்பத் தென்றலும்
வந்துலா வக்குளிர் மருவி யந்தளி
ரந்தியிற் பொதுளிய வடவிக் கோட்டுறை
சுந்தரக் கடவுளைத் தொழுது கண்டனன். (உ௯)

## வேறு.

முன்னைநல் வினையா லேயோ முக்கண னருளா லேயோ
சன்னிதிப் படுத லாலே தம்பிரான் றிருக்கண் சாத்தத்
துன்னிய வினைக ளெல்லாந் தொலைந்தரு ளுருவ மாகு
னந்நிலை வேட னென்று லரனருள் விளம்பற் பாற்றே. (௩0)

## வேறு.

கண்டதோர் காலையிற் காந்தத் தூசிசெ
லெண்டகு குணமுறீஇ யிருகை யாற்றழீஇ
மண்டொ ளத்திமா மலைக்கொ ழுந்துவீழ்
கொண்டலின் வில்லொடுங் குழைந்து வீழ்ந்தனன். (௩௧)

## வேறு.

அன்புநெக் குருகிக் கண்ணீ ரலைகொழித் துவட்டி வீழ
வின்பமோர் வடிவ மாகி யாரையுந் திரிந்து நோக்கான்
றன்குணத் தெழீஇநின் றெந்தை தயங்குமைங் குடுமி மீதே
நன்புனல் வார்த்துச் சீதப் பச்சிலை நயந்திட் டாரார். (௩௨)

சாற்றுதி யெனவே நாணன் றுனறிந் திடுவன் முன்னாள்
வேற்றொழி னிபுண னுன நுந்தைமுன் வேட்டை யாடி
யாற்றிடை வந்த போதோ ரந்தணன் குடுமித் தேவுக்
கூற்றினன் றண்ணீர் பின்னர்ப பச்சிலை யுவந்திட் டானே. (௩௩)

என்றது கேளா முன்ன மெம்பெரு மானுக் கீதே
நன்றெனு வுவகை பூத்து நானுமிவ் வாறு செய்வே
னின்றிவ ணென்று சற்றே நீங்கிநெட் டுயிர்த்து விம்மித்
துன்றுவ னலம்வந் தேங்கித் துணையின்றே யிறைவற் கென்பான். ()

வல்லியந் திரியுஞ் சீறி மதகரி திரியும் பாய்ந்து
சல்லியந் திரியு மிங்குத் தனிமையாய்த் துணையு மின்றி
யெல்லியுங் கிராதர் போல விருந்தனை யந்தோ வென்று
புல்லுவன் றழலி னூடே புணர்ந்திட்ட மெழுகு போன்றான். (௩௫)

## வேறு.

செம்மணிச் சுடிகைப் பஃறலைப் பாந்தட்
டிங்களங் கண்ணியெம் பெருமா
னிம்மலைப் புறத்தே வெயிலினு லுணங்கி
ரித்தனை காலமா யிருந்தான்

வெம்மனக் கொடியே னுதலாற் பொறுத்தேன்
வேறிது கண்டெவர் தரிப்பா
ரம்மவென் றிரங்கிக் கலுழ்ந்தமு தருத்து
மருத்தியி னொருவியே செல்வார். (௩௬)

வேறு.

மீனுவர் புனிற்றிளங் கன்று வேட்டுயிர்
மானுமோ ராவென மறுகிச் சூழுவர்
காளகண் டனையெவர் காப்ப ரென்றுநொந்
தாளரி யன்னவ ரமுதுக் கேகினார். (௩எ)

வேறு.

வரவுகண் டெழுந்து காடன் வந்துநல் விறைச்சி யெல்லா
மாணியிற் றீயுண் டாக்கி யறுசுவைப் படுத்தி வைத்தேன்
விரைவினிற் றினவா வென்ன விடைகொடார் போக நாணன்
வரையினிற் றேவர்க் காளாய் மரபிகந் திட்டா னென்றான். (௩அ)

ஆரணி யத்தில் வீர ரமுதுசெய் வித்தற் கான
பேரிர தத்து மாவும் புட்களும் பிடித்து வந்து
கூரல கம்பி னாலே கொழுந்தசை யீர்ந்து கொண்டு
பாரினில் வையார் கல்லை பண்ணிவைத் தனலுண் டாக்கி. (௩௯)

வேறு.

கோவினி னிரைநிரை கோத்துக் காய்ச்சியே
சாலவே குதட்டிமென் றசைசு வைத்தபின்
வாவிய கண்டொரு கல்லை வைத்தனர்
பாலது கண்டவர் பரிந்தை யோவென. (௪0)

கதித்தெழு முதரவெங் கனலு டற்றவும்
வெதுப்பின விறைச்சியு மிசைந்தி டாதிவன்
கொதித்திடு மெமக்குமே கொடாது மிச்சிலுங்
கதித்தவ ரெனவெடுத் தெறிவன் காடெலாம். (௪௧)

வேறு.

திண்ணனுந் திருக்கா ளத்தித் தேவனார் பேய்கொண் டுற்றா
னண்ணலா நாகன் முன்போ யறிவித்து வேல னோடு
நண்ணியே யிவன்பேய் தீர்த்து நாங்கொடு போவே மென்னக்
கண்ணினர் விரைந்து போனார் கானவர் விட்டே போரார், (௪உ)

பல்லினு லதுக்கப பாரத துப் பழுத்தவூ னமுது தன்னைக்
கல்லையோ டொருகை யேந்திக் கான்மலர் தலையி லேந்தி
வில்லொரு கரத்தி லேந்தி விரைப்புன றிருவா யேந்தி
யொல்லையிற் கொண்டு தேவ ருறப்பசித் திருப்பா ரென்றே. (௪௩)

சிந்தனை கொண்டு சென்று தேவனார் திருமு னின்று
வந்தனை பண்ணி யெந்தாய் வாடினை பசியா லென்று
சுந்தரச் செருப்புக் காலாற் சோதியங் குடுமிப் போதை
யுந்தினர் வாயி னீரை யூற்றித்தம் முடிப்போ திட்டார். (௪௪)

பரிகலந் திருத்தி வைத்த பழுதிலூ னமுதை முன்னே
விரியுமா தரவா லேற்றி வெதுப்பினன் பதம்பார்த் தைய
வுரியையீ ரமுது செய்வான் கொணர்ந்தன னுண்ணென் றேத்தி
யருகிருந் தருத்தி னார்போ தத்தமித் திருண்ட தன்றே. (௪௫)

காரிருட் பிழம்பு சூழ்ந்து கதுவவே விலங்கி வன்மேற்
பேருறத் தினவு நீவும் பின்னையென் செய்யு மோவென்
றோரிரு கண்கண் மூடா துலவினர் யாம மெல்லாங்
கூரிரும் பகழி கோத்துக் கொடுமரந் திகிரி யாக்கி. (௪௬)

புலரியி லெழுந்து நாதன் பொன்னடிக் கமலம் போற்றி
யலரிவந் தெழுமுன் கானத் தமுதுவேட் டைக்குப் போனார்
புலவுகொப் புளிக்கும் வைவேற் புண்ணிய மூர்த்தி யன்னார்
பலகலைத் துறைபோய் ஞானம் பரிணமித் தனைய நீரார். (௪௭)

வேறு.

கோதி லாச்சிவ கோசர மாமுனி
யாதி நான்முறை யண்ணலைப் போற்றவெப்
போதும் போலப் பொருக்கென நண்ணலும்
பேத மாகப் பிறங்கின கோட்டமே. (௪௮)

வேறு.

சிறுகருந் தசையு மென்பூஞ் செருப்படிச் சுவடு நாளி
னிறைதரு மடியு மிச்சிற் கல்லையு நிரந்து காட்ட
மறையவ னுருத்துக் கெட்டேன் யார்செய்தார் மதியா தென்று
குறைபடு முளத்த னாகி வேடுவர் கூசா ரென்றான். (௪௯)

அங்கமூந் தசையு மிச்சிற் கல்லையு மலகிட் டோச்சிப்
பொங்குகோ மயத்தி னாலே யெங்கணும் புனித மாக்கிச்
சங்குகு லுளைந்து லாவித் தவழும்பொன் முகரி யாடி
மங்குறோய் திருக்கா ளத்தி மால்வரை யேறிச் சென்று. (௫0)

வேறு.

பின்னரும் பவித்திர மாக்கும் பெற்றியான்
முன்னருங் கடனெலா முழுது மாற்றியே
மன்னுப காணமு மருங்கு வைத்தான்
பொன்னடி விதிமுறை பூசை பண்ணினன். (ருக)

வேறு.

எம்பெரு மானே போற்றி யேகநா யகனே போற்றி
யம்பிகை பாகா போற்றி யரியயற் கரியாய் போற்றி
சம்புவே யானே போற்றி சதுமறைப் பொருளே போற்றி
நம்பனே திருக்கா ளத்தி நாதனே போற்றி போற்றி. (ருஉ)

மண்முதற் பூத மாகி மனமுதற் கரண மாகிப்
பெண்ணுமா யாணு மாகிப் பிறங்குபல் லுயிரு மாகிக்
கண்ணுதன் மூர்த்தி யாகிக் கலைகளு மெவர்க்கும் வைகு
மண்ணலே திருக்கா ளத்தி யப்பனே போற்றி போற்றி. (ருங)

வேறு.

இனைய தன்மையா லேத்துபு வணங்கியே மறையோ
னினைவு முற்றியே டன்னக சாலையி னிறையும்
புனித மாதவர் குழாத்தினி லமைந்தனன் பொருவேன்
முனைவர் பின்னரும் பூசனை செய்தது மொழிவாம். (ருச)

வேறு.

பன்றியு முயலு மற்றும் பறவையும் வேட்டை யாடிக்
கொன்றொரு சூழ லிட்டுத் தீக்கடை கோலி னாலே
மின்றிகழ் நெருப்புண் டாக்கி வெதுப்பிமென் றிரதம் பார்த்துத்
துன்றவே கல்லைப் பச்சைப் பரிகலந் துலங்கச் சேர்த்து. (ருரு)

உமிழ்ந்துமிழ்ந் தமுது தன்னைப் படைத்தபின் னுத்தி யானத்
தமைந்தபொற் றகட்டுப் போதைப் பறித்தணி முடியிற் சூடிக்
கமழ்ந்தபொன் முகரி யாற்றிற் புதுப்புனல் கனிவாய் மொண்டு
திமிர்ந்தவூ னமுது மேந்திச் சென்றுமுன் னின்று கொண்டு. (ருசு)

செருப்புடைக் காலா லீசன் றிருமுடிப் போதைத் தள்ளி
விருப்பொடு கனிவாய் மொண்ட மஞ்சனம் விரைவி னாட்டிக்
கருப்பொலி சிகையிற் சூடுங் காமரு மலருஞ் சாத்தி
மருப்பொலி தேன்வி ராய்முன் வைத்தவூ னமுத மேற்றி. (ருஎ)

அப்பனே யுண்ணு மெங்க ளன்னையே யுண்ணு முத்தி
வைப்பெனுந் திருக்கா ளத்தி வள்ளலே யுண்ணு நன்றாய்த்
துய்ப்பதற் கான செந்தேன் விரவிய சூட்டி றைச்சி
கைப்பதன் றுண்ணு மென்னக் கரைந்தமு தருத்தி நின்றார். (ருஅ)

திரும்பியே போன நாணன் வேடுவர் திலக மான
சுரும்புளர் தெரிய லானன் முன்சென்று தொழுது நின்று
கருங்கரி முதலா வுள்ள விலங்கெலாங் கருவ றுத்துப்
பெருஞ்சுனை நீர்வி ளவிக் காளத்திப் பிறங்க லெய்தி. (ருகூ)

கார்மலி சோலை யூற்றேங் காளத்திக் குடுமித் தேவன்
சார்மலி பேய்கண் டேனு முறக்கமுந் தணந்து போனா
னோர்மனை நிலைய தில்லா னொருவரை நோக்க கில்லான்
சீர்மலி திண்ண னென்றான் செநதழ லொழுகக் காய்ந்த. (கூ0)

மயநெடுஞ் சலாகை காதிற் பாய்ந்தென மயங்க நாக
னயலவர்க் கூவிக் கெட்டே னார்செய்த மாய மோகம்
மியலுறு கோமா னைக்கொண் டேகியே யுவன்பேய் தீர்த்துச்
சயிலம்விட் டிறக்கிப் போது வோமெனச் சடிதி போனான். (கூக)

காளத்தி வரையிற் சென்றே கண்ணுத றிருமு னின்ற
வேளைக்கை நெருங்கப் புல்ல விடைகொடா ருதறித் தேவன்
றாளைத்தாம் பற்றிக் கொண்டார் தங்களா லான மட்டு
மீளத்தாம் றக்க வண்ணம் பார்த்துக்கை விட்டுப் போனார். (கூஉ)

வேறு.

மாலைவந் தடைதலும் வரிசை லேற்றியே
சோலையி லிரவெலாந் துயில்கொ ளாதிருட்
காலையில் வேட்டையைக் கடைப்பி டித்தருட்
சீலமார் பூசனை தினஞ்செய் தாரரோ. (கூ௩)

வேறு.

பழமறை யமுத மூற்றிருந் தொழுகும் பவளவாய்த் தவளமுப் புரிநூ
லழகனுஞ் சிவகோ சரமுனி வரன்று ளையிடை நித்திய மடைந்து
வழுவதா மிச்சிற் கல்லையுந் தசையும் வாரியே திருவல கிட்டு [தும்.
மழுதழு திரங்கி நொந்துநொந் தித்தீங் காற்றினர்க் கேளென முனிந்

வேறு.

முன்புபோற புனித மாக்கி முறைவிதி வழாமற் பூசை
யின்புறப் புரியு நாளி லிரவவன் கனவிற் றோன்றிப்
பொன்பொதி சடிலன் ஞானப் பூங்கோதை யம்மை கேள்வ
னன்பன்செய் பூசை யேற்ற மாகுநீ சலியே லென்று. (கூரு)

நீயவன் பத்தி கேண்மோ நேயமோ டோடிக் கானிற்
போயவ னடிவக்கிப் புசித்திடா திரதம் பார்த்துப்
பாயிலை சேர்த்த கல்லைப் பரிகலத் திட்ட தேனூ
னேயமா முனிவ ரிட்ட வவியினு மினிய தாமால். (கூகூ)

பாற்றிரை புரட்டுந் தெண்ணீர்ப் பகீரதி யவன்வா யாலே
யூற்றிய நீருக் கொவ்வா தும்பர்கோன் முதலா வுள்ளோ
ராற்றிய பூசை வேலை யணிந்தகற் பகநன் போது
நீற்றிகழ் கரிய குஞ்சி யிடுமலர் நிகரா தன்னோன். (சுஎ)

நுண்பொரு ளின்றி யன்பா னுவலும்பொன் மொழிக்கெஞ் ஞான்றும்
பண்பறிந் தலகில் வேதம் பழிச்சுவ போலா வன்பன்
றிண்படு செம்ம லீவுஞ் செருப்படி நமது மைந்தர்
தண்படு பசிய தோட்டுத் தாமரைத் தாளைப் போலும். (சுஅ)

வேடுவ னவனென் றெண்ணேல் வேடமு நமது வேட
நீடுமெய் யன்பே வன்மெய் நினக்கவன் பத்தி காட்ட
மாடுறக் கரந்து நாளை வைகுதி யென்று போனான்
கோடுமா முனிவ னுள்ளங் குளிர்ந்ததி சயித்து றங்கான். (சுகூ)

அதிர்கட லமுதம் பெற்ற வானவர் போல வார்த்துக்
கதுமென வெழுந்து முன்போற் காளத்தி யப்பர் பூசை
விதிமுறை முடித்து யோகி விமலன்பின் கரந்து வைகி
நிதிமுகில் வரவு பார்த்து நின்றபைங் கூழு மொத்தான். (எ0)

இலையமு தொருகை யேந்தி யெழிற்சிலை யொருகை யேந்தி
மலைமலர் தலையி லேந்தி வாயின்மஞ் சனமு மேந்திச்
சிலையரு கணைய முன்னே தீயதுந் நிமித்தங் காட்ட
வுலையுமுள் ளத்த னாகிப் பதறியே யோடி யோடி. (எக)

தேவனுக் கடுத்த தென்னோ வறிகிலேன் றீங்கே தேயோ
காவதங் கடந்து போனேன் கடுகினா னினிச்செல் வேனென்
றேவிலா தாவு கூர வோடியே திருமுன் சென்றார்
மாவுலா முனிவற் கனபு காட்டுவான் வலக்க ணாலே. (எஉ)

செய்யவெங் குருதி காட்டத் தேவனைக் கண்டு திண்ணர்
கையினிற் சிலையுஞ் சோரக் கல்லையுந் தசையுஞ் சோர
மையுறு சிகைப்பூச் சோர வாயின்மஞ் சனமுஞ் சோர
மெய்யுமா ருயிருஞ் சோரக் கதறியே வீழ்ந்து கட்டி. (எங)

இப்படி வந்த தென்னோ வெம்பிரா னென்றென் றேங்கிச்
செய்பெண வுரையா டாமே தேவனா ரிருப்பக் கண்டு
குப்புற வீழ்வர் சூழ்வா ரோடுவார் குறுகிப் பார்ப்பார்
மைப்பெரு விலங்கோ மீளி மறவரோ யாரோ செய்தார். (எச)

ஈதென் வரிவி லேற்றி யிழுத்தெழு கம்பு கோத்துக்
காத்மு மரையுஞ் சென்று காடெலாந் துருவ வாங்கே
போதுவா ரொருவர்க் காணார் புள்ளும்வல் விலங்குங் காணார்
பேதுறு முளத்தார் மம்மர் பிடித்தொரு கணத்திற் றேறி. (எரு)

வெம்படைக் காயு மாற்று மருந்தெலாம் வினவி யோடி
யும்பர்தோய் குன்றுங் கானு முரவுபொன் முகரி யாற்றின்
வம்பவிழ் கரையி னூழை வழிச்சென்று பறித்து வந்து
தம்பிரான் றிருக்கண் மீது பிழிந்தனர் தணிதல் காணார். (எசு)

அரைத்தரைத் துருண்டை யாக்கி யலைகொழித் திழியுஞ் சோரி
கரைத்திடத் திருக்கண் மீதே கையினாற் றைவந் தெய்த்து
நிரைத்துமோர் மருந்து காணே னினையினி யூனுக் கூனே
சரத்திற லென்கண் வாங்கிச் சாத்துவ னெனக் களித்து. (எஎ)

வலமுறு கண்ணை யம்பால் வாங்கியே யப்பச் சோரிச்
சலமறைந் திடக்கண் மீதே தாரைவிட் டுதிரங் கால
விலகுநன் மருந்து கைகண் டேனினி மற்றைக் கண்ணை
யலகொளி யம்பா லீர்ந்தாங் கப்புவ னென்று தேறி. (எஅ)

மன்னொரு கண்ணும் போலால் வள்ளலின் குருதி நீத்தந்
துன்னிடு கண்கு றிப்புத் தோன்றுமை யுளத்து நாடித்
தென்னுறு செருப்புக் காலைத் திருவிழி யதனி லூன்றிப்
பொன்னல கம்பா றங்கண் பொருக்கென விடக்கும் போது. (எகூ)

தேம்பொழி திருக்கா ளத்திச் செல்வனார் திருக்கை நீட்டி
வாம்புலி யனைய வீரர் கரத்தினை மகிழ்ந்து வவ்வி
மேம்படு மன்ப னைன கண்ணபப விழியைச் சூலே
லாம்பரி சுணர்ந்து செய்தா யாறிய கண்ணே வென்றார். (அ0)

கண்ணினை குளிர்ப்ப வுள்ளங் களித்திட மறைந்து வைகும்
புண்ணிய முனிவன் கண்டான் புரந்தர னயன்மால் கண்டார்
விண்ணவர் முனிவர் கண்டார் விரைமலர் மாரி பெய்தார்
பண்ணினன் மறையு மார்த்த பஞ்சதுந் துபியு மார்த்த. (அக)

செவிவழி யினிய கானத் திவவியா ழமிர்தந் தேக்குங்
கவிரித ழுறன்மென் கூந்தற் காமரங் கனையா ரோடு
மவிரொளி மணிக்கி ரீடத் தமரரு முனிவர் தாமு
முவர்படு திரையி னார்த்துக் காளத்தி யோங்க லுற்றார். (அஉ)

வெள்ளைவா ரணத்து வேந்தன் விரைமலர்ப் பொகுட்டுப் புத்தேள்
கொள்ளைமா தவத்துக் கண்ண னாதியோர் குழுக்கொண் டெய்தி
வள்ளலைத் திருக்கா ளத்தி வரதனைக் கலவித் தாழ்ந்தே
யெள்ளிடை யின்றித் துன்னி யெய்தினார் கருணை மூர்த்தி. (அங)

காந்தனை நெகிழ்வித் தன்ப கண்ணப்ப நம்வ லப்பா
னிரந்தர நிற்றியென் றுநிற்குமா நிறுத்திக் கொண்டான்
புரந்தரன் முதலா வுள்ள புங்கவ ரிறும்பூ தெய்திச்
சிரங்களால் வணங்கிப் போனா ரன்பினிற் சிறந்த துண்டே (அச)

மந்திர மறியா னீது மாதவத துறையுந் தேரான
றந்திர மறியான் வேடன் சங்கரன் பூசை யாலே
யிந்திரன் முதலி னோர்க ளெய்துதற் கரும்பே றுற்றான்
சிந்தையால் விதியிற் செய்தார் பெருமையார் தெரிக்கு நீரார். (அரு)

வேறு.

இனைய தன்மையால் வைகலோ ராறுநின் றிறைஞ்சி
யனைவ ரும்புகழ் திண்ணனுஞ் சிவபத மடைந்தார்
நினைவ ருஞ்சிவ கோசரி முனிவனு நிமலன்
றனைய ருச்சனை புரிதலாற் பரகதி சார்ந்தான். (அசு)

இன்ன மும்பல காளத்தி மான்மிய மிசைக்கிற்
பன்ன காதிப னுரைக்கினு மனந்தநாட் படுமே
யுன்ன ருந்தவ வியாதமா முனியெனக் கொருநாட்
சொன்ன வாறெலா நினக்குரைத் தேனெனச் சொன்னான். ()

என்றி வற்றினைப் பரத்துவா சன்பெரி தியம்பிப்
பின்றை யேசிவ மான்மியம் பேசுவா னெனவே
மன்ற லம்பொழி னைமிசா ரணியமா தவர்க்கு
நன்று சொற்றனன் சூதமா முனிபின்னு நவில்வான். (அஅ)

# அரும்பதவுரை

## காப்பு. (பக்கம்-க.)

க. செழுவிய - செழித்த. வடமொழிப்புராணத்தை. மா - மஹா. குழவியந்திங்கள் - பிறை. வேழம் - யானை; விநாயகக்கடவுள். திங்களையணிந்த வேழம் காக்கும்.

உ. செஞ்சந்தம் - செஞ்சாந்து. களபம் - யானைக்கன்று, கலவைச்சந்தனம் கொங்கையையுடைய மங்கை. பொன் - திருமகள். 'நஞ்சங்கொள் அமிர்தாவுண்ட' என்பது, "ஆலமுண்டமுதீந்த மிகத் தேக்குவர்" (திருக்கடவூர்) என்னுந் தேவாரக்கருத்தைத் தழுவியது. அஞ்சந்திப்பிள்ளை = ஐஞ்சந்திப்பிள்ளை - பஞ்சஸந்திவிநாயகர்; இவர் ஸ்தலவிநாயகர். அந்தி, சந்தியாதலின், அஞ்சு அந்திப்பிள்ளையெனப் பிரித்துப் பொருள்கொள்ளினும் பொருந்தும்.

## கடவுள்வாழ்த்து. (ப. க.)

க. சித்து - அறிவு. சத்து - உண்மை. யாண்டும் - எவ்விடத்தும். அகளம் - குற்றமற்றது. அகண்டம் - பிரிவற்றது. கா - சோலை; உகரச்சாரியை பெற்றது.

உ. தோற்றம் - பிறவி. ஈறு - இறப்பு. என்ஞான்றும் - எக்காலத்தும். அழிதுயர் - மிக்கதுயர். அருளாகிய இனியபாலை. ஆனந்தத்தை அருளுகின்ற.

ங. கான் - நறுமணம்; அம் - சாரியை; கானம் - காடென்றுமாம். தானம் - மதம் நடங்குகின்ற இடை. வானப்பூந்தரு - ஐந்தரு. மகவான் - இந்திரன்.

ச. சந்தச்சேறு - சந்தனக்குழம்பு. திதலை - தேமல். பஞ்சஅங்கம் - பஞ்சினது அழகு. முச்சந்தி - காலை, உச்சி, மாலை.

ரு. 'மா' என்றது சூரபன்மன் கொண்ட மாமரவுருவத்தை; இதில் மா, அரசு, வேல் என்னும் மரப்பெயர்கள் தொனிக்கின்றன.

சு. திருநந்திதேவர்க்குச் சிவபெருமான் உவமை. 'எந்தை' என்றது, சிவபெருமானை.

எ. செபவடம் - ஜபமாலை. ஞானமுத்திரை - சின்முத்திரை. குண்டிகை - கமண்டலம்.

அ. அறிவானபுத்தகம் - ஞானநூல் எழுதப்பெற்ற புஸ்தகம். பால் நிறம் - வெள்ளைநிறம்.

கூ. ஐந்து - ஐம்புலன்கள். கரகம் - கமண்டலம். ஆறு - நதி ஒன்று, நான்கு, ஐந்து, ஆறு, ஏழென்னும் எண்ணுப்பெயர்கள் ஒரணிபட நின்றன. பொன்முகரி - பொன்னிறத்தையும் பேரொலியையும் உடைய நதி; முகரம் - பேரொலி; அகத்தியமுனிவர் தவம்புரிந்து பொன்முகரியாற்றைக்கொணர்ந்த வரலாற்றைச் சீகாளத்திப் புராணத்துள்ள பொன்முகரிச்சருக்கத்தாலுணர்க; "இருந்தமிழ் மாமுனியழைப்பவந்து" என்பர் பின்னும்; கஅ

க0 தென்கைலையென்பது திருக்காளத்தியின் திருநாமம். நந்தி - சிவபெருமான். அத்தி - யானை; வானரசு - இந்திரன்; இதில் சிலந்திமுதலியபெயர்களில் வேறுபொருள் தோன்றும்படி பாராட்டியிருக்கும் நயம் அறிந்து இன்புறற்பாலது.

கக. மண் இடந்து - மண்ணைப்பெ

புர்த்து. மணி - நீலமணி. விண் இடந்து - ஆகாயத்தை ஊடுருவிச் சென்று. மறைக்கிழவன் - பிரமதேவர். கண் இடந்து. கண் மூன்று - முக்கண் இருகண்ணுக்கு மூன்றுகண்ணைப் பெற்றனரென்பது ஒருவிபரப்பு.

கஉ. வண்ணம் - அழகு திண்ணமென்பது, கண்ணப்பநாயனருடைய பிள்ளைத்திருநாமம்.

கச. கல்லாலின் நிழலிடைவீற்றிருந்தவரைக் குருந்தமரத்தின் நிழலின் கண் வருவித்து என்பது பாராட்டத்தக்கது.

கரு. பைந்தாமம் - பசிய ஒளி. துழாய்ப்படலே - திளபமாலே; படலே - இலேமாலே அந்தாதி='அந்த'மும் ஆதியும்-முடிவும் முதலும், அந்தாதியென்னும்பிரபந்தம். கண்ட-பார்த்த, செய்த. அந்தாதிகாண்பரியார்க்கு அந்தாதி கண்டவரென்பது ஒரு சொல்லழகு.

கசு. கன்னிகுமரி - கன்னியாகுமரியாறு உலகேழும்தருகன்னி - உமாதேவியார் தலேயில் ' ஒருகன்னியையும் பக்கத்தில், ஒரு கன்னியையும் உடைய தலைவரை இந்தஇரண்டுகன்னியர் மணந்தது அருமையென்பது அறியத்தக்கது.

கஎ. கதியிலி - அகதி. ஒருமரத்தினடியில் அகதிபோலிருந்த ஒருவருக்கு யாதவவேந்தர் கோபுரமுதலியவை அமைத்தளித்த அருமையை இக்கவி தெரிவிக்கின்றது.

கஅ. அமிர்தம் - நீர். அமிர்தமாகிய பால். பொன்முகரியின் கரையிருமருங்கும்வதிந்தவரென்பதற்கு இருகரையிலும் எழுந்தருளிய தேவர்களென்றும் நீரவாவிகளென்றும் பொருள் கொள்ளலாமென்பர்.

கக. அன்னவற்றை - அத்தாள்களை பெற்றி - தன்மை.

உ0 பாசமுதன்மூன்று - திரிபதார்த்தம்; அவை :—பதி பசு பாசமென்பன பரஞானம் - சிவஞானம்.

உக. எழுத்தொடு சொல் பொருள்- எழுத்திலக்கணம், சொல்லிலக்கணம், பொருளிலக்கணம். விழுத்தகு - சிறப்புப்பொருந்திய

உஉ. வீரை - வீரவநல்லூர்.

## அவையடக்கம். (ப. கூ.)

க. வேதமுனி - வியாசர் முதலில் இப்புராணத்தைச் சூதமுனிவருக்கு உபதேசித்தவராதலின் வியாசரும் சவுனகாதியருக்கு இத்தலமகிமையை உபதேசித்தவராதலின் சூதமுனிவரும் இத்தலத்தைப்பாடியவர்களாதலின் சமயாசாரியர்கள்நால்வரும் கைலேபாதிகாளத்திபாதியந்தாதி முதலிய பிரபந்தங்களை இயற்றியவராதலின் நக்கீரதேவரும் இத்தலத்தைப்புகழ்ந்தவர்களாகக் கூறப்பெற்றனர். ஆதிய சான்றோரென்றது, கண்ணப்பதேவர் திருமறமியற்றிய கல்லாடதேவரையும் திருப்புகழியற்றிய அருணகிரிநாதரையும்பிறரையும். என்சொல்கேன்யாதுகூறுவேன்.

உ. கனி அமிர்து - சுவைமுதிர்ந்த அமிர்தம்.

ங. மரு படியும் - நறுமணம்பொருந்திய; இது கடம்பமலர்க்கு அடை கடம்பன் முருகக்கடவுள்; " மணங்கமழ் தெய்வத் திளநலங் காட்டி" (திருமுருகாற்றுப்படை, உகு0) எனபதனுல், ' மருப்படியும் ' என்பதை முருகக்கடவுளுக்கு விசேடணமாக்கினும் பொருந்தும். வேடன் - கண்ணப்பநாயனர். " சேற்றடிக் கஞ்ச வயற்காசி நாத செருப்படிக்கும், மாற்றடிக்குந்தொண்டர் வில்லடிக் கும்புகன் மற்றில்லேயே " என்பது காசிக்கலம்பகம், அஅ.

ச. இச்செய்யுளும், " ஆக்கு மறிவானலது பிறப்பினுல், மீக்கொ ளுயாவிழிபு வேண்டற்க - நீக்கு, பவாாவின் பருமணிகண் டென்றுங், கவரார் கடலின் கடு " (நன்னெறி - உஉ) என்பதும் கருத்தால் ஒத்திருக்கின்

கஉ.

கங. சுரபி - பசு. அரசு - அரசன்.

கரு. கவிழ்ந்தலை - கவிழ்ந்ததலை. சேண் - நெடுந்தூரம்.

கசு. சொல்தவறுவண்ணம். விடை அருளுதி. அவன் - தருமபுத்திரர்.

கஎ. திறன் அல்லாதவற்றை.

உ0. தடுத்தோர் - தடுத்தவர்களுடைய. நடாத்துரு - நடாத்துவேன்.

உக. உண்மையார் - பக்கத்துள்ளார்.

உங. பழிச்சினன் - துதித்தான்.

உச. தூங்கிதி அளித்தனன்.

உசு. வேங்கடத்தில்.

## உ - ஆவதுஅத்தியாயம். (ப. கங.)

க. பொன்முகரித்திருநாடு - ஆற்றூர்வளநாடு

உ. வரையுலகு-குறிஞ்சிநிலம்.காளிதன்வாழ்க்கையுலகு - பாலைநிலம். தளவம் - முல்லை கிடைறஉலகு - முல்லைநிலம் தீம்புனலுலகு - மருதநிலம். புன்னைப்பெருமணலுலகு - நெய்தல்நிலம்.

ங. அளாய் - அளாவி; கலந்து. தூங்கும் - தங்கும். முழை - குகை இறால் - தேன்கூடு.

ச. குரவை - குன்றக்குரவை. வேங்கை - வேங்கைமரம். தூய் - தூவி. தொண்டகம் - ஆகோட்பறை.

ரு. அங்கி - அக்கினி. ஆளவழக்கு - ஆடவர்செல்லுதல். சில் இடை - சில இடம். பரல்முரம்பு - பருக்கைக்கற்களாலாகியமேடு.

சு. விடர் - வெடிப்பு. உழை - மான்.

எ. ஆம்பலந்தீங்குழல் - வெண்கலத்தாற் குமுதவடிவாக அணைசுபண்ணிச் செறிக்கப்பெற்ற இனியவோசையையுடையபுல்லாங்குழல். பொதுவர் - இடையர். கொன்றையந்தீங்குழல் - கொன்றைப்பழத்தாலாகிய இனியகுழல்; சிலப்பதிகாரம், சு0கூ-ம்பக்கம் பார்க்க. பதலை - தயிர்த்தாழி. குழக்கன்று -

அ. [illegible]ம்பு கூன் படலும் - உடம்பு வளைந்தபடலும்.

கூ. அரில்-பிணங்குதல். சுறாப்பகடு - ஆண்சுறா. பரவையின்தேவை - வருணதேவனை. சுறாக்கோட்டில் - சுறாமீனின் கொம்பில.

க0. கான்றகக்கின ; வெளிவிட்ட. அளவர் - உப்பளப்போர். குரம்பை - குடிசை. வளை - சங்கு. கைதை - தாழை. பெண்ணை - பனை.

கக. தீம்புனல்நாடு - மருதம்.

கஉ. மென்பால் - மருதம.

கங. படுகர் - படுகை. தொழுதி - ஒலி. உகண்டு - பாய்ந்து.

கச. பணிலம் - சங்கம்.

கரு. படப்பை-தோட்டம். தாழை - தென்னை. சூதம் - மாமரம்.

கசு. அறல் - நீர். கீண்டு - கிழித்து.

கஎ. குரகதமுகமாய் - குதிரையின் முகம்போன்ற. சாலி நெற்பயிர.

கஅ. செருத்தல் - மடி. குண்டு - ஆழம். வள்ளை - ஒருவகைக்கொடி

ககூ. கவரிப்பாளை - கவரிபோலும் பாளை.

உக. அலம்பு - முழங்க. பார்ப்பை - குஞ்சினை.

உஉ. 'பவளச் செங்நெல்', 'செழும்பவளக்கொழுஞ்சாலி' என்பர்பின்னும்; உஅ, ஙo.

உங. கிணை - ஒருவகைப்பறை. காரேறு - எருமைக்கடா. தொளி-சேறு.

உச. அமுதுஅடு - உணவுசமைத்தலாலுண்டாகிய.

உசு. குணபால்-கிழக்குத்திசையில் பாசுபதம் பாசுபதாஸ்திரம். கலுழன் - கருடன்.

உஎ. காவில் - சோலையில். பைந்தேன் - செவ்வித்தேன். கொண்டல் துஞ்ச.

உஅ. கறித்து - கடித்து. சங்கதாளம்; சங்கத்திலிருந்துண்டாகிய முத்து.

உகூ. 'வருக்கைக்குடக்கனி' என்றார்முன்னும்; ககூ. கீண்டு - கிழித்து.

'இதனைத் திருவாலவாயுடையார் திருவிளையாடற்புராணத்தாலுமுணர்க.

௬௪ இந்திரன், இராமன், முசுகுந்தன் இவர்கள் இத்தலத்திற்பூசித்துப் பேறுபெற்றவர்கள்.

௬௨. தாழ்ந்த ஆம் - தாழ்ந்தனவாகிய

௬௬. இடிபட - இடியோசையுண்டாக.

௬௭. ஆரவடம் - முத்துவடம்.

௭௦. தாழை - தென்னை. வருக்கை - பலா.

௭௧. பூகம் - பாக்குமரம்.

௭௨. சரளம் - ஒருவகைமரம்.

௭௩. பச்சிலைகள் - பச்சிலைமரங்கள். மதூகம் - இருப்பை. நாரந்தம் - நாரத்தை. சம்பீரம் - எலுமிச்சை. ஞாங்கர் - பக்கம்.

௭௫. அரக்கு - சிவப்பு.

௭௬. கம்புள் - சம்பங்கோழி. காரண்டம் - நீர்க்காக்கை.

௮௦. மிருதி - தருமசாஸ்திரம். திப்பியஞானம் - தெய்வத்தன்மையுள்ள ஞானம்.

௮௩. எடா - எடுத்து.

௮௪. கொடா - கொடுத்து. ஈங்குவா என - இங்கு வாவென்றழைத்து. ஆதனத்து இருத்தி. முகமன் - உபசாரம்.

௮௬ தோம்இல் காட்சியன் - குற்றமற்ற அறிவினையுடையவராகிய. மா மகிழ்ச்சியால் - மிக்க மகிழ்ச்சியோடு. அது வந்தது.

௮௭. சுற்றமும தானும் அருந்தினன். என்ப, அசை.

---

## ௩ - ஆவதுஅத்தியாயம். (ப. ௨௮.)

௧. ஆண்டகை - அருச்சுனன்.

௨. சிரத்தை இதழியையமிலைந்த காரணத்தால் யானே மிகவும் பாக்கியவான்.

௩. நதிக்கண் - நதித்துறையில்; "பொன்முகரித் தண்டுறையெம்மத்தன்" என்பர்பின்னும்; ௫.

௫. பரம் - பாரம்; கடமை.

௭. குரு - ஓர்அரசன். தரும் ஆதரவால்.

௮. இறையும் - சிறிதும். 'எங்குரு' என்றது, அங்கிராவை; இப்புத்தகம் ௭௬ - ஆம் பக்கத்துள்ள ௧௩௨ - ஆம் பாடலாலுணர்க.

௯. அத்தலம் - பிறதலம்.

௧௩. தவம்போல் யாதுசெய்தது வோ.

௧௬. நீலை - ஒருயோகினி; ௩௧ - ஆம் செய்யுளைப்பார்க்க.

௧௭. பண்ணவர்யாண்டு - தேவவருடம். யாண்டுகாறு - வருடம்வரையில். கேள்வன், எழுவாய்.

௧௮. முன்னவன் - இறைவன்.

௧௯. மறித்தும் - மீட்டும்.

௨௧. மேனாளில் தென்கைலாயமென்றும் இதற்குப்பெயருண்டு.

௨௯. மொழியை வழங்கி.

௩௫. பலதலைஅநந்தன் - பலதலைகளையுடைய ஆதிசேடன்.

௩௯. தந்து - நூல்.

௪௦. அகடு - வயிறு. சிகரம் - கோபுரம்.

௪௧. முற்றி - முதிர்ந்து.

௪௨. தேங்குதல் - நிறைதல்.

௪௩. கணம் - க்ஷணம்.

௪௪. குரம்பையென்றது, சரீரத்தை.

௪௬. யார் கேட்பாரோ? அவர் வாழ்வார்.

௪௮. ஆர்ப்பரவம் - ஆர்ப்புஅரவம்.

௪௯. குன்றி - குன்றிமணி. தீழையாகியஆடை.

## ௪ - ஆவது அத்தியாயம். (11. ௫ ௫.)

௨. முகிழ்த்தநிலா - அரும்பியபிறை. இங்கேகுறித்த மாயை - சிவமாயை யென்னும்பெயரால் முதனூலில்வழங்கப்படுகின்றது. பாரி - தன்மறந்து - தன்னைமறந்து.

௪. குழுமி - கூடி. நேர்படு - எதிர்ப்பட்ட.

௭. கழியும் - மிகுந்த. உணர்வுஅழியும்.

௧௦. சோதியையுடைய இறைவர்.

௧௧. இயற்கையைப்பாற்றி - இயல்பைவிட்டுவிட்டு.

௧௨. கையறை - ஒழுக்கமின்மை.

௧௩. பிறந்து - பிறத்தலால். இறந்துபாடு - இறந்துபடுதல்.

௧௬. மகத்து - மகநக்ஷத்திரத்தில்.

௧௭. நூனம் - குறைவு.

௨௩. பணிந்தஞான்றேபோயிற்று.

௨௯. மரபுளி - விதிப்படி.

## ௫ - ஆவது அத்தியாயம். (11. ௫ ௬.)

௧. முன்தவத்தால்.

௪. அழுங்கும் - வருந்தும்.

௫. பின்னர் - பின்பு மன்ற - தெளிவாக; இஃது ஓரிடைச்சொல்.

௭. வேகம் - நஞ்சு, கோபம் செவ்வே - செவ்வையாக.

௮. அரலைக்கற்கள் - ஒருவகைச் சிறுகற்கள்.

௯. நன்கு பெறுவேன். திருமுன் -

௧௧. வழுவை - யானை. அழிதுயர் - மிக்கதுயர்.

௧௩. உடல்நெருங்கி.

௧௫. புள்ளரசு - கருடன்.

௧௮. மாதிரங்கள்பரிப்போர் - திக்பாலர். இருவராகியமருத்துவர்.

௧௯. செங்கைமுகிழ்த்தனர் - கைசார்.

௨௦. புட்கரம் - ஒரு மஹாதீர்த்தம்.

௨௧. பருப்பதம் - ஸ்ரீசைலம்.

௨௨. ஆதிபுராணமும் - முதன்மையுள்ள புராணங்களும்.

௨௩. தென்றலங்கன்று - இளந்தென்றல்.

௨௪. அளிகள் வேழமதத்தைவிட்டு ஒழிப்பற்றும்படி.

௨௫. குருந்தம்பூவும் நிலாவும்போல் விளங்கிய பால்நிறமெய்

௨௯. வயங்கு அபயம்.

௩௦. 'சயசயு' என்பதற்கு எல்லாருக்கும் மேற்பட விளங்குக என்பது பொருளென்பர்.

௩௭. சகமானது மாயையின்விதமெனவிட்டு.

௩௮. தகைந்து - தடுத்து.

௪௦. ஒருமுதல், விளி.

௪௧. 'ப்ரஹ்மாதிஸ்தம்பபரியந்தம்' என முதனூலிற்காணப்படுகின்றது.

௪௪. அல்லவை, விளி.

௪௯. கருணைக்கடலே. [ய்வாய்.

௪௮. உமிராதிப்பிப்பாய் - அழசெய்து

௪௯. உருதம்பண்ணும் - ஒலிக்கச்செய்யும்; ருது - கத்தல்.

௫௦. கிராவம்புரியும்தொழில் - உருக்குதல்.

௫௧. ரு - பிறவித்துன்பம்; கிராவணம் - ஓட்டல். சிவதரம் - மங்கலப்பொருள்களுள் உயர்ந்தது.

௫௨. பவிக்கும் - உண்டாகும். மிகுவாய் - மிஞ்சியிருப்பாய். பவங்கடந்துமேவும்பொருட்டுப் பாவித்திடுவர்.

௫௪. மாதேவன் - மகாதேவன். கீர்வாக்கு.

௫௫. பிருகத்துவம் - பெரிதாயிருத்தல் எதைக்காட்டிலும் பெரியது வேறொன்றும் இல்லையோ அது பிரமமென்பர். விண்டு - விஷ்ணு; வியாபகமுடையவர். பொருட்டு-காரணம்.

௫௬. பயனை - பிரயோசனத்தை. சடம் - அறிவில்லாதது

௫௮. மெய்த்த - உண்மையுற்ற.

௬௦. மகோதய - பெரியவைகள் உண்டாவதற்கு இடமாக இருப்பவரே.

